
LALITA
KOKILA
N.K.SUBBIAN SETTY & SONS
BANGALORE CITY
லலிதா
கோகிலா
அகர்பத்திகள்
பகவதாராதனைக்கும் வாழ்க்கையின்
பல்வேறு சுப சம்பவங்களுக்கும்
இன்றியமையாதவை
என். கே. சுப்பய்ய செட்டி அண்டு சன்ஸ்,
கோகிலா பில்டிங், பங்களூர் - 2.


எதிர்பாருங்கள்!
ஜூபிடரின்
ராணி
டைரக்ஷன்·பிரசாத்
கதை, வசனம்· A. S. A. சாமி
ஸ்டூடியோ· சென்ட்ரல்.....

# THE MYSORE PREMIER METAL FACTORY

(Estd. by HIMCHAND K. SHAH)

MANUFACTURERS OF:

**ALUMINIUM, BRASS AND STAINLESS STEELWARES**

124, MINT STREET, MADRAS

**SUN BRAND**

Large varieties of Stainless Steelwares are available. SUN BRAND Stainless Steelwares are famous both for workmanship and quality. They are seamless and without crevices.

LOOK FOR SUN BRAND BEFORE YOU BUY ANY VESSEL

**SUN BRAND** STANDS FOR PURITY AND QUALITY

Phone: OFFICE - 2535 Phone: FACTORY - 3829

Grams: "SUNBRAND"

★

KESHAVLAL K. SHAH

(MANAGING PARTNER)

★

*Office:* 124, MINT STREET, MADRAS - *Works:* TONDIARPET, MADRAS


விரைவில்
வெளிவருகிறது!
சகோதரி வாழ்வை சொர்க்கமாக்க
தன் வாழ்வை
நரகமாக்கிக் கொண்ட
சகோதரன் கதை.
அந்தமான்
கைதி
தமிழ்
எம்.ஜி.ராமச்சந்திரன் · டி.எஸ்.பாலையா
கே.சாரங்கபாணி
பி.கே.சரஸ்வதி
பின்னணிப் பாடகர்கள்
P.லீலா
M.L.வசந்தகுமாரி
T.V.ரத்னம்
C.S.ஜயராமன்
கண்டசாலா
டைரக்ஷன்:
V:கிருஷ்ணன்
கதை, வசனம், பாட்டுகள்:
கு.ச.கிருஷ்ணமூர்த்தி
RKF
RADHAKRISHNA FILMS
ALLEPPEY
ராதாகிருஷ்ணா பிலிம்ஸ், (ஆலப்புழை)
ஸோல் ப்ரோப்ரைட்டர்: எஸ்.குமாரசுவாமி ரெட்டியார்...... அபிராமபுரம், மதராஸ்-18.



பெயரே அதன் சிறப்பிற்குக் காரணம்

பெட்டர் & மாடர்ன் எலக்ட்ரிக்

பிராஞ்சுகள்:

மதுரை - கோயமுத்தூர் - சேலம் - இராசிபுரம்

பெட்டர் ஆயில் என்ஜின்களுக்கும்
எம். இ. எம். ஸ்விட்ச் கியர்களுக்கும்
மதுரை ஜில்லாவிற்கு டிஸ்டிரிபியூட்டர்கள்

விற்பனைக்குப் பின்னும் நீடித்த சிறந்த சேவை

# தி மாடர்ன் எலக்டிரிக் கம்பெனி

எலக்டிரிகல் அண்டு மெஷினரி சாமான்கள் விற்பனையாளர்கள்:

தந்தி: சன்வர்] 301, லிங்கி செட்டித் தெரு, மதராஸ்-1. [போன்: 3711

**Over 2,75,000 People have already taken to K. T. C. Coffee!**




More and More are joining them.

**WHY?**

BECAUSE

## K. T. C.

STANDS FOR

- ★ 100 per cent Purity
- ★ Absolute Freshness
- ★ and Moderate Prices.

It is stimulating and serves as an Appetising Beverage. If you have not tasted it yet, try once and you will be convinced,

K. T. C. is best in Coffee.
K. T. C. is always at your service.

# Messrs. KRISHNA TRADING COMPANY LTD.

*Branch:* K. T. C. COFFEE & TEA, 341 Rastapeth, Poona-2

TELANG ROAD, MATUNGA, BOMBAY-19 [Telephone: 61634]

*Agency:* SHRI KRISHNA STORES, Agra Road, Bhandup

# உங்களது நாகரீகமான கட்டிடங்களுக்கு

பீஹைவ் வாசல் கேட்டுகள், வேலிகள், மற்றும் இதர ஸ்டீல் வார்ப்பு அமைப்புகளையும் பொருத்தி அழகுறச் செய்யுங்கள்.

அவைகள் மிகவும் கவர்ச்சிகரமாகவும் மேன்மையாகவும் செய்யப்பட்டுள்ளன



விவரங்களுக்கு

# பீஹைவ் பவுண்டரி இன்ஜினீரிங் ஒர்க்ஸ்

நிர்மாணம், ஸிவில், இயந்திரம் & எலக்ட்ரிகல் இன்ஜினீர்கள்

ஸ்டீல் அமைப்புகள், ஸ்டீல் வார்ப்பு, உலோக வார்ப்புகள், மெஷினரிகள்,
சர்க்கரை எண்ணெ மற்றும் டெக்ஸ்டைல் மில் சாதனங்கள் தயாரித்து சப்ளை செய்வோர்:

ப்ரொப்ரைட்டர்கள்:

## இந்தியன் காமர்ஸ் அண்டு இண்டஸ்ட்ரீஸ் கம்பெனி லிமிடெட்

"பீஹைவ் பில்டிங்ஸ்" : 95, பிராட்வே : மதராஸ்

போன்: 2020] [தந்தி: "LUCKY"

*ஒர்க்ஸ் விஸ்தரிப்பு:*
கௌதா ஸ்டீல் ப்ராடக்ட்ஸ்
ராமவரப்பாடு
கிருஷ்ணா ஜில்லா

*பிராஞ்ச்:*
கௌதா பில்டிங்ஸ்
பக்கிங்ஹாம்பேட்டை, விஜயவாடா
போன்: 327

*ஆயில் மில்கள்:*
எக்ஸல்ஸியர் ஆயில் மில்ஸ்
ஹனுமான்பேட்டை
விஜயவாடா


ஜூபிடர்
ரிலீஸ்
விநோதாவின்
ஸ்த்ரீஸாகஸம்
உரிமையாளர்கள்
பெல் பிக்சர்ஸ்
தமிழ்
வசனம்
உதயகுமார்
டைரெக்ஷன்
வேதாந்தம் ராகவய்யா
விரைவில் வருகிறது!

# John Dickinson & Co. Ltd.

(INCORPORATED IN ENGLAND.)

LION BRAND

Telegrams: "LIONBRAND"
Telephone: 2023

P. O. BOX 77
MADRAS - 1

*PAPER MAKERS AND MANUFACTURING STATIONERS*

OF THE

CROXLEY, COLNE VALLEY, BASILDON, HOSTESS AND CHALLENGE BRANDS

★

SUPPLIERS OF COMPLETE RANGES OF MACHINERY MATERIALS FOR THE

GRAPHIC ARTS & ALLIED INDUSTRIES

*Also Offices at*

| BOMBAY | CALCUTTA | KARACHI | COLOMBO | RANGOON | SINGAPORE |
|---|---|---|---|---|---|
| P.O. Box 58 | P. O. Box 45 | P. O. Box 761 | P. O. Box 29 | P. O. Box 481 | P. O. Box 160 |



WHAT A COMBINATION

# The Famous Petter & Eastern Service

*DISTRIBUTORS FOR:*

DIESEL ENGINES

FOR

TINNEVELLY DISTRICT

o●o

*STOCKISTS OF:*

ELECTRICAL ACCESSORIES, MOTORS, LAMPS
FANS, CABLES, METERS, PUMPSETS ETC.

## THE EASTERN ELECTRIC CO.

ELECTRICAL AND MECHANICAL ENGINEERS AND CONTRACTORS

363, ESPLANADE :: MADRAS

o●o

SHOW ROOM AT: 310-11, LINGHI CHETTY STREET, MADRAS

BRANCH AT: HIGH ROAD, TINNEVELLY JUNCTION

Telegram: NARMADA ] :: [ Telephone: 4849

இங்லிஷ்
எலெக்ட்ரிக்
ரெப்ரிஜெரேடர்



எவரைட்
பம்புகள்



VERIKOLD

வெரிகோல்ட்
பாட்டில் கூலர்



வெரிகோல்ட்
ஐஸ் காண்டி
ப்ளாண்ட் ➡



ரெப்ரிஜெரேடர்ஸ் அண்ட் ஹோம் அப்ளையன்ஸஸ் லிமிடெட்
1/27, ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு, மதராஸ் - 2

DODGE ◊ DESOTO ◊ FARGO

HEAVY DUTY DIESEL
CHASSIS FOR BUS & COACH

Available in 165" and 190" wheelbase. Smooth riding, long life, sturdy frame, easy to handle, capable of good average road speeds with exceptional fuel economy.



THE PREMIER AUTOMOBILES LTD.

*Factory:* Agra Road, Kurla, Bombay *Head Office:* Construction House, Ballard Estate, Bombay.

SISTA'S PAL-86



# JENBACH DIESEL ENGINE

8 H. P. 1500
10 H. P. 800
15 H. P. 1500
20 H. P. 1500

Horizontal, Cold Start, 4 Stroke
Low Fuel Consumption
Available from Ready Stooks.

SPARES AND SERVICE GUARANTEED

MANUFACTURERS:

## JENBACHER WERKE
AUSTRIA

*Firms interested in Dealership should apply to:*

SOLE AGENTS:

## KAMANI ENGINEERING CORPORATION LIMITED
Kamani chambers
BALLAD ESTATE :: BOMBAY

*BRANCHES:*

CALCUTTA:
8, Netaji Subhas Road, Clive Building

NEW DELHI:
9, Pratapsingh Building, Queensway Lane

MADRAS:
Sekar Mansions, 2, Jones Street, Broadway



# NOW GET THE FINEST IN STAINLESS THE A-1 BRAND!

- Highly WEAR RESISTANT
- Excellent Craftsmanship
- Fasiest to Clean
- Last the Longest
- Won't Tarnish nor Taint
- Save Timing



SHINE OF SILVER AND STRENGTH OF STEEL GO TOGETHER TO MAKE A-1 BRAND UTENSILS

FOR Supergrade material - Lustrous finish and lovely desigrs, look for the A-1 Brand.

## Stainless Steel Agencies Ltd.
196-K, GAIWADI GIRGAON, BOMBAY - 4

*Sole Distributors for Madras:*
*Messrs. SAMSON & CO., LTD.*
*151, Broadway :: Madras*

*for Mysore State, Coimbatore, South Kanara and Malabar District:*
*M/s. COMMERCIAL GENERAL AGENCY*
*Sri Narasimha Raja Road :: Bangalore*




பக்ஷிராஜா ஸ்டுடியோஸ்...கோயமபுத்தூர்

Phone : 55166 Grams : "PAPERMALL"

*OUR HEARTIEST DEEPAVALI GREETINGS TO OUR CUSTOMERS, PATRONS AND WELL-WISHERS!*

# GENERAL PAPERS LTD.

*Sales & Show Room :* No. 16, Armenian Street, Madras-1

*Largest Stockists of* PAPERS, BOARDS, NEWSPRINT & STATIONERY

*Branches :*

| BANGALORE CITY | TIRUCHIRAPALLI | MATHURAI |
|---|---|---|
| No. 17, Malavalli Rama Rao Road | No. 69, Big Bazaar Street | No. 99, Vakil New Street |

**Please contact your nearest Depot for your requirements**

(Managing Agents: GANY & CO.)



1. Direct Importers of Motor Spares and Accessories
2. Sole Distributors for "Wellworthy" Pistons and Rings
3. Distributors for "Bendix International" Products
4. Co-Dealers for Ford Genuine Spare Parts
5. Stockists of English Car Parts

★

# THE MODERN AUTOMOBILES

4/17-A, MOUNT ROAD :: MADRAS-2

Cables: 'MOBLIE' Phone: 86765

★

*Contact us for all your requirements in :*

MOTOR SPARE PARTS AND ACCESSORIES

PROMPT AND COURTEOUS SERVICE





# ஸ்ரீ அம்பாள் லாட்ஜ்

65-C, உஸ்மான் ரோடு : தியாகராயநகர் : மதராஸ்-17

(தியாகராயநகர் பஸ் ஸ்டாண்டிற்கும் மாம்பலம் ரயில்வே ஸ்டேஷனுக்கும் அருகாமையில் அமைக்கப்பட்டுள்ளது)

குறைந்த விகிதத்தில் அதிக வசதிகளுடன் கூடிய சௌகரியமான இடம். கண்யமான சுற்று வட்டாரமுள்ள நல்ல இடத்தின் மத்தியில் ஸ்தாபிக்கப் பட்டுள்ளது.

**விஜயம் செய்யத் தவறாதீர்கள்.**

உங்கள் குன்றாத ஆதரவை என்றும் நாடுகிறோம்.



உயர் ரக

போர்ட்

ஸ்பேர் சாமான்களை
உபயோகித்து
இவைகளை இயக்குங்கள்




செவ்வனச் செய்யப்பட்டது

திருப்திகரமாகப் பொருந்துவது

அதிக காலத்திற்கு உழைக்கக் கூடியது

•

ஜார்ஜ் ஓக்ஸ் லிட்.

தலைமை ஆபீஸ்: மதராஸ்

பிராஞ்சுகள்: பெங்களூர், பெஜவாடா,
கோயமுத்தூர், மதுரை & உதகமண்டலம்.
சேலத்தில் சர்வீஸ் டிபாஸ்க்.

டீலர்கள் :

* கோழிக்கோடு & தலைச்சேரி: வி. வி. ஆட்டோமோபைல் லிமிடெட். * குண்டூர்: பெஜவாடா மோட்டார் ஸ்டோர்ஸ். * மங்களூர், மர்காரா & விராஜ்பேட்டை: பி. வி. பாய் & கோ., * நெல்லூர்: டி. என். ஆட்டோமோபைல். * திருவனந்தபுரம், கோட்டயம் & திருச்சூர்: ஆர். எஸ். ஏ. ராமகிருஷ்ணன் செட்டியார். * திருநெல்வேலி: அரசன் & கோ., * திருச்சிராப்பள்ளி, கும்பகோணம் & புதுக்கோட்டை: சர் & தாஜி. தென் இந்தியா முழுவதும், சேவை செய்யும் சாதனங்களுடன் போர்டு டீலர்கள் உள்ளனர்.

Ford






ஸ்டார் புகையிலை கம்பெனி
மார்க்
ஸ்டார் புகையிலை
TRADE MARK
சிவபுரி
புதுக்கோட்டை

சுவைப்பதற்கு
மனோரம்மியமானது

ஸ்டார் புகையிலை கம்பெனி,
உரிமையாளர்கள்:—
மீ. ரூ. அ. செய்யது இப்ராம்ஷா & சன்ஸ்
தபால்பெட்டி நெ. 20,
புதுக்கோட்டை.


நரைமயிர்
நிரந்தரமாக
போய்விட்டது
ஹென்னல்
நிரந்தரமாக நரையை நீக்குகிறது


GREETINGS
FOR
DIVALI
FROM
AFGHAN
SNOW
LEADING
BEAUTY
CREAM
OF THE
East!
Patanwala
PERFUMES & COSMETICS


பெண்களின் அழகை
அதிகப்படுத்துவது
பட்டுப்புடவைகளே!
ஆரணிசில்க்ஹவுஸ்
4, சந்நிதித்தெரு, மைலாப்பூர்
போன்: 86349


உற்சாகம் ஊட்டும்
உன்னத வஸ்துக்கள்
சார்லி பிஸ்கோத்துகளின் ருசி, என்றும் மாறாத புது மணம், மொறு மொறுப்பு எல்லாம் தீபாவளிகளுக்கு அளவில்லா ஆனந்தம் அளிப்பவை.
சார்லீஸ் பால் பிஸ்கோத்துகள்
சார்லீஸ் ஓவல் பிஸ்கோத்துகள்
சார்லீஸ் பார்லி பிஸ்கோத்துகள்
சார்லீஸ் சார்லி பிஸ்கோத்துகள்
சார்லீஸ்
பிஸ்கோத்துகள்
சார்லி அன் கம்பெனி
உசிலம்பட்டி - மதுரை ஜில்லா.


உங்களுக்குத் தேவை
ஸ்பீட்
SPEEDAWAY LTD
SPEED
MADRAS
இலவச
பாட்டரி
இன்ஸ்பெக்ஷன்
சர்வீஸ்
கார்கள்
டிரக்குகள்
பஸ்கள்
டீஸல் வாகன்கள்
டிராக்டர்கள்
ரேடியோக்கள்
SPEED
ஸ்டோரேஜ் பாட்டரி
எங்களது சர்வீஸ் ஸ்டேஷனுக்கு மோட்டார்கார் சொந்தக்காரர்கள் யாவரும் வந்து தங்களது கார்களின் பாட்டரிகளை இலவசமாக பரிசோதனை செய்து கொள்ளக் கோருகிறோம்.
தந்தி :
PERKDIESEL
ஸ்பீடெவே லிமிடெட், மவுண்ட் ரோட், மதராஸ்-2.
போன் :
85225

Finest Quality
**PARTS**
for
# JEEP



CHEVROLET — DODGE — BEDFORD
G. M. C. and other Cars and Trucks

There is more profit for you and more satisfaction for your Customers — when you buy the complete line from us. Our long experience is your assurance of prompt and correct supply.

## MODERN DISTRIBUTING CO.

"IMPORTERS FROM THE WORKSHOPS OF THE WORLD"

65, SINGANNA CHETTY ST., CHINTADRIPET, MADRAS-2

Grams: "JEEPSPARE" · Post Box No. 2241 · Phone: 85550

தந்தி : KATHAYEE    போன் : 86083



TRADE MARK No. 140755

எமது மனமார்ந்த

தீபாவளி வாழ்த்துக்கள்!

பட்டுச் சேலைகளுக்குக்
கீர்த்தி பெற்ற இடம்

## காத்தாயி ஸில்க் எம்போரியம்

மயிலாப்பூர் :: மதராஸ்-4




# பொருளடக்கம்


| தலைப்பு | ஆசிரியர் | | பக்கம் |
| --- | --- | --- | --- |
| கிளி வளர்த்த தம்பதிகள் (மூவர்ணப் படம்) | ஸ்ரீநாத் | ... | 20-அ |
| தேடித் தவிக்குதடி | கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை | ... | 22 |
| நிரந்தரச் செல்வம் | சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் | ... | 25 |
| நானும் வருகிறேன் | டி. கே. சி. | ... | 30 |
| முதல் புரட்சி | யோகி சுத்தானந்த பாரதி | ... | 33 |
| எழுத்தாளரின் வர்ணனை | சாமா | ... | 36 |
| லைப்ரரியின் தியாகம் | எம். எஸ். மணி | ... | 37 |
| இலங்கைச் சித்திரமலர் | மணியம் | ... | 41 |
| காத்திருந்த கன்னி | கி. ரா. கோபாலன் | ... | 46 |
| கபீட்ச மோகினி | க. ரா. | ... | 50 |
| அஜந்தா சித்திர நிபுணர்கள் | சாந்தி | ... | 53 |
| கவிஞரும் கவிதையும் | கனு தேசாய் | ... | 59-அ |
| பாடும் கற்கள் | வை. மு. நரசிம்மன் | ... | 61 |
| பூமிய மாயாவி | ஜெயமணி | ... | 63 |
| அம்பியின் கேள்வி | சாமா | ... | 67 |
| மரகதக் கண்கள் | துஷ்யந்தன் | ... | 69 |
| நான்! | சாமா | ... | 72 |
| கடிதம் வளர்ந்தது! | ரா. விஸ்வநாதன் | ... | 73 |
| மலரின் மேவு திருவே! | ஸ்ரீநாத் | ... | 78-அ |
| அணைந்த மத்தாப்பு | மாயாவி | ... | 81 |
| இந்தக் காலத்துப் பெண் | பி. எஸ். மணி | ... | 86 |
| சுற்றுப் பிரயாணம் | சாமா | ... | 88 |
| கண்ணாடி | மணியம் | ... | 89 |
| ஆஸ்தான சிற்பி | எஸ். வி. எஸ். | ... | 94 |
| சாவித்திரியின் சகோதரி | கோமகள் | ... | 97 |
| மாய மந்திரம் | கனு தேசாய் | ... | 102-அ |
| மூன்று தீபாவளிகள் | லக்ஷ்மி ராஜேந்திர சங்கர் | ... | 105 |
| இன்பக் கதைகள் (போட்டோ) | என். ராமகிருஷ்ணு | ... | 107 |
| சிருங்கார திலகம் | த. நா. குமாரஸ்வாமி | ... | 108 |
| கதைக்குள் கதை | ராகவன் | ... | 113 |
| இரண்டு உள்ளம் | சந்திரா | ... | 118-அ |
| கைதி சொன்ன கதை | பத்ரன் | ... | 121 |
| பம்பாய் வளையல் | அநுத்தமா | ... | 126 |
| டப்பா சங்கீதம் பரவுகிறது! | ரதன் | ... | 128 |
| இது என்ன உள்ளம்! | ராகவன் | ... | 130-அ |
| பனித்திரை | லைபாத் ராமஸ்வாமி | ... | 133 |
| காவியும் கதையும் | சுந்தா | ... | 138 |
| தியாக சிகரம் | கீதா | ... | 143 |
| அருள்கனிந்த சிங்கம் | ஸ்ரீநாத் | ... | 148-அ |
| ஹாஸ்ய வேடிகள் | சாமா | ... | 149 |
| பொன்னனின் புல்லாங்குழல் | ராஜீ | ... | 150 |
| மலர்ந்த உள்ளம் | கீர்வாணன் | ... | 155 |
| அந்தரங்கம் | கனு தேசாய் | ... | 156-இ |
| சித்திரப் பூஞ்சோலை | ... | ... | 156-உ |
| பத்திரிகையில் வருமா! | ரகு | ... | 157 |
| நம் தந்தையர் செய்த விந்தைகள் | ரா. கி. | ... | 159 |
| பழைய உறவு | சரவணன் | ... | 166-அ |
| தேசிங்கு ராஜன் கதைச் சித்திரம் | சந்திரா | ... | 169 |
| ரேடியோபதி | பரதன் | ... | 174 |
| கேட்டுச் சொல்கிறேன்! | சாமா | ... | 177 |
| தேசிங்கு ராஜன் | ... | ... | 178 |
| கதம்பம் | சாமா | ... | 179 |
| பக்தியில் மெய் மறக்கிறோர்! | சாமா | ... | 180-அ |
| வீண் செலவு | சாமா | ... | 180-ஆ |
| ஒற்றை ரோஜாப் பூ! | கல்கி | ... | 183 |


விவசாயத்திலும்
கைத்தொழிலிலும்
நிச்சயமானவெற்றிக்கு
Petter
ஏ.வி. டீஸல்கள்
3, 4 & 5 B. H. P.
ஒற்றை ஸிலிண்டரில்
6, 8, 10 B. H. P.
இரட்டை ஸிலிண்டரில்
12, 15, 18 B. H. P.
இரட்டை (B 2 மாடல்)
கோல்ட் ஸ்டார்ட்டிங்
நான்கு ஸ்ட்ரோக்
அரைவேக ஷாப்ட்
பெட்டர் பீல்டிங்
ஸிங்கிள் & ட்வின்
ஸிலிண்டர்கள்
13 B. H. P. லிருந்து
80 B. H. P. வரை
டீஸல் பம்பு ஸெட்டுகள்
எல்லா அளவிலும் சக்தி களிலும் தேவைக்கு தக்க படி சாதாரண அடிதளம் அல்லது சக்கரம் உள்ள ட்ராலியில் பொருத்திக் கொடுக்கப்படும்.
எலக்ட்ரிக் பம்புஸெட்டு
எல்லா சைஸ்களிலும் உள்ளன
Kirloskar
எலக்ட்ரிக் மோட்டார்
ஸ்க்விரல் கேஜ் 1-150 H.P.
ஸ்லிப்ரிங் 10-150 H.P.
பஞ்சு ஆலைகளுக்கும் மற்றகைத்தொழில்களுக்கும் மிகவும் ஏற்றவை.
உபயோகியுங்கள்
பூரண விநியோகஸ்தர்கள்:
பாரி & கோ, லிமிடெட்.,
த.பெ.நெ: 12, மதராஸ்.
த.பெ.நெ: 506, பம்பாய்.
த.பெ.நெ: 208, கல்கத்தா.
த.பெ.நெ: 172, புது டெல்லி.

# தேடித் தவிக்குதடி!

**பல்லவி**

தேடித் தவிக்குதடி — என் உள்ளம்
தேடித் தவிக்குதடி

**அநுபல்லவி**

பாடி மகிழ்ந்திடப்
    பக்கத் தமர்ந்திடக்
கூடி அளாவிக்
    குலாவிட நித்தமும் (தேடி)

**சரணம்**

அல்லாரும் கண்டர் பொன்
    அம்பலக் கூத்தர்கை
வில்லாக வே மேரு
    வெற்பை எடுத்தவர்
கல்லானை உன்னக்
    கரும்பைக் கொடுத்தவர்
எல்லாம் வல்ல சித்தர்
    என்மது ரேசரைத் (தேடி)

கல்லைப் பிசைந்து
    கனியாக்க வல்லவர்
புல்லையும் நெல்லெனப்
    போற்றிடும் நல்லவர்
சொல்லைக் கடந்தவர்
    சொற்பொரு ளானவர்
எல்லையி லாதபே
    ரின்பம் அளிப்போரைத் (தேடி)

—கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை



# சொந்தக்காரரா யிருக்க பெருமிதமடைவீர்கள்
# சவாரி செய்ய ஆனந்தமடைவீர்கள்
# குடும்பத்துடன் உல்லாசமாகச் செல்ல சந்தோஷமடைவீர்கள்



## தி நியூ
## ஹில்மன் மிங்க்ஸ் மாக்னிபிஸன்ட்

ஆடோமோபைல் தயாரிப்புகளில் இத்தகைய இணையில்லா மேன்மையான அம்சங்களை ஒருங்கே கொண்ட நியூ **ஹில்மன் மிங்க்ஸ் மாக்னிபிஸன்ட்** காரைப்போல் இதுவரை தயாரிக்கப் பட்டது இல்லை.

தயவு செய்து இன்றே வந்து மோட்டார்களில் உன்னதமானதாக விளங்கும் இக்காரைப் பார்வையிடுங்கள்.

எண்ணற்ற சந்தோஷகரமான **மிங்க்ஸ்** சொந்தக்காரர்களுடன் நீங்களும் ஒருவராகச் சேருங்கள்.

இது ரூட்ஸ் க்ரூப் தயாரிப்பு

**ஸிம்ஸன் & கோ., லிமிடெட்**

மதராஸ், பெங்களூர், திருச்சிராப்பள்ளி, உதகமண்டலம்
ஹைதராபாத் (டெக்கான்)

# நிரந்தரச் செல்வம்

பிரஸிடென்ஸி மாஜிஸ்ட்ரேட்டு கோர்ட்டு. மேடை மேல் இரண்டு நீதிபதிகள். ஒருவர் உத்தியோகஸ்தர்; மற்றொருவர் இலவசமாக உட்கார்ந்து உதவுகிறவர். கீழே நாற்காலிகளில் சில வக்கீல்களும் போலீஸ் உத்தியோகஸ்தர்களும். குற்றவாளிக் கூண்டில் ஒரு பையன்.

"உன் தகப்பனார் பெயர் என்ன?"

"எனக்குத் தகப்பனார் இல்லை" என்றான் சிறு பையன்.

"எப்போது இறந்து போனார்?" என்று கௌரவ மாஜிஸ்ட்ரேட்டு தம் நெகிழ்ந்த மனப்பான்மையைக் காட்டினார்.

"இறந்து போகவில்லீங்கோ, தகப்பனாரே இல்லீங்கோ எனக்கு" என்றான் பையன்.

கோர்ட்டார் இருவரும் சிரித்தார்கள்.

"உன் வயது என்ன?" என்று குமாஸ்தா கேட்டு எழுத ஆரம்பித்தார்.

"பத்து வயதுங்கோ."

"பெயர்?"

"ஓவர்ஸ் கண்ணன்."

"ஓவர்ஸ் என்றால் என்ன?"

"அப்படித்தான் எல்லாரும் என்னைக் கூப்பிடுறாங்க."

"ஏன் அந்தப் பெயர் உனக்கு இட்டார்கள், தெரியுமா?" என்று இலவச மாஜிஸ்ட்ரேட்டு மறுபடியும் குறுக்கிட்டார்.

"எங்க அம்மாவுக்கு—இல்லீங்கோ, என்னை வளர்த்த தாய்க்கு—ஒரு சொந்த மகனும் இன்னொரு வளர்த்த மகனும் இருந்தாங்க. இருவரும் என்னை விடப் பெரியவங்க. அவர்கள் பெயரும் கண்ணன்—பெரிய கண்ணன், சின்னக் கண்ணன். அவர்களை நான் கவனித்து வந்ததால் என்னை மேஸ்திரி கண்ணன் என்று அழைத்து வந்தாள். பெரிய கண்ணனுக்கு இது பிடிக்கவில்லை. அவன் அழுதான். அவன் சொந்தப் பிள்ளை."

"அவன் சொந்தப் பிள்ளை என்பது உனக்கு எப்படித் தெரியும்?" என்றார் இலவச மாஜிஸ்ட்ரேட்.

"அவன் சொல்லுவதைச் சொல்லட்டும். குறுக்கிடாதீர்" என்றார் உத்தியோக மாஜிஸ்ட்ரேட்டு மெதுவாக, ஆனால் உறுதியான சுவரத்தில்.

"மன்னிக்க வேண்டும்!" என்று இலவசர் நாற்காலியைப் பின்னாலே தள்ளிச் சாய்ந்தார்.

"பெரிய கண்ணன் நான்தான் மேஸ்திரி என்று சண்டை போட்டான். இதற்காக அவனையே மேஸ்திரி கண்ணன் என்று ஒப்புக்கொண்டு, 'நீ ஓவர்ஸ் கண்ணன்' என்று எனக்குச் சொல்லி அப்படியே கூப்பிட்டு வந்தார்கள்" என்றான் அவன்.

"ஓவர்ஸியரா நீ, ஓஹோ!" என்று மாஜிஸ்ட்ரேட்டு சிரித்து, கொஞ்சம் கோபமாக உட்கார்ந்திருந்த கௌரவ மாஜிஸ்ட்ரேட்டைப் பார்த்து அவரையும் சிரிக்கச் செய்தார்.

"இன்னொருவனுக்கு என்ன பெயர் வைத்தாள்?" என்று கேட்டார்.

"அவனுக்கு ஒரு பெயரும் வைக்கவில்லை. அவன் அழவில்லை. அவன் ரொம்ப சாது."

"நீ போக்கிரியா?"

"இல்லீங்கோ, நான் சாது."

"சரி! நீ மயிலாப்பூர் உற்சவத்தில் ஏன் திருட்டு வேலை செய்தாய்?"

"இல்லீங்கோ! பிச்சைதான் கேட்டேன், திருடவில்லை."

"சமயம் வந்தால் திருடுவதும் உண்டல்லவா?" என்று போலீஸ் இன்ஸ்பெக்டர் மெதுவாகச் சொன்னார்.

கௌரவ மாஜிஸ்ட்ரேட்டார் சிரித்தார். பையனும் சிரித்தான். கோர்ட்டிலிருந்த எல்லாரும் சிரித்தார்கள். பையனைப் பார்த்துப் பரிதாபப்பட்டார்கள். அவன் சிரித்தபோது அவன் முகத்தில் ஒரு விலாசம் பிரகாசித்து எல்லாருடைய மனதையும் கவர்ந்தது.

"முகம் நல்ல லட்சணமாக இருக்கிறது, பார்! யாரோ நல்ல ஜாதிக்காரன் இவனைப் பெற்றிருக்க வேண்டும்!" என்றார் ஒரு வக்கீல்.

"யாரோ உயர் குலத்து ஸ்திரீ கெட்டுப்போய் இவனைப் பெற்றுவிட்டாள் போலிருக்கிறது. நயினுபுரத்தில் பலபேர் இப்படிப் பிறந்த குழந்தைகளை வாங்கிக்கொண்டு ஜீவனம் செய்து வருகிறார்கள். குழந்தைகளெல்லாம் அழகாக இருப்பார்கள்" என்றார் இன்னொரு வக்கீல்.

"அப்படித்தான் திருட்டுப் பையன்கள் சென்னைப் பட்டணத்தில் உண்டாகிறது" என்றார் மற்றொருவர்.

* * *

"ஏய், கண்ணு! சொல்வதைக் கேள். மறுபடியும் திருடமாட்டேன் என்று சொன்னால் இந்தத் தடவை விட்டு விடுகிறோம். சரியாக நடந்து கொள்வாயா?" என்றார் மாஜிஸ்ட்ரேட்டு.

"அப்படியே செய்கிறேனுங்கோ" என்றான் பையன்.

"கூட்டத்திலே ஜோபியில் கைவைக்க மாட்டாயா?" என்றார் இலவசர்.

"இல்லீங்கோ, பிச்சையே எடுப்பேன்" என்றான் ஓவர்ஸ் கண்ணன்.

"இன்ஸ்பெக்டர்வாள்! என்ன சொல்லுகிறீர்கள்?"

"கோர்ட்டார் இஷ்டம். இவன் துஷ்டன். ஓவர்ஸியர் என்று அவனே ஒப்புக் கொள்கிறான்" என்றார் இன்ஸ்பெக்டர்.

"இல்லீங்கோ, நான் திருடனல்ல. ஓவர்ஸ் என்பது என் தாய் வைத்த பெயர்" என்றான் பையன்.

ஏதோ கடுதாசிகளைப் புரட்டிப் பார்த்தார். பிறகு, "சாட்சி உண்டா?" என்று கேட்டார் மாஜிஸ்ட்ரேட்டு, இன்ஸ்பெக்டரைப் பார்த்து.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்






இன்ஸ்பெக்டரும் அவருடைய உதவி உத்தியோகஸ்தர்களும் பேசிக்கொண்டார்கள். பிறகு "கோர்ட்டார் [போசனைப்படி சிறுவனை விடுதலை செய்து விடுங்கள்" என்றார் இன்ஸ்பெக்டர்.

2

எழும்பூர் ரயில்வே ஸ்டேஷனண்டை மேஸ்திரி கண்ணன் காத்துக் கொண்டிருந்தான். ஓவர்ஸ் கண்ணன் அங்கு ஓடி வந்ததும், "நான் சொன்னேனா இல்லையா, உன்னை ஒன்றும் செய்ய மாட்டார்களென்று?" என்றான்.

இவர்களை வளர்த்த தாய் காலரா கண்டு இறந்து போய் எட்டு வருஷமாச்சு. அனாதையாக இருந்த இந்தக் குழந்தைகள் அவள் இறந்துபோன பின் சுத்த அனாதையாகிப் பிச்சை எடுத்தும், தெருவில் கெஞ்சித் திரிந்தும் எப்படியோ வளர்ந்து வந்தார்கள்.

இவர்களும் இன்னும் சில திக்கற்ற பையன்களும் பகலெல்லாம் தெருக்களில் காலம் கழித்து இரவில் ஸினாபுரம் கண்ணாடிப் பட்டறையண்டை சாம்பல் பேட்டில் படுத்துத் தூங்குவார்கள்.

கச்சேரி நடவடிக்கைக்குப் பிறகு இரண்டு மூன்று நாள் ஓவர்ஸ் கண்ணன் திருட்டு வேலைகளில் சேரவில்லை. பிறகு குப்பாண்டி—இவனைவிட நான்கு வயது பெரியவன்—"வாடா, ஓவர்ஸ், ஏன் பயந்து சாகிறாய்?" என்றான்.

"எனக்குப் பயம் கிடையாது, நீதான் பயங்காளி!" என்றான் ஓவர்ஸ்.

சினா பஜாரிலும் மூர் மார்க்கெட்டிலும் கொத்தவால் சாவடியிலும் இரண்டு மூன்று நாட்கள் சமயம் பார்த்தவர்களாக இருந்தார்கள்.

ஒன்றும் கிடைக்கவில்லை.

"எல்லாரும் திருட்டுப் பயல்களாகப் போனார்கள். எப்போதும் ஜேபியில் கையைப் பத்திரமாக வைத்துக் கொண்டே இருக்கிறார்கள். முந்தியெல்லாம் இப்படியில்லை" என்றான் குப்பாண்டி.

நம்முடைய சாஸ்திரத்தில் குப்பாண்டி திருடன். திருடர்களுடைய சாஸ்திரத்தில் நாம் திருடர்கள்.



ஓவர்ஸ் கண்ணன் எட்டு வருஷம் இந்த விருத்தியில் இருந்தான். பிறகு அவனை யாரோ ஏமாற்றிக் கூலிக் கப்பலில் ஏற்றிக் கொண்டு போனார்கள். பினங்கில் ரப்பர் தோட்டத்தில் அமர்ந்தான். அங்கே மிகவும் சாமர்த்தியமாகவும் நம்பிக்கையாகவும் வேலை செய்து பணம் சம்பாதித்து விட்டான். இந்தியா திரும்பி வந்தபோது அவனுக்கு நாற்பது வயது. மூன்று பெண் ஜாதிகளோடு திரும்பி வந்தான். இப்போது பெரிய புகையிலை வியாபாரியாக நல்ல முறையில் வாழ்க்கை நடத்தி வருகிறான். எட்டு ஆண் மக்களும் இரண்டு பெண்களும் மூன்று மனைவிமார்களும் சண்டை சச்சரவு இன்றிக் கௌரவமாகவும் சாமர்த்தியமாகவும் குடும்பம் நடத்தி வருகிறார்கள். கடைசிப் பெண் தவிர மற்றவர்கள் எல்லாரும் புகையிலைக் கிடங்கில் கூலிக்காரர்களுடன் கூலிக்காரர்களாக வேலை செய்து வருகிறார்கள். பொராக்கு ராம முதலியார்—அதுதான் இப்போது ஓவர்ஸ் கண்ணனுடைய பெயர்—நல்ல தமிழ் எழுத்தாளராகி விட்டார். அவர் எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டது பினங்கில் இருபத்து நான்கு வயதுக்குமேல். "என் கதை" என்று தம்முடைய வாழ்க்கை வரலாற்றை எழுதியிருக்கிறார். இனிமேல் தம்முடைய கதையை அவரே சொல்லுகிறார்:

**ப**ந்தைவெளி குப்பாண்டி ஒரு கிழவனார் ஜோபியிலிருந்து பணப்பையை எடுத்துவிட்டு, டிராம் வண்டி ஓரமாகப் பின்புறம் சென்றான். மெள்ளக் கீழே பையைப் போட்டுவிட்டுப் பேசாமல் சென்றான். பக்கிரி ஓட ஆரம்பித்தான். "பை போச்சு! பிடி திருடனை!" என்று சத்தம் கிளம்பிற்று. உடனே ஓடிக் கொண்டிருந்த பக்கிரியைத் துரத்திக் கொண்டு சிலர் போய் அவனைப் பிடித்து நன்றாகப் புடைத்தார்கள். தெருவில் எதிர்ப் பக்கத்தில் பேசாமல் நின்ற என்னை யாரும் கவனிக்கவில்லை. கீழே போட்ட பையை மெள்ள எடுத்துக் கொண்டு கோவணத்துக்குள் வைத்துக் கொண்டேன். எல்லாரும் அடிபடும் பையனைச் சுற்றிக் கொண்டார்கள். நானும் கூட்டத்தோடு ஒருவனாக நின்றேன். பிடிபட்ட பையன் கூவென்று அழுதான். அடிபட்ட படியால் இயற்கையாகவே பலமாகக் கத்தி அழுதான். அவன் உடுப்பை உதறி உதறிச் சோதனை போட்டார்கள். ஒன்றும் கிடைக்கவில்லை. "பாவம், விட்டுவிடுங்கள். இவனல்ல திருடியது. திருடின ஆசாமி உங்களிடம் சிக்குவானா?" என்றான் ஒரு கடைக்காரன்.

நானும் பேச்சில் கலந்து கொண்டு "போக்கிரிப் பயல் இவன். திருடிவிட்டுக் கூட்டாளி கையில் கொடுத்துவிட்டிருக்க வேண்டும்" என்றேன்.

கூட்டம் கலைந்து விட்டது. பையை இழந்தவரும் துயரத்தோடு தன் சிநேகிதருடன் பேசிக்கொண்டு திரும்பிப் போனார். "இந்தச் சென்னைப்பட்டணம் பொல்லாத ஊர். அதிலும் சைனா பஜாரில் வெகு ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். பையில் எவ்வளவு பணம் இருந்தது?" என்றார் சிநேகிதர். இப்படிப் பேசிக்கொண்டு போய் விட்டார்கள்.

**தோ**ட்டத்தில் ஒரு மூலையில் குப்பாண்டியும், பக்கிரியும், நானும் முன் செய்து கொண்டிருந்த ஏற்பாட்டின்படி கூடினோம்.

குப்பாண்டி ரொம்ப யோக்கியமாக நடந்து கொண்டான். பையில் பதினெட்டு வெள்ளி ரூபாயும் ஒன்றேகால் ரூபாய்ச் சில்லறையும் இருந்தது. இதை மூன்று பங்காகச் செய்தான். ஆறு வெள்ளி ரூபாய் தன் பங்குக்கு வைத்துக்கொண்டான். பக்கிரிக்கு ஆறு வெள்ளி ரூபாய் கொடுத்தான். என் பங்குக் கென்று ஆறு ரூபாய் கீழே வைத்துவிட்டு, சில்லறை அணாக்களில் பத்தணாவைப் பக்கிரிக்கு "நீ உதை பட்டதற்குக் கூலி" என்று கொடுத்தான். பிறகு எனக்கென்று வைத்திருந்த பங்கிலிருந்து குப்பாண்டி இரண்டு ரூபாய் எடுத்துக்கொண்டு "நான்தான் முதலாளி. ஜோபியில் கைபோட்டது நான்தானே? இதுதான் முதல் தடவை நீ பெரிய வேலையில் கலந்தது. எனக்கு இந்த இரண்டு ரூபாய் நீ குருதட்சிணை கொடுத்து விடவேண்டும்" என்றான்.

"சரி, அப்படியே எடுத்துக்கொள்" என்றேன். நான் வெகு சந்தோஷமாக என் பணத்தை எடுத்துக் கொண்டு ஓடினேன்.

3

அன்றிரவு எனக்குத் தூக்கமே வரவில்லை. சாம்பல் மேட்டில் வழக்கப்படி படுத்தேன். பணம் உறுத்திக்கொண்டேயிருந்தது. கூடப் படுத்திருந்த பையன்களுக்குத் தெரிந்து விட்டால் உதைத்துப் பிடுங்கிக்கொண்டு விடுவார்கள் என்று பயம். கவலையும் சிந்தனையும் திகிலுமாக இரவு முழுதும் தூக்கமில்லாமல் கழித்தேன்.

அதுவரையில் சுகமாக இருந்த என்னை இப்போது கவலை ஆட்கொண்டு விட்டது! பழக்கடையில் பரி என்றால் மீசை மாரியப்பப் பிள்ளை ஒரு பழம் தருவார். கொஞ்சம் அதிகம் பழுத்ததாக இருக்கும். 'இந்தா!' என்று கையில் கொடுப்பார். மற்றவர்களைப்போல் வீசி எறியமாட்டார். வாழைப் பழம் கொஞ்சம் அழுகினால் ருசி அதிகம். பினாங்கில் கூட அவ்வளவு நேர்த்தியான வாழைப்பழம் கிடையாது. அங்கப்ப நாயகன் தெருவில் ஓட்டல்கார தூயா மிஞ்சின சோறும் குழம்பு வண்டலும் கலந்து— எனக்காக ஒரு இலைத் தட்டு வைத்திருப்பார்— அதில் 'இந்தா ஓவர்ஸீர்' என்று கொடுப்பார். மண்ணடியில் இரும்புக் கடைக்கார சாமி செட்டியார் மத்தியானம் வீட்டுக்குச் சாப்பிடப் போகும் போது 'கடையைப் பார்த்துக்கொள், கண்ணு!' என்று கடை முழுதும் என் சுவாதீனத்தில் வைத்து விட்டுப் போவார். திருட்டுப் பயல்கள் யாரும் நெருங்காமல் அவர் வரும் வரையில் நான் தெருவில் இருந்து கொண்டு காவலிருப்பேன். திரும்பி வந்ததும் செட்டியார் அரையணா வீசிப் போட்டு, 'தோசை வாங்கிச் சாப்பிடு' என்பார். மண்ணடி மூலையில் கிழவி வார்க்கும் தோசைக்குச் சமானம் எந்த ஊரிலும் கிடையாது.

இந்தப் பணம் எனக்கு வேண்டாத ஒரு பெரும் பாரமாகப் பட்டது. உலகமெல்லாம் பணம், பணம் என்று வாயைத் திறந்து கிடக்க, எனக்கு வந்த இந்தப் பணம் அருவருப்புத் தந்தது. அதை நினைத்தால் இப்போது சிரிப்பாக இருக்கிறது. ஆனால் அப்போது என்னை வாட்டின கவலையும் பயமும் தாங்க முடியாமலிருந்தது. வைத்துக் கொள்ளப் பையில்லை, பெட்டியில்லை, ஜேபியுள்ள ஒரு சொக்காயுமில்லை, கால் சட்டையுமில்லை. யாரிடமும் சொல்லிக் கொள்ளவும் முடியவில்லை. வேண்டாம் என்று எறிந்து விடவும் முடியவில்லை. கடைக்காரர் யாரிடமாவது 'வைத்திரு' என்று சொன்னால் உடனே, 'திருட்டுப்பயலே' என்று பணத்தைப் பிடுங்கிக் கொண்டு என்னை விரட்டி விடுவார்கள். அல்லது போலீசுக்குச் சொல்லிக் கூண்டில் அடைத்து விடுவார்கள்.

இவ்வாறு சிந்தனையில் மூழ்கி, பணக்காரனான நான் மறுநாள் இரவும் தூங்காமலே கழித்தேன்.

என்னையும் மீறி, கொஞ்ச நேரம் தூக்கம் வந்தது. உடனே யாரோ என்னை அமுக்கிப் பணத்தைப் பிடுங்கப் பார்த்ததாகக் கனவு கண்டு திடீரென்று விழித்துக் கொண்டேன். பிறகு கனவுதானே என்று கண்ணைத் தேய்த்துக்கொண்டு கொஞ்சம் சந்தோஷம் அடைந்தேன்.

அதற்குமுன் ஒரு இரவாவது நான் தூக்கமில்லாமலிருந்ததில்லை. எந்தக் கட்டாந்தரையிலும் படுத்துத் தூங்கிப் போவேன். இந்தப் பணமுடிப்பு வந்து என் சுக வாழ்வைக் கெடுத்து விட்டது. தூக்கத்தில் பேசிவிடுவேன், பக்கத்தில் தூங்கும் முரட்டுப் பயல்கள் என்னிடம் ரூபாய் இருக்கிறது என்று கண்டுகொண்டு என்னைக் கொன்று விடுவார்கள் என்று பெருந் திகில் பிடித்துக் கொண்டது.

இவ்வாறு இரண்டாம் நாள் இரவும் கழித்தேன். விடிவதற்கு முன் அதிகாலையில் எழுந்து தெற்குப் புறமாகத் தனியாகச் சென்றேன். நுங்கம்பாக்கத்தில் ஒரு மூலையில் இருட்டில் உட்கார்ந்து விம்மி விம்மி அழுதேன், என்னை வளர்த்த தாயை நினைத்துக்கொண்டு. அழுதபின் ஒருவித ஆறுதல் உண்டாயிற்று. மறுபடியும் எழுந்து நடந்து சென்றேன்.

அன்று பகலெல்லாம் இங்குமங்கும் திரிந்து பொந்துள்ள மரம் எங்கேயாவது தனிமையான இடத்தில் இருக்கிறதா என்று பார்த்துக் கொண்டே கழித்தேன். பழைய மாம்பலத்தில் ஒதுக்கமான இடத்தில் தகுந்த மரம் ஒன்று கண்டேன். சாயங்காலம் அங்கே போனேன். யாரும் ஆட்கள் பக்கத்தில் இல்லை. மரத்தின்மேல் ஏறினேன். பொந்து ஒன்றைக் கண்டேன். உள்ளே கை வைத்துப் பார்த்தேன். நன்றாகக் கை சென்றது. முழங்கை வரையில் நுழைந்தது. உள்ளே மெத்தென்று இருந்தது. இது பத்திரமாக இருக்கும் என்று தீர்மானித்தேன். ஒரு சொந்த வீடு கட்டி விட்ட சந்தோஷத்தை அப்போது அடைந்தேன்! என் பண முடிப்பை அதில் வைத்துவிட்டுக் கீழே இறங்கினேன்.

பிறகு அங்கே கிடந்த செங்கற் துண்டு ஒன்றைக் கையில் எடுத்துக்கொண்டு மறுபடியும் ஏறினேன். கீரிப்பிள்ளை அல்லது வேறு ஜந்து தோண்டிக் கெடுத்துவிடாமலிருக்கும் என்று எண்ணிச் செங்கற்றுண்டை அந்தப் பொந்தில் என் முடிப்புக்கு மேல் அமையும்படி வைத்தேன். அந்தச் செங்கற் துண்டு என் கையிலிருந்து நழுவி உள்ளே பட்டென்று விழுந்தது. மறுபடி கையை நுழைத்துப் பார்த்ததில் செங்கல்லும் இல்லை, பணமும் இல்லை! தோள் வரை கையைச் செலுத்திப் பார்த்தேன். வெறும் பொந்தாக இருந்தது. முடிவில் பணத்தை இழந்து விட்டேன். அப்போது உண்டான என் துயரத்தை எழுத முடியாது. பைத்தியக்காரன் மாதிரி கையை உள்ளே நுழைத்து தோண்டி தோண்டிப் பார்த்தேன். வெறும் பொந்து தான், ஒன்றும் கிடைக்கவில்லை. "போச்சு என் ஆஸ்தி" என்று நிச்சயம் செய்து கொண்டேன்.



கண்களினின்று பல பலவென்று நீர் வடிந்தது. தலை சுறு சுறு என்று சுற்றிற்று. கீழே விழுந்தேன். பிறகு நினைவு வந்து அங்கேயே கொஞ்ச நேரம் உட்கார்ந்தேன். என் சொத்தைத் தின்று விட்ட மரத்தை மேலும் கீழுமாக வெறுப்புடன்

பார்த்தேன். நான் ஏறின பக்கத்துக்கு எதிர்ப்பக்கமாக இப்போது உட்கார்ந்திருந்தேன். மரத்தில் இன்னும் சில பெரிய பொந்துகள் இருப்பதைக் கண்டேன். ஒரு வேளை என் பண முடிப்பு மேலே இருக்கும் பொந்துகள் ஒன்றில் விழுந்து கிடக்கும் என்று ஒரு எண்ணம் உண்டாயிற்று.

மறுபடியும் ஆசையோடு மரத்தில் ஏறினேன். நான் முடிப்பை வைத்த பொந்துக்குக் கீழே எதிர்ப் பக்கத்தில் ஒரு பொந்து இருந்தது. அதில் பார்க்க செங்கற் துண்டு தெரிந்தது. கை வைத்ததும் என் முடிச்சு கிடைத்தது. அப்போது என் ஆனந்தத்தை என்னென்று சொல்லுவேன்! குரங்கைப் போல் குதித்துக் கூத்தாடினேன். இரண்டு இரவு எவ்வளவு கவலையும் பயமும் பட்டேனோ அந்த அளவுக்கு மேல் இப்போது ஆனந்தக் களிப்பு அடைந்தேன்.



முடிப்பை அவிழ்த்து அதிலிருந்து ஒரு அணா எடுத்துக் கையில் வைத்துக் கொண்டு மீதியை மறுபடியும் கோவணத்தில் வைத்துக் கட்டிக் கொண்டு ஊருக்குள் சென்றேன். ஒரு அணாவுக்கு இடியாப்பம் வாங்கி வயிறு நிறையச் சாப்பிட்டுவிட்டு குழாயில் தண்ணீர் குடித்துவிட்டு மூர் மார்க்கட்டுக்கு வேகமாய்ப் போனேன். அங்கே பழஞ் சொக்காய்களும் வேறு பழஞ்சாமான்களும் வைத்திருக்கும் கடையண்டை நின்றேன்.

"திருட்டுப் பயல்களுக்கு இங்கே என்ன வேலை? உதை வேண்டுமா?" என்றார் கடைக்காரர்.

இவ்வாறு மிரட்டியதுமல்லாமல் கடையிலிருந்து இறங்கிப் பளீர் என்று என் கன்னத்தில் ஒரு அறையும் கொடுத்தார்.

"அனாதைக் குழந்தையை ஏன் அடிக்கிறீங்கோ?" என்று கடையில் மேலேயிருந்த அவர் மனைவியம்மாள் குறுக்கிட்டாள்.

"அனாதையாவது, குழந்தையாவது! கேப்மாரி திருட்டுப் பயல்கள். கடையைச் சரியாகப் பார்த்துக் கொள்" என்று மனைவிக்குச் சொல்லிவிட்டுச் செட்டியார் வீட்டுக்குப் போய்விட்டார்.

நான் அங்கேயே நின்றேன்.

"குழந்தாய், உனக்கு என்ன வேண்டும்? ஏன் கடையண்டை நிற்கிறாய்? உனக்கு வயதாய்விட்டது. கால் சட்டை போட்டுக் கொள்!" என்றாள்.

நான் பதில் சொல்லாமல் ஒரு மூலைக்குப் போனேன். முடிப்பிலிருந்து ஒரு ரூபாய் கையில் எடுத்துக்கொண்டு மறுபடி முடிப்பை வைத்துக் கட்டிக் கொண்டு கடையண்டை திரும்பச் சென்று "அம்மா" என்றேன்.

"என்ன, கண்மணி!" என்றாள் கடைக்காரம்மா.

"எனக்கு ஒரு சின்னக் கால்சட்டை கொடுங்கோ; ஜோடி உள்ள சட்டை; அதற்குப் பணம் தந்து விடுகிறேன்" என்றேன்.

"ஓஹோ! பணம் வைத்திருக்கிறாயா? எங்கே திருடினாய்?" என்றாள்.

"இல்லை, அம்மா! சாவுகார் பேட்டையில் சேட்டு ராஜா ஒரு ரூபாய் தந்தார். இதோ" என்று ரூபாயைக் கொடுத்தேன். அவள் ரூபாயைத் தட்டிப் பார்த்து ஒரு அழகான கால் சட்டை ஒன்று எடுத்துக் கொடுத்து, "இந்தா, இது ஒன்னரை ரூபாய் பெறும். மூன்று வருஷம் கிழியாமல் நிற்கும். எடுத்துக் கொண்டு ஓடிப்போ, செட்டியார் வருவதற்குள்!" என்றாள்.

கால் சட்டையை வாங்கிக்கொண்டு அங்கேயே போட்டுக் கொண்டேன். முழங்காலுக்கு மேலே நின்றது. கடைக்காரம்மா கீழே இறங்கி இடுப்பில் வாரை இழுத்து 'பக்கிள்' சொருகினாள். ஓட்டம் பிடித்தேன். கோவணத்தை எறிந்துவிட்டுப் பண முடிப்பை மட்டும் சட்டைப் பையில் வைத்துக் கொண்டேன். என் கவலையெல்லாம் பறந்து போய் விட்டது. குழாயில் முகத்தைக் கழுவிக்கொண்டு மறுபடியும் கடையண்டை போய் "அம்மா, நமஸ்காரம்!" என்றேன்.

"பார்த்தாயா, இப்போது எவ்வளவு அழகாக இருக்கிறாய்! இந்தா ஒரு குட்டிச் சொக்காய், இதையும் போட்டுக்கொள். பணம் வேண்டாம். எட்டு நாளைக்கு ஒரு தரம் குழாயில் நனைத்து வெயிலில் போடு" என்று ஒரு முழுக்கைச் சட்டையும் தந்தாள். அதையும் போட்டுக் கொண்டு "நீ என்ன சொன்னாலும் நான் கேட்பேன், தாயே!" என்று சொல்லிவிட்டுத் துரைமாதிரி நடந்து போனேன். ● ● ● ●

**ஆசிரியர் பின்னுரை:** *ஆங்கில நூல் ஒன்றில் படித்த ஒரு அத்தியாயம் என் உள்ளத்தில் பதிந்திருந்தது. அதைத் தழுவி இந்தக் கதை எழுதினேன். என் அருமை மக்களே! பிச்சை கேட்கும் குழந்தைகளை விரட்டி அனுப்பாதீர்கள். நானும் நீங்களும் ஒருவன் கண்ணன் நிலையில் இருந்திருக்கக் கூடும். எப்படியோ தப்பினோம். உள்ளத்தைக் கல்லாக்கிக் கொள்ளாதீர்கள். தருமமும் தயையுமே நிரந்தரச் செல்வம். கடவுளுடைய பாங்கியில் நல்ல வட்டியுடன் பெருகிப் பத்திரமாக இருக்கும்.*

# நானும் வருகிறேன்

டி. கே. சி.



கவி என்பது எந்த பாஷையிலும் அபூர்வமான வஸ்துத்தான். ஆயிரம் வருஷத்துக்கு ஒரு தடவை கவிஞர் ஒருவர் பிறக்கிறார் என்று சொல்லுவதில் ஒரு உண்மை இருக்கவே செய்கிறது. அவ்வளவு அரிய வஸ்து கவி.

ஆனாலும் கவியை விடக் கவியை அனுபவிக்கிறது அதிக அபூர்வமான காரியமோ என்று சொல்லத் தோன்றுகிறது.

ஆர்னல் பெனட் சொன்னது நமக்கு அடிக்கடி ஞாபகத்துக்கு வருகிறது. "கவியைச் சொல்ல ஆரம்பித்து விட்டால் போச்சு காரியம். எந்தக் கூட்டமும் கலைந்து ஓடிவிடும்" என்றார்.

இது ஆங்கிலக் கவி சம்பந்தமாகச் சொன்னது. தமிழ்க் கவி சம்பந்தமாகவும் அதையே சொல்லலாம் போல் இருக்கிறது.

ஏதோ மரியாதைக்காக தமிழ்க் கவியை அனுபவிக்கிறோம், அனுபவிக்கிறோம் என்று பலர் சொல்லி வந்தார்கள். மரியாதைச் சம்பிரதாயங்கள் தற்போது குறைந்து நிற்கிற காரணத்தால், வெளிப்படையாகவே தங்கள் வெறுப்பைச் சொல்ல ஆரம்பித்து விட்டார்கள். வெறுப்பு எவ்வளவு தூரம் போயிருக்கிறது என்று கேட்டால், தமிழ் மேலேயே, வெறுப்பும் கோபமும் பிறந்து விட்டன.

ஆனாலும் வெறுப்பும் கோபமும் ஒரு சிறு சாராருக்குத் தான். மொத்தத்தில் பார்த்தால் தமிழிலும் தமிழ்க் கவியிலும் ஆர்வமே உண்டாயிருக்கிறது. ஆடவர், பெண்டிர், இளைஞர் எல்லாருக்கும் ஒரு தனி ஆர்வம் பிறந்திருக்கிறது.

தமிழ்ப் பண்பாட்டுக்கும் தமிழ் நாட்டுக்கும் நல்ல சகுனம் அது.

* * *

உண்மையான கவியின் ஆழத்தையும் உள் நின்று வெளிவரும் பிரகாசத்தையும் கண்டு அனுபவிக்கக் கூடியவர்கள் பூர்வ காலத்திலும் அபூர்வமாய்த் தான் இருக்

திருக்கிறார்கள். சில கவிஞர்களின் புலம்பலில் இருந்து இந்த உண்மை நமக்குத் தெளிவாகத் தெரிகிறது.

1

ஆயிரம் வருஷத்துக்கு முன் உறையூரில் சோழ மன்னன் ஒருவன் இருந்தான். அவனுடைய மந்திரி சினக்க முதலியார் உறையூர் வட்டகையில் இருந்த கண்டியூரில் இருந்தார்.

சினக்க முதலியார் பெரிய வள்ளல். வள்ளலாய் இருந்ததைவிட அவரிடத்தில் சிறப்பு என்ன என்றால் உண்மையான தமிழ்ப் பாடல்களை வெறி கொண்டு அனுபவிப்பார். நல்ல புலவர்களைச் சதா தன்னிடம் வைத்துக் கொண்டிருப்பார். பொய்யா மொழிப் புலவர் அப்படி அவருடன் இருந்த புலவர்.

பொய்யாமொழிப் புலவர் சொல்லும் பழம் பாடல்களை மனசுக்குள் வாங்கி அவைகளோடு இணைந்துக் கொண்டிருப்பார். போன போன இடமெல்லாம் அந்தப் பாடல்களைப் பாடுவார். ஆற்றில் குளிக்கும் போதும் பாடுவார், வண்டியில் போகும் போதும் பாடுவார், சாப்பிடும் போதும் பாடுவார்.

இப்படியெல்லாம் தமிழ்ப் பாடல் சிலரை ஆட்கொள்ளும், ஆட்டுவிக்கும் என்பது கண்கூடாகப் பார்க்கிற காரியம்தான் இப்போதும்.

இப்படி யிருக்கிறது பொய்யாமொழிப் புலவருக்கும் தமிழ்ப் பாடல்களுக்கும் சினக்க முதலியாருக்கும் இடையே உள்ள உறவு.

***

சினக்க முதலியாருடைய வீட்டு மாடியில் வசதியான ஹால்கள், அறைகள், வராந்தாக்கள் இருக்கின்றன. இவைகளோடு அழகான நிலா முற்றமும் இருக்கிறது.

நிலா முற்றத்தில் சினக்க முதலியார் படுப்பதற்காகக் கட்டில் மெத்தை எல்லாம் போட்டுச் சௌகரியப் படுத்தி யிருக்கிறது.

இரவு சாப்பாடு ஒன்பது மணிக்கு ஆயிற்று. முதலியாரும் பொய்யாமொழிப் புலவரும் அப்படியே மாடியில் ஏறி ஹால் வழியாகப் பின்னால் இருந்த நிலா முற்றத்துக்குப் போய்க் கட்டிலண்டை போனார்கள். முதலியார் கட்டிலில் உட்கார்ந்தார். புலவரைப் பக்கத்தில் உட்காரச் சொன்னார்—மெத்தை மேலேயே.

வழக்கம் போலப் பொய்யா மொழிப் புலவரும் பாடல்களைச் சொல்ல ஆரம்பித்தார். முதலியார் அதில் இறங்கிப் போனார். அப்படியே பாடல் பாடலாகப் பாடி வந்தார் புலவர். மணி பதினொன்று ஆய்விட்டது.

ஏதோ ஜோலியாக முதலியார் கீழே போக வேண்டி யிருந்தது. புலவரிடம் 'இதோ வந்து விடுகிறேன், இருங்கள்' என்று சொல்லி விட்டுக் கீழே இறங்கிப் போய்த் தம் காரியஸ்தர்களோடு பேச வேண்டிய விஷயங்களைப் பேசிக்கொண்டே வெளியே போய் விட்டார்.

புலவர் சிறிது நேரம் விழித்திருந்தார். கண்ணைக் கட்டிக் கொண்டு வந்தது தூக்கம். அப்படியே சாய்ந்து தலையணையில் தலையை வைத்துக் காலை நீட்டிக் கட்டிலின் விளிம்பை ஒட்டிப் படுத்துக் கொண்டு தூங்கி விட்டார்.

மணி பன்னிரண்டு. வீட்டு வேலைகளை யெல்லாம் பார்த்துவிட்டு மாடியேறி நிலா முற்றத்துக்கு வந்தாள் முதலியாரின் மனைவியாள். அயர்ந்து கட்டிலில் கணவன் படுத்திருப்பதாக எண்ணி மெள்ளக் கட்டிலில் எதிர்ப் பக்க விளிம்பை ஒட்டிப் படுத்துக் கொண்டாள்.

நிலவு தெள்ளத் தெளிந்து பிரகாசமாய் அடித்துக் கொண்டிருக்கிறது. முதலியார் நிலா முற்றத்துக்கு வந்தார். கட்டிலில் இருவரும் அயர்ந்து நித்திரை போவதைப் பார்த்தார். விஷயத்தைத் தெரிந்து கொண்டார். புலவர் பக்கமாக வந்து நின்றார். அந்த நேரம் புலவர் கொஞ்சம் கண்ணை விழித்தார். "அப்படியே படுத்திருங்கள். எழுந்திருக்க வேண்டாம். நான் கீழே போய் ஜோலிகளைப் பார்த்து விட்டு வருகிறேன்" என்று புலவரிடம் மெள்ளச் சொல்லிவிட்டு முதலியார் மறுபடியும் கீழே இறங்கிப் போய்விட்டார்.

விழிக்க நேர்ந்த புலவருக்குத் தூக்கம் வரவில்லை. எழுந்திருந்து உட்கார்ந்தார் கட்டிலில். அப்போது தென்பட்டது பக்கத்தில் படுத்திருப்பது முதலியாரின் மனைவி என்பது.

மனசுக்கு எவ்வளவோ கிலேசம். முதலியார் வந்தார். அவரிடம் தம்முடைய மன வருத்தத்தை மிக்க ஆற்றாமையோடு சொன்னார். முதலியார் ஒரு குற்றமும் இல்லை யென்று சொல்லிச் சமாதானப் படுத்தினார் புலவரை.

முதலியாரின் நட்பு இன்னதென்று தெரிந்தது புலவருக்கு. மறக்கக் கூடிய நட்பா அது!

2

சில வருஷங்கள் கழிகின்றன. உறையூரில் சோழ மன்னனோடு பொய்யா மொழிப் புலவர் இருக்கிறார். உல்லாசமாய்ப் பொழுது போய்க் கொண்டிருந்தது. காலை ஏழு மணி. கண்டியூரில் இருந்து ஆள் வந்தது, மன்னனுக்குச் செய்தி சொல்ல. வந்த ஆளை மன்னன் விசாரித்தான். மந்திரி சினக்க முதலியார் காலமாய் விட்டார் என்பதைச் சொன்னான் அவன்.

பக்கத்திலிருந்த பொய்யாமொழிப் புலவர் மூர்ச்சையாய்க் கீழே விழுந்து விட்டார். மனசு அப்படி இடிந்து விட்டது புலவருக்கு. முகத்தில் தண்ணீர் தெளித்து ஸ்மரணை உண்டாக்கினார்கள். ஒரே





புலம்பல்! "எப்படி நீ போகலாம் தனியாக! நானும் வருகிறேன்! நானும் வருகிறேன்! வருகிறேன்! வருகிறேன்!" என்று புலம்பிக் கொண்டே யிருக்கிறார். புலவரை மன்னன் சமாதானப்படுத்தி 'ஏன் இந்தப் புலம்பல்?' என்று கேட்டான். புலம்பலோடு புலம்பலாய்ப் புலவர் மன்னனிடம் சொல்லுகிறார்.

> வாழி சோழ! என்
> வாய்மொழி கேண்மோ!
> ஊழி நிலவெரி
> மாளிகை யின்வயின்,
> கட்டிளங் கனவன்
> கவின்பெறு சேக்கை
> என்றறி மனைவி
> நெடிது துயில்கொள,—
> எழல் இடையின்
> எனப்பரிந்(து) அருகெனைச்
> சொல்லிய நண்பன்
> தனிச்செல் பவனே;
> நானும் ஏகுவன்
> நற்றுணை அவற்கே.

[வாழி சோழ: சிறந்து வாழும் சோழ மன்னனே; என் வாய்மொழி கேண்மோ: நான் சொல்லும் வார்த்தையைக் கேட்பீராக; ஊழி நிலவெரி மாளிகையின் வயின்: யாதொரு களங்கமும் இல்லாது நிலவு எரிக்கும் மாளிகையின் நிலா முற்றத்தில்; கட்டிளங் கனவன் கவின் பெறுசேக்கை: இளமையோடு கூடிய கணவனது அழகிய படுக்கைதான் என்று எண்ணிக்கொண்ட மனைவி; நெடிது துயில் கொள: நெடு நேரம் படுக்கையிலே படுத்து உறங்க; எழல் இடையின் எனப் பரிந்து: எழுந்திருக்க வேண்டாம், அப்படியே படுத்திரும் என்று மிக்க பரிவோடு; அருகெனைச் சொல்லிய நண்பன்: என் பக்கத்தில் வந்து காதோடு காதாய்ச் சொல்லிய நண்பன் (சேனக்க முதலியார்); தனிச் செல்பவனே: அமர உலகத்துக்குத் தனியாய்ச் செல்லலாமா; நானும் ஏகுவன் நற்றுணை அவற்கே: அவனுக்குச் சரியான துணை அல்லவா நான்.

குறிப்பு:—செய்யுளில் விட்டு விட்டு நந்நந் நந்தி வியைம் ஒலிப்பதிலிருந்து புலம்பலின் சாயலானது தெரிய வருகிறது.]

இந்த முறையில் புலம்பி நின்ற புலவர் மன்னனிடம் விடை பெற்றுக் கொண்டு உடனே கண்டியூருக்குப் புறப்பட்டார்.

* * *

சாயங்காலம் ஐந்தரை மணி. சேனக்க முதலியார் வீட்டுக்குப் போனார் புலவர். மயானத்துக்கு எல்லாரும் போய் விட்டார்கள் என்று தெரிய வந்தது.

புலவர் வேகமாய்ப் போனார். அடுக்கிய காஷ்டத்தின் மீது சேனக்க முதலியாரின் உடலை ஏற்றி வைத்திருக்கிறது.

புலவர் ஓடிப்போய் உடலின்மேல் விழுந்தார். அலறினார். ஏதேதோ புலம்பினார்.

> அன்றுநீ செல்லல்
> இடஎன்றாய்! எம்மைவிட்(டு)
> இன்றுநீ வானுலகம்
> ஏகுவையோ!—நன்றுநன்று
> வான்நக்க பூண்திகழும்
> மார்பா! எம் கண்டியூர்
> சேனக்கா செல்லல்
> இட.

[நன்று நன்று: எல்லாம் சரியாய்ப் போய்விட்டது. சரி சரி; வான் நக்க பூண் திகழும் மார்ப: வானளாவிப் பிரகாசம் வீசும் மணி மாலையை அணிந்த மார்பனே; செல்லல் இட: போய் விடாதே. கொஞ்சம் படுத்திரு. நானும் உடன் வருகிறேன்.]

தமிழ்க் கவி மூலமாக உண்டான, என்றும் அழியாத நட்பைப் பாடலில் பார்க்கிறோம். புலவருடைய ஏக்கம் செய்யுளில் ஒலிக்கிறது.



# முதல் புரட்சி

யோகி சுத்தானந்த பாரதி

"விடுதலே! விடுதலே! விடுதலே!" என்று அலேகள் தாவித் தவழ்கின்றன.

"விடுதலே! விடுதலே!" என்று காற்று முரசடிக்கிறது. மாலேக் கதிர்கள் ஒரு மங்கலச் செய்தியைப் பரப்பித் தங்க நகை புரிகின்றன. மரினுவில் அந்தி மலர்கள் அன்பர்களே முகங் கனிய வரவேற்கின்றன. இயற்கையின் வசீகரத்தில் புது வாழ்வின் அமுதம் ஊறுகிறது. நுகரிங்கம் உள்ளத்திலும் அமுதம் ஊறுகிறது. என்றுமில்லாத இன்பம் பொங்குகிறது. மேற்கே பார்க்கிருன், ஒரு பழைய ஏட்டைப் பிரிக்கிருன். வாய் விட்டுப் பாடுகிருன்:

> அன்னியர் மாயம் அழிந்ததடா — இனி
> அடிமைச் சங்கிலி அற்றதடா!
>
> சின்ன பெரிய மருதென்ருல் — இந்தத்
> தேசவிடுதலே திண்ணமன்ருே?
>
> காந்திலேக் கத்தியும் வெட்டிடுமோ — இந்தக்
> கட்டலேச் சங்கிலி கட்டிடுமோ
>
> கூற்றும் உயிரைக் குடித்திடுமோ? — வீரக்
> கோட்டையைக் காலம் குலைத்திடுமோ?...

மறுபடியும் கனவு... நீண்ட கனவு... பத்திரிகையைப் பார்க்கிருன்... "இந்தியா, விடுதலே பெற்றது. காந்தியின் தவம் பலித்தது." கொட்டை கொட்டையாக எழுத்துக்கள் அவன் இரத்தத்தில் எழுதிய சுதந்திர உணர்ச்சியைத் தூண்டுகின்றன. ஏதோ பாட்டு முணுமுணுக்கிருன்.

> காந்தி தவமும் பலித்ததம்மா — நாங்கள்
> காத்த தவமும் பலித்ததம்மா......

என்று உரக்கப் பாடும்போது முல்லே அருகே வந்து, பின்னே நின்று, அவனேயே உற்றுக் கவனித்தாள்.

சிங்கம் மறுபடியும் பழைய ஓலேயைப் புரட்டினுன். முல்லே மெல்ல அவன் கண்ணேப் பொத்திச் சிரித்தாள்.

சிங்கம்: முல்லே, திறந்த கண்ணே மறைக்காதே! என்முன் தமிழகம் நிற்கிறது. இந்தியா நிற்கிறது, என் அருமைத் தாய்நாடு நிற்கிறது. பார் மேற்கே. சுதந்திரம் பெற்ற வீரத் தமிழகம்; சுதந்திர பாரதம்; எங்கள் புகழ் பெற்ற இந்தியா....

முல்லே: இந்தியா பதினுயிரம் மைல்களுக்கு அப்பால் இருக்கிறது. நான் அருகில் இதோ நிற்கிறேன். என்னேப் பார்க்காமல்... ஹூம்! ஆண்களெல்லாம் இப்படித்தான்; மோசக்காரர்கள்! காதல் சாதல் மோதல் சதல் என்று பலப் பல பேசிப் பிறகு பதினுயிரம் மைலேத் தாண்டி நினேப்பார்கள். அங்கே என்ன...வேறு யாராவது......?

சிங்கம்: வாயாடி! நல்ல செய்தி பார்! எனது சுதேசம் விடுதலே யடைந்தது.

முல்லே: அதனுல் என்ன? அமெரிக்கா கூடத்தான் ஜார்ஜ் வாஷிங்டன் வீரத்தால் விடுதலே பெற்றது. இந்த ஆசியாவும் நேற்று விடுதலே பெற்றது. இனி உலகில் மனிதன் மனிதனுக்கு அடிமையாக இருக்க முடியாது. பெண்ணும் ஆணுக்கு அடிமையாக இருக்க முடியாது.

சிங்கம்: ஆணும் பெண்ணும் சரி சமானம் என்றுதானே உனக்கு இவ்வளவு வாய் நீளம் தந்திருக்கிறேன். கேள், முல்லே! உன்னே நான் முல்லே என்று ஏன் அழைக்கிறேன், தெரியுமா? அது எனது தமிழ் நாட்டு மலர். எனது தமிழ்நாடு அன்னியருக்கு அடிமையாயிருந்தது. அதை விடுதலே செய்ய முனேந்த முதல் வீரன் யார், தெரியுமா?

முல்லே: இந்த ஏட்டிலிருக்கிற வீரன்தானே? மருது மருது என்று சொல்லுவீர்களே.

சிங்கம்: சரியாகச் சொன்னுய், முல்லே! எனது நாடு ஆங்கிலேயர் பிடியில் சிக்கிக் கூண்டுக்கிளியாகக் கதறியது. அதை வறுமைப் பூனேயும் மடமைப் பேயும் பிடித்துத் தின்னத் தாவின. துரோகிகள் அதைச் சங்கிலியால் கட்டிக் கூண்டையும் திறந்து விட்டனர். அன்னியப் பகைவர் என் அருமை நாட்டை, எனது தமிழன்னேயை, எனது பாரத தேவியைக் கொடுமை செய்தனர்.

முல்லே: அன்னேயை விடுவிக்க நானுசாகேபும் தாதியாவும் எழுந்தார்களே. 1858-ம் ஆண்டில் நடந்த சுதந்திரப் போர் சாமான்யமா?

சிங்கம்: அசகாய சூரர்கள் புரிந்த அற்புதப் போர்தான் அது. ஆனுல் அதற்கு முன்பே தென்னுடு விழித்தெழுந்து, சுதந்திரக்கொடி நாட்டியது.

முல்லே: நீங்கள் கட்டபொம்முவையும் திப்பு சுல்தானேயும் சொல்லுகிறீர்களா? 1790-லிருந்து 1800-ம் ஆண்டு மட்டும் பத்தாண்டுகள் இவர்கள் கடும்போர் புரிந்து வெள்ளேக்காரருக்குச் சக்கை வேலே கொடுத்தனர்.

சிங்கம்: அது சரி. இவர்கள் சக்கை வேலேயெல்லாம் பிற்காலம். அதற்கு முன்பே சின்ன மருது பெரிய மருது என்ற சூரப் புலிகள் வீர வாள் பிடித்து அன்னிய மாயத்தை வேரோடொழிக்க மறவர் படையைத் திரட்டிப் போராடினர்.

முல்லே: மறவரா? அப்படி ஒரு சாதியுண்டா?

**சிங்கம்:** சாதியில்லை, முல்லை! தமிழருள் சாதி வேறுபாடில்லை. மறவர் நாட்டை மறவர், அஞ்சாப் போர்வீரர். சிவகங்கை, இராமநாதபுரம், மதுரை, திருநெல்வேலி ஜில்லாக்களில் மறவர் தமிழ்க்கொடி பிடித்து நின்றனர். அவர்களுக்குத் தலைவரே சின்ன மருதும் பெரிய மருதும். இவர்கள் சிவகங்கை மன்னரிடம் முதலில் வேட்டை வீரராயிருந்தனர். படிப்படியாக உயர்ந்து படைத் தலைவரானார்.

**முல்லை:** அப்போது வெள்ளைக்காரன் என்ன செய்தான்? ஏன் போர் மூண்டது?

**சிங்கம்:** மறவர் "நாமார்க்கும் குடியல்லோம்"—பேர்வழிகள். அந்தக் காலம் கும்பினி-ஆங்கிலேயரும், ஆற்காட்டு நவாபும் சேர்ந்து, கட்டு கப்பம் என்றனர்.

**அப்பத்தைப் பங்கிட்ட மர்க்கடம்போல்—இங்கே**
**அன்னியர் கொட்ட மடிக்கின்றார்**
**கப்பத்தைக் கேட்கத் துணிவு முண்டோ—மறக்**
**கத்தியிருக்கப் பணிவும் உண்டோ?**

**முல்லை:** ஆ! எவ்வளவு தைரியம்! கும்பினிக்காரர் அவர்களைச் சும்மாவா விட்டார்கள்?

**சிங்கம்:** கடுபிடிக் கட்டளை வந்தது. "கட்டு கப்பம்" என்று நெருக்கினர். கட்டு என்றால் வெட்டு என்று புறப்பட்டான் பெரியமருது. அவனைக் கர்னல் இன்ஸ் அழைத்தார். சென்றான் பெரிய மருது. இன்ஸ் துரை, 'மருடு இடு நமுடு காடு. டெரியாடு. நமடு ரூபாடான் இண்ட காட்டுக்கு. டுரை இட்டே பணிவாயிரு' என்றான். கப்பம் இரண்டு லட்சம் தரும்படி கேட்டான்.

**முல்லை:** கட்டினானா? இல்லாத போனால் சிறையில் அடைத்துக் கொடுமைப்படுத்தி யிருப்பாரே?

**சிங்கம்:** கச்சை கட்டினான் மருது. கையில் ஒரு கும்பினி ரூபாயை எடுத்தான். 'துரையே! உங்கள் அன்னிய மாயத்தை இப்படி விண்டெறிவேன்' என்று நாணயத்தை வளைத்து இரண்டு துண்டாக்கித் துரை முன் வீசி யெறிந்து ஓடினான். 'பிடி பிடி அடை சிறை' என்று துரை கூச்சலிட்டுக் கதறினான். வெளியே ஏராளமான வீரர்கள் நின்றனர். துரத்திய காவலரை நோக்கி, 'ஏ நீங்கள் தமிழர்கள். அன்னியர் பேச்சைக் கேட்டு அடிமை விலங்கை மாட்டிக் கொள்ளாதீர்கள். விலங்கை முறிக்க முன் வாருங்கள்!' என்று கர்ஜித்துக் கொண்டே தன் வீரர்களுடன் வேகமாக ஓடினான்.

இன்ஸ் துரை சீற்றம் கொண்டு படை திரட்டிப் பார்த்தான். மானாமதுரைக்குச் சேனை வந்துவிட்டது. பெரியமருது காளையார் கோவில் காட்டில் ஒளிந்திருந்தான். சின்னமருது அறிவாளி, ரணவீரன். அவன் மறவர் காதில் ஒரு தந்திரம் சொன்னான். மறவர் அனைவரும் படகோட்டிகளானார்கள். வைகை யாற்றைத் தாண்டித்தான் இன்ஸ் துரையும் நவாபு சேனையும் சிவகங்கைக்கு வரவேண்டும். படகுக்காரர் அவர்களுடன் நயமாகப் பேசி நள்ளிரவில் சேனைகள் நிறைந்த படகை ஓட்டினார்கள். ஆற்றில் பெரும் வெள்ளம். படகிலிருந்த அன்னியப் படைகளை அதில் உருட்டி விட்டனர் மறவர். அதே சமயத்தில், கரையில் இருந்த சொற்பச் சேனையுடன் சின்னமருது பொருதி, அனைவரையும் போரில் முறியடித்து, ஏராளமான செல்வத்துடன் ஊர்வந்து சேர்ந்தான்.

**முல்லை:** அப்படியானால் அப்போது இதுதான் முதல் புரட்சி. மறுபடியும் வெள்ளைக்காரர்கள் படையெடுத்து வந்திருப்பார்களே?

**சிங்கம்:** ஆமாம்! பலமான படையுடன்தான் வந்தார்கள். மறமன்னர் உடையணத் தேவர் ஒரு துளி ரத்தமுள்ள மட்டும் போர் புரிந்து தேசபலியானார். கும்பினிக்காரர் சிவகங்கை அரண்மனையைக் கொள்ளையடித்து, அரசியை அவமானப்படுத்த அந்தப்புரத்தில் நுழைந்தனர். அந்தப்புரப் பெண்கள் வாளெடுத்துப் போர் புரிந்து இறந்தனர். ராணியைக் காணவில்லை. மருது சகோதரர்களும் இல்லை.

**முல்லை:** அடடா! அவர்கள் எல்லாரும் போரில் மடிந்து விட்டார்களோ?

**சிங்கம்:** அவர்களா? வேலுராணியுடன் திண்டுக்கல் சென்றார்கள். ஏராளமான செல்வமும் அரசப் பட்டயங்களும் அவர்களுடன் சென்றன.

**முல்லை:** திண்டுக்கல்லில் என்ன செய்தார்கள்? அங்கே ஏன் சென்றார்கள்?

**சிங்கம்:** திண்டுக்கல்லில் ஹைதராலியும் திப்புவும் முகாம்போட்டு, அப்போதுதான் ஆங்கிலேயரைப் பலமாக எதிர்த்துப் போராட முன்னின்றனர். மருது சகோதரர் வீரத்தை அவர்கள் மெச்சி, அவர்களுக்கு வேண்டிய உதவி தந்தனர். பெரிய மருது மறவர் படைகளைத் திரட்டிப் பயிற்றினார். சின்ன மருது பாஞ்சாலங் குறிச்சிக்குச் சென்றான்.

**முல்லை:** அங்கேதானே கட்டபொம்மு ஆண்டான்? ஊமைத்துரை எழுந்தான்?

**சிங்கம்:** அப்போதுதான் கட்டபொம்மு கோட்டை கட்டினான். 'கொடு வரி' என்றார் ஜாக்ஸன். சாக்கு நிரம்பக் கூழாங்கல்லை அனுப்பி வைத்தான் கட்டபொம்மு.

**வானம் பொழியுது பூமி விளையுது**
**மன்னவன் காணிக்கை ஏதுக்கடா....**

என்றான் பொம்மு. அவனையும் ஊமைத் துரையையும் இன்னும் பலரையும் அன்னியரை எதிர்க்கத் தூண்டி விட்டான் சின்னமருது. அவர்களுக்குச் சிவகங்கைக் காடு தயாரானது. அவர்கள் பலமாகப் போராடிப் பல கும்பினி வெள்ளையரைக் கொன்றனர். வெள்ளையர் பீரங்கி கொண்டு தாக்கிக் கோட்டைகளைத் தகர்த்துக் கட்டபொம்முவையும் பிடிக்க முயன்றனர். அவன் தம்பியுடன் தப்பிச் சென்று சிவகங்கைக் காடுகளில் பாசறை அமைத்துக் கொண்டான்.

**முல்லை:** மருதுபாண்டியர், வேலுராணி முதலானோர் என்னவானார்கள்?

**சிங்கம்:** நெருப்பானார்கள்; பலமான படையுடன் நவராத்திரியன்று சிவகங்கைக்குள் புகுந்து, அரசை மீட்டு, ராணியை அரியணையில் வைத்து நாட்டை வீரப்போருக்குப் பயிற்றினர்.

**முல்லை:** நாட்டைப் போருக்குப் பயிற்றி யென்ன?... முடிவில் வென்றார்களா?

**சிங்கம்:** வென்றே யிருப்பார்கள். ஆனால் அங்கொரு துரோகி, இங்கொரு துரோகி புகுந்து அன்னியர் கொடிக்குக் கைகொடுத்து உதவினர். கட்டபொம்முவை மோசடியாகக் காட்டிக் கொடுத்தனர். வெள்ளையர் கயித்தாற்றில் அவனைத் தூக்கிலிட்

டனர். தம்பி ஊமையன் ஆத்திரங் கொதித்தெழுந்து, கும்பினிக்காரர் தலையை இளநீர் போல் வெட்டிக் கொண்டிருந்தான். பெரிய மருதுவே புரட்சிப் படைக்குத் தலைமை வகித்தான். சின்னமருது ஜனங்களிடையே தேசாவேசத்தை வளர்த்தான். பன்னிரண்டு மைல் அடர்ந்த காட்டில் முகாம் போட்டு, திருமயம், திருப்புத்தூர், திருக்கோட்டியூர், காளையார்கோயில், காட்டரசன் கோட்டையெல்லாம் போர்க்களமாக்கி வெள்ளையர் கலங்கும்படி போராடினர் மருதுவும் ஊமையனும். ஊமையன் திருமயத்தில் பெரிய வலிய கோட்டை கட்டினான். வைரவருக்கு இளநீர் நிவேதனம் செய்தான். "இன்று எத்தனை இளநீர்?" என்று கேட்பான் மருது. ஊமையன் பதினைந்து என்று கையைக் காட்டுவான்.

முல்லை: கும்பினிக்காரர் இவர்களைப் பழி வாங்காமல் சும்மாவா இருந்தார்கள்?

சிங்கம்: பழி செய்தனர் வெள்ளையர். வெள்ளைப் படை என்றால் சீமையிலிருந்து வந்ததில்லை. பத்து வெள்ளையர் ஏராளமாக நம்மவரைச் சேர்த்துப் படை நடத்தினார்கள். காடுகளில் மறைந்திருந்தே மருது போர் புரிந்தான். வெள்ளையர் 'வெட்டு காட்டை' என்றனர். துரை முதலில் ஒரு மரத்தை வெட்டினான். படார் என்று வெடித்தது வெடி மருந்து. "அலாஸ்!" என்று விழுந்தான் துரை. மரங்களில் வெடி மருந்தை வைத்தனர் மருதுவீரர். ஒருவன் உயர்ந்த மரங்களில் ஏறி, பகைவர்கள் வரும்போது சாடை காட்டுவான். ஒரு கொம்பை ஒடித்துப் போடுவான். அவன் எந்தப் பக்கம் கொம்பை எறிகிறானோ, அந்தப் பக்கமே பகைவர்கள் வருகிறார்கள் என்பது குறிப்பு. உடனே அந்தப் பக்கமும் பின் பக்கமும் சென்று வளைத்து, இடுக்கிபோலக் கௌவிப்பற்றி எதிரிகளைக் கொல்லுவர் மருதுவீரர். ஊமையன் கையில் சிக்கினால் பகைவர் உயிர் தப்ப முடியாது. வைரவருக்கு வேண்டிய இளநீர் நிவேதனமாகும்!

முல்லை: இப்படிப் போராடியும் பலனென்ன? வெள்ளையர்தானே வென்றனர்?

சிங்கம்: சுருக்கமாகக் கதையை முடித்து விட்டாயே? துரோகிகளும் கோழைகளும் இல்லாவிட்டால் மருதுவீரர் வெற்றிக் கொடி காட்டியே இருப்பார்கள். ஊமை வீரனை விருந்திற்கு அழைத்துக் காட்டிக் கொடுத்தான் ஒருவன். ஆங்கிலேயர் அவனைப் பாஞ்சாலங் குறிச்சியில் தூக்கிலிட்டனர். மற்றொரு துரோகி மருதுவீரரைச் சிறு வயலில் காட்டிக் கொடுத்தான். இன்ஸ் துரை அவர்கள் வீட்டைச் சாம்பலாக்கினான். மருதுவீரரைப் பிடித்தான். வீரர் சிறை தப்பி, திருப்புத்தூரில் சிவ பூஜை செய்து, தமது சொத்து சுகமெல்லாம் தான





எழுத்தாளரின் வர்ணனை!




மாகத் தந்து, தாமே கும்பினியார் முன் வந்தார். பழி பாவத்துக்கு அஞ்சாத கும்பினியார் திருப்புத்தூரில் அவர்களைத் தூக்கிலிட்டனர்.

முல்லை : ஹா! மனம் பதைக்கிறது! குடல் நடுங்குகிறது! சுதந்திர பலிபீடத்தில் இரத்தம் சிந்திய முன்னணி வீரரை வணங்குவோம். இவர்களுக்குப் பிள்ளைகள் இருந்தார்களா?

சிங்கம் : சின்ன மருதுவின் மகன் துரைசாமியும், எழுபது புரட்சி வீரர்களும் இந்த இளவரசத் தீவிற்கு (Prince of Wales Island) நாடு கடத்தப் பெற்றனர். அவர்கள் சந்ததிதானம்மா நான்.

முல்லை : அப்படியா? அப்படியானால் நானும் அதே புரட்சி வீரர் சந்ததிதானோ?

சிங்கம் : ஆமாம். புரட்சி வீரர் இங்கே சிறைக் கைதிகளானார்கள். துரைசாமி புலவன், வீரன், அறிவாளி. மருதுவீரர் செய்த போரைப் பாடி வைத்தான். அவன் எழுதின ஓலைதான் இது.

முல்லை : இது உங்களிடம் எப்படி வந்தது?

சிங்கம் : துரைசாமி இங்கே மணம் புரிந்து கொண்டு வேலாயியைப் பெற்றான். வேலாயிக்கு மருதுசாமி பிறந்தான். அவனுக்கு வீர பாண்டியன் பிறந்தான். அவன் புதல்வன் ராசசிங்கம் எனது தந்தை. அவரே எனக்குத் தமிழும் பயிற்றி, இந்த ஓலைச் சுவடியைப் படித்து எல்லாருக்கும் மருது வீரர் பெருமையைச் சொல்லச் சொல்லி மறைந்தார். இன்றுதான் இந்த ஓலையைப் படிக்க உற்சாகம் கொடுத்தது. என் மூப்பாட்டனார் மருதுவீரர் தொடங்கிய விடுதலைப்போரே இன்று வெற்றி பெற்றது.

முல்லை : அதெப்படி? மருதுவீரர், திப்பு, நானா சாகேபு எல்லாரும் வாட்போர் செய்தார்கள். காந்தி அறிஞரோ தர்மம் போற்றி அறப்போர் புரிந்தார்.

சிங்கம் : சொல்ல நினைத்தேன், சொல்லிவிட்டாய், முல்லை! நீ புத்திசாலி. உலக சரித்திரத்திலேயே மகாத்மாபோல இரத்தம் சிந்தாமல் தியாகத்தால் தேச விடுதலை தந்தவர் யாருமில்லை. சத்தியாக்கிரகத்தால், சுதர்மத்தால், தெய்வபக்தியால், தியாகத்தால், விடுதலை பெற்ற நாடு நம்மதே, அதற்கு உலகில் தனிப் பெருமையுண்டு. நமது தமிழகத்தில் ஆரம்பித்த முதற்போர் இன்று வென்றது.

முல்லை : அது சரி, நான் உங்களுடன் இன்று முதற்போர் தொடங்குகிறேன்.

சிங்கன் : என்ன போர்? நீ வாயைத் திறந்தாலே என் நெஞ்சம் போர்முரசு கொட்டுகிறது. என்ன போர் ; எதற்காக?

முல்லை : கண்ணாளா! நாம் எப்படியாவது தமிழ் நாட்டுக்குப் போகத்தான் வேண்டும்.

சிங்கன் : தீபாவளிக்குப் போவோம். ஆம் போவோம். தமிழகம். தமிழகம். நமது தாயகம். தமிழ் தமிழ் என்றாலே அமிழ்தமிழ் தமிழ்தாகிறது!

இருவரும் :

அமிழ்தம் ஊறுதம்மா—உள்ளம்
ஆனந்தம் ஆகுதம்மா
தமிழ் தமிழ் என்றால்—மனத்
தாகந் தணியுதம்மா.
வீரத்தமிழகமே—உலகை
வென்ற அருளகமே
சூரிய வானத்தைப்போல்—இசை
துலங்கி வாழியவே.



# பைங்கிளியின் தியாகம்

இரவு ஒரு மணி யிருக்கும். எழுத்தாளர் நித்திய விநாயகம் இன்னும் தலையைப் பென்சில் முனையால் சொறிந்து கொண்டிருந்தாரே தவிர, ஒரு வரியாவது காகிதத்தில் எழுதினபாடில்லை. மூளையில் ஏதாவது கற்பனை உதித்தால்தானே எழுத முடியும்! எதிரில் மேஜையின் மேல் கிடந்த மணிபர்ஸைப் போல அவர் மண்டையும் அச்சமயத்தில் காலியா யிருந்தது.

"எங்கள் ஆண்டு மலருக்குத் தமிழ் மணம் கமழும் கதை யொன்று தேவை. ஒரு வாரத்திற்குள் எழுதிக் கொடுத்தால் சௌகரியமா யிருக்கும்" என்று "மாதர் சவியன்" பத்திரிகை ஆசிரியர் ஒரு பொறுப்பை இவர் தலையில் கட்டியபோது, நித்திய விநாயகமும் துணிந்தாக ஒப்புக் கொண்டு வந்து விட்டார். கதையை எழுத ஆரம்பித்தபோதுதான், தான் ஒப்புக் கொண்டது புத்திசாலித்தனமான காரியம் அல்ல என்பது அவருக்கு விளங்கிற்று.

நித்திய விநாயகம் ஏக்கத்துடன் நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். தன் பெருமையைக் காப்பாற்றிக் கொள்ள அவருக்கு இரண்டே நாட்கள்தான் அவகாச மிருந்தது. அவர் எதிரில் மேஜையின்மேல் பல பழைய சஞ்சிகைகளும் புத்தகங்களும் இறைந்து கிடந்தன. தரையில் அவர் மனைவி சத்தியகந்தி பாயில் அயர்ந்து நித்திரை செய்து கொண்டிருந்தாள். அதைக் கண்டதும் அவருக்கு எரிச்சலாக வந்தது.

'கணவன் தூங்க முடியாமல் கஷ்டப்படுகிறான். அது தெரியாமல் இவள் கவலையற்றுத் தூங்குகிறாளே! இவள் என்ன தமிழ் நாட்டுப் பெண்!' என்று ஆத்திரத்துடன் தரையைக் காலால் உதைத்து நாற்காலியைத் 'தட தட' வென்று ஆட்டிச் சத்தம் செய்தார். மின்சார விளக்கு பிரகாசமாகத்தான் எரிந்து கொண்டிருந்தது. எழுத்தாளரின் மனைவியானாலும் எவ்வளவு பிரகாசமான விளக்கு வெளிச்சத்திலும் தூங்குவதற்குப் பழகிக் கொண்டிருந்த சத்தியகந்தி திடீரென்று ஏற்பட்ட சத்தத்தினால் நித்திரை கலைந்து எழுந்து உட்கார்ந்தாள்.

"என்ன! திருடன், திருடன் என்று பயந்து விட்டாயா!" என்று நிதானமாகக் கேட்டார் நித்திய விநாயகம்.

"வெளியிலிருக்கும் உங்கள் போர்டைப் பார்த்த பிறகு திருடன் எங்கே வரப்போகிறான்! அப்படி வந்தாலும் இங்கு கொள்ளை போக உங்கள் குப்பைக் காகிதங்களைத் தவிர வேறு என்ன இருக்கிறது!" என்று கூறிவிட்டு ஒரு கொட்டாவி விட்டாள் சத்தியகந்தி.

நித்திய விநாயகத்தின் காதில் இதெல்லாம் விழவேயில்லை. அந்தக் கண நேரத்திற்குள் அவர் மூளை ஒரு அபூர்வமான கற்பனைக் கொத்தை எட்டிப் பிடிக்க முயன்று கொண்டிருந்தது. ஆனால் அந்த அபூர்வக் கற்பனை கீழே யிருந்து வந்த 'தடால்' என்ற சத்தத்தைக் கேட்டதும் சிதறிப் போயிற்று. உயரத்திலிருந்து கீழே விழுந்த வெண்கலப் பாத்திரத்தின் 'உம்ம்ம்' என்ற நாதம் இன்னும் கேட்டுக் கொண்டே யிருந்தது.

"ஒரு வேளை நிஜத் திருடனே வந்திருக்கிறான் போலிருக்கிறது. அவனை நான் கூப்பிட்டேன் என்று அழைத்து வாயேன்!" என்று மனைவியைப் பார்த்துப் பரிகாசமாய் அவர் சொன்னார். ஆனால் அதே சமயம் கல கல வென்று பல பாத்திரங்கள் உருளும் சத்தம் கீழேயிருந்து தொடர்ந்து விடாமல் கேட்டது. இப்போது நித்திய விநாயகத்திற்குப் பரிகாசம் போய்க் கொஞ்சம் பயம் ஏற்பட்டு விட்டது.

"ஜாக்கிரதையாய்க் கீழே இறங்கிப் பாருங்களேன்!" என்றாள் சத்தியகந்தி.

"உனக்கும் மேலே தனியாக இருக்கப் பயமாயிருக்கும்! நீயும் என்னுடன் கூட வா!" என்று கூறி எழுத்தாளர் தன் மனைவியையும் அழைத்துக் கொண்டு கையில் ஒரு கைத் தடியுடன் கீழே மெதுவாக இறங்கிப் போனார். மாடியிலிருந்து கீழே கடைசிப் படியில் காலடி வைத்ததுமே அருகிலிருந்த கூடத்து விளக்கின் 'ஸ்விச்சை'த் தட்டிவிட்டுத் தன்னைச் சுற்றிக் கண்ணோட்டத்தைச் செலுத்தினார்.

சத்தம் சாமான் அறையிலிருந்து வந்ததால் அவர் கவனம் மூடப்பட்டிருந்த அவ்வறையின்மேல் சென்றது. சற்றுக் கூர்ந்து கவனித்தபோது அறைக்குள் யாரோ மெதுவாக நடமாடும் சத்தமும் கேட்டது. இப்போது நித்திய விநாயகத்திற்குக் கால்கள் நடுங்கா விட்டாலும் பல்லைக் கிட்டிக் கொண்டது.

சாமான் அறையினுள் சூரிய வெளிச்சம் போகக் கிழண்டைச் சுவரின் மேல் தளத்தை யொட்டி ஒற்றைக் கம்பி போட்ட ஜன்னல் இருந்தது. அதன் மூலம் அறைக்குள் திருடன் புகுந்திருக்கிறான் என்ற விஷயம் புரிய அவருக்கு அதிக நேரமாகவில்லை. அவர்கள் கீழே வரும் சத்தத்தைக் கேட்டும் கூடத்து விளக்கு எரிவதைக் கண்டும் திருடன் சத்தமில்லாமல் அறைக்குள் பதுங்கிக் கொள்ளவோ அல்லது வந்த வழியே தப்பித்துச் செல்லவோ முயற்சிக்கிறான் என்ற விஷயம் அவருக்குப் புரிந்து விட்டது. வாயைத் திறக்காமல் மனைவியிடம் மாடிக்கு ஓடி விடலாம் என்று சைகை காண்பித்தார் எழுத்தாளர். மாடிக்குப் போன பிறகு கூச்சலிட்டுத் திருடன் அல்லது திருடர்களை விரட்டவோ பிடிக்கவோ செய்யலாம் என்பது அவர் எண்ணம்.

ஆனால் அப்படி அவர் சைகை காண்பிக்க முயற்சித்த போதுதான், அவர் கையிலிருந்த கைத்தடி 'டணால்' என்ற சத்தத்துடன் கீழே விழுந்தது. அதைத் தொடர்ந்து அறையின் உள் பக்கத்திலிருந்து, "யாரது!" என்றொரு கம்பீரமான ஆண் குரல் வெளி வந்தது. அப்போது மூர்ச்சையடையும் நிலையிலிருந்த நித்தியவிநாயகத்தைத் தாங்கிய வண்ணம் சத்தியகந்தி எப்படியோ தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "யாரது உள்ளே!" என்று திருப்பிக் கேட்டாள்.

இப்போது ஒரு ஆச்சரியம் நிகழ்ந்தது. "நீங்கள் யார்!" என்று ஒரு பெண் குரல் உள்ளிருந்து கேட்டது. இதைக் கேட்டதும் நித்தியவிநாயகத்திற்குப் பயம் போய்க் கொஞ்சம் நிம்மதி உண்டாயிற்று. திருட வருபவன் ஒரு பெண்ணுடன் வருவானா என்ற ஆச்சரியம் அவரை ஆட்கொண்டது.

அப்போதுதான், எழுத்தாளர் சாமான் அறையின் கதவை வெளிப்பக்கம் பூட்டவில்லை என்பதைப் பார்த்தார். உடனே தான் இருந்த இடத்திலிருந்து அறையை

எம். எஸ். மணி

நோக்கி மெதுவாகக் காலடி வைத்துச் சென்று, மூடியிருந்த கதவின் வெளிப் பக்கத்துத் தாழ்ப்பாளைச் சட்டென்று பூட்டிவிட்டுத் திரும்பினார். கதவைப் பூட்டின விஷயம் உள்ளிருப்பவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

"ஐயா! உங்களுக்குப் புண்ணியமுண்டு. எங்களைத் திருடர்கள் என்றெண்ணிப் பூட்ட வேண்டாம்! ஒருவருக்கும் தெரியாமல் இங்கு வந்து சேருவதற்குள் நாங்கள் பட்டபாடு சொல்ல முடியாது. நல்ல வேளை! உங்கள் வீட்டுக் கதவு திறந்திருந்தது. சட்டென்று புகுந்து கொள்ளச் சௌகரியமாயிருந்தது..." என்று அந்தப் பெண் முடிக்குமுன்பு நித்தியவிநாயகம் மனைவியைப் பார்த்தார். அப்பார்வைக்குச் சத்திய சுந்தரி அளித்த பதில் பார்வை "நிலம் கடைசி வேலியாக வாயிற் தாழ்ப்பாளை நீங்கள்தானே போடுவது வழக்கம்!" என்று சொல்வது போலிருந்தது.

"பைங்கிளி! அறையின் கதவைத் திறந்து விடச் சொல். ஓடி வந்தது களைப்பாயிருக்கிறது. இங்கே குடிக்கப் பாலில்லாவிட்டாலும் தண்ணீர் கூட இருக்காது போலிருக்கிறது. பால் பருகாது நான் ஒரு நாள் கூடக் கழித்ததில்லையே! என்ன செய்வது!" என்று உள்ளிருக்கும் ஆடவன் பெண்ணைக் கேட்பது வெளியே எழுத்தாளருக்கும் கேட்டது.

இதைக் கேட்டதும் எழுத்தாளருக்குச் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. ஆனால், அவர் மனைவியோ பதறி விட்டாள். "ஐயோ! பைங்கிளி என்று சொன்னீரே! அப்பெயருடையவள் ஜமீந்தார் வீட்டுத் தாதிப் பெண் என்றல்லவா கேள்விப்பட்டிருக்கிறேன். பெரிய இடத்து வம்பு. பூட்டைச் சட்டென்று திறவுங்கள்!" என்று அவசரப்பட்டாள். எழுத்தாளர் அதற்கு உடன்படவில்லை.

"அம்மா! உன் பெயர்தானா பைங்கிளி! அப்படியானால் நீ நிஜமான பைங்கிளியா! அல்லது பாங்கான கிளிப் பெண்ணா!" என்று ஒரு சிரிப்புச் சிரித்துக் கொண்டு குறுக்கு விசாரணை வக்கீல் போல ஆரம்பித்தார் நித்திய விநாயகம்.

அதற்கு வந்த பதில் அவரைத் திகைத்துத் திக்குமுக்காட வைத்தது.

"ஐயா! உங்களுடைய சிறிய சொற்றொடர்களுக்கு என் உயரிய நன் மதிப்பு. ஆனால் அதற்கு இது சமயமில்லை என்று தோன்றுகிறது. இம்மாதிரி சம்பந்தமில்லாமல் பேசுவதைப் பார்த்தால் நீங்கள் ஒரு அரசியல் வாதி என்று தோன்றுகிறது! என்னுடைய ஊகம் சரிதானா!"

"இல்லை, அம்மா! நான் ஒரு அரசியல் பிரதிவாதி! அதாவது எழுத்தாளர் வகுப்பைச் சேர்ந்தவன். வரும்போது வாயிலில் என் பெயர் பொறித்த போர்டைப் பார்த்திருக்க வேண்டுமே! அது சரி, உன்கூட இருக்கும் ஆண் மகன் யார்!" என்று கேட்டார் நித்திய விநாயகம்.

"அவர்தான் வேணுகான சீலர். இருநிலமலை ஜமீந்தார் கற்கண்ட சீலரின் ஒரே புதல்வர். என்னுடைய கணவர்."

"வேணுகான சீலரா! அவர் உன்னுடைய கணவராக எப்பொழுது மாறினார் பைங்கிளி!"



"போன மாதந்தான்."

"போன மாதமா! பத்திரிகைகளில் உங்கள் கல்யாணத்தைப்பற்றி போட்டோவாவது விளம்பரமாவது நான் பார்த்ததாக ஞாபகமில்லையே!"

"உங்களுக்கு ஞாபக மிருக்காது! ஞாபக மிருந்தாலும் பார்த்திருக்க மாட்டீர்கள்! பார்த்திருந்தாலும் அந்தச் சமாசாரம் உங்கள் கண்களில் பட்டிருக்காது!"

"என்ன! என் கண்களில் கூடவா பட்டிருக்காது!"

"ஆமாம்! உங்கள் கழுகுக் கண்களில் கூடத்தான்! ஏனென்றால் திருமணத்தைப் பற்றிய விமர்சனமும் விளம்பரமும் பத்திரிகையில் போடவில்லை!"

"சட்! இதென்ன பெரிய வட்டாரத்துக் கல்யாணம்! தம்பதிகளின் போட்டோவும் கல்யாணத்தைப் பற்றிய விவரங்களும் பத்திரிகையில் வராவிட்டால் பாக்கி ஜனங்கள் அதை எப்படித் தெரிந்து கொள்வது! நம்புவது!"

"யாரும் இதைத் தெரிந்து கொள்ளவும் வேண்டாம்; நம்பவும் வேண்டாம்! நாங்கள் விளம்பரத்திற்காக மணம் செய்து கொள்ளவில்லை. உண்மைக் காதலினால் சாஸ்திர முறைப்படி மணம் புரிந்து கொண்டோம்."

"உண்மைக் காதலுக்குக் கல்யாணத்தைத் தவிர வேறு நல்ல முடிவு கிடையாதா! அது கிடக்கட்டும். ஜமீந்தாரின் மகன் சாதாரணத் தாதிப் பெண்ணான உன்னை மணக்க எப்படி......" என்று நித்திய விநாயகம் கூறி முடிக்கு முன்னரே, "பைங்கிளி! அறையின் கதவைத் திறந்து விடச் சொல். என் சொந்த அபிப்பிராயத்தில் தலையிட அம்மனிதனுக்கு என்ன தைரியம்! கதவைத் திறக்கட்டும். அம்மனிதன் கழுத்தின்மீது பாய்ந்து......" உள்ளிருந்து இம்மாதிரி பெரிய ஆடவனின் கம்பீரமான குரல் கப்பென்று அடங்கிப் போய் விட்டது. பைங்கிளி தன் கணவன் வாயைப் பொத்தி யிருக்க வேண்டும். நித்திய விநாயகம் பயத்தால் திகைத்தார். ஆனால் சத்திய சுந்தரி பயப்படவில்லை.

"யாரப்பா நீ! எங்கள் சொந்த இடத்தில் தலையை மட்டுமல்லாமல் உடம்பையே நுழைத்திருக்கிறாய்! அப்படி யிருக்கும் போது உன் சொந்த அபிப்பிராயத்தில் நாங்கள் ஏன் தலையிடக் கூடாது! வீடு பெரிதா அல்லது அபிப்பிராயம் பெரிதா! அபிப்பிராயத்தை வேண்டுமானாலும் எவ்வளவு தடவையானாலும் மாற்றிக் கொள்ளலாம்! இப்போது ஒரு வீட்டை...... ஒரே ஒரு வீட்டை......மாற்றிக் காண்பி, பார்க்கலாம்!" என்று துணிச்சலுடன் அடித்துக் கேட்ட தன் மனைவியை கர்வமுடன் நோக்கினார் நித்திய விநாயகம்.

அறையினுள்ளிருக்கும் ஆடவன் பூனை போல் அடங்கி விட்டான். அப்போது பைங்கிளி, "அம்மா! கோபித்துக் கொள்ளாதீர்கள். அவர் சொன்னது ஆத்திரத்தினால்தான். ஐயா! நீங்கள் கேட்ட கேள்விக்கு நான் நேரிடையாகப் பதில் கூற முடியாவிட்டாலும் நான் சொல்லப் போகும் விவரங்களிலும் என் நிலைமையைத் தெரிந்து கொள்ளலாம்" என்று சொல்லி விட்டு மேலே தொடர்ந்தாள்.

"பக்கத்திலிருக்கும் இருநிலமலை என்ற ஜமீனை உங்களுக்குத் தெரியும். அதன் ஜமீந்தார் கற்கண்ட சீலரையும் உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். ஆனால் வெள்ளை மணிக்கொடிச் சாமியாரை மட்டும் உங்களுக்குத் தெரியாது......"

"தெரியும்! தெரியும்! சாமியாரையும் தெரியும்!" என்றார் எழுத்தாளர்.

"ஆனால் அவர் பெண் பூஞ்சடையை..."

"பூஞ்சடையா! பெண்ணா! சாமியாருக்குப் பெண் எப்படியிருக்க முடியும்! சிவ! சிவ!" என்று காதைப் பொத்திக் கொண்டார் நித்தியவிநாயகம்.

"நீங்கள் இப்போது சொல்லுமாதிரியே சாமியாரும் 'சிவ சிவ' என்று அடிக்கடி சொல்லிக் கொள்வார். அதனால்தான் அவருக்குக் கஷ்டமில்லாமல் உணவும் மற்ற சௌகரியங்களும் கிடைத்து வந்தன. நண்பரும் குருவுமான வெள்ளை மணிக்கொடிச் சாமியார் சொன்னதுதான் கற்கண்டருக்கு வேதம். அதனால் சாமியாருக்குத் தன் அதிகாரத்தைப் பெருக்கிக் கொள்ள ஆசை உண்டாயிற்று. தன் பெண் பூஞ்சடையை ஜமீந்தார் மகனுக்கு மணமுடித்துத் தன் உறவைப் பலமாக நிலை நாட்டிக் கொள்ளப் பார்த்தார் சாமியார். சில மாதங்களாகவே தன் பெண்ணை வேணுகான சீலருக்குக் கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் சாமியாருக்கு உண்டென்பது எனக்குத் தெரியும். எனினும் என் காதலின் அசைக்க முடியாத உறுதியும் ஆதரவும் எனக்குண்டென்ற தைரியத்திலும் பேசாமலிருந்தேன். ஆனால் ஜமீந்தாரின் மனைவி திடீரென்று ஓடிப் போய் விட்டாள். அதனால் ஜமீந்தாரின் புத்தி பேதலித்து விட்டது! அவர் இப்போது என்னையே மணம் செய்து கொள்ள வேண்டுமென்று ஒற்றைக் காலி



காத்துக் கொண்டு நிற்கிறீர்கள்..." என்று வையம்மி கூறியதைக் கேட்டதும் நித்திய விநாயகத்திற்குப் பாதிப் பிராணன் போனது போலாயிற்று.

அவர் தான் என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்துக் கொண்டிருந்த போது உள்ளேயிருந்து பல குரல்கள் கேட்டன.

"என்டி, பெண்ணே! ஏழையென்று இடம் கொடுத்தால் பெரிய காரியத்தில் எல்லாம் விளாகத் தப்பிவிடுறேயே!" என்று ஒரு குரல் கேட்டது.

"நாயிப் பெண்ணுக்கு வந்த தைரியத்தைப் பார்!" என்றது மற்றொரு குரல்.

"அவள் பெரிய ராங்கிக்காரி! எப்படியாவது அவரை மயக்கி அழைத்துக் கொண்டு போய்விடுவாள் என்று நான் முன்னமேயே சந்தேகப்பட்டேன். ஆனால் தன் கைவரிசையை இவ்வளவு சீக்கிரம் காண்பிப்பாள் என்று நான் நினைக்கவில்லை" என்றது மூன்றாவது குரல்.

வெளியிலிருந்து ஆச்சரியத்துடன் கேட்டுக் கொண்டிருந்த இருவருக்கும் இதுதான் பூஞ்சையின் குரலாக இருக்க வேண்டுமென்று தோன்றியது.

"கண்ணைப் பார் பூனை மாதிரி!" என்றது மறுபடியும் முதல் குரல்.

"முகத்தைப் பார் பெண் புலி மாதிரி!" என்றது இரண்டாவது குரல்.

"நகத்தைப் பார் சிறுத்தை மாதிரி" என்றது மூன்றாவது குரல்.

ஒரு நிமிஷம் அமைதி நிலவியது. பிறகு திடீரென்று ஒரு ஓலமும் அதைத் தொடர்ந்து ஒரு பெரிய சத்தமும் கேட்டது. "ஐயோ! அப்பா! என்னைக் கொல்லாதீர்கள்! விட்டு விடுங்கள்!" என்று பைங்கிளி ஓலமிட்டது வெளியில் நன்றாய்க் கேட்டது. சாமியாரின் பெண்கள் பைங்கிளியின் மீது பாய்ந்து அவளைக் கொல்ல முயற்சிக்கிறார்கள் என்று எழுத்தாளருக்கும் அவர் மனைவிக்கும் தெரிந்துவிட்டது. தன் வீட்டிலேயே ஒரு கொலை நடப்பதை எண்ணிப் பார்த்த போது நித்தியவிநாயகத்தின் நரம்புகள் நின்றுவிடும் போலாகி விட்டது. அறையி னுள்ளிருக்கும் மெஞ்ஞான சீலர் இவ்வளவு சந்தடியிலும் என்னதான் செய்து கொண்டிருக்கிறார் என்று அவருக்குப் புரியவில்லை.

நித்திய விநாயகம் அதிக நேரம் இம்மாதிரி இருக்கவில்லை. கதவு போனாலும் பாதகமில்லையென்று ஒரு உலக்கையால் அதை உடைக்கத் தீர்மானித்தார்.

இதற்குள் அறையினுள்ளே காரியம் முடிந்து விட்டது போலிருந்தது. மூன்று சகோதரிகளும் வெறி பிடித்தாற் போலக் கூச்சலிட்டுக் கொண்டு, பைங்கிளியின் மீது பாய்ந்து அவளைக் கடித்துப் பிறாண்டிக் கழுத்தை அமுக்கிப் பிடித்துக் கொன்றிருப்பார்கள் என்று நித்திய விநாயகத்துக்குப் பட்டது. "ஐயோ! அப்பா! உயிர் போகிறதே!" என்று ஓலமிட்டுக் கொண்டிருந்த பைங்கிளியின் குரல் மங்கிக் கொண்டே வந்தது.

உலக்கையால் கதவை உடைக்கத் தீர்மானித்த நித்திய விநாயகம் ஏதையோ நினைத்துக் கொண்டு உலக்கையை மூலையில் சாத்தினார். தன்னை ஒன்றிலும் சம்பந்தப் படுத்திக் கொள்ளாமல் 'கேஸை' அப்படியே போலீஸாரிடம் ஒப்புவித்து விட வேண்டுமென்பது தான் அவருடைய தீர்மானம். ஆனால் வீடு அப்போதிருந்த நிலையில் அவர் மனைவி சத்திய சுந்தரி தனியாக இருக்கச் சம்மதிப்பாளா! அவளுக்கும் போதிய தைரிய மிருக்குமா! என்று கேட்க எண்ணி மனைவியை நோக்கித் திரும்பினார்.

ஆனால், இதுவரை சாதாரணமாயிருந்த சத்திய சுந்தரி இப்போது விபரீதக் காரியம் ஒன்றைச் செய்யத் தொடங்கினாள். மெதுவாக அவரை நோக்கி நகர்ந்து வந்த சத்திய சுந்தரி தன் இரு கைகளையும் அவர் கழுத்தைச் சுற்றி வைத்து மெதுவாக இறுக்கத் தொடங்கினாள்! பிரமை யடைந்த நித்திய விநாயகம் ஒரு கணம் நிலையைத் தெரிந்து சமாளிக்க முயற்சிக்கையில் அவருக்கு மூச்சுத் திணறியது. பூம் போன்ற தன் மனைவியின் மலர்க் கைகள் இரும்புக் கரங்களாக மாறித் தன் உயிருக்கே உலை வைக்கும் விந்தையை அவர் எண்ணுமுன்பே அவர் உயிர் மேலே போய்க் கொண்டிருந்தது!......

* * *

மிக்கப் பிரயாசையுடன் கண்களை விழித்தார் நித்தியவிநாயகம். நாற்காலியில் உட்கார்ந்திருந்த தன் கழுத்தின் மீது சத்திய சுந்தரியின் வளைக்கரங்கள் சுற்றியிருந்ததை உணர்ந்தார்.

"என்ன! கதை எழுதுகிறேன் பேர்வழி என்று ராத்திரி முழுவதும் விளக்கையும் எரிய விட்டுக் கொண்டு உட்கார்ந்தபடியே தூங்கி வழிந்து கொண்டிருக்கிறீர்களா! என்ன கஷ்டம் இது! மணி ஆறாகப் போகிறது. உட்கார்ந்து தூங்கினது போதும். கொஞ்ச நேரமாவது படுத்துக் கொண்டு தூங்குங்கள்!" என்று ஆதரவுடன் கூறினாள் சத்திய சுந்தரி.

அசடு வழிந்த நித்திய விநாயகம் ஒரு நிமிஷம் யோசித்தார். பிறகு ஏதோ தீர்மானித்தவர் போல, "கொஞ்சம் என்னுடன் கீழே வா!" என்று மனைவியை அழைத்துச் சென்றார். விஷயம் புரியாதவளாய் சத்திய சுந்தரியும் கணவனைத் தொடர்ந்தாள். மூடப்பட்டிருந்த சாமான் அறையின் முன் நின்றுகொண்டு மனைவியிடம், "துணி உலர்த்துகிற அந்தச் சின்னக் கழியை என்னிடம் எடுத்துக் கொடு. இந்தக் கதவையும் திற!" என்று கூறினார்.

"உங்கள் பிடிவாதத்தைப் பார்த்தால் எனக்குப் பயமாக இருக்கிறது. விஷயம் என்னவென்று சொல்லுங்களேன்!" என்றாள் சத்திய சுந்தரி.

"விஷயத்தைப் பிறகு சொல்லுகிறேன். பயப்படாமல் கதவைத் திற!" என்று எழுத்தாளர் மறுபடியும் சொன்ன போது தயக்கத்துடனும் பயத்துடனும் கதவைச் சட்டென்று திறந்துவிட்டு இவர் பின்னால் ஓடி ஒளிந்து கொண்டாள் சத்திய சுந்தரி. அறையின் வாயிற்படியில் கழியை ஓங்கியவாறு தயாராய் நின்று கொண்டிருந்தார் நித்திய விநாயகம்.

முதலில் ஒரு கொழுத்த பூனை அறையிலிருந்து வெளியே வந்தது!

"பூஞ்சை! வாங்கிக்கொள்!" என்று போட்டார் அப்பூனையின் மீது.

பிறகு ஒன்றன் பின்னொன்றாக இரண்டு பூனைகள் வெளி வந்தன!

"செல்லம்! வையம்மி! வாங்கிக் கொள்ளுங்கள்!" என்று போட்டார் மறுபடியும் எழுத்தாளர் அவைகளின் மீது.

இன்னும் ஏதையோ உள்ளிருந்து எதிர் பார்த்தவர் போலிருந்த நித்திய விநாயகம் கழியை உயர்த்திக்கொண்டு தயாரா யிருந்தார். ஒரு கருப்புக் கிடாப்பூனை அவருடைய கால்களுக்கு இடையில் சுருட்டிக்கொண்டு சட்டென்று வெளியில் தாவி ஓடியது!

"கதவைத் திறந்தால் என்னை ஒரு கை பார்ப்பதாகக் கூறிய வெறுமைய சீலரே! உன்னை நம்பி வந்தவளை ஏமாற்றினாற் போல என்னையுமா ஏமாற்றப் பார்க்கிறாய்! வாங்கிக்கொள் நீயும்!" என்று ஓங்கி ஒரு போடு போட்டார் அதன் முதுகிலும்!

ஆச்சரியத்துடன் நித்திய விநாயகத்தின் சொற்களையும் செயல்களையும் கவனித்துக் கொண்டிருந்த சத்திய சுந்தரிக்கு அவர் பூனைகளைப் பெயரிட்டு அழைப்பதைக் கேட்டதும் பயம் பிடித்துக் கொண்டது. இரவெல்லாம் கண் விழித்ததால் ஒருவேளை புத்தி கலங்கி விட்டதோ என்ற சந்தேகத்துடன் கணவனைப் பார்த்தாள். அதைக் கவனித்த நித்திய விநாயகம் மனைவியை நோக்கி, "அதெல்லாம் சந்தேகப் படாதே. எனக்குப் புத்தி கலங்கவில்லை. இன்னும் உள்ளே வா. போய்ப் பார்க்கலாம்" என்று கூறிவிட்டுத் தன் மனைவியை அழைத்துக் கொண்டு சாமான் அறையில் காலடி வைத்தார்.

அறைக்குள் பல பித்தளைப் பாத்திரங்களும் இரண்டொரு வெண்கலப் பாத்திரங்களும் சிதறி உருண்டு கிடந்தன. "என்ன அக்கிரமம்! இந்தப் பூனைகள் ரகளை செய்ய இந்த இடம்தானா அகப்பட்டது! முதலில் தச்சனைக் கூப்பிட்டு விட்டத்து ஜன்னலுக்குக் கதவு போடச் சொல்லுங்கள்" என்று கூறிய சத்திய சுந்தரி "ஐயோ!" என்று குதித்து கத்தினாள்.

அறையின் ஒரு மூலையில் பதுங்கிக் கொண்டிருந்த ஒரு அழகிய வெள்ளைப் பூனை உடம்பில் பல ரத்தக் காயங்களுடன் நொண்டி நொண்டி நடந்து சத்திய சுந்தரியின் காலுக்குள் புகுந்து அறைக்கு வெளியே மெதுவாக ஓதுங்கி ஓடியது!

"இதோ பைங்கிளி! நல்லவேளை, உயிர் இருக்கிறது!" என்று எழுத்தாளர் அப் பூனையை மனைவிக்கு அறிமுகம் செய்வித்த போது சத்திய சுந்தரியின் பயம் வலுத்தது! ஆனால் நித்திய விநாயகம் விடவில்லை!

"வா என்னுடன் மேலே!" என்று மனைவியை அழைத்துக்கொண்டு மாடிக்குச் சென்றார். ஜன்னலுக்கு அப்பால் ஓட்டின்மீது இரண்டு பூனைகள் உட்கார்ந்திருப்பதை ஜன்னல் வழியாக மனைவிக்குச் சுட்டிக் காண்பித்தார்.

"அசல் ருத்திராக்ஷப் பூனை மாதிரி ஒன்று கண்ணை மூடிக் கொண்டிருக்கிறதே......" என்று ஆரம்பித்த மனைவியிடம், "அவர்தான் வெள்ளை மயிர்க் கொடிச் சாமியார். அவர் பக்கத்தில் பணிவுடன் ஒருவர் அமர்ந்து இருக்கிறாரே அவர்தான் கற்கண்ட சீலர்!" என்று கூறி முடித்தார் நித்திய விநாயகம்.

சத்திய சுந்தரியின் சந்தேகத்தை நிவர்த்தி செய்ய நித்திய விநாயகம் மிகவும் கஷ்டப்பட்டாலும், தமிழ் மணம் கமழும் கதை யொன்றை உடனே எழுதி முடிக்க அவர் அதிகம் கஷ்டப்படவில்லை!

தேவர்கள் விஜயம்




மாஹியங்கானு என்னும் புராதன புண்ணிய ஸ்தலத்தில் கண்டெடுத்து இப்போது அநுராதபுரத்துக் கண்காட்சிச் சாலையில் வைத்திருக்கும் பழைய வர்ணச் சித்திரங்கள்.

By kind permission of The Archaeological Department, Ceylon




## வானமார்க்கம்

பொலன்னறுவை என்று இப்போது வழங்கும் புராதன புலஸ்திய நகரத்தில் வடக்கு எல்லையில் உள்ள புத்தர் கோயில் தமிழ் நாட்டு ஆலயச் சிற்ப பாணியில் அமைந்து இருக்கிறது. அதன் சுவர்களில் புத்தர் ஜாதகக் கதைகளைச் சித்தரிக்கும் அற்புத வர்ண ஓவியங்கள் சிதிலமாகக் காணப்படுகின்றன. அவற்றில் சில சித்திரங்களை நமது சித்திரக்காரர் மணியம் நேரில் பார்த்து அழிந்த பகுதிகளையும் பூர்த்தி செய்து எழுதியுள்ளார்.

*By kind permisson of The Archaeological Dept. Ceylon*

இலங்கைச் சித்திர மலர்—3

சந்திரனும் இந்திரனும்

வலப்பக்கம் (மேலே):—
தேவேந்திரன் பூரண
சந்திரனில் முயல் சித்திரம்
தீட்டுகிறார்.

இடப்பக்கம்:—போதிசத்துவர்
தேவலோகம்சென்று தேவர்
களுக்கு சத்தியத் தத்து
வத்தை உபதேசித்துவிட்டுப்
பூலோகத்துக்கு இறங்கி
வருகிறார்.




கல்கி தீபாவளி மலர் 1951

By kind permisson of
The Archaeological Dept.
Ceylon



காதலர்கள்
ஐக்யமும் பிரிவும்

பொலன்னருவை நகரத்துப்
புராதன புத்தர் கோவில்
சுவரில் உள்ள மற்றொரு
வர்ணச் சித்திரம்

கல்கி தீபாவளி மலர் 1951

*By kind permission of*
*The Archaeological Dept.*
*Ceylon*

# இண்டோ கமர்ஷியல் பாங்க்
## லிமிடெட்

| | | |
|---|---|---|
| அதிகாரம் பெற்ற மூலதனம் | ... | 25,00,000 |
| வழங்கி வாக்களிக்கப்பட்ட மூலதனம் | ... | 21,25,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | ... | 18,75,000 |
| ரிஸர்வ் நிதி | ... | 11,25,000 |

★

*டைரக்டர்கள் :*

ஸர். A ராமஸ்வாமி முதலியார், K. C. S. I., D. C. L. (OXON) *(சேர்மன்)*

S. N. N. சங்கரலிங்க அய்யர் *(டெபுடி சேர்மன்)*

T. R. வெங்கடராம சாஸ்திரியார், C. I. E.

A. M. M. முருகப்ப செட்டியார்

R. S. A. சங்கர அய்யர்

R. விஸ்வநாத அய்யர், B. A., B. L.

K. லக்ஷ்மணன்

★

*சென்னையில் ஆபீஸ்கள்:*

நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு - பெரியமேட் - திருவல்லிக்கேணி

மயிலாப்பூர் - தியாகராயநகர்

★

*கிளை ஆபீஸ்கள் :*

அம்பாசமுத்திரம்
ஆம்பூர் (N. A.)
சிதம்பரம்
கடலூர் (N. T.)
ஈரோடு
காஞ்சிபுரம்
காரைக்குடி
கும்பகோணம்
மதுரை
மாருதேரு
மாயவரம்
பாலக்காடு
புதுக்கோட்டை
ராமநாதபுரம்
சீர்காழி
தஞ்சாவூர்
தென்காசி
திருநெல்வேலி ஜங்ஷன்
திருநெல்வேலி டவுன்
திருச்சிராப்பள்ளி
வேலூர்
விஜயபுரம்
விழுப்புரம்
விருதுநகர்
விஜயநகரம்

*சகலவிதமான பாங்கிங் அலுவல்களும் ஏற்றுக்கொண்டு நடத்தப்படும்*

K. S. வைத்தியநாதன்
அஸிஸ்டெண்ட் செக்ரடரி

# காத்திருந்த

**கி.ரா.கோபாலன்**

காத்திருந்தாள் காத்திருந்தாள்
கன்னி இவள் காத்திருந்தாள்
பார்த்திருந்தாள் பார்த்திருந்தாள்
பாவை இவள் பார்த்திருந்தாள்
அல்லும் பகலும் இங்கே
ஆரணங்கு காத்திருந்தாள்
மன்னன் வரும் வழியை
மங்கை இவள் பார்த்திருந்தாள்
அன்ன உறக்கமின்றி
அவன் வரவைப் பார்த்திருந்தாள்
கல்லாய்ச் சமைந்தாலும்
கண்ணிமைதான் மூடுவளோ......!

• • •

எங்கள் ஊருக்குச் சமீபமாகத் 'துறவிக் காடு' என்று ஒரு அழகான கிராமம் இருக்கிறது. இந்தக் காலத்தில் ஒரு அழகான கிராமமாகக் காட்சியளிக்கும் அந்த இடம் முன் காலத்தில் பெரிய காடாக இருந்தது. அது காடாக இருந்த காலத்திலும் அதில் அநேகர் வசித்து வந்தனர். 'துறவிக் காடு' என்று அதற்கு ஆதியிலிருந்தே பெயர் இருந்தாலும் அங்கு வசித்தவர்களெல்லாம் துறவிகளல்ல. காட்டில் குடிசைகள் கட்டி மனைவி மக்களோடுதான் வாழ்ந்து வந்தனர். காத்திருந்த கன்னியும் அந்தக் காலத்தில் இருந்தவள்தான்.

காட்டிடையே ஒரு பெரிய ஆலமரம். அந்த ஆலமரத்தடியில்தான் செங்கண்ணனின் குடிசை இருந்தது. அந்தக் காட்டில் வசித்தவர்களிடையே செங்கண்ணன்தான் கொஞ்சம் விசேஷம்.

அந்தக் காட்டிலுள்ளவர்கள் பரம்பரையாக விறகு வெட்டிச் சுமந்து சென்று பக்கத்து ஊர்களில் விற்று ஜீவனம் செய்து வந்தார்கள். ஆனால் செங்கண்ணன்தான் காட்டுக் கோரைகளைப் பதமாக்கிப் பாய் பின்னி விற்கும் வியாபாரமான தொழிலை அவர்களுக்குக் கற்றுக் கொடுத்தான். இந்தப் பெருமை அவனை அந்தக் காட்டு மக்களுக்கே தலைவனாக்கி விட்டது!

செங்கண்ணனின் மனைவி ஒரு நாள் கோரை பறிக்கப் போனபோது நாகப் பாம்பு தீண்டி இறந்துவிட்டாள். அவள் இறந்தபொழுது அவளுடைய ஒரே மகள் அங்கம்மாவுக்கு வயது பதினெட்டு. தாய்க்குப் பின் குடும்பப் பொறுப்பை அங்கம்மா ஏற்று நடத்தியது, துக்கப்பட்ட செங்கண்ணனுக்கு ஓரளவு மன ஆறுதலைக் கொடுத்து வந்தது.

அந்தக் காட்டில் அங்கம்மாவின் அழகுக்கு ஈடான அழகு வாய்ந்த வேறு பெண்களே இல்லை. அவள் வசீகர சக்தி வாய்ந்த ஒரு வன ராணியாக விளங்கினாள்.

துறவிகளுக்கு ஏற்ற சாந்தியும் அமைதியும் நிலவிய அந்தக் காடு, அழகின் உருவாக விளங்கிய அங்கம்மாவுக்கு உற்ற இடமல்ல என்று பலரும் கருதினர். குப்பையில் மாணிக்கம் கிடப்பது போலவும் சேற்றில் தாமரை முளைப்பது போலவும் அங்கு அங்கம்மா வந்து ஜனித்ததாக எண்ணியவர்களும் உண்டு.

அவளுக்கு அந்தக் காட்டைத் தவிர வேறு ஓரிடமும் தெரியாது. அதுதான் அவளுடைய உலகம்.

ஆனால் நாகரிக வளர்ச்சி படைத்த பிரதேசத்தைச் சேர்ந்த யாராயிருந்தாலும் அவளைப் பார்த்ததும் 'ஒரு காட்டுப் பெண்தானே' என்று அலட்சியமாகப் போய்விட முடியாது. அவளுடைய அழகு எவரையும் மயக்கக் கூடியதாய்த் தானிருந்தது.

அவளுடைய கட்டமைந்த அழகிய மேனியை ஒரே ஒரு பாவாடையும் ரவிக்கையும்தான் மறைத்துக் கொண்டிருந்தன. கழுத்தில் ஒரு பாசிமணி மாலை—கைகளில் அவளுடைய தகப்பனார் வாங்கிக் கொடுத்த வெள்ளி வளையல்—நீண்ட கேசத்தைப் பிறைபோல் சுற்றிக் கொண்டையிட்டுக் காட்டு மலர்களைத் தொடுத்துத் தலையில் அணிந்து கொள்வாள். அவளைப் பார்த்தவர்கள் அவளுக்கு அந்த அலங்காரத்தைத் தவிர வேறு அலங்காரம் எதுவும் பொருந்தமாட்டாது என்றுதான் சொல்லுவார்கள். அவளுக்குச் செய்து கொள்ளத் தெரிந்த அலங்காரமும் அவ்வளவுதான்.

அந்தக் காட்டில் வசித்த ஆண் பெண் யாவருக்கும் அங்கம்மாவைப்போல் அழகி இந்த உலகத்திலேயே இருக்க மாட்டார்கள் என்ற அபிப்பிராயம். செங்கண்ணனும் தன் மகளின் அழகைக் குறித்துப் பெருமிதம் கொண்டிருந்தான். தன் மகள் ஒரு தெய்வீகப் பிறவி என்றும், அவளை ஒரு ராஜகுமாரனுக்குத்தான் விவாகம் செய்து கொடுக்கப் போவதாகவும் சொல்லி வந்தான். இதனால் அந்தக் காட்டிலுள்ள சில வாலிபர்கள் கூட அங்கம்மாவின் மீது ஆசை வைப்பது வீண் கனவாக முடியும் என்று கருதி விட்டு விட்டனர்.

ஒருநாள் மாலை வேளை. செங்கண்ணன் கோரை பறிப்பதற்காக எங்கேயோ சென்றிருந்தான். அங்கம்மா குடிசை வாசலில் உட்கார்ந்து கோரையினால் பாய் முடைந்து கொண்டிருந்தாள். அவளுக்குப் பக்கத்தில் ஒரு ஆட்டுக் குட்டி படுத்து அசை போட்டுக் கொண்டிருந்தது. ஓய்ந்த நேரங்களில் பாய் பின்னுவதுதான் அவளுக்குப் பிரியமான வேலை. பக்கத்தில் போர்போல் குவித்திருந்த கோரைகளை ஒவ்வொன்றாக எடுத்துப் பின்னிக் கொண்டே தாழ்ந்த குரலில் ஏதோ பாடிக் கொண்டிருந்தாள்.



அப்பொழுது அவள் பாடிக் கொண்டிருந்த பாட்டு எது! அது என்ன பாஷை! அந்தப் பாட்டை அவளுக்குச் சொல்லிக் கொடுத்தது யார்! அது எந்தப் புத்தகத்திலிருக்கிறது! என்பதையெல்லாம் ஒருவராலும் அறிந்து கொள்ள முடியாது. ஆனால் அவள் குரல் மிகவும் இனிமையாகவும் கவர்ச்சியுள்ளதாகவும் இருந்தது. அந்தப் பாட்டு அவளுக்காகவும் அவள் குரலுக்காகவுமே அமைந்ததுபோல் தோன்றியது.

ஏதோ சலசலவென்று சப்தம் கேட்டது. அங்கம்மா பாய் பின்னுவதைச் சட்டென்று நிறுத்தி விட்டுச் சுற்றிலும் தன் பார்வையைச் செலுத்தினாள்.

அந்தக் காட்டிற்கு வேட்டையாடுவதற்காக அடிக்கடி நகரப் புறங்களிலிருந்து சிலர் வருவது வழக்கம். அவர்களையெல்லாம் பார்த்தாலே அங்கம்மாவுக்கு விநோதமாய் இருக்கும். அவர்களுடைய விதவிதமான உடை, ஆயுதம், பேச்சு எல்லாமே அவளுக்கொரு அதிசயமாகத்தான் தோன்றும். அவர்களிடம் அவளுக்கு அர்த்தமில்லாத சம்சயமும் பயமும் ஏற்படும். அவர்களில் சிலர் தன்னை வெறிக்கப் பார்ப்பதைக் கண்டு அவள் வெறுப்படைவாள்.

'சல சல' வென்ற சப்தத்துடன் குதிரையின் குளம்படிச் சப்தமும் கேட்கவே, அவளுக்கு அப்பொழுது வேட்டையாட வருகிறவர்களின் ஞாபகம்தான் வந்தது. அடர்ந்த மரங்களிடையே அவளுடைய பார்வை ஊடுருவிப் பாய்ந்தது. யாரோ குதிரை மீது வருவது அவளுக்குத் தெளிவாகத் தெரிந்தது.

ஒரு வாலிப வீரன் குதிரை மீது கம்பீரமாக உட்கார்ந்து குதிரையைச் செலுத்தி வந்தான். அவனுடைய உடையும், அவன் அணிந்திருந்த ஆபரணங்களும் அவனைச் சாதாரண மனிதனாக நினைப்பதற்கு இடம் கொடுக்கவில்லை. அவன் ஒரு ராஜகுமாரன் என்றே தோன்றியது.

குடிசைக்குச் சமீபமாக வந்ததும் இளைஞன் கடிவாளத்தைப் பிடித்திழுத்துக் குதிரையை நிறுத்தினான்.

அங்கம்மா பரபரப்போடு எழுந்து நின்று அவனை விழியசையாமல் பார்த்துக் கொண்டு நின்றாள். இதற்குமுன் அங்கம்மா யாரையும் அவ்விதம் கூர்ந்து பார்த்ததில்லை. அந்த இளைஞனைப் பார்த்ததுமே அங்கம்மா இதுவரையில் தான் கண்டறியாத உணர்ச்சி வசப்பட்டாள்.

அவன் சட்டென்று குதிரையிலிருந்து கீழே குதித்து, "இந்தக் காட்டில்கூட என்னை வசீகரிப்பதற்கு ஒன்று இருக்கிறதே!" என்றான், அங்கம்மாவைப் பார்த்துக் குறும்பாகச் சிரித்துக் கொண்டே.

அங்கம்மாவுக்கு அவன் வார்த்தையின் கருத்து விளங்கவில்லை. ஆனால் அப்பொழுது அவளுக்கு அவன் முகத்தை நிமிர்ந்து பார்க்கவே வெட்கமாயிருந்தது. வெட்கமென்பது இன்னதென்று தெரியாத அந்தக் காட்டுப் பெண்ணுக்கு இப்பொழுதுதான் புதுமையாக அந்த உணர்ச்சி திடீரென்று ஏற்பட்டது!

குதிரையின் கடிவாளத்தைக் கையில் பிடித்துக் கொண்டே, வெட்கத்தினால் சிவந்திருந்த அவளுடைய கன்னங்களை

# கன்னி




யும், பூமியை நோக்கும் அழகிய நீண்ட விழிகளையும் இமை அசையாமல் பார்த்துக்கொண்டிருந்தான் அந்த வீர வாலிபன். 'அவள் உண்மையில் மானிடப் பெண்ணா! அமர உலகிலிருந்து குதித்து வந்த அழகு உருவா!' என்ற வியப்பில் ஆழ்ந்து விட்டவன்போல் தோன்றியது அவனுடைய ஆவல் நிறைந்த பார்வை.

அவன் அவளுக்குச் சமீபமாக வந்து, "காட்டைச் சுற்றி வேட்டை யாடியதில் மிகவும் களைப்பாய் இருக்கிறது. கொஞ்சம் தண்ணீர் தருகிறாயா!" என்றான்.

அவள் பதில் எதுவும் சொல்லாமல், சட்டென்று உள்ளே சென்று ஒரு மண் பாண்டத்தில் தண்ணீர் எடுத்துக் கொண்டு வந்து அவனிடம் கொடுத்தாள்.

அவன் கொஞ்சம் கொஞ்சமாகத் தண்ணீரைப் பருகினான். தண்ணீர் பருகுவதில் அவனுக்கிருந்த சிரத்தையைவிட அவளுடைய அழகைப் பருகுவதில்தான் அவனுடைய முழு கவனமும் சென்றது!

அவன் தண்ணீர் பருகியவுடன் அந்த இடத்தை விட்டுப் போய் விடவில்லை. அவளைப் பார்த்தவண்ணமே சிலைபோல் நின்றான். அவளும் அவனைப் பார்ப்பதும், புன்முறுவல் செய்வதும், வெட்கத்தால் தலைகுனிந்து கொள்வதுமாக இருந்தாள். இருவரும் இன்ப உணர்ச்சி வசப்பட்டுத் தங்களையே மறந்தனர்.

கடைசியாக, இந்த மௌன நாடகத்துக்கு ஒரு முடிவு ஏற்பட்டது. அவன் திடீரென்று சுயவுணர்வு பெற்றவன்போல், "இந்தக் காட்டில் புகுந்து விட்டால் வழியே தெரியாதா! சிற்றம்பலத்துக்குப் போகிற வழி எது! நானும் காலையிலிருந்து சுற்றிச் சுற்றி வருகிறேன், வழியே புலப்படவில்லை" என்றான்.

அவள் சிரித்துக் கொண்டே, "அதோ, அதுதான்" என்று தென் திசையை நோக்கிக் கையைக் காட்டினாள்.

அவள் காட்டிய திசையில் மரங்களும் புதர்களும் மண்டியிருந்தனவே யன்றி ஒரு பாதை இருப்பதாகத் தெரியவேயில்லை. அவன் புருவத்தில் கையை வைத்து எட்டிய வரையில் உற்றுப் பார்த்துவிட்டு, "எனக்குப் பாதை தெரியவில்லையே......! நீ என்னோடு சிறிது தூரம் வந்து வழி காண்பித்தால் மிகவும் உதவியாக இருக்கும்" என்றான்.

அப்போது அவளுக்கு என்ன பதில் சொல்லுவதென்றே தெரியவில்லை. கடைசியாக அவன் கோரிய விதமே செய்வதாய்த் தலையை அசைத்தாள்.

அவன் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்தவண்ணம் நடந்து சென்றான். அவள் ஆட்டுக் குட்டியைக் கையால் வாரி எடுத்து மார்போடு அணைத்துக் கொண்டாள்; அவன் பக்கத்தில் நாணத்துடன் நடந்து சென்றாள்.

சிறிது நேரம் மௌனமாக நடந்த பின் அவன் அவளைப் பார்த்து, "நீ குதிரை சவாரி செய்திருக்கிறாயா!" என்றான்.

அவள் வெட்கத்துடன் அவனைப் பார்த்துக் கொண்டே 'இல்லை' என்பதற்கு அடையாளமாகத் தலையை அசைத்தாள். அவள் முகக் குறியிலிருந்து அவளுக்குக் குதிரை சவாரி செய்ய வேண்டுமென்ற ஆவல் இருக்கிறது என்பதை அந்த வாலிபன் உணர்ந்து கொண்டான்.

"உனக்குக் குதிரை சவாரி செய்ய வேண்டுமென்று ஆசையாக இருக்கிறது, இல்லையா......!" என்றான் அவளைக் குறும்பாகப் பார்த்துச் சிரித்துக் கொண்டே.

அவள் அதற்கு எவ்விதமான பதிலும் கூறவில்லை. அவளுக் கேற்பட்ட நாணத்தோடு ஒரு ஆவலும் கலந்திருப்பதை அவன் உணர்ந்து கொண்டான்.

"ஏன் நடந்து போக வேண்டும்! நான் உன்னைக் குதிரை மீது ஏற்றிக் கொள்கிறேன். போகலாம் வா" என்று சொல்லிக் குதிரைமீது பாய்ந்து உட்கார்ந்து அவளையும் கை கொடுத்து லாவகமாகத் தூக்கித் தனக்கு முன்னால் அமர்த்திக் கொண்டான்.

அவளுடைய கையிலிருந்த ஆட்டுக் குட்டிக்கும் குதிரை சவாரி செய்யும் யோகம் இருந்தது! அவனுடைய கர ஸ்பரிசமும் தேக ஸ்பரிசமும் அவளுக்கு என்றுமில்லாத ஒரு உணர்ச்சியை உண்டாக்கின. காட்டில் வசிக்கும் பெண்தானே அவள்! விஷயமறியாத உள்ளம். வானத்திலிருந்து குதித்த தேவ புருஷன்போல் திடீரென்று வந்து தோன்றிய அவனிடம் தன் உள்ளத்தையே பறிகொடுத்து விட்டாள் அவள்.

"இந்த ஆட்டுக் குட்டி உன்னோடுகூடப் பிறந்ததா!" என்றான் அவன் சிரித்துக் கொண்டே.

அவள் மெதுவாக அவன் முகத்தைத் திரும்பிப் பார்த்துவிட்டுக் கூச்சத்தோடு, "இல்லை, இதை நான் பிரியப்பட்டு வளர்க்கிறேன்" என்றாள்.

குதிரை மரங்கள் அடர்ந்த காட்டைத் தாண்டி, மைதானம் போன்ற ஒரு இடத்திற்கு வந்து சேர்ந்தது. அங்கு சுமைதாங்கிபோல் ஒரு மேடையும், பெரிய எல்லைக் கல் ஒன்றும் இருந்தன. அந்த வீரன் எல்லைக் கல்லுக்குச் சமீபமாகத் தன் குதிரையை நிறுத்திக் கீழே குதித்து அவளையும் கை கொடுத்து இறக்கிவிட்டான்.

"நீ இல்லாவிட்டால் எனக்கு இந்தக் காட்டிலிருந்து மீண்டு வரப் பாதையே

தெரிந்திருக்காது" என்றான் கண்ணைச் சிமிட்டிய வண்ணம்.

"இருக்கட்டும். உன் பெயரென்ன?" என்றான் தொடர்ந்து.

அவள் தயங்கியபடியே, "என் பெயரா, அங்கம்மா!" என்றாள்.

காதலர்கள் அர்த்தமில்லாமல் என்ன வெல்லாமோ பேசிக் கொண்டிருந்தனர். நேரம் போவதே தெரியாமல் பேசிக் கொண்டிருந்தனர். வெகு நேரம் ஒருவரை யொருவர் மௌனமாகப் பார்த்துக் கொண்டும் புன்முறுவல் செய்து கொண்டும் இருந்தனர்.

கடைசியில் ராஜ குமாரன், "என்னை நீ மறக்காமல் இருக்க வேண்டுமே! அதற்கு இதோ......" என்று சொல்லித் தன் விரலிலிருந்த மோதிரம் ஒன்றைக் கழற்றி அவளுடைய மெல்லிய கரத்தில் அன்புடன் அணிவித்தான்.

அவள் வைரம் பதித்த அந்த மோதிரத்தைப் பார்த்தவாறே, "உங்களை மறக்காமலிருக்க எனக்கு இந்த மோதிரம் வேண்டுமா! உங்களை நான் எப்படி மறக்க முடியும்......!" என்றாள் தழுதழுத்த குரலில்.

அவனிடம் தன் இருதயத்தையே பறிகொடுத்து விட்டாள் அந்தப் பேதைப் பெண். அப்பொழுது அவள் கண் பார்வையில் பரிவு, பச்சாத்தாபம், அன்பு, வேதனை, ஆவல் எல்லாம் ஒருங்கே கலந்திருந்தன.

"நீங்கள் யார்? அதை எனக்குச் சொல்லவில்லையே!" என்று அங்கம்மா தடுமாறிக் கொண்டே கேட்டாள்.

அந்த வாலிபன் சிரித்த வண்ணம் குதிரைமீது தாவி அமர்ந்து, "நீதான் வனமோகினி. நான் சாதாரண மனிதன்தான். என் பெயர் ரகுவீர குமார குலபூபதி. இந்தப் பெயர் உன் நினைவில் நிற்காது. நான் ஒரு இளவரசன் என்பதை மாத்திரம் மனதில் வைத்துக் கொள், போதும். நான் போய் வருகிறேன் ...... என்னை மறந்துவிட மாட்டாயே!" என்று குதிரையைத் தட்டி விட்டான்.

அவன் ஒரு இளவரசன் என்பதைக் கேட்டதும் அங்கம்மாவுக்கு உலகம் சுற்றுவது போலிருந்தது. தோற்றத்தில் இளவரசனுகக் காணப்பட்ட அவன் உண்மையிலேயே இளவரசனுக இருப்பான் என்று அவள் கனவிலும் நினைக்கவில்லை. தலையை நிமிர்த்திக் கண நேரம் ஆவலோடு அவன் முகத்தைப் பார்த்து விட்டு மறுபடியும் குனிந்து தரையை நோக்கினுள். காட்டில் வசிக்கும் ஒரு பெண்ணுக்கும் நாட்டை ஆளப் பிறந்த ஒரு இளவரசனுக்கும் எவ்வளவு தூரம்......! ஆனல் காதலோ காலம், தூரம், வேறுபாடு ஆகிய எல்லாவற்றையும் கடந்து அல்லவா நிற்கிறது!

* * *

நிலவு. காட்டை அடுத்துள்ள பெரிய மைதானம். அழகான மேடை. அதற்குப் பக்கத்தில் ஒரு எல்லைக் கல். ஜிலுஜிலு வென்று தென்றல் வீசுகிறது. ஒரு வீர வாலிபன் உடையாலும், அழகாலும், ஆபரணங்களாலும், இளவரசனைப் போல் தோற்ற மளிக்கிறான். அவன் அவள் கரங்களைப் பற்றி வருடிக்கொண்டே 'என் ஆசைக் குகந்த வன மோகினி! எவ்வளவு காலமாக இந்தச் சுப வேளையை எதிர்பார்த்து ஏங்கிக் கொண்டிருந்தேன். தெரியுமா! இனி நாம் பிரிந்திருக்க வேண்டிய அவசியமில்லை. நாம் இனி இருவரல்ல, ஒருவர் தான். நமது உடல் ஒன்று, உயிரும் ஒன்று! நாளையதினம் இரவு இதே இடத்தில் எனக்காகக் காத்திரு. நான் வந்து உன்னை அழைத்துச் செல்லுகிறேன். மறந்து விடாதே!' என்கிறான். அவளும் தலையை அசைக்கிறுள். அவன் குதிரை மீது பாய்ந்தேறி அவளிடம் பிரியா விடை பெற்றுக்கொண்டு செல்லுகிருன்.



அதுவரையில் இன்பக் கடலில் மூழ்கியிருந்த அங்கம்மா திடீரென்று சகிக்க முடியாத வேதனைக்கு உள்ளானுள். தன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட இளவரசனைத் தற்காலிகமாகப் பிரிந்திருக்கவும் அவளால் முடியவில்லை.

அங்கம்மா சட்டென்று கண் விழித்து எழுந்திருந்தாள். அவள் கண்டது கனவா அல்லது உண்மைதானு என்று அவளுக்குக் குழப்பமாய் இருந்தது. கண்களைத் துடைத்துக்கொண்டு சுற்றிலும் பார்த்தாள்.

சுடு சீ, அது கனவுதான். ஆனல் அதை அவளால் நம்ப முடியவில்லையே! அந்த முகம் அப்பொழுதும் அவள் கண்ணெதிரிலேயே மறையாது நின்றது. வீரமும், அன்பும் நிறைந்த அந்த அழகான முகம் - அது கனவே அல்ல, உண்மை!

கனவல்ல என்று அவள் மனது சொல்லியது. காற்றில் அசைந்து சலசலக்கும் இலைகளின் சப்தம் 'கனவுதான்' என்று அவளுக்கு உணர்த்துவது போலிருந்தது.

அவள் அவனை மறந்துவிட முடியாது. அவன் மாத்திரம் அவளை மறந்துவிட முடியுமா! இதெல்லாம் கனவு என்றால் வாழ்க்கையே கனவுதான்! உலகம் முழுதும் ஒரே கனவுதான்!

அவள் சட்டென்று எழுந்தாள். அவளுடைய தகப்பன் நன்றாகக் குறட்டைவிட்டுத் தூங்கிக் கொண்டிருந்தான். அவள் மெதுவாக எழுந்து குடிசைக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தாள். அந்தக் காட்டில் மரங்களிடையே புகுந்து அந்த நடுநிசி வேளையில் எங்கேயோ அதி வேகமாக நடந்து செல்லலானுள்.

பூரண நில வொளி இருந்தாலும் மரங்கள் அடர்ந்து நிற்கும் அந்தக் காட்டில் பயங்கரமான இருள்தான் சூழ்ந்திருந்தது. காட்டிடையே அந்த நிசி வேளையில் நடந்து செல்வது மிகவும் அபாயம்தான். ஆனல் அவள் அந்தப் பாதையில் குருட்டுத் தனமாக நடக்கத் தொடங்கினுள். அவள் காதுகளில் 'எனக்காகக் காத்திரு' என்ற சொற்கள் இடைவிடாது ரீங்காரமிட்டுக் கொண்டிருந்தன.

இது அசட்டுத்தனம், பெரிய பேதமை. ஒரு கனவை நிஜமென நம்பிக் காட்டில் கல்லிலும் முள்ளிலும் இடர்பட்டுக் குருட்டுத்தனமாக ஓடுவார் உண்டா! ஆனல் அவளுடைய அசட்டுத்தனத்தை யார் கண்டார்கள்! அந்த வேளை அவனை நினைத்து அவளே சிரித்துக் கொள்ளவேயே தவிர, வேறு யார் பரிகாசம் செய்து சிரிக்க

இருக்கிறீர்கள்! குருட்டுத்தனமான நம்பிக்கை ஒன்று கலப்படமற்ற அவள் மனத்தில் சுழன்று கொண்டிருந்தது.

காட்டுப் பாதையில் அங்குமிங்குமாக நரிகளும், முயல்களும் பாய்ந்தோடின. ஆந்தையும் கோட்டானும் பேய் போல மாறி மாறி அலறின. மற்றும் பல வித பயங்கரமான சப்தங்கள் அவள் செவிகளில் விழுந்தன. பகலில் கண்களுக்குக் குளிர்ச்சியாக இருக்கும் மரங்கள் இரவில் பல்வேறு உருவம் கொண்ட பிசாசுகள் போல் தோன்றின. பூமியில் விழுந்திருந்த மரங்களின் நிழல்கள் பூதங்கள் படுத்து உறங்குவது போல் காட்சியளித்தன. எங்கேயோ வெகுதூரத்தில் நரிகளெல்லாம் ஒன்றுகூடி ஒரு குரலெடுத்து ஊளையிட்டன. மரத்தினிடையே உள்ள இடைவெளி வழியாய்த் திட்டாக விழுந்த நிலவொளியில் இரண்டு நாய்கள் ஒன்றின் மீது ஒன்று பாய்ந்து கோரப் போர் நிகழ்த்திக் கொண்டிருந்தன.

என்ன பயங்கரம்! பகலில் அவள் கண்களுக்கு மிகவும் ரம்மியமாகத் தோன்றும் அந்தக் காடு தன்னுள் எவ்வளவு பயங்கரத்தையும் கோரக் காட்சிகளையும் ஒளித்து வைத்துக் கொண்டிருக்கிறது என்பதை அந்த இரவில்தான் அவளால் அறிந்து கொள்ள முடிந்தது.

ஆனால் அவள் எதையும் கண்டு பயப்படவே யில்லை. அதைப்பற்றிச் சிந்திக்கவுமில்லை. வெகு வேகமாக நடந்து கொண்டே இருந்தாள். கடைசியில் அவள் அந்த மைதானத்தை அடைந்தாள்.

சீமை தாழ்ந்து போயிருக்கும் மேடை—அதற்குச் சமீபமாக நடப்பட்டிருக்கும் எல்லைக் கல் — அதே இடம்தான். ஒருநாள் மாலை அவள் கையில் ஒரு மோதிரத்தை அணிவித்து அவள் மனதில் காதலையும் ஆசையையும் அபிமானத்தையும் வளர்த்துவிட்டு அழகான வாலிபன் அவளிடம் விடை பெற்றுக் கொண்ட இடம் அதுதான். அவன் கனவில் தோன்றி அவளைப் பித்தாக்கி நடுநிசியில் பயங்கரமான காட்டைக் கடந்துவரச் செய்த இடம் அதுதான்.

அங்கு அவன் அவளுக்காகக் காத்திருக்கிறானா! இல்லை. அந்த எல்லைக் கல்லையும் மேடையையும் தவிர வேறு ஒருவரையும் அந்த இடத்தில் காணோம். ஆனால் அவள் ஏமாற்றமடைந்து விடவில்லை. தளர்ச்சியடைந்து விடவில்லை. அவள் மனத்தில் ஒரு நம்பிக்கை - திடமான நம்பிக்கை அவன் வந்து விடுவானென்று!

அவள் காத்திருந்தாள். அவன் வரும் வழியைப் பார்த்திருந்தாள். அவன் வரவில்லை. அவள் அந்த இடத்தை விட்டு அசையவே யில்லை.

நிலவு பிரகாசித்துக் கொண்டிருந்தது. காற்று 'குளு குளு' வென்று வீசிக் கொண்டிருந்தது. இரவு கொஞ்சம் கொஞ்சமாக கழிந்து கொண்டிருந்தது. ஆனால் அவள் மாத்திரம் அந்த இடத்தை விட்டு அசையவே இல்லை. கல்லாய்ச் சமைந்து விட்டவள் போல் நின்று கொண்டிருந்தாள்.

உண்மையாகவே அவள்-அங்கம்மா கல்லாகி விட்டாள்! அவள் கல்லாகி விட்டாலும் கண்விழிகள் மாத்திரம் மூடவேயில்லை! தன் காதலனின் வரவை நோக்கிச் சிறிதும் நம்பிக்கை தளராமல் திறந்த வண்ணமே பார்த்துக் கொண்டிருந்தன அக்கல்லுருவின் கண்விழிகள்!

* * *

நெடு நாட்களுக்குப் பின் மன்னன் ஒருவன் தன் பரிவாரங்கள் சூழத் துறவிக் காட்டுக்கு வேட்டைக்கு வந்தான். காட்டிற்குள் நுழைவதற்கு முன்னும் எல்லைக் கல்லுக்குச் சமீபமாகக் கற்சிலை ஒன்று இருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டான். அதற்குமுன் அவன் அந்த இடத்தில் அந்தச் சிலையைப் பார்த்ததில்லை. அது திடீரென்று பூமி பொத்து வெளிக்கிளம்பி விருப்பதுபோல் தோன்றியது.

நெருங்கிப் போய்ப் பார்த்தான். அதைக் கண்டதும் திடுக்கிட்டான். 'அங்கம்மா... வனமோகினி' என்று அலறினான். முன் ஒரு நாள் இரவு அங்கு நடந்த சம்பவங்கள் அவன் ஞாபகத்துக்கு வந்தன.

பாவம்! அவன் வரவை எதிர் நோக்கித் தானே அவள் இவ்வளவு நாளாக வெயில், மழை, நிலவு, பனி, காற்று ஒன்றையும் லட்சியம் செய்யாமல் அந்த இடத்திலேயே கண்விழி மூடாது நிற்கிறாள்!

ஆனால் அவள் கல்லாகி விட்டாளே! பித்துப் பிடித்தவன்போல் நின்ற மன்னனுக்கு ஒரு யோசனை தோன்றியது. அந்த வன மோகினிக்கு—இப்போது தன் எதிரில் சிலையாக நின்ற அவளுக்கு அந்த இடத்தில் ஒரு அழகான கோவில் கட்டும்படி உத்தரவிட்டான்!


# கவுண்டர் & கம்பெனி லிமிடெட்

கூட்ஸ் ஷெட் ரோடு :: பொள்ளாச்சி

## போர்டு, செவர்லெட்

மற்றும் இதர மோட்டார்களுக்கு அவசியமான எல்லா சாமான்களும்

**டயர்கள், டியூப்புகள், பேட்டரி வகைகளும்**

விற்பனை செய்யப்படும்.

★

பஸ், லாரிகளுக்கு பாடிகள் போட்டுக் கொடுப்பதுடன் எல்லாவிதமான மோட்டார் ரிப்பேர்களும் சிறந்த முறையில் செய்து கொடுக்கப்படும்.

★

## நா. மகாலிங்கம்

மேனேஜிங் டைரக்டர்.

# கபிட்ச மோகினி

க.நா.



அன்று அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தேன். திடீரென்று என் கனவில் சர்வாங்க சுந்தரி ஒருத்தி வந்து 'டக்' என்று நின்றாள்.

"நீங்கள் யார்!" என்றேன் நான் கில குபீர்த்தலுடன்.

"என்னைத் தெரியாதா, உங்களுக்கு! நான்தான் கபிட்ச மோகினி அல்லது 1999-ம் வருஷம்" என்றாள்.

நான் மௌனமாக வாயைப் பிளந்து கொண்டு நின்றேன்.

"இன்னுமா உங்களுக்குச் சந்தேகம்! இதோ பாருங்கள், என் ஆட்சியில் நிகழும் சம்பவங்களை!" என்று சொல்லிவிட்டு அப்பால் விலகி நின்றாள்.

அவ்வளவுதான்! சினிமாப் படக் காட்சி போலப் பல அற்புதமான காட்சிகள் கண்முன் தோன்றின.

வயல்களெல்லாம் நெல், வரப்புகளெல்லாம் நெல், தெருக்களெல்லாம் நெல் இறைந்து கிடக்கின்றன. அதிக உணவு உற்பத்தி காரணமாக மக்களும் சர்க்காரும் திணறித் திண்டாடுகின்றனர். ரேஷன் முறையும் கண்ட்ரோலும் வெகு காலத்துக்கு முன் கண்ட கனவுபோல் தோன்றுகின்றன.

## காட்சி 1

தேவைக்கு அதிகமான அரிசி தமிழ் நாட்டில் விளைவதால் அரிசி படி ஒன்றுக்கு இரண்டணா விதம் விற்கிறது. ரூபாயின் மதிப்பு உயர்ந்து பண்டங்களின் மதிப்பு மிகுவுண்டு பாதாளத்தில் விழுந்து கிடக்கிறது. இந்த விசித்திரமான பொருளாதார நெருக்கடியைச் சமாளிப்பது எப்படி என்ற கவலையில் சென்னை சர்க்கார் ஆழ்ந்து கிடக்கின்றனர்.

அபரிதமான உணவுப் பொருள்களை ஒரு அளவுக்குள் வைப்பது எப்படி என்பதை ஆராயப் பிரத்யேகக் கமிஷன் ஒன்றைச் சர்க்கார் நியமித்தார்கள். அந்தக் கமிஷன் சுமார் ஒரு வருஷ காலம் பல கமிட்டிக் கூட்டம் போட்டு, நாடெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்து, கடைசியாகத் தனது யோசனையை வெளியிட்டிருக்கிறது. "சுமார் ஐம்பது வருடங்களுக்கு முன் மத்திய சர்க்காரால் ஆரம்பித்து வைக்கப்பட்ட இந்த வன மகோத்சவ இயக்கம் தான் நாம் தற்சமயம் அனுபவிக்கும் சகல கஷ்டங்களுக்கும் காரணம். மழை பொழியாத அந்தக் காலத்தில் இந்த இயக்கம் ஆரம்பித்தது சரிதான். ஆனால் இப்பொழுது காட்டில் தேவையான மழைக்கு மேலே பொழிவதால் தேவையான அளவுக்கு மேலே அரிசி விளைகிறது. மழையைக் கட்டுப்படுத்தினால்தான் விளைவையும் கட்டுப்படுத்த முடியும்" என்று அந்தக் கமிஷன் தன் அறிக்கையில் கூறுகிறது.

## காட்சி 2

அதிக உற்பத்தியைக் கட்டுப்படுத்துவதற்கான வழிவகைகளைப் பரிசீலனை செய்வதற்காக நியமிக்கப்பட்ட கமிஷனுடைய யோசனையின்மேல் சர்க்கார் தாமதமின்றி நடவடிக்கை எடுத்துக் கொள்கிறார்கள். "காட்டில் ஏற்பட்டுள்ள அதிக அரிசி உற்பத்தி நெருக்கடியைச் சமாளிக்கும் வகையில் சர்க்காருக்கு யோசனை கூறுவதற்காக ஏற்படுத்தப்பட்ட கமிஷன் தனது யாதாஸ்தை சமர்ப்பித்து விட்டது. அதிக மரங்கள் அடர்ந்த காடுகள் நாடு முழுதும் நிறைந்து இருப்பதால் அதிக மழை பொழிவதற்கு ஏதுவாகின்றன. இதன் பலனைப் பத்துக் கலம் விளைய வேண்டிய நிலத்தில் முப்பது கலம் நெல் விளைந்து விடுகிறது. ஆகையினால் அதிகமாக இருக்கும் மரங்களைச் சர்க்கார் வெட்டிவிட உத்தேசித்திருக்கின்றனர். சென்னை ராஜ்ய மக்கள் இனி வரும் ஒவ்வொரு மாதத்தின் முதல் வாரத்தையும் 'மரம் வெட்டு விழா' வாரமாகக் கொண்டாட வேண்டுமென்பது சர்க்கார் விருப்பம். வரும் முதல் தேதி காலை ராஜ்யப் பிரதம மந்திரி இந்த விழாவைத் தொடங்கி வைப்பார்" என்று சென்னை சர்க்கார் அறிக்கை ஒன்று நிலைமையைச் சந்தேகமின்றித் தெளிவு படுத்துகிறது.

உடனே மாகாண மெங்கும் 'மரம் வெட்டு விழா' கொண்டாடப்படுகிறது. சென்னை சர்க்காரின் முதல் மந்திரி பக்கத்திலிருந்த காடு ஒன்றுக்குத் தமது பரிவாரங்களும், பத்திரிகை நிருபர்களும், புகைப்பட மெடுப்போரும் புடைசூழச் சென்று ஒரு பொன் கோடாலியினால் ஒரு மரத்தைச் சம்பிரதாயத்துக்காக ஒரு வெட்டு வெட்டுகிறார். பிறகு அங்கு தயாராயிருந்த சில மரம்வெட்டும் தொழிலாளிகள் பிரதமர் தன்னுடைய பொன்னான கையினால் பொன் கோடாலிகொண்டு ஆரம்பித்த காரியத்தை முடித்து வைக்கின்றனர். மரம் கீழே தடால் தடாலென்று விழுந்தபோது "வாழ்க, கோடாலிகள்! வீழ்க, மரங்கள்!" என்ற கோஷங்கள் எழுந்து வானைப் பிளக்கின்றன.

## காட்சி 3

"மதுவிலக்கினால் தொழிலற்றுப் போயிருக்கும் மாஜி மரமேறிகள் மரம் வெட்டுவோராக மாற விரும்பினால் சர்க்கார் அவர்களுக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து தரவேண்டும்" என்று ஞானநாராயண நாடார் சர்க்காருக்கு ஒரு வேண்டுகோள் விடுகின்றார். அத்துடன் வனம் வீழ்த்து விழாவின் அவசியத்தை மக்களும் சர்க்காரும் நன்கு உணரும் வகையில் பிரசாரம் செய்யும் பொருட்டு, 'கோடாலி' என்ற பெயரில் ஒரு பத்திரிகையை அவர் ஆரம்பித்து வைக்கிறார். 'கோடாலி' பத்திரிகையின் முதல் இதழ் மேலட்டையைக் கோடாலி சகிதம் பரசுராமரின் திருவுருவம் அலங்கரித்துக் கொண்டிருக்கிறது. அடுத்து வந்த இதழ்களின் மேலட்டையை 'ஆறுநூறு மரங்கள் வெட்டின ஆண்தகை'யின் படங்களும், 'ஆயிரம் மரம் சாய்த்த அசகாய சூர'ரின் படங்களும் அழகு செய்கின்றன.

'கோடாலி'யின் முதல் இதழில், காட்டில் ஏற்பட்டுள்ள அதிக உணவு உற்பத்தி நெருக்கடியைச் சமாளிப்பதற்குச் சர்க்காரும், மக்களும் என்ன செய்யவேண்டும் என்பதைப் பற்றி ஒரு தலையங்கம் எழுதப் பட்டிருக்கிறது. 'குலத்தைக் கெடுக்க வந்த கோடாலிக் காம்பு' என்ற வசனத்தை இனி யாரும் உபயோகிக்கக் கூடாது என்பதை விளக்கி ஒரு உப தலையங்கம் வரையப்பட்டிருக்கிறது. "இனி காடு முழுதும் வேண்டியதற்குமேல் விறகு கிடைக்குமாதலால் எல்லோரும் இனிமேல் வெந்நீரிலேயே ஸ்நானம் செய்ய வேண்டும்" என்று மக்களை வற்புறுத்திக் கட்டுரை ஒன்றும் வெளியாகியிருக்கின்றது.

"இயற்கையாக முளைக்கும் மரங்களை முளையிலேயே கிள்ளி எறிந்தால் பிறகு கோடாலி கொண்டு அவைகளைப் பிளக்க வேண்டியதில்லை. இந்த முளையில் கிள்ளும் கைங்கரியத்தை வெள்ளாடுகளே திறம்படச் செய்யக் கூடியவை. ஆகையினால் ஆடுகள் வளர்ப்போருக்குப் பிரத்தியேக சலுகை தரப்படவேண்டும்" என்று கார்மேகக் கோனார் காரசாரமாக எழுதிய கடிதம் பத்திரிகைகளில் பத்தி பத்தியாகப் பிரசுரமாகியிருக்கிறது.

## காட்சி 4

ஹிந்து மத பரிபாலன போர்டாரும் தங்கள் பங்கை முன்னோடியாகச் செலுத்துகிறார்கள். சில கோவில்களில் வெகு

மாதுக்கு வருஷத்துக்கு ஒரு முறை நடக்கும் அன்னாபிஷேகத்தை ஒவ்வொரு நாளும் நடத்த வேண்டும் என்ற உத்தரவைச் சகல தேவஸ்தானங்களுக்கும் அனுப்பி வைக்கிறார்கள். "வருஷத்துக்கு ஒரு முறை அன்னாபிஷேகம் செய்து கொள்ளுவதால் தான் சில கவிகள், சிவபெருமானை 'அன்னம் அறியாதவர்' என்று கேலி செய்ய இடமேற்பட்டிருக்கிறது. இந்தப் பழியை நாம் துடைக்க வேண்டும். நமது ஆதீனத்தின் கீழ் உள்ள சகல சிவாலயங்களிலும் பிரதி தினமும் அன்னாபிஷேகம் தவறாமல் நடக்கட்டும்" என்று ஸ்ரீலஸ்ரீ ஞானசிகாமணி தம்பிரானவர்கள் ஸ்ரீமுகம் ஒன்றை அருளுகிறார்.

மிதமிஞ்சிய அரிசி விளைவினால் ஏற்பட்ட விளைவைச் சமாளிக்க ஹோட்டல் முதலாளிகளும் தைரியமாக முன் வருகின்றனர். எப்படி எப்படியெல்லாம் அரிசியை உபயோகித்து மக்கள் அதைத் தின்னும்படி செய்யலாம் என்பதே அவர்களுடைய தினசரிக் கவலையாக இருக்கிறது. ரேஷனும் பஞ்சமும் தலைவிரித்தாடின காலத்தில் கோதுமை சாதத்தையும் உப்புமாவையும் தின்றுப் பழகிப் போய், அதையே விரும்பும் ஜனங்களை, மீண்டும் 'அரிசி வழியில்' திருப்ப அவர்கள் அரும்பாடு படுகிறார்கள். அரிசியிலேயே ஹல்வா, மைசூர் பாக், மோஹன் டால், குலோப் ஜான், ஜாங்கிரி முதலிய பட்சணங்களை அதனதன் பெருமை குறையாமல் செய்யும் அபூர்வ முறைகளைக் கண்டு பிடிக்கிறார்கள்

அகில இந்திய ரேடியோ 'அரிசியை உபயோகிக்கும் ஆயிரம் வழிகள்' என்ற ஒரு புதிய பேச்சுத் தொடரை ஆரம்பித்து வைக்கிறது. ஒரு பாட்டியம்மாள், ஒரு தோசைக்காரி, ஒரு சமையல்காரர் இவர்களை ஒரு ரேடியோ உத்தியோகஸ்தர் தனித் தனியே பேட்டி கண்டு அந்தப் பேட்டியின் ஒலிப்பதிவை ஜனங்கள் கேட்பதற்கு வசதியளிக்கிறார்கள்.

## காட்சி—5

பொது மக்களும் தங்களுடைய பங்குக்கு ஒன்றும் செய்யாமல் இல்லை. அதுவரை இரண்டு வேளை சாப்பிட்டு வந்தவர்கள் நான்கு வேளை சாப்பிட ஆரம்பிக்கிறார்கள். மூன்று வேளை சாப்பிட்டவர்கள் ஆறு வேளை புசிக்க முடியுமா என்று முயற்சிக்கிறார்கள். தங்களுடைய நண்பர்களையும் உறவினர்களையும் அடிக்கடி அழைத்துப் பலவிதச் சித்திரான்னங்களை அவர்களுக்குப் படைத்துத் தாங்களும் உண்கிறார்கள்.



வாரத்துக்கு ஒரு முறை பொதுக் கூட்டங்கள் போட்டு நாள் ஒன்றுக்குக் குறைந்த பட்சம் நாலு வேளையாவது ஒவ்வொருவரும் உண்ண வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்துகிறார்கள். 'ஒரு நாள் உணவை ஒழியென்றால் ஒழியாய், இரு நாளுக்கே லென்றால் ஏலாய்' போன்ற ஔவையாரின் பாட்டுகள் அந்தக் கூட்டங்களில் கண்டிக்கப்படுகின்றன. "ஒரு வேளை புசிப்பவன் யோகி, இரு வேளை புசிப்பவன் போகி, மூன்று வேளை புசிப்பவன் ரோகி" என்ற வசனத்தை "ஒரு வேளை புசிப்பவன் துரோகி, இருவேளை புசிப்பவன் ரோகி, மூன்று வேளை புசிப்பவன் தியாகி, நான்கு வேளை புசிப்பவன் யோகி" என்று மாற்றியமைத்து ஒரு பிரசங்கி சுமார் இரண்டரை மணி நேரம் இடைவிடாது பேசுகிறார்.

குழந்தைகள் சாப்பிடும்போது சாதத்தை வீடு முழுதும் இறைத்துச் சாப்பிடுவதை இந்தக் கூட்டங்கள் வெகுவாகப் பாராட்டின. ஒரு வாய் கவளம் சாதம் சாப்பிடுவதற்குள் எந்தக் குழந்தை ஒரு படி சாதத்தை இறைக்கிறதோ, அந்தக் குழந்தையின் பெற்றோர்கள் பாக்கியவான்கள் என்று கருதப்படுகிறார்கள். அறை முழுதும் வெண்மையான அரிசிச் சாதத்தை இறைத்து விட்டுப் பாயும் தரையில் வழிய விட்டுவிட்டு அதன் நடுவில் கம்பீரமாக வீற்றிருக்கும் குழந்தையைத் தெரிந்த விண்மீன்களின் நடுவில் பிரகாசிக்கும் முழுமதிக்கு ஒப்பிட்டுக் கவிதைகள் புனைகிறார்கள் சில பைந்தமிழ்க் கவிஞர்கள்.



## காட்சி—6

ஒவ்வொரு கல்யாணத்தின் போதும் குறைந்த பட்சம் ஐநூறு பேர்களுக்காவது விருந்து போட வேண்டும் என்று சர்க்கார் சட்டம் நிறைவேற்றுகிறார்கள். "அதிகப்படியான அரிசி வாங்குவதற்கான முன் பணத்தைக் குறைந்த வட்டி விகிதத்தில் சர்க்காரிடமிருந்து கடனாகப் பெறலாம்" என்று சென்னை ராஜ்ய உணவு மந்திரி சட்டசபையில் கூறுகிறார்.

"நிலைமை இப்படியே இருக்குமா! அல்லது சீர்திருந்துமா! அல்லது மேலும் சீர்கேடடையுமா!" என்று எதிர்க்கட்சித் தலைவர் கேட்டதும், கனம் உணவு மந்திரி, "நாட்டில் தோன்றியுள்ள இந்த உணவு வீக்கத்தைக் குறைப்பதற்காக என்னால் முடிந்த வரையில் நாள் ஒன்றுக்கு நாலு வேளை சாப்பிடுகிறேன். வாரத்தில் ஒரு நாள் சனிக்கிழமையின் போது ஆறு வேளை சாப்பிடுகிறேன். என்னுடைய இந்த உதாரணத்தை எதிர்க்கட்சித் தலைவரும் அவருடைய சகாக்களும் பின் பற்றி வந்தால் தேசத்துக்கு



அவர்கள் பெரிய சேவை செய்தவர்கள் ஆவார்கள்" என்று பதில் அளிக்கிறார்.

## காட்சி—7

வட இந்தியாவில் பஞ்சாப் மாகாணத்தில் மழையின்மையால் பஞ்சம் தோன்றியது. கோதுமை விளைவு பெரிதும் பாதிக்கப்பட்டு விட்டது. வெளிநாட்டிலிருந்தும் கோதுமை உடனடியாகக் கிடைக்கவில்லை. தென்னாட்டில் சென்னை ராஜ்யத்தில் குவிந்து கிடக்கும் அரிசியைப் பஞ்சம் வந்துள்ள பஞ்சாபுக்கு அனுப்பினால் என்ன என்று மத்திய சர்க்கார் நினைத்துச் சென்னை சர்க்காரை, "பஞ்சாபுக்கு ஒரு லட்சம் டன் அரிசி அனுப்ப முடியுமா!" என்று கேட்டார்கள். சென்னை சர்க்காரும், "ஒரு லட்சம் டன் அனுப்ப முடியாது. இரண்டு லட்சம் டன்தான் அனுப்பமுடியும்" என்று சொல்லிவிட்டுப் பிறகு அனுப்பும்போது மூன்று லட்சம் டன் அரிசி அனுப்பி வைக்கிறார்கள்! அரிசியை மாத்திரம் அனுப்பி வைத்தால், பாவம்! பழக்கமில்லாத பஞ்சாப் மக்கள் அதை என்ன செய்வது, எப்படிச் செய்வது என்பதை அறியாமல் திண்டாடப் போகிறார்களே என்று கவலையுடன், அரிசியைப் பயன்படுத்தும் பல வழிகளைச் சொல்லிக் கொடுப்பதற்காகச் சுமார் ஆயிரம் தமிழர்களையும் கூட அனுப்பி வைக்கிறார்கள். இட்லியும், தோசையும், அரிசி உப்புமாவும் செய்யும் முறைகளை நம் தமிழர்கள் பஞ்சாப் கிராமவாசிகளுக்குப் பிரத்யட்சமாகக் காட்டுவதை விளக்கும் புகைப் படங்கள் தமிழ் நாட்டுப் பத்திரிகைகளிலெல்லாம் பிரபலமாக வெளியாகின்றன.

இத்துடன் காட்சிகள் முடிந்தன. காட்சி மோகினி உலகத்தையே மயக்கும் சக்தியுள்ள தன் பற்களைக் காட்டிக் கலகல வென்று ஒரு மோகனச் சிரிப்பு சிரித்துக் கொண்டே மறைந்தாள்.

சட்டென்று விழித்துக் கொண்டேன். என் சகதர்மிணி கல கல வென்று சிரித்துக் கொண்டு என் எதிரில் நின்றாள். "நாளைக்குத் தீபாவளி, இப்படித் தூங்குகிறீர்களே! காபி சாப்பிட்டு விட்டு ரேஷன் கடைக்குப் போய் வழக்கம்போல் ஒன்றரைப் படி அரிசியை வாங்கிக் கொண்டு வாருங்கள். வீட்டில் சர்க்கரை கொஞ்சம் கூட இல்லை. சர்க்கரை டப்பா காலியாக இருக்கிறது. தீபாவளிக்காக ஸ்பெஷலாய் அரை வீசை சர்க்கரை கொடுக்கிறார்களாம். அதையும் வாங்கி வர மறந்து விடாதீர்கள்" என்றாள்.

# இந்தியாவில் பனியன் அணிபவர்கள்

என்றும் மறக்க முடியாத இரு வார்த்தைகள்

## "சிங்க மார்க்"

★

"சிங்க மார்க்" குறியுள்ளவை என்றால் உத்திரவாத நீடித்த உழைப்பிற்கும் உயர்ந்த ரகத்திற்கும் பெயர்பெற்ற சரக்குகள் என்பது எங்கும் பிரசித்தம்!

★

"சிங்க மார்க்" பனியன்கள், ஸ்போர்ட் ஷர்ட்ஸ், அண்டர்வேர்ஸ், புல் ஓவர்ஸ், ஸ்லீப் ஓவர்ஸ், லேடீஸ் கோட்ஸ், கார்டிகன்ஸ் ஆகியவைகளை சதா உபயோகித்துவரும் லக்ஷக்கணக்கான அன்பர்கள் அனைவருக்கும் எமது மனமார்ந்த தீபாவளி நல் வாழ்த்துக்களைச் சமர்ப்பித்துக் கொள்ளுகிறோம்.

★

M. K. C.

சிங்க மார்க்

ESTABLISHED : 1924
TELEGRAMS :
"UNDERWEAR"
PHONE: NO. 58

# மதுரை நிட்டிங் கம்பெனி

(BIGGEST HOSIERY FACTORY IN INDIA)

மதுரை (S. India)

# அஜந்தா சித்திர நிபுணர்கள்

## இந்த நாளில் இருந்தால்....




கல்கி தீபாவளி மலர் 1951



# மதராஸ் மோட்டார்ஸ்

## மோட்டார் ஸைகிள்களுக்கு

ராயல் என்பீல்ட்,

ஏரியல் &

எக்ஸெல்ஸியர்



50 ஸி. ஸி. முதல்
1000 ஸி. ஸி. வரை.

சுலபமாகப் பணம்
செலுத்தும்
ஏற்பாடு உண்டு.

ஸ்பேர்கள் எப்போதும்
கிடைக்கும்.

விற்பனைக்கு பிறகு ஸர்வீஸ்.

MZ10ATM

**ஸ்ரீ மதராஸ் மோட்டார்ஸ் லிட்.,**

மோட்டார் ஸைக்கிள் ஸ்பெஷலிஸ்டுகள்

4/9 பிராட்வே, மதராஸ்-1.

# புதிய ரக பாரதி தமிழ் எழுத்துக்கள்

## பாரதி போல்டு

48 pt. 50 lbs.

கற்றதனா லா

36 pt. 50 lbs.

பயனென் கொல்

24 pt. 30 lbs.

வாலறிவன் நற்றாள் தொ
ழார் எனின் அறிவுவடிவு

18 pt. 30 lbs.

உலகத்தில் வாழவேண்டிய அற
நெறியில் நின்று வாழ்கின்றவன்

12 pt. 25 lbs.

எல்லா உயிர்க்கும் பிறப்பு ஒரு தன்மை யானதே
ஆயினும் செய்கின்ற தொழில்களின் உயர்வு
தாழ்வு வேறுபாடுகளால் சிறப்பியல்பு ஒத்திருப்ப
தில்லை, மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழி

10 pt. 25 lbs.

தொழில் செய்கிறவன் கோணுதிருக்கும் வரையில் உல
கம் கெடாது :—ஆகையால் தலைவன் நாள்தோறும் அவ
னுடைய நிலைமையை ஆராயவேண்டும். ஒருவன் ஒரு
தொழிலைச் செய்வதற்கு உரியவனாக இருப்பதை ஆராய்
ந்த பிறகு அவனை அத்தொழிலுக்கு உரியவனாகும்படி

Patent Regd. No. 73156

## போல்டு கண்டன்ஸ்

48 pt. 50 lbs.

கற்றதனா லாய

36 pt. 50 lbs.

பயனென் கொல் வ

24 pt. 30 lbs.

வாலறிவன் நற்றாள் தொழார்
எனின் வான் நின்று உலகம்

18 pt. 30 lbs.

உலகத்தில் வாழ வேண்டிய அற
நெறியில் நின்று வாழ்கின்றவன்

12 pt. 25 lbs.

எல்லா உயிர்க்கும் பிறப்பு ஒரு தன்மை யானதே
ஆயினும் செய்கின்ற தொழில்களின் உயர்வு தாழ்வு
வேறுபாடுகளால் சிறப்பியல்பு ஒத்திருப்பதில்லை,
மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும் கீழல்

10 pt. 25 lbs.

தொழில் செய்கிறவன் கோணுதிருக்கும் வரையில் உலகம்
கெடாது:-ஆகையால் தலைவன் நாள்தோறும் அவனுடைய
நிலைமையை ஆராயவேண்டும். ஒருவன் ஒரு தொழிலைச்
செய்வதற்கு உரியவனாக இருப்பதை ஆராய்ந்த பிறகு
அவனை அத்தொழிலுக்கு உரியவனாகும்படி உயர்த்தவேண்

Patent Regd. No. 73155

இந்திய பேடன்ட் அண்டு டிஸைன்ஸ் சட்டப்படி பேடன்ட் ரிஜிஸ்டர் செய்பர்கள் மூலம் பாதுகாக்கப் பெற்றிருக்கிறது.

பாரதி போல்டும், பாரதி போல்டு கண்டன்ஸ்ஸும் 14-பாயின்டிலும் கிடைக்கும்.

## தி மதராஸ் டைப் பவுண்டரி ⁂ மதராஸ்–1

# தி பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு லி-ட்.,

(இந்தியாவில் இணைக்கப்பட்டது)

**நெ. 3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, மதராஸ் - 5**

தந்தி விலாசம்: "EVERMANS"

*

அனேக சந்தாதாரர்களை மெம்பர்களாகக் கொண்ட இந்த சிட் பண்டு வெகு காலமாக நல்ல முறையில் நடத்தப்பட்டு வருகின்றது. பொது மக்கள் இந்தச் சிட்டில் உடனடியாக மெம்பர்களாகச் சேர்ந்து மிக்க ஆர்வத்துடன் தங்களால் எவ்வளவு அதிகமான பணத்தை மீதப்படுத்தி வைக்க முடியுமோ அவ்வளவு தொகையையும் சேமித்து வைத்துப் பயனடையு மாறு கோரப்படுகிறார்கள். தற்சமயம் கீழே குறிப் பிட்டுள்ளபடி தொகைகளுக்கு மாதா மாதம் பண்டு சீட்டுக்களை நடத்தி வருகின்றது.

*

## தொகை விபரம்

| மாதச் சந்தா | மொத்த மாதங்கள் | தொகை கூடுதல் |
|---|---|---|
| ரூ. 200 | 25 மாதங்கள் | ரூ. 5000 |
| ரூ. 100 | ,, | ரூ. 2500 |
| ரூ. 50 | ,, | ரூ. 1250 |
| ரூ. 25 | ,, | ரூ. 625 |
| ரூ. 20 | ,, | ரூ. 500 |
| ரூ. 15 | ,, | ரூ. 375 |

மேற்கண்ட தொகை விபரங்களில் எந்த முறை உங்களுக்குச் சௌகரியமோ அதையே நீங்கள் தேர்ந்து எடுத்துக் கொண்டு பயனடையலாம்.

*

(போர்டாரின் உத்தரவுபடி)

**எம். வி. சுப்ரமணியம்,**

மானேஜிங் டைரக்டர்.

# ஹோட்டல் எவரஸ்ட்

1 & 2, பூந்தமல்லி ஹைரோடு

மதராஸ் - 3

போன். 2894 தந்தி: EVEREST

*

- மதராஸ் சென்ட்ரல், எழும்பூர் ரயில்வே ஸ்டேஷன்களுக் கிடையில் சம தூரத்தில் இருக்கிறது.
- பஸ், டிராம், எலக்ட்ரிக் ரயில் போக்குவரத்து மார்க்கத்தில் உள்ளது.
- நல்ல காற்றோட்டம் உள்ள 130 விசாலமான அறைகள் கொண்டது.
- தங்குவோர்களுக்கு சகலவித வசதிகளையும் சலிக்காமல் செய்து கொடுக்கிறது.

*

பிராஞ்சுகள்:

## ஹோட்டல் டி' மதராஸ்
## ஹோட்டல் க்ரீன்ஸ்

*

புரொப்ரைட்டர்:

S. K. சுந்தரம்

---

குணமும் மணமும் நிறைந்த

# விஷ்ணு காபி

உபயோகியுங்கள்

○●○

சில்லரையாகவும் மொத்தமாகவும்
நியாயமான விலைக்குக் கிடைக்கும்

○●○

விபரங்களுக்கு:

## விஷ்ணு காபி ஒர்க்ஸ்

638, ரங்கே கவுடர் வீதி, கோயமுத்தூர்

*Prop:* C. S. வெங்கடரமணன்

---

அனைவருக்கும் எமது தீபாவளி வாழ்த்துக்கள்

★

கும்பகோணம்

# ராணி ரெங்கய்யர் ஸன்ஸ்

விசாலம் என்றாலே நம்பிக்கையான உயர்ந்த ரக

## பட்டுச் சேலை உற்பத்தியாளர்கள்

என்பது ஜகப் பிரசித்தம்!

●

தீபாவளி போன்ற விசேஷ காலங்களுக்கும் அன்றாட தேவைகளுக்கும் வேண்டிய நூதன பட்டு & நூல் சேலைகள், வேஷ்டிகள், துப்பட்டாக்கள் எங்களிடம் எப்பொழுதும் நிறைய வகைகளாகக் கிடைக்கும். இன்றே வாருங்கள்.

★

பிரிட்டிஷ் பொருட்காட்சியில் சர்டிபிகேட் பெற்ற

## RANI RENGAIYER SONS

*High Class Handloom Silk Cloth Manufacturers*

கெருடலாயத் தெரு, கும்பகோணம்

பிராஞ்சு: 20, லக்ஷ்மிபுரம் 2-வது தெரு, மதுரை

# பாடும் கற்கள்

வை. மு. நரசிம்மன், B.A., B.E., A.M.I.E.



மாக்கல் நாதசுரங்கள்

மனிதருக்கு இயற்கையாக அமைந்துள்ள சாரீரம் எத்தகைய இசைக் கருவிக்கும் மேம்பட்டது. எனினும், மனித சாரீரத்தை ஒத்திருக்கும் செயற்கை வாத்தியங்களும் இருக்கத்தான் செய்கின்றன. சங்கீதப் பிரியர்கள் தொன்று தொட்டுத் தங்களுடைய புத்தியினாலும் யுக்தியினாலும் மனித சாரீரத்தைப் பின்பற்றக் கூடிய இசைக் கருவிகளைக் கண்டு பிடிப்பதிலும், புதிதாகக் கண்டவற்றைச் செவ்வனே சீர்திருத்தி அமைப்பதிலும் மிக்க கவனம் செலுத்தி வந்துள்ளனர். இதன் பலனாக இன்று நாம் பற்பல அற்புதமான இசைக் கருவிகளைக் காண்கிறோம், கேட்கிறோம்.

நமது பண்டைக் காவியங்களிலும் பலவகை இசைக் கருவிகளைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன. சிற்பங்களிலும் அவற்றை நாம் பார்க்கிறோம்.

விஜயநகர மன்னர்கள் கற்களிலிருந்து என்றும் அழியாமல் இருக்கும் இசைக் கருவிகளைத் தயாரிக்க ஆர்வம் கொண்டார்கள். அவர்களுடைய அரிய முயற்சியால் அந்த எண்ணம் கைகூடியது. அவ்விதம் தங்கள் கனவு நனவானதைக் குறித்து அவர்கள் பெரிதும் மகிழ்ச்சி யடைந்தனர். அந்த அற்புதச் சிருஷ்டிகள் இன்று நம்மை யெல்லாம் ஆச்சரியத்தில் மூழ்கும்படி செய்கின்றன. உதாரணமாக மாக் கல்லால் செய்யப்பட்ட நாதசுர வாத்தியங்கள், இனிய நாதம் பாடும் கருங்கல் படிக்கட்டுகள், ஜலதரங்கம் போல் ஒலிக்கும் கருங்கல், கருங்கல்லில் செதுக்கப்பட்ட பியானோ வாத்தியக் கம்பங்கள் இவைகளைப் பார்ப்போர் பரவசம் அடையாமல் இருக்க முடியுமா?

மாக்கல்லினால் செய்யப்பட்ட இந்த மூன்று நாதசுர வாத்தியங்களில், இரண்டு நீளமாகவும் ஒன்று குட்டையாகவும் இருக்கின்றன அல்லவா?

அந்த இரண்டு பெரிய நாதசுர வாத்தியங்கள் கும்பகோணத்தில் உள்ள ஆதி கும்பேசுவரர் கோவிலில் இன்றைக்கும் இருக்கின்றன.



பியானோ கருங்கல் கம்பங்கள்

மற்றொன்று, ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு மிக முக்கிய ஸ்தலமான ஆழ்வார் திருநகரியில் ஆதி நாதப்பிரான் கோவிலில் இன்றும் உபயோகத்தில் இருந்து வருகிறது.

கும்பகோணத்தில் உள்ள நாதசுர வாத்தியங்களின் சிறப்பை வர்ணிக்க முடியாது. அவ்விரண்டும் ஒருவிதமான வெண்மைக் கோடுகள் படர்ந்த மாக் கல்லிலிருந்து குடைந்து செய்யப்பட்டுள்ளன. ஒரே அங்குல கனமான மேல் துவாரமும், ஆரம்பத்தில் ஓர் அங்குலமும், முடிவில் அரை அங்குலமும் கொண்டு நேரே நெடுக ஓடும் துவாரத்தை உடையனவாயும் இருக்கின்றன. அதற்கு ஏழு அங்குலப் பித்தளை வாய்த் திறப்பும் இருக்கிறது. அதன் நீளம் இருபத்திரண்டு அங்குலம். மற்றும், அவை மூன்று துண்டுகளை வெகு அற்புதமான பித்தளைத் தகடுகளால் செய்யப்பட்ட வளையங்களால் இணைத்துச் சேர்க்கப்பட்டுள்ளன.

சாதாரண நாதசுர வாத்தியங்களில் காண்பது போன்ற பல துவாரங்கள் அவைகளிலும் இருக்கின்றன. அந்த இரண்டில் ஒன்று யாருடைய அஜாக்கிரதையினாலோ உடைந்து விட்டது. மற்றொன்று நல்ல நிலையில் இருக்கின்றது. அதை இன்றைக்கும் வாசிக்கலாம். ஆதலால், இந்தக் கல் நாதசுர வாத்தியங்கள் அந்தக் கோவிலின் உபயோகத்திற்கென்றே செய்யப்பட்டிருத்தல் வேண்டும்.

ஆழ்வார் திருநகரியில் உள்ள வாத்தியம் கும்பகோணத்தில் உள்ள வாத்தியங்களைக் காட்டிலும் மிகச் சிறந்தது. அது கரிய, ஒரே மாக்கல் துண்டிலிருந்து செய்யப்பட்டிருக்கிறது. அது எட்டு அங்குல நீள முடையதாக இருக்கிறது. அந்த நாதசுர வாத்தியத்திலும் அரை அங்குலத்திலிருந்து முக்கால் அங்குலம் வரையில் நெடுகச் செல்லும் துவாரம் காணப்படுகிறது.

அந்த வாத்தியத்தை “முக வீணை” என்று அங்குள்ளோர் குறிப்பிடுகின்றனர். நாயக மன்னர் ஒருவரால் அந்த முக வீணை அளிக்கப்பட்டதாயும், கோவிலில் நடந்து வந்த பரத நாட்டியங்களில் அதை உபயோகித்து வந்ததாயும் நாம் கேள்விப்படுகிறோம். இன்றைக்கும் அங்கு அது உபயோகத்தில் இருந்து வருகிறது.

° ° °

கும்பகோணத்திற்கு அருகிலுள்ள தாராசுரத்திலே சோழர் கோவில் ஒரு காலத்தில் மிகப் பிரபலமாக விளங்கியது. ஆனால்

இப்போது அது பாழடைந்து வருகிறது. அந்தக் கோவிலில் தான் "பாடும் படிக்கட்டுகள்" இருக்கின்றன. அது, நான்கு படிக்கட்டுகளைக் கொண்டு இரண்டு பக்கத்தும் கைப்பிடிகளுடன் கேட்பாரற்று மிக்க பரிதாபமான நிலையில் இருக்கிறது. ஒரு சிறிய கருங்கல் உடைசலைக் கொண்டு அதன் பல பாகங்களையும் மெதுவாகத் தட்டினால், தட்டப்பட்ட ஒவ்வொரு பாகத்திலிருந்தும் ஒவ்வொரு விதமான ஸ்வரம் எழுகின்றது. ரசிகர்கள் பல மணி நேரம் அந்தப் படிக்கட்டுகளைத் தட்டி, அதிலிருந்து எழும் இசையைக் கேட்டு ஆனந்திக்க முடியும்.

* * *

திருநெல்வேலி ஸ்ரீ ஸ்வாமி நெல்லையப்பர் கோவில் மணி மண்டபத்தின் முன் கால் வரிசையிலுள்ள ஒரு கல், பியானோவைப் போல் நாதத்தைக் கொடுக்கிறது. திருவாங்கூர் சமஸ்தானத்திலுள்ள சுசீந்திரம் கோவிலில் இருக்கும் கல்லும் அவ்விதமே அற்புத நாதத்தை எழுப்புகிறது. மதுரை ஸ்ரீ மீனாட்சியம்மன் கோவில் பிராகாரத்தில் இருக்கும் பாடும் கம்பத்தின் படத்தையும் இங்கு காணலாம்.

இன்னும், ஆழ்வார் திருநகரிக் கோவில் வசந்த மண்டபத்தில் இரண்டு பியானோக் கம்பங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. அவைகள், நெல்லையப்பர் கோவில் தூணைப் போல அவ்வளவு கம்பீரமாகத் தென்படாவிட்டாலும், சிற்பச் சிறப்பில் மேலானதாக இருக்கின்றன.

நெல்லையப்பர் கோவிலிலேயே, அம்பாள் சந்நிதிக்கு முன் இரண்டு பியானோக் கம்பங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. அவைகளும் மிக நுட்பமான வேலைப்பாட்டுடனும் இனிய நாதத்தை உடையனவாகவும் இருக்கின்றன.

விஜயநகர மன்னரது தலைநகரமாகத் திகழ்ந்த ஹம்பியில் பம்பாபதி ஸ்வாமி ஆலயத்தின் பிராகாரங்களில் வரிசையாக அநேக பியானோக் கம்பங்கள் இருக்கின்றன. அதனால், விஜய மன்னர்கள் காலத்தில், ஸ்வாமி அந்தப் பிராகாரத்தின் வழியே எழுந்தருளும் சமயங்களில் அந்தக் கல் பியானோக்களை வாசித்து வந்திருக்கலாம் என்று ஊகிக்கவேண்டியிருக்கிறது. மேலே குறிப்பிடப்பட்ட பியானோக்களைப் பற்றி நன்கு தெரிந்துகொள்ள வேண்டுமாயின், வரைந்து காட்டியிருக்கும் பியானோக்களைப் பற்றித் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். அந்தத் தூணின் கீழ்ப் பாகமும், மேல் பாகமும், நடுப் பாகமும் ஒரே கல்லிலிருந்து செய்யப்பட்டவை. எனினும், நடுப் பாகம் பல சிறிய தூண்களாக அமைக்கப்பட்டிருக்கிறது. நடுவில் ஒரு பெரிய தூணும், அதைச் சுற்றி நாற்பத்தெட்டு சிறிய தூண்களும் இருக்கின்றன. சிறிய தூண்கள் மூன்று அங்குலக் கனத்திலும், வட்டம், கோணம், சதுரம், எட்டுப் பட்டை, வளைவு முதலிய பற்பல வடிவங்களிலும் இருக்கின்றன. அந்தப் பெரிய தூணின் அடிப் பாகம் ஐந்தடி சதுரம் உள்ளது. உயரம் எட்டு அடி இருக்கிறது. பக்கத்தில் உள்ள ஒரு தூணை மெதுவாகத் தட்டினால், அது ஒலிப்பதோடு, நடுவிலுள்ள தாய்க் கம்பத்திலும் பிரதித் தொனி உண்டாகச் செய்கிறது. ஆழ்வார் திருநகரி பியானோவில், கீழ் மட்டத்தில் இரண்டு அங்குல வெட்டு ஒன்று நேரே ஓடி, ஒவ்வொரு கம்பத்தையும் தொடுகிறது. அவ் வெட்டு ஒரே மட்டத்தில் செல்லவில்லை. பிரதித் தொனி ஏற்படவே, அந்த வெட்டை அமைத்துள்ளனர் போலும்.



பாடும் படிக்கட்டுத் தூண்கள்


ஜலதரங்க ஸ்தம்பங்கள்

கல்லிலிருந்து செய்விக்கப்பட்ட அந்த இசைக் கருவிகள் காலத்தினாலும், தட்ப வெப்பங்களின் மாறுபாடுகளினாலும் ஏற்படும் அழிவுகளை எதிர்த்து நின்று, பண்டைக் காலத்தில் நன்கு வரையறுக்கப்பட்ட இசையின் நுட்பங்களை இன்றும் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. ஆதலால், இசை வல்லாரும், இசையில் ஆர்வ முள்ளவர்களும் மேலே குறித்த இசைக் கருவிகளை நன்கு ஆராய்ந்து, அவைகளை மீண்டும் பழக்கத்திற்குக் கொண்டு வர வேண்டும். அப்போதுதான் அந்த இன்னிசை விருந்தளிக்கும் கற்களின் இனையற்ற அற்புதத்தை எல்லோரும் கண்டு களிக்க முடியும்.

# பூமலை மாயாவி

ஜெயமணி



இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஸ்மித்தின் கோபம் காரணமாகப் போலீஸ் இலாகா முழுவதும் கிடுகிடுத்தது.

அவருடைய கோபம் இறுதியில் யாருடைய தலையில் வந்து விடியுமோ என்று உயர்தர போலீஸ் அதிகாரிகளிலிருந்து சாதாரண கான்ஸ்டேபிள்கள் வரையில் எல்லோரும் வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டிருந்தனர்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் பர்வத் சிங் மாயமாக மறைந்து விட்டதே இன்ஸ்பெக்டர் ஜெனரலின் கோபத்துக்குக் காரணம்.

பர்வத் சிங் சாமான்யமானவர் அல்ல. போலீஸ் இலாகாவுக்கே உதாரண மனிதராகவும் புத்தி, தந்திரம், வீரம், ஒழுக்கம் முதலிய குணாதிசயங்கள் வாய்ந்தவராகவும் விளங்கினார். போலீஸ் இலாகாவின் 'ஒளி வீசும் நட்சத்திரம்' என்றுகூட அவரைச் சிலர் வர்ணிப்பது உண்டு!

அப்படிப்பட்டவர் மறைந்து விட்டார் என்றால் போலீஸ் இலாகா தலைவருக்குக் கோபமும் ஆத்திரமும் வராமல் என்ன செய்யும்?

பர்வத் சிங் அனுப்பியிருந்த கடிதத்தைத் தினசரி ஒரு தடவையாவது ஸ்மித் வாசிக்கத் தவறுவதில்லை. ஒவ்வொரு தடவையும் அந்தக் கடிதத்தை வாசித்ததும் ஸ்மித்தின் கோபம் உச்ச நிலையை அடையும்.

பர்வத் சிங் தம்முடைய உத்தரவை லட்சியம் செய்யாமல் கொள்ளைத் தலைவனான பூமலை மாயாவியைப் பிடிப்பதற்காகச் சென்றதைக் குறித்து ஸ்மித்துக்கு அவ்வளவாகக் கோபம் உண்டாகவில்லை. பூமலை மாயாவியைப் பிடிப்பதற்காகச் சென்ற ஒரு போலீஸ் அதிகாரியாவது, கோஷ்டியாவது இது வரையில் உயிருடன் திரும்பி வந்ததில்லை. அப்படியிருக்க இளைஞரான பர்வத் சிங் தற்கொலை செய்து கொள்வதற்கொப்ப பூமலை மாயாவியைப் பிடிக்கச் சென்றதன் மூலம், போலீஸ் இலாகா இணையற்ற ஒரு சிறந்த அதிகாரியை இழந்து விட்டதைக் குறித்தே ஸ்மித் அதிகமாக வருந்தினார்.

"இளம் வயதில் என் அருமைத் தந்தையைக் கொன்ற படுபாவிகளான பூமலை மாயாவியையும் அவனது கொள்ளைக் கூட்டத்தையும் கண்டு பிடிக்காமல் நான் உயிருடன் திரும்பப் போவதில்லை."— இதுதான் ஸ்மித்துக்குப் பர்வத் சிங் அனுப்பியிருந்த கடிதத்தின் சாரம்.

* * *

மலாய் நாட்டில் உள்ள கோலாலம்பூர் நகரில் பூமலை என்று ஒரு இடம் இருக்கிறது. அங்கு இயற்கையும் செயற்கையும் போட்டி போட்டுக் கொண்டு தங்கள் திறமையின் எல்லையைக் காட்டியிருக்கின்றன! இயற்கை அந்த இடத்தில் தன்



எழில் அள்ளி வீசியிருக்கிறது. செயற்கையோ அங்கு அற்புதமான தன் சாகஸத்தைப் பரிபூரண மாக வெளியிட்டிருக்கிறது.

அத்தகைய வனப்பு வாய்ந்த பிரதேசத்தில் ஒரு லதாமண்டபம் இருக்கிறது. அந்த லதா மண்டபத்துக்குள் ஒரு பூமண்டபம் இருக்கிறது. அங்கு வேறு எந்த இடத்திலும் காணக் கிடைக்காத அபூர்வ புஷ்பச் செடிகள் வைக்கப்பட்டிருக்கின்றன. தூரப் பார்வைக்கு ஆயிரம் புஷ்பங்கள்போல் தோன்றும் ஒரே புஷ்பத்தை அங்கு காணலாம். இலையின்றிப் புஷ்பங்கள் மாத்திரம் கொடிகளாகப் படர்ந்திருக்கும் அற்புதக் காட்சியைப் பார்க்கலாம்.

அந்த மண்டபங்கள் காவலரால் இரவு பகலாகப் பாதுகாக்கப்பட்டிருந்தும் இரவில் அந்தப் புஷ்பங்களில் ஒன்றே ஒன்று கிள்ளப்பட்டுக் கீழே கிடக்கும். எவ்வளவோ பந்தோபஸ்தாக இருந்தும்கூட அவ்விதம் புஷ்பம் கிள்ளப் படுவதைப் போலீசாரால் தடுக்க முடியவில்லை.

பிரபல கொள்ளைத் தலைவன்தான் அந்த அடையாளத்தின் மூலம் தினந்தோறும் போலீசாருக்குச் சவால் விடுப்பதாக எல்லோரும் சொன்னார்கள். அதிலிருந்தே மேற்படி தலைவனுக்குப் பூமலை மாயாவி என்ற பெயர் வழங்கலாயிற்று!

* * *

கொள்ளைக் கூட்டத்தில் மாறு வேடம் பூண்டு சேர்ந்து கொண்ட பர்வத் சிங்கை அவர் அவ்விதம் கலந்து கொண்ட ஒரே வாரத்துக்குள் எமகாதகர்களான கொள்ளைக்காரர்கள் கண்டு பிடித்து விட்டார்கள். அவர்கள் அவ்வாறு கண்டு பிடித்தது இது முதல் தடவையல்ல. இதற்கு முன் வெகு சாமர்த்தியமாக மாறுவேடம் பூண்டு சென்ற போலீஸ் ஒற்றர் ஒருவர் கூடத் திரும்பி வந்ததில்லை.

மேற்படி கொள்ளைக் கூட்டத்தில் உண்மையிலேயே சேர வேண்டும் என்ற நோக்கத்துடன் வருவோரைக் கொள்ளைக்காரர்கள் ஒன்றும் செய்வதில்லை. உண்மையான சகாவா அல்லவா என்பதைத் தெரிந்து கொள்வதற்காக அவர்கள் ஒரு பரீட்சை வைத்திருக்கிறார்கள். போலீஸ் ஒற்றர்களில் ஒருவர் கூட அந்தப் பரீட்சையில் தேறியதில்லை!

எனவே வெகு தந்திரமாக மாறு வேடம் பூண்டிருந்த பர்வத் சிங்கையும், கொள்ளைக்காரர்கள் கண்டு பிடித்ததில் ஆச்சரியம் இல்லை. ஆனால் அதன் பிறகுதான் அதுவரையில் நடந்திராத, யாரும் நம்ப முடியாத ஆச்சரிய சம்பவம் நிகழ்ந்தது.

கண்டு பிடிக்கப்பட்ட ஒற்றரை, தலைவனான பூமலை மாயாவியின் முன்னிலையில் வழக்கம் போல் கொண்டு வந்து நிறுத்தினார்கள். பர்வத் சிங் கழுத்தில் இருந்த சங்கிலியில் ஒரு பதக்கம் இருந்ததையும், அந்தப் பதக்கத்தில் ஒரு பெண்ணின் புகைப்படம் இருந்ததையும் கண்ணுற்ற மாயாவி, நிமி[illegible]டன் அந்தச் சங்கிலியை அறுத்து, "இவள் ரொம்பவும் அழகாக இருக்கிறாளே! யார் இவள்? உன் காதலியா?" என்றான் ஏளனமாக.

அவ்வளவுதான்! மாயாவியின் கன்னத்தில் பளீரென்று ஓங்கி ஓர் அறை விழுந்தது!

"அவள் என் அருமைத் தாயார்" என்று பர்வத் சிங் கூறியதன்

மூலம், தான் அறைந்ததற்குக் காரணத்தைச் சுருக்கமாக விளக்கினான். அதே சமயம் பக்கத்திலிருந்த சில கொள்ளைக்காரர்களின் உறைகளிலிருந்து பட்டாக் கத்திகள் வெளியே சீறிக்கொண்டு வந்தன. சிலர் கைத் துப்பாக்கிகளை எடுத்துத் தலைவனின் உத்தரவை எதிர்பார்த்தார்கள்.

"இவனுடன் நான் கணக்கைத் தீர்த்துக் கொள்கிறேன். இவனைத் தனி மறைவில் கொண்டு போய் அடையுங்கள்" என்று உத்தர விட்டான் பூமலை மாயாவி.

அதைக் கேட்ட கொள்ளைக்காரர்கள் ஏக காலத்தில் ஆச்சரியமும் ஏமாற்றமும் அடைந்தனர். பூமலை மாயாவிக்கு விரோதமாகச் சதி செய்வோர் எந்த நிலையில் இருந்தாலும் எந்த மூலையில் இருந்தாலும் அவர்கள் உடனே உயிரை இழப்பது திண்ணம். அப்படியிருக்க தங்களுடைய தலைவனை நேருக்கு நேராகக் கன்னத்தில் அடித்தவனை உடனே சுட்டுக் கொல்ல அனுமதிக்காமல், தலைவன் வேறு விதமாக உத்தர விட்டது அவர்களுக்கு ஆத்திரமாகவும் அதிசயமாகவும் இருந்தது.

* * *

தனியறையில் அடைபட்ட பர்வத் சிங்கின் மனத்தில் பல்வேறு சிந்தனைகள் எழுந்தன. தன் தந்தையைப் போல் தானும் கொள்ளைக்காரர்களின் கையால் இறக்க வேண்டும் என்பது விதியின் சதி போலும் என்று எண்ணினான். இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஸ்மித்தின் உத்தரவை மீறி வந்ததைக் குறித்து மிகவும் வருந்தினான். இளமையிலேயே ஆதரவற்றுக்கு ஆளான தன் தாயாரையும் மனைவியையும் குழந்தையையும் நினைத்தபோது அவன் கண்களில் நீர் ததும்பியது. பர்வத் சிங் மிகுந்த தைரியசாலியாயினும் தன் தந்தையைப் பலி கொண்ட கொள்ளைக்காரர்கள் மீது வஞ்சம் தீர்க்காமல் மரணம் அடைவதைத் தன் வாழ்க்கையிலேயே பெருந் தோல்வியாகக் கருதினான்.

ஆஹா! அந்தக் கொள்ளைத் தலைவன் முகத்தில்தான் என்ன காம்பீரியம்? எனினும் அவன் தன் பலத்தையும் துணிச்சலையும் நாகரிகத்துக்கும் மனித வர்க்கத்தின் நலனுக்கும் கேடான வழியில் உபயோகித்து வருவதைக் கண்டு அவன் மீது பர்வத் சிங்கிற்கு ஒரு புறத்தில் ஆத்திரமும் மற்றொருபுறம் அனுதாபமும் ஏற்பட்டன. அத்தனை கொள்ளைக்காரர்களுக்கு மத்தியில் கன்னத்தில் அறைந்தும் கூட கொள்ளைத் தலைவன் கோப வெறி கொண்டு பொறுமையை இழக்காமலும், தன் உணர்ச்சியை வெளிக் காட்டிக் கொள்ளாமலும் இருந்ததை நினைக்க நினைக்க பர்வத் சிங்கிற்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது.

தன்னை ஏன் அறையில் அடைத்திருக்கிறார்கள்? தன்னுடைய முடிவு என்ன?—இதையெல்லாம் பற்றி பர்வத் சிங் தீவிரமாக ஆலோசிக்கலானான்.

இந்தச் சமயத்தில் அவனுடைய அறைக் கதவு திறந்தது. சகாக்கள் சூழக் கொள்ளைத் தலைவன் மீசையை முறுக்கிக் கொண்டு உள்ளே நுழைந்தான்.

அறைக்குள் வந்ததும் தலைவன் ஏதோ சைகை காட்டவே, மற்றவர்கள் கதவை இழுத்துச் சாத்திக் கொண்டு வெளியே சென்றார்கள்.

பர்வத் சிங்கும் கொள்ளைத் தலைவனும் சில விநாடி நேரம் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டு மௌனமாக நின்றார்கள்.

கடைசியாகக் கொள்ளைத் தலைவன்தான் பேச ஆரம்பித்தான்.

"நீ போலீஸ் ஒற்றன்தானே? உண்மையைச் சொல்லி விடு" என்றான் மாயாவி.

"உயிருக்குப் பயந்து உண்மையை ஒளிக்கும் பேடி நான் அல்ல. ஆம்! நான் உங்கள் கூட்டத்தின் உதிரத்தைக் குடிக்கக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் போலீஸ் இலாகாவைச் சேர்ந்தவன்தான்" என்று கொள்ளைத் தலைவனின் மற்றொரு கன்னத்தில் அறைவது போலப் படபடப்பாகப் பதிலளித்தான் பர்வத் சிங்.

"உன் தகப்பனார் பெயர் என்ன?" என்று கேட்டான் கொள்ளைத் தலைவன். இந்தக் கேள்வி பர்வத் சிங்கிற்குக் கோபாவேசத்தை உண்டாக்கியது.

"நீ கைதிக் கூண்டில் நிற்கும்போது கோர்ட்டார் கேட்க வேண்டிய கேள்வியை இப்போது நீ எனக்குப் போடுகிறாய்,பேஷ்!" என்றான் பர்வத் சிங்.

"இந்த இடத்தில் நீதான் கைதி; நான் தான் நீதிபதி" என்றான் தலைவன்.

அவன் முகத்தில் ஒரு விதப் புன் முறுவல் தவழ்ந்தது.

'இவன் ஏன் இப்படி நம் வாயைக் கிண்டுகிறான்? இவன்



நோக்கம் என்ன?' என்று பர்வத் சிங் யோசித்துக் கொண்டிருக்கையில், "உன் தந்தையின் பெயர் கர்த்தார் சிங் அல்லவா?" என்று கேட்டான் கொள்ளைத் தலைவன்.

இந்தக் கேள்வி பர்வத் சிங்கைத் தூக்கிவாரிப் போட்டது. 'இந்தப் பாழும் மனிதனுக்கு எல்லாம் தெரிந்திருக்கிறதே!' என்றது அவன் மனம். தன் தந்தையின் உயிரை வாங்கிய கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவன் கேட்ட அந்தக் கேள்வி பர்வத் சிங்கின் மனத்தில் பலவித உணர்ச்சிகளைத் தூண்டியது. அவன் மௌனமாக இருந்தான்.

கொள்ளைத் தலைவன் முகத்தில் இதுகாறும் தென்பட்ட புன்னகை இப்போது மறைந்தது.

"நீ உண்மையில் கர்த்தார் சிங்கின் மகனாக இருந்தால் நான் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லு" என்றான்.

கொள்ளைத் தலைவனின் தொனி ஏக காலத்தில் அதிகார தோரணையிலும் கலந்து கேட்பதுபோலவும் இருந்தது.

"நீ எதற்காக இங்கு வந்தாய்?" என்று மற்றொரு கேள்வியைப் போட்டான் கொள்ளைத் தலைவன்.

இந்த மாயாவியின் கேள்விகளுக்குப் பதில் சொல்லத் தயங்குவது அர்த்தமற்ற விஷயம் என்று பர்வத் சிங்கிற்குத் தோன்றியது. அவன்தான் எல்லா விவரங்களையும் அறிந்தவனாக இருக்கிறானே!

"என் தந்தையைக் கொன்ற உங்கள் கூட்டத்தின் மீது வஞ்சம் தீர்க்கவே வந்தேன்" என்றான்.

"வஞ்சம் தீர்த்தாகி விட்டதா?"

"நான் வஞ்சம் தீர்க்க முடியாவிட்டால் என்றைக்காவது என் சந்ததிகள் வஞ்சம் தீர்க்கும் என்பது உறுதி."

"உன் தந்தையை யாரும் கொல்லவில்லை. அவன் தன்னைத் தானே கொலை செய்து கொண்டான் என்பது உனக்குத் தெரியுமா?"

கொள்ளைத் தலைவன் இவ்விதம் கூறியதைக் கேட்டுச் சற்றுத் திகைத்த பர்வத் சிங் தன்னைச் சமாளித்துக் கொண்டு, "ஆமாம், நீங்கள் இருக்கும் இடத்துக்கு வருவதே தற்கொலை செய்து கொள்வது போலத்தான்" என்றான்.

இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஸ்மித் அவ்விதம் பல தடவை கூறியது அவனுக்கு அப்போது ஞாபகத்துக்கு வந்தது.

இதற்குள் அறைக்கு வெளியே ஏதோ சலசலப்பு ஏற்பட்டது. இதற்கு முன் உரக்க அதிகார தோரணையில் பேசிக் கொண்டிருந்த கொள்ளைத் தலைவனின் நிலையில் திடீரென்று ஒரு மாறுதல் ஏற்பட்டது. அவன் குரலைத் தணித்துக் கொண்டு பர்வத் சிங்கை நெருங்கினான்.

"உன் உயிருக்கு ஆபத்து நெருங்கி விட்டது. இன்னும் இருபத்திநாலு மணி நேரத்தில் இங்கிருந்து நீ ஓடி விட வேண்டும். என் உதவியின்றி நீ இங்கிருந்து தப்புவது முடியாத காரியம். அதற்குச் சம்மதமா என்பதை இன்னும் இரண்டு மணி நேரத்தில் எனக்கு நீ அறிவித்து விட வேண்டும். இந்த அறைக்கு வெளியேயுள்ள காவற்காரனிடம் 'எனக்கு உணவு வேண்டும்' என்று நீ சொல்லி அனுப்பினால், உனக்குச் சம்மதம் என்பதைத் தெரிந்து கொள்வேன்" என்று சொல்லிவிட்டுக் கொள்ளைத் தலைவன், பர்வத் சிங்கின் பதிலை எதிர்பார்க்காமலேயே விர்ரென்று கதவைத் திறந்து கொண்டு வெளியே சென்று விட்டான்.

அதே சமயம் வெளியில் நின்று கொண்டிருந்த இரண்டு கொள்ளைக் காரர்கள் பரஸ்பரம் ஏதோ சமிக்ஞை செய்து கொண்டதைத் தலைவன் கவனித்ததாகத் தெரியவில்லை.

* * *

மரணத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்த பர்வத் சிங்கின் மனத்தில் கொள்ளைத் தலைவன் கூறிய விஷயம் பெரும் புரட்சியை உண்டாக்கியது. ஒரு வேளை போலீஸ் இலாகாவுக்குத் தன் பேரில் சிரத்தையான அவநம்பிக்கை ஏற்படுவதற்காகக் கொள்ளைக்காரர்கள் அவ்விதம் சூழ்ச்சி செய்ய முற்பட்டிருக்கலாம் என்று அவனுக்குத் தோன்றியது. தன் கையில் நிச்சயமாகச் சிக்கிக் கொண்ட எலியுடன் பூனை சிறிது நேரம் விளையாடிப் பார்ப்பது போலவே தன்னுடன் கொள்ளைக் காரர்கள் விளையாடுகிறார்கள் என்றும் அவன் எண்ணினான்.

எனவே தலைவன் சொன்னபடி அவன் தன் சம்மதத்தைத் தெரிவிக்கவில்லை. தான் தப்புவதற்குக் கொள்ளைத் தலைவன் உதவி புரிவதாவது! இது ஏதோ ஒரு சூழ்ச்சியாக அவனுக்குத் தோன்றியது. எனவே உயிரைத் தியாகம் செய்வதேயன்றி, அவர்களிடம் அடிபணிவதில்லை என்று உறுதி கொண்டான்.

அதே சமயத்தில் கொள்ளைத் தலைவனின் மனத்திலும் பெரும் புரட்சி ஏற்பட்டிருப்பதை அவனுடைய நெருங்கிய சகாக்கள் அறிந்து கொள்ளாமலிருக்கவில்லை. தங்கள் எல்லோருடைய உயிர்களுக்கும் உலை வைப்பதையே நோக்கமாகக் கொண்ட ஒற்றன் கணக்கைத் தீர்க்கத் தங்களுடைய தலைவன் வழக்கத்துக்கு விரோதமாகக் கால தாமதம் செய்தது அவர்களுக்குப் பிடிக்கவே இல்லை.

நேரம் ஓடிக் கொண்டிருந்தது. பர்வத் சிங்கிற்குத் தலைவன் கூறிய கெடு நெருங்கிக் கொண்டிருந்தது. பர்வத் சிங் உயிருக்குப் பயந்து ஓட விரும்பாததைக் குறித்துத் தலைவன் மிகவும் ஆச்சரியம் அடைந்தான்.

* * *

அன்றிரவு கொள்ளைக்காரர் முகாமில் ஒவ்வொருவருடைய மனத்திலும் ஒவ்வொரு விதமான புயல் அடித்துக்கொண்டிருந்தது.

பர்வத் சிங் தான் இந்த உலகத்தைவிட்டுச் செல்லும் நேரம் நெருங்கிக் கொண்டிருக்கிறது என்று மனம் கலங்கினான். தன் தாயையும் மனைவியையும் குழந்தையையும் நினைத்து மனம் உருகினான். கொள்ளைக் காரர்களோ தனி அறையில் அடைக்கப் பட்டுள்ள ஒற்றனைக் கொன்றாலன்றி தங்கள் மனத்துக்கு நிம்மதி ஏற்படாது என்று கருதினர். கொள்ளைத் தலைவனும் இரவு சரியாகத் தூங்கவில்லை. புரண்டு புரண்டு படுத்துக் கொண்டும், படுக்கையை விட்டு எழுந்து ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டும் நேரத்தைக் கழித்தான்.

அப்போது திடீரென்று இரண்டு மூன்று உருவங்கள் துப்பாக்கிகளுடன் மரங்களின் நிழலில் பதுங்கிச் செல்வதைப் பார்த்தான். அவர்களைக் கண்டதும் ஒரு விநாடி தலைவனின் முகத்தில் சந்தோஷத்தின் அறிகுறி தென்பட்டது. ஆனால் அடுத்த விநாடி அது மறைந்து விட்டது.

உடனே அவன் தன் கைத்துப்பாக்கியை எடுத்துக் கொண்டு அந்த மூவரையும் பின் தொடர்ந்தான்.

அந்த மூவரும் தன் சகாக்களே என்பதை அறிந்து கொள்ளைத் தலைவனுக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை. அவர்கள் எங்கே போகிறார்கள்? ஏன் அவ்விதம் பதுங்கிப் பதுங்கிச் செல்லுகிறார்கள்?

அந்த மூவரும் பர்வத் சிங்கின் அறைக்கு வெளியே நின்றபோது தான் அவர்களின் கொடிய நோக்கம் தலைவனுக்குச் சந்தேகத்துக்கு இடமின்றித் தெரிந்தது.

அவ்வளவுதான்! சில நிமிஷங்களில் அங்கு அடுக்கடுக்காகப் பல காரியங்கள் நிகழ்ந்து விட்டன.

மேற்படி மூவரும் திடீரென்று அறையின் கதவைத் திறந்து துப்பாக்கியை நீட்டியதுதான் தாமதம், அடுக்கடுக்காக மூவரும் கீழே சாய்ந்தார்கள். அவர்களைப் பின் தொடர்ந்து வந்த தலைவனின் துப்பாக்கி அவ்வளவு துரிதமாக வேலை செய்து விட்டது!

அறையிலிருந்த பர்வத் சிங் திடுக்கிட்டு வெளியே வந்தபோது வேறு எங்கிருந்தோ வந்த ஒரு தோட்டா தலைவன் மார்பில் பாய்ந்தது. எனினும் தன்னைக் கொல்ல

வந்த மூவரையும் கொன்று தன்னைக் காப்பாற்றியவன் மாயாவிதான் என்பதைப் பர்வத் சிங் அறிந்து கொண்டபோது அவன் அடைந்த ஆச்சரியத்துக்கு அளவேயில்லை.

அதே சமயம் போலீஸ் அதிகாரிகளின் தலைமையில் ஏராளமான போலீசார் வருவதைக் கண்டதும் பர்வத் சிங்கிற்குத் தான் காண்பது கனவு என்றே தோன்றியது.

துப்பாக்கி வேட்டுகளைக் கேட்டதும் தூக்கத்திலிருந்து எழுந்து திக்பிரமை கொண்டு சிதறி ஓடிய கொள்ளைக்காரர்கள் சகலரையும் விரட்டிச் சென்று இறந்தவர் போக மீதியுள்ளவர்களுக்குப் போலீசார் விலங்குகள் போட்டனர்.

பர்வத் சிங் இனந் தெரியாத உணர்ச்சி வசப்பட்டுக் கொள்ளைத் தலைவன் அருகில் சென்றபோது அவன் ஏதோ சைகை காட்டினான். அதை அறிந்த பர்வத் சிங் தலைவனின் சட்டைப் பையிலிருந்த தன் சங்கிலியையும் பதக்கத்தையும் எடுத்துக் கொண்டதுடன், அதிலிருந்த ஒரு கடிதத்தையும் எடுத்துக் கொண்டான்.

'பர்வத் சிங்', 'பர்வத் சிங்' என்று முனகிக் கொண்டே கொள்ளைத் தலைவனின் உயிர் பிரிந்தது!

* * *

**ய**மன் வாயிலிருந்து பர்வத் சிங் தப்பினான். புகழும் பெயரும் உயர்ந்த பதவியும் அவனை வந்து அடைந்தன. அவனது கீர்த்தியைக் கண்டு அவன் தாயாரும் மனைவியும் பரவசம் அடைந்தனர். எனினும் இவ்வளவு பெருமைகளைக் கண்டு மிகவும் குதூகலமாக இருக்க வேண்டிய பர்வத் சிங்கின் முகத்தில் சிரந்தரமான ஒரு சோக ரேகை படர்ந்திருந்ததன் காரணத்தை மாத்திரம் அவர்களால் அறிந்து கொள்ள முடியவில்லை.

அரிய பொக்கிஷத்தைப் போல இரகசியமாக வைத்துக் கொண்டிருந்த கொள்ளைத் தலைவனின் கடிதத்தைப் பர்வத் சிங் நூறாவது தடவையாக வாசித்தான்:

"என் அருமை பர்வத் சிங்,

உன்னை என் மகன் என்று சொல்லவும் பாவியான என் வாய் கூசுகிறது. கொள்ளைக்காரர்களைப் பிடிப்பதற்காகக் காளைப் பருவத்தில் இங்கு வந்த நான் எதிர்பாராதவிதமாகக் கொள்ளைத் தலைவனின் அன்புக்குப் பாத்திரமாகி அவனுக்கு வாரிசாகத் தலைமைப் பதவியையும் ஏற்றுக் கொண்டேன். இங்கு செல்வம், சுகம், போகம் எதற்கும் குறைவில்லை. இந்த உலகில் இவற்றைக் காட்டிலும் மனிதனுக்கு வேறு என்ன வேண்டும் என்று என் மனம் கூறியது. ஒரு வயதுக் குழந்தையாக இருந்த உன்னையும் உன் தாயாரையும் மறந்தேன். அன்று உன்னை என் முன் கொண்டு வந்து என் சகாக்கள் நிறுத்தியபோது, உன் சங்கிலியில் பதக்கம் இருந்தது அல்லவா? அதிலிருந்த படம் 'என் தாயாரின் படம்' என்று நீ கூறிய அதே க்ஷணத்தில் என் இருதயத்திலே ஈட்டியைப் பாய்ச்சுவது போலிருந்தது. ஏனெனில் நான் அந்தக் காலத்தில் உன் தாயாரிடம் விடை பெற்றுக் கொண்டு இங்கு வந்தபோது அவளது முகத்தில் எவ்வளவு சோகம் தென்பட்டதோ, அதே சோகத்தை மேற்படி படத்திலும் கண்டேன். என் இருதயம் விம்மி வெடித்து விடும் போலிருந்தது. அப்போது நீ என் கன்னத்தில் அறைந்தது என்னைக் கட்டித் தழுவி முத்தம் கொடுப்பது போலிருந்தது. உன்னை ஆலிங்கனம் செய்து கொள்ள என் கைகள் துடித்தன.

உன்னிடம் நான் விசித்திரமாக நடந்து கொண்டதை என் சகாக்களில் சிலர் கவனித்து என்னைக் கண்காணித்து வருகின்றனர். அவர்களிடமிருந்து உன்னைக் காப்பாற்ற முடியுமா என்று என் மனம் ஏங்கித் துடிக்கிறது. உன் கையெழுத்திட்டுப் போலீஸாருக்குக் கடிதம் எழுதியிருக்கிறேன். அவர்கள் உற்ற சமயத்தில் இங்கு வந்து உன்னைக் காப்பாற்றுவார்களா?

"எது எப்படியாயினும் இந்தக் கடிதம் உன் கையில் கிடைக்குமாயின் நான் அமைதியாக இறப்பேன். என் ஆன்மாவும் சாந்தியடையும். ஆனால் ஒரு கோரிக்கை. நான் கொள்ளைக்காரனாக மாறிவிட்டேன் என்பதை யாருக்கும் சொல்லிவிடாதே. உன் தாயார் உள்பட எல்லாரும் நான் கொள்ளைக்காரர்களிடம் சிக்கி வீர சுவர்க்கம் அடைந்ததாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அப்படியே எப்போதும் நினைத்துக்கொண்டிருக்கட்டும்.

"இந்தக் கடிதத்தைப் பார்த்த பிறகும் கூட நீ என்னை 'என் அருமைத் தந்தை' என்று சொல்லிக் கொள்வாயா?

இப்படிக்கு,
கர்த்தார் சிங்"



De-luxe Theatre of Madurai

# சிந்தாமணி டாக்கீஸ் லிமிடெட்

கீழ வெளி வீதி :: மதுரை




தியேட்டரின் வெளித் தோற்றம்



தியேட்டரின் உட்புறத் தோற்றம்

- செவிக்கினிமையான ஒலி தரும் R. C. A PG 240 ஸவுண்டு ஸிஸ்டம்.
- கண்களுக்கு குளுமையுடன் பிரகாசமான ஒளி தரும் H. I. Peerless மாக்னார்க்குகள்.
- இந்தியாவிற்கே முதன் முதலாக வந்துள்ள புதிய Simplex X-L மெஷின்கள் இந்த தியேட்டரில் சமீபத்தில் ஸ்தாபிதமாயுள்ளன.

மதுரைமா நகரிலேயே நவீன சுகாதார முறைப்படி அமைக்கப்பட்டதும், மிகுந்த வசதிகளுடன் கூடியதும், சினிமா ரசிகர்களுக்கு உயர்தர படங்களை காண்பிக்கப்படுவதுமான தியேட்டர் சிந்தாமணி டாக்கீஸ்தான்!



# மரகதக் கண்கள்

துஷ்யந்தன்



காவிரிப்பூம் பட்டினத்தில் 'கடல் ரகசியங்களை' ஆராய்ந்து பார்க்க இப்பொழுது முயற்சி நடக்கிறது அல்லவா! இவ்விஷயம் தெரிந்ததும் என் நண்பர் சர்மா என்னிடம் வந்தார்.

"ரொம்ப பேஷான காரியம், ஸார் எப்போது ஆராய்ச்சியை ஆரம்பிக்கப் போகிறார்களாம்! முதலில் அந்த மரகதக் கண்களைத் தேடி எடுக்க வேண்டும், ஸார்" என்று ஆவல் பொங்க ஆரம்பித்தார் விஷயத்தை.

"மரகதக் கண்களா!, அது என்ன! ஏதாவது கடல் 'கொண்ட காவியமா!" என்று வியப்புடன் கேட்டேன்.

"இது தெரியாதா! சொல்கிறேன், கேளுங்கள்" என்று சர்மா தம் குரலைக் கனைத்துக்கொண்டு ஆரம்பித்தார்.

சோழநாட்டுச் செல்வக் களஞ்சியமாக, பேரெழில் வாய்ந்த துறைமுகப் பட்டினமாக பூம்புகார் விளங்கிய காலம். சோழ வம்சத்துடன் வணிகர் குலமும் பெருமையுடன் வாழ்ந்து வந்த காலம். திக்கெட்டும் சென்று சோழர் கொடி நாட்ட வணிகர் பொருளீட்டி வந்த காலம்.

செட்டியார் வகுப்பைச் சேர்ந்த மதனகோபாலும் அப்படித் தான் புறப்பட்டான். ஆனால் துரதிர்ஷ்டவசமாகக் கப்பல் உடைந்து போகவே, அவன் நடுக்கடலில் தத்தளிக்க நேர்ந்தது. கைவிடப்பட்ட ஒரு மரத்துண்டைப் பிடித்துக்கொண்டு அவன் ஒருநாள் முழுதும் தண்ணீரில் திக்கு முக்காடினான். துணை யாருமில்லை, உணவில்லை, உறக்கமில்லை, உடலில் சக்தியும் இல்லை. தேகமெல்லாம் நீரில் கிடந்து சில்லிட்டிருந்தது. கடைசியில் அவன் நம்பிக்கை இழந்து விட்டான்.

மெல்லத் திரும்பி மேற்கே பார்த்தான். நீலத் திரைகடல் நீண்டு கிடந்தது. கிழக்கேயும் சமுத்திரம் பரந்து விரிந்து நின்றது. வடக்குப் பக்கம் பார்த்தான். ஒரே ஜலப் பரப்பு. தெற்குப் பக்கம் பார்க்க அவன் மனம் துணியவில்லை. ஒருகால் அந்தப் பக்கத்திலும் கரைகாணாத கடல் அலை வீசிக் கொண்டிருந்தால்......! மேலே நீல வானம் நீலக்கடலின் நிழல்போலக் காட்சி யளித்தது.

ஆயிரமாயிரம் ஆண்டுகளாக இப்படி மிதந்து கொண்டிருப்பது போலத் தோன்றியது அவனுக்கு. கைப்பிடி நழுவ ஆரம்பித்தது. அவனுடைய உள்ளம் களைத்தது; உடலும் சோர்ந்தது.

வேறு வழியின்றித் தெற்குப் புறம் திரும்பினான். எட்ட வெகு தூரத்தில் கரை தெரிவதுபோல......இருக்குமா! இல்லை, வீண் பிரமைதானு! எஞ்சியிருந்த பலமெல்லாம் சேர்த்து வைத்து நீந்த முற்பட்டான். யுகம் யுகமாக நீந்துவதுபோல இருந்தது. கரை அப்பால் அப்பால் போய்க் கொண்டே இருந்தது. உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு நீந்தினான். தலை சுற்றியது. கீழேயிழுந்து நீரில் கீழே கீழே பாதாள உலகத்துக்குப் போவது போல இருந்தது.

மறுபடி அவன் கண்களைத் திறந்து பார்த்தபோது என்ன ஆச்சரியம், அவனைச் சுற்றிக் கொந்தளிக்கும் கடல் இல்லை. விழுங்க வரும் அலைகள் இல்லை.

ஆனால் மனதில் கொந்தளிப்பையும் அலைகளையும் உண்டு பண்ணும் சக்தி படைத்த எழிலரசி ஒருத்தி நின்று கொண்டிருந்தாள். உள்ளத்தை விழுங்கும் கண்கள் இரண்டு அவளிடமிருந்தன. அந்தக் கண்களைப் பார்த்ததும் தான் முழுதும்



அவன் பட்ட கஷ்டமெல்லாம் பறந்தோடி விட்டது. ; அவள் பக்கத்தி லிருந்தால் போதும்; ஒன்றல்ல, எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் அவன் கஷ்டப்படத் தயாராக இருந்தான். ஒரு முறை அவ ளைப் பார்ப்பதற்காக ஒரு தரமல்ல, இன் னும் ஆயிரம் தடவை கூட அவன் கடலில் தத்தளிக்கத் தயாராக இருந்தான்.

சமுத்திரத்தில் என்னவெல்லாமோ தேவதைகள் இருக்குமென்று சொல்கிறார் களே, அதில் ஏதாவது...! அவன் சந்தேகம் சட்டென மறைந்தது. அந்த அழகி பேசத் தொடங்கினாள்.

"ஏதாவது பழங்கள் வேண்டுமா!"

அவனுக்குப் பசியாகத் தான் இருந்தது. ஆனாலும் அவள் குரலின் இனிமை பழங் களின் ருசியைக் காட்டிலும் பத்தாயிரம் மடங்கு அதிகமாக இருந்தது.

மெதுவாகப் பழங்களைச் சுவைத்த படியே அவள் அழகை அவன் ரசித்துக் கொண்டிருந்தான். பிறகு, "அது சரி, உன் பெயர் என்ன! சொல்லவே யில்லையே" என்று கேட்டான் அவன்.

அவள் பெயர் எதுவா யிருந்தாலும் அவனுக்கு அக்கறையில்லை. எந்தப் பெயரும் அவளுக்கு அழகைக் கொடுக்கத்தான் செய் யும். இருந்தாலும் கேட்டு வைத்தான்.

"என் பெயர் அலைமகள். என்னை அப் படித்தான் என் அப்பா கூப்பிடுவார்!" என்றாள் அவள்.

"அலைமகளா! விசித்திரமான, அழ கான பெயராக இருக்கிறதே!" என்றான் மதனகோபால். அவன் கண்கள் ஆச்சரி யத்தினால் அகல விரிந்தன.

"இந்தத் தீவே விசித்திரமானதுதான். இங்கிருப்பவர்கள் எல்லாரும் விசித்திர மானவர்கள். அவர்கள் தொழில் அதை விட விசித்திரமானது..." என்றாள் அவள்.

"மறந்தே போய்விட்டேன். இது எந்த இடம்! நான் இப்போது..."

"கவலைப்படாதீர்கள். ரொம்ப பத்திர மான இடத்தில் தான் இருக்கிறீர்கள். எந்த நாட்டிலிருந்தும் இங்கு யாருமே வர மாட்டார்கள். என்னவோ கப்பல் நொறுங்கிப் போனதால் நீங்கள் இப்படி மிதந்து வந்து விட்டீர்கள்."

"அட கடவுளே, அப்படியானால் இந்தப் பக்கம் எந்தக் கப்பலும் வராதா! நான் போவது எப்படி!"

"உம்...அதற்குள் போகிறதற்கு அவ சரம் வந்து விட்டதா!"

"இல்லை..."

"என்ன, இல்லை...திரும்பிப் போகப் போகிறதே இல்லையா!"

"இல்லை, இல்லை..."

"இல்லையானது! இங்கே நீங்கள் தங்க வேண்டும் என்று நினைத்தாலும் நடக் காது, சுவாமி. இந்த நாட்டில் வேற்று மனிதர்களுக்கு இடம் கிடையாது. அப்பா வந்ததும் முதலில் உங்களைக் கொண்டு போய் வெகு தூரத்தில் கப்பல் வரும் இடமாகப் பார்த்துவிட்டுவிட்டு வந்து விடு வார். அப்புறம்..."

அவன் மனதில் வேதனை உண்டாயிற்று. "என்ன, என்னைக் கொண்டு போய் விட்டு விடுவார்களா! ஏன்!" என்றான்.

"அதுதான் இந்த நாட்டின் ரகசியம்" என்றாள் அவள்.

தன் சொந்த நாட்டுக்குப் போக அவ னுக்கு ஆவலாயிருந்தாலும் அலைமகளை விட்டுப் போக அவனுக்கு மனமில்லை.

ஆனால் அவள் மட்டும் நிச்சயமாகச் சொல்லி விட்டாள், அவன் அங்கே இருப் பதோ அல்லது அவள் அவனுடன் வரு வதோ நடக்காத காரியமென்று. ஏன் என்று அவளும் தெரிந்து சொல்ல முடிய வில்லை. ஆனால் அவள் சொல்வது என் னமோ உண்மைதானென்று தோன்றியது. அவள் கண்களில் நீர்த்துளி தோன்றி முத்துப் போல நின்றது. அவள் நீண்ட பெரு மூச்சு விட்டாள்.

பிறகு எழுந்து போய் கையில் எதையோ எடுத்துக் கொண்டு வந்து கொடுத்தாள்.

"என் நினைவாக இதைப் பத்திரமாக வைத்திருங்கள். இதை உங்கள் கண்களைப் போல பார்த்துக் கொள்ளுங்கள். இன்று வரை எனக்கு உலகத்திலேயே மிகவும் விலையுயர்ந்த பொருளாக இந்த மரக தங்கள்தான் இருந்தன......"

அவள் குரலிலே ஏக்கம் நிழலிட்டது. முகத்தின் அழகைச் சோகம் கரு மேகம் போலக் கவிந்து நின்றது.

* * *

அவள் சொன்னது போலத்தான் நடந்தது. அவன் கண்களைக் கட்டி எங் கேயோ ஒரு இடத்தில் விட்டுவிட்டுத் திரும்பினார்கள். எப்படியோ கஷ்டப் பட்டு அவன் கப்பல் ஏறிக் கடைசியில் ஊர் வந்து சேர்ந்தான்.

ஆனால் அவன் மனம் மட்டும் அலைமக ளுக்காக ஏங்கிக் கிடந்தது. கையிலிருந்த மரகதங்கள் அவள் நினைவை மீண்டும் மீண்டும் கொண்டு வந்தன. கடைசியாக ஒரு முடிவுக்கு வந்தான்.

கடற்கரை ஓரமாக ஒரு துர்க்கை அம்மன் கோவில் கட்டினான். துர்க்கை யம்மன் சிலையின் கண்களாக அந்த இரண்டு மரகதங்களையும் பதித்தான். "தாயே, இவை உன் கண்கள். இனி உன் பொறுப்பு" என்று பாரத்தை அவள் தலையில் போட்டான்.

அவன் அறியாமலேயே அவன் விதி வேலை செய்யத் தொடங்கியது.

கோவிலின் பெருமை ஊருக்குத் தெரிந் ததும் துர்க்கையின் மரகதக் கண்களின் மகிமை அதி சீக்கிரமாக எங்கும் பரவி யது. அந்தக் கண்களில் என்னவோ வசி கர சக்தி இருப்பதாக எல்லோரும் சொல் லிக் கொண்டார்கள்.

* * *

திடீரென்று ஒரு நாள் தஞ்சை அரண் மனையிலிருந்து யாரோ அந்தக் கோவிலுக்கு வந்தார்கள். மதனகோபாலைத் தங்களுடன் அழைத்துப் போனார்கள். அவனுக்குக் காரணம் புரியவில்லை. மன்னன் அவனை என்ன வெல்லாமோ கேள்விகள் கேட் டான். பிறகு "அந்த மரகதங்கள் எங்கே கிடைத்தன!" என்றான் கோபத்தோடு.

மதனகோபாலுக்கு இந்தக் கேள்வி ஒருங்கே ஆச்சரியத்தையும் பீதியையும் கொடுத்தது.

"மகாராஜா, எனக்கு இந்த மரகதங் களைக் கொடுத்தது ஒரு பெண். அவ்வளவு தான் நான் சொல்ல முடியும். அவள் யார்! எந்த நாட்டைச் சேர்ந்தவள்! அவ ளுக்கு இவை எப்படிக் கிடைத்தன! இதெல்லாம் எனக்குத் தெரியாது."

"எப்படித் தெரியும்!" என்றான் அரசன் கோபமாகவும் ஏளனமாகவும்.

"மகாராஜா, சோழ நாட்டில் இந்த மாதிரிக் கள்வர்களை விட்டு வைப்பதே பெரிய ஆபத்து. உடனே இவனுக்குச் சிரச்சேத தண்டனை கொடுப்பதுதான் நல் லது" என்று கர்ஜித்தான் துர்மந்திரி.

மதனகோபாலுக்குத் தூக்கி வாரிப் போட்டது. "என்ன! கள்வனு! நானு!" என்று அலறினுன்.

ஆனுல் மன்னன் கோபம் அவன் நிலைமை மறுகணமே விளக்கி விட்டது. தஞ்சை அரண்மனையிலிருந்து காணுமற் போன மரகதங்கள் இரண்டும் மதனகோபாலிடம் வந்ததற்கு வேறு என்ன காரணம் இருக்க முடியும்!

மதனகோபாலின் நில மன்னவிலே உருண்ட செய்தி காற்றுகப் பறந்தது. கடல் அலைமேல் ஏறிச் சென்றது. அலை மகள் செவியில் வேகமாகப் பாய்ந்தது.

அப்புறம் அவளுக்கு அங்கே இருப்புக் கொள்ளவில்லை. தன்னை மறந்தாள். இரவுக்கிரவே வீட்டை விட்டு வெளியேறி விட்டாள். மனம் கொண்ட வேகத்திலே காவிரிப்பூம்பட்டினத்தை நோக்கி அப் பேதைப் பெண் விரைந்தாள்.

அவள் காவிரிப்பட்டினம் வந்ததும் நேராக துர்க்கையம்மன் கோவிலுக்குப் போனுள். அது பூட்டிக் கிடந்தது. யாருமே அங்கு வருவதில்லை. மதன கோபால் மடிந்ததும் அது பூட்டப் பட்டது. அம்மனைத் தரிசிக்க எவருக்கும் அதற்குப் பிறகு துணிவு ஏற்படவில்லை.

அவள் பித்துப் பிடித்தவள் போலத் தஞ்சை அரண்மனைக்குப் போனுள்.

"மகாராஜா, கள்வனைத் தேடிப் பிடிக்க முடியாத நீங்கள் குற்றமற்ற நிரபராதி யான ஒருவனைக் கொன்று விட்டீர்கள். உங்கள் மரகதமணிகளைக் களவாடிய வர்கள் இருக்கிறீர்கள், இன்னும் பூமிக்குப் பாரமாக, நாட்டுக்குத் துரோகமாக! ஒரு பாவமும் அறியாத அவர் தலையை வாங்கி விட்டீர்கள். அவருக்கு அந்த மரகதம் களைக் கொடுத்த பாவக் கரங்கள் இதோ இருக்கின்றன. அரசே! நான் அவைகளைக் கொடுத்த போது எனக்கும் தெரியாது, அவை கொள்ளை போன பொருள்கள் என்று. என் மனம் இப்போது வெதும்பு கிறது. என் தகப்பன் மகா துரோகி. கடல் கொள்ளைக்காரன். இது இப்போது தான் எனக்குத் தெரியும். அவன் கொள்ளை யடித்துக் கொண்டு வந்த மணிகள்தான் இவை. என் மனத் துயரத்தை அறிந்து கொள்ள இப்பொழுது உங்களால் முடி யாது. உங்கள் சோழ நாட்டில், காவிரிப் பட்டினத்திலேயே பிறக்கப் போகும் பெண் ஒருத்தியின் கணவன் வேறு நாட் டில் கள்வனுகக் குற்றஞ்சாட்டப்பட்டுக் கொலையுண்டால்தான் அந்தத் துக்கம் உங் களுக்குத் தெரியும். இது ஒரு காலத்தில் நடக்கும். அப்போது தான் நான் சிரிப் பேன். சிரித்து என்ன செய்வது! மகா ராஜா, இல்லற வாழ்க்கை நடத்தப் பெண்கள் விரும்பும் போது அவர்களைப் பிரித்து விடுகிறது விதி. அவன் சாகப் போகும் போது குறுக்கே நின்று நியாயம் பேசுகிறது. விசித்திரமான இந்த நீதிக்குத் தலைவணங்கி நான் போகிறேன். ஆனுல் என் சாபம் ஒரு காலத்தில் கட்டா யம் நிறைவேறும்."

அவள் அலறித் துடித்தாள். அவளுக்குக் கண்ணீர் காவிரியாகப் பெருகியது. மீண் டும் காவிரிப்பட்டினம் வந்தாள்.

பூட்டிக் கிடக்கும் துர்க்கையின் கோவிலைத் தேடிப்போனுள். எத்தனையோ ஆசையுடன் வாழ வேண்டிய வயதில் இப்படிப் பேய்போலத் திரிய நேரிட்ட தன் கதியை நினைத்து அவள் நெஞ்சம் ஏங்கவில்லைதான். பழிகாரியானது தான் அவளை மிகவும் வாட்டியது.

"துர்க்கா தேவி! நீ கூடவா அவரைக் கைவிட்டாய்! தாயே, உன் கண்கள் என்ன குருடாகப் போய்விட்டனவா!" என்று அவள் கூறியபோது துர்க்கையின் மரகதக் கண்கள் இரண்டும் தெறித்து விழுந்தன. அவைகளை ஆவேசத்தோடு எடுத்துக் கடலிலே தூக்கி எறிந்தாள் அபலையான அந்த அலை மகள்.

* * *

சீமாவின் கதை முடிந்தது.

"என்ன, ஸார் கோவலன் கதை போலிருக்கிறதே" என்றேன்.

"ஆமாம், அவள் கொடுத்த சாபத்தால் தான் பின்னும் கோவலன் கதையே நடந் தது. புரிகிறதா! இப்பொழுது அந்த மரகதக் கண்கள் இங்கே கடலுக்கடியில் தான் கிடக்கின்றன. அதற்குப் பிறகு அந்தப் பெண் புத்த மதத்தில் சேர்ந்து வெகு காலம் சன்யாசினியாகக் கூட இருந் தாளாம்" என்றார்.

இருக்கும், யார் கண்டார்கள்!

காவிரிப்பூம்பட்டினத்தை அடுத்த கட லுக்குள்ளே இன்னும் எத்தனை ஆயிரம் மரகத மணிகளும் கதைகளும் அதிசயங் களும் அற்புதங்களும் பாதாளத்தில் புதைந்து கிடக்கின்றனவோ!




"ஸ்ரீ மஹாலக்ஷ்மி ரக்ஷை"

1 மண்டலம் (48 நாள்) கிரமப்படி பூஜை செய்யப்பட்டது

ஆயுள் பூராவும் பலன் தரக்கூடிய வெள்ளி ரக்ஷை ரூ. 43-12-0

தற்போது அனுப்ப வேண்டியது ரூ. 5-12-0. ஸ்ரீ மஹாலக்ஷ்மி ரக்ஷை வேண்டியவர்கள் கோரும் கோரிக்கை களை எழுதி தற்போது ரூ. 5-12-0 மணியார்டர் செய்யவும். கீழே கோரிக்கையின்படி நம்மிடம் ரக்ஷை வாங்கியிருந்து 108 நாட்களுக்குள் நன்மையான பலன்களை அனுபவித்து பாக்கி ரூ. 38-0-0 அனுப்பவும். தற்போது கேட்கும் ரூ. 5-12-0 ரக்ஷை வேலை களுக்கும் தபால் ரிஜிஸ்டர் செலவுக்கும், விளம்பர செலவிற்குமாக மேலே கண்ட தொகை கேட்கப்படுகிறது.

ஸ்ரீ மஹாலக்ஷ்மி ரக்ஷை அணிவதால் ஏற்படும் நன்மைகள்:

1. சுகசீவிகளாயும், எப்போதும் போஜனாதிகளில் குறைவின்றியும் இருப்பார்கள்.
2. குடும்ப ஒற்றுமை, குடும்ப அபிவிருத்தி, தனதான்யாதிகள் வரவுப் பலிதம், குடும்ப நிர்வாகத் திருப்தி.
3. சகோதரர் ஒற்றுமை, சகோதரமில்லாதவர்களுக்கு சகோதரம் ஏற்படும். பிரிந்த சகோதரர் கூடுவர்.
4. மாதுர் அபிவிருத்தி, வாகன அபிவிருத்தி, பூமி கட்டட அபிவிருத்தி ஏற்படும்.
5. புத்திரர்களுக்கு ரோக நிவர்த்தி, மலடு உடையவர்களாயிருந்தாலும், புத்திரம் ஏற்படும்.
6. சத்ருக்கள் பங்கமடைவார்கள். தீராத ரோகமும் தீரும். ருணம் நிவர்த்தி.
7. வாலிபர்களுக்கு நல்ல குணவதி லபிப்பார்கள். மற்ற வர்களுக்கு ஸ்திரீ நேசமும், ஸ்திரீயின் சிநேகமும் கிடைக்கும். பால்ய பெண்கள் அணிவதால் சத் புருஷனை அடைவார்கள். மற்றவர்கள் அணிவதால் கணவன் ஒற்றுமை. பிரிந்த கணவனை அடைவார்கள்.
8. ஸ்திரீகள் அணிவதால் மாங்கல்ய நிற்கவும், புருஷர் அணிவதால் ஆயுள் நிற்கவும்.
9. வாலிபர் அணிந்தால் பிதுருவின் பிரியமடைவார். விசேஷ பாக்கியமும், லக்ஷ்மி கடாக்ஷமும் ஏற்படும்.
10. கல்வி பயிலுபவர்கள் அணிந்தால் கல்வியில் தேர்ச்சியும், படித்தவர்கள் அணிந்தால் உத்தியோகமும் கிடைக்கும். விவசாயிகளுக்குக் கிருஷிகம் மேன்மையுறும். வியாபாரிகளுக்கு வியாபார அபிவிருத்தி ஏற்படும்.
11. அலுவலர்கள் செய்யும் தொழிலில் நல்ல ஆதாயம் கிடைக்கும்.
12. நல்ல யோக போக்கியமும் லாபத்தை உத்தேசித்து பண விரயமும் ஏற்படும்.

N. B:—அதர்மிகளும், நாஸ்திகர்களும் விசேஷ பலன்களை எதிர்பார்க்க முடியாது. 2. ரக்ஷை ஆர்டர் செய்பவர் ஆர்டர் கிடைத்த 9-ம் நாள்தான் ரக்ஷை பிரசாதத்துடன் அனுப்பப்படும். 3. வி. பி. பி. யில் அனுப்ப சாத்தியப்படாது. 4. வெளிநாட்டு நேயர்கள் இரட்டிப்பு தொகைக்கு பிரிட்டிஷ் போஸ்டல் ஆர்டர் வாங்கி அனுப்பவும்.

கோட்டமருதூர், ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஜோதிஷ ஆபீஸ்

அரகண்டநல்லூர் P. O. (S. A. Dt.)



நான்!
என் குழந்தை என்னை ஒரு பூச்சாண்டியாக நினைக்கிறது.
நான் என் மனைவியின் கைப்பாட்டுப் பொம்மை என்று என் தாயார் நினைக்கிறாள்.
குடும்பப் பற்றே இல்லாத ஒரு சந்நியாசி என்று என் மனைவி நினைக்கிறாள்.
அப்பாவுக்குப் பணம் தோட்டத்தில் காய்ப்பதாக என் பெண் நினைக்கிறாள்.
என் தகப்பனார் என்னைச் சுண்டைக்காய்க்குச் சமானமாக நினைக்கிறார்.
வேலைக்காரன் என்னை எமனாக நினைக்கிறான்.
ஆபீஸ் முதலாளி என்னை ஒரு துரும்பாக நினைக்கிறார்.
ஆனால், என் குடும்பவண்டியைச் சுமக்கும் மாடுபோல என்று நான் என்னை நினைக்கிறேன்.




ரா. வீழிநாதன்

மாம்பலம்
13-9-51

அன்புள்ள ஸ்ரீ ரகுநாதன் அவர்களுக்கு,

நமஸ்காரம். இதேதடா இது! முன் பின் அறிமுகமில்லாத ஒருவர்—இல்லை, இல்லை—ஒருத்தி நமக்கு இப்படிக் கடிதம் எழுதத் துணிந்து விட்டாளே என்று நீங்கள் நினைக்கலாம். இருந்தாலும் மன்னிக்கவும். என் மனம் கேட்கவில்லை. எவ்வளவோ மனத்தை அடக்கிப் பார்த்தேன். ஆனால் முடிந்தால்தானே! கடைசியில் வெட்கத்தை விட்டு இந்தக் கடிதம் எழுதத் துணிந்தேன்.

அன்று காஞ்சீபுரம் பாஸஞ்சரில் நீங்கள் சென்ற இரண்டாவது வகுப்புப் பெட்டியிலேயேதான் நானும் இருந்தேன். அன்று தங்களைப் பார்த்தது முதல் மனம் தங்களையே சுற்றி வட்டமிடத் தொடங்கி விட்டது. தங்கள் டிரங்கில் அழகாகப் பொறித்திருந்த தங்கள் பெயரை மனத்தில் உருப் போட்டுக் கொண்டேன். பார்த்ததுமே நீங்கள் ஒரு பெரிய ஆபீஸராக இருக்கவேண்டும் என்று தோன்றியது.

அந்த எண்ணத்தில் வீட்டுக்கு வந்ததும் 'போன் டைரக்டரி'யை எடுத்துப் புரட்டிப் பார்த்தேன். நான் நினைத்தது வீண் போகவில்லை. தங்கள் பெயரும் விலாசமும் அதில் குறிப்பிடப்பட்டிருந்தது. அடுத்த கணமே கே. ரகுநாதன் என்று தாங்கள் ஒருவர்தான் இருக்க முடியுமா! இவ்வளவு பெரிய சென்னைப் பட்டணத்தில் இன்னும் எத்தனையோ கே. ரகுநாதன்கள் ஏன் இருக்கக் கூடாது என்ற சந்தேகம் உதித்தது. உடனே 'டைரக்டரி' முழுவதையும் ராமாயண பாராயணம் பண்ணுவது போலப் பண்ணிவிட்டேன். ரகுநாதனின் கே. வரிசையில் தங்களைத் தவிர வேறு யாருமே டைரக்டரியில் இல்லாததைக் கண்டு எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியைச் சொல்லி முடியாது. உடனே தங்களுடன் போனில் பேசலாம் என்று எண்ணிப் போனை 'டயல்' கூடச் செய்து விட்டேன். அடுத்த கணமே பயமும் கூச்சமும் வந்து மறைக்கவே, போனை 'டக்' என்று கீழே வைத்துவிட்டேன்.

அதுமுதல் என் மனம் என்னவோ தங்களையே நாடுகிறது. எத்தனை தடவை தான் இதைச் சொல்லுவது என்று நீங்கள் அலுத்துக் கொள்ளலாம். ஆனால் என் மனத்தை அறிந்தால் நீங்கள் அப்படி அலுத்துக் கொள்ள மாட்டீர்கள். தங்களை நேரில் சந்தித்து என் மனத்தைத் திறந்து காட்ட வேண்டும் என்பதுதான் என் அந்தரங்க ஆசை. ஆனால் நேரில் வரக் கூச்சமாயிருக்கிறது. உங்களுக்குக் கல்யாணம் ஆகிவிட்டது என்பதும் எனக்குத் தெரியும். அதனால்தான் மனைவி இருக்கும் சமயத்தில் வந்து உங்களுக்கும் அவளுக்கும் மனஸ்தாபத்தை உண்டு பண்ண நான் விரும்பவில்லை. அதனால் தான் நான் நேரில் தங்களைக் காண வரயோசிக்கிறேன்.

நம் குடும்ப சமாசாரம் இவ்வளவு தூரம் இவளுக்கு எப்படித் தெரிந்தது என்று ஒருவேளை நீங்கள் ஆச்சரியப்படலாம். ஆனால் சற்று யோசித்துப் பார்த்தீர்களானால், அந்த ஆச்சரியத்துக்கும் இடம் இல்லை. ஏனெனில் தங்கள் விஷயத்தில் அக்கறை கொண்ட நான் தங்களைப் பற்றிய ஒவ்வொரு சின்ன விஷயத்தையும் அறிந்து கொள்ள விரும்புவது இயல்புதானே!

சமீபத்தில் தங்கள் மனைவி பிறந்தகம் சென்றிருப்பதாகக் கேள்விப் பட்டேன். இவ்வளவு தெரிந்திருக்கும் பொழுது நேரில் வந்திருக்கலாமே என்று நீங்கள் கேட்கலாம். இருந்தாலும் இன்னும் நேரில் வர யோசனையாகவே இருக்கிறது.

தயவு செய்து தாங்கள் என் இந்தக் கடிதத்துக்குப் பதில் எழுதுவீர்களானால், தங்களுக்கு என்னிடம் பிரியம் இருக்கிறது என்பதை அறிந்து தங்களை நேரில் சந்திக்க முயற்சிப்பேன். தங்களுக்குக் கடிதம் எழுத இஷ்டமில்லையேல், என்னுடைய இந்த வெட்கம் கெட்ட தனத்தை வெளிப் படுத்தாமல் கடிதத்தைக் கிழித்துக் கொளுத்திவிடவும். இந்த வேண்டுகோளுக்குச் செவி சாய்ப்பீர்கள் என்றே நம்புகிறேன். பதில் எழுத இஷ்டமிருக்குமானால் மேற்கண்ட விலாசத்துக்கு உடனே கடிதம் எழுதவும். ஆனால் தயவு செய்து என்னைச் சந்திப்பதற்காக நேரில் மட்டும் வர முயல வேண்டாம்.

இப்படிக்கு
தங்கள் அன்பை விரும்பும்,
சாரதா

## 2

மயிலாப்பூர்
15-9-51

அன்புள்ள சாரதாவுக்கு,

தங்கள் கடிதம் கிடைத்தது. பார்க்கச் சந்தோஷம். தங்கள் கடிதத்தைப் படித்த பின் எனக்கும் தங்களைக் காஞ்சீபுரம் பாஸஞ்சரில் பார்த்த நினைவு வருகிறது. தங்கள் உருவம் அது முதல் என் கண்களெதிரே நின்று கொண்டேதான் இருக்கிறது. இருந்தாலும் கல்யாணம் ஆனவனான நான் மனத்தை வீணில் தெறண்டக் கூடாது என்ற ஒரே எண்ணத்தினாலேயே அன்று அதிகம் கவனிக்காதது போல் இருக்க முயன்றேன். இருந்தாலும் அடிக்கொரு தடவை என் கண்கள் உங்களை நிமிர்ந்து நிமிர்ந்து பார்க்கத்தான் செய்தன. தங்கள் கையில் இருந்த பிளாஸ்டிக் பை எவ்வளவு அழகாக இருந்தது, தெரியுமா! அடிக்கடி தாங்கள் அதைத் திருப்பித் திருப்பிக் காட்டினதாகக்கூட எனக்கு ஞாபகம். தாங்கள் அவ்வாறு செய்ததற்குக் காரணம் நான் தங்கள் விலாசத்தைக் குறித்துக் கொள்ளவேண்டும் என்பதாகத்தான் இருக்க வேண்டும் என்று எண்ணுகிறேன். என் ஊகம் சரிதானே! தாங்கள் என் பெயரை நினைவு வைத்துக் கொண்டு, என் விலாசத்தைத் தேடிக் கண்டு பிடித்து, எனக்குக் கடிதம் எழுதியிருப்பதிலிருந்தே தாங்கள் என்னை எவ்வளவு விரும்புகிறீர்கள் என்பது நன்றாகத் தெரிகிறது. தங்களுடைய இந்த அன்புக்கு

நான் எவ்வாறு நன்றி செலுத்துவேன்! இதுதான் உண்மைக் காதல் என்பது. என் உள்ளமும் தங்களைச் சந்திக்க வேண்டும் என்று துடியாய்த் துடிக்கிறது. தாங்கள் கவனித்தது போல என் மனைவி சரோஜா இப்பொழுது ஊரில் இல்லை. பிறந்தகம் சென்றிருக்கிறாள் என்பது உண்மைதான். இருந்தாலும் நாம் இங்கே சந்திப்பது அவ்வளவு உசிதமில்லை என்று எண்ணுகிறேன். ஆகையால் தாங்கள் எங்கு சந்திக்கலாம் என்று குறிப்பிடுகிறீர்களோ, அங்கே சந்திக்கச் சித்தமாயிருக்கிறேன். தங்கள் அன்பான கடிதத்தை ஆவலுடன் கூடிய சீக்கிரம் எதிர்பார்க்கிறேன்.

தங்கள் அன்புக்கும் பாத்திரனான,

**ரகுநாதன்**

## 3

மாம்பலம்
17—9—51

அன்பரே!

தங்கள் கடிதம் கிடைத்தது. தங்கள் மனைவியின் பெயர் சரோஜா என்பதும் தங்கள் அந்தக் கடிதத்தின் வாயிலாகத் தெரிந்தது. தாங்கள் என்னை இவ்வளவு நன்றாக ஞாபகம் வைத்துக் கொண்டிருப்பதிலிருந்தே, அன்று தாங்கள் என்னை வெகு நுணுக்கமாக கவனித்திருக்கிறீர்கள் என்பதும் தெரிய வருகிறது. ஆனால் தாங்கள் ஒன்றையும் வெளிக்காட்டிக் கொள்ளாமல் வெகு சாதுர்யமாகவும் அழகாகவும் நடந்து கொண்டதை என்னும் புகழாமல் இருக்க முடியவில்லை.

விஷயக் கடிதத்தை வளர்த்துவானேன்! உங்களை எங்கேயாவது தனியே சந்தித்து விட வேண்டும் என்ற அவா என் உள்ளத்திலே வர வர அதிகரித்துக் கொண்டே போகிறது. எந்த இடம் சௌகரியமானதாக இருக்கும் என்று யோசித்து யோசித்துப் பார்த்தேன். கடைசியில் 'பார்க்' தான் அதற்கேற்ற இடம் என்று தோன்றிற்று. ஆகவே, இந்தக் கடிதப்படி நாளை மாலை ஆறு மணிக்கு, அதாவது 18—9—51 அன்று பார்க்கில் கட்டாயம் சந்திக்கவும். மறந்து விடாதீர்கள்.

தங்கள் அன்புள்ள,

**சாரதா**

பின் குறிப்பு: நல்ல கறுப்பில் வெள்ளைப் பூ போட்ட ஆறு கஜப்புடவை முன் கொசுவம் வைத்துக் கட்டிக் கொண்டிருப்பேன். வெள்ளை ரவிக்கையில் வெல்வெட் 'பைப்பிங்' காடா தைத்துப் போட்டுக் கொண்டிருப்பேன். என்னைச் சட்டென்று அடையாளம் தெரிந்து கொள்ளுவதற்காகவே இதை எழுதலானேன்.

## 4

மயிலாப்பூர்
19—9—51

அன்புள்ள சாரதாவுக்கு,

உன் கடிதம் கிடைத்தது. இரண்டு கடிதம் எழுதுவதற்குள்ளாக இவன் 'உன்' என்று ஆரம்பித்து விட்டானே என்று நீ என்னைக் கோபித்துக் கொள்ள மாட்டாய் என்றே நம்புகிறேன். இப்படி யெல்லாம் நான் எழுதத் துணிந்ததற்குக் காரணம் உன் மீதுள்ள அளவில்லாத பற்றுதல் தான். உன் கடிதத்தின் பிரகாரம் நேற்று மூன்று மணிக்கே கிளம்பி 12ம் நம்பர் பஸ்ஸைப் பிடித்து ஐந்து மணி சுமாருக்குப் 'பனகல் பார்க்'குக்கு அருகில் வந்து இறங்கினேன். பிறகு பக்கத்தில் இருந்த 'பார்க் லாண்ட்' ஹோட்டலுக்குச் சென்று காப்பிக்கு ஆர்டர் கொடுத்தேன். சுமார் அரைமணி நேரம் தவம் கிடந்த பின்தான் காப்பி வந்தது. அதைக் குடித்து விட்டுப் 'பார்க்'குக்கு வந்து சேர்ந்தேன். ஆறு மணி முதல் அந்தப் பார்க்கைப் பருந்து போல வட்டமிடத் தொடங்கினேன். எவ்வளவு பிரதக்ஷிணம் செய்து என்ன பிரயோஜனம்! உன்னைக் காண முடியவில்லை. கடைசியில் நான் அசந்து போய் ஏமாற்றத்துடன் வீடு திரும்பும்படியாகி விட்டது.

நீ 'பார்க்'குக்கு வராத காரணம் என்னவோ, தெரியவில்லை! ஒரு வேளை வீட்டைவிட்டே கிளம்ப முடியவில்லையோ, என்னவோ! வீடு என்றால் எவ்வளவோ சங்கடங்கள் இருக்கத்தானே செய்யும்! நீ வர முடியாமற் போய் விட்ட காரணத்தைக் கட்டாயம் தெரிவிப்பாய் என்றே நம்புகிறேன். ஒரு வேளை நீ வந்திருந்து நான் கவனக் குறைவாக கவனிக்காமல் இருந்திருந்தேனானால் என்னை மன்னித்து விடு. இந்த ஏமாற்றத்தைப் பொருட்படுத்தாமல் நாம் இருவரும் இன்னொரு



இடத்தைக் குறிப்பிட்டு அங்கே சந்திப்பது தான் உசிதம் என்று தோன்றுகிறது. உன் அபிப்பிராயம் என்னவோ! உடனே பதில் எழுதவும் என்று நம்புகிறேன்.

உன் அன்புள்ள,

**ரகுநாதன்**

## 5

மாம்பலம்
20—9—51

அன்புள்ள.........

தங்கள் கடிதம் பார்த்தேன். உங்கள் புத்தியை என்னவென்று சொல்ல! நான் என் கடிதத்தில் 'பனகல் பார்க்' என்று எழுதியிருந்தேனா! 'பார்க்' ஸ்டேஷன் என்று நன்றாக எழுதி யிருந்தேன்! நான் எழுதியபடி ஐந்து மணிக்கே பார்க் ஸ்டேஷனுக்குச் சென்று ஏழு மணி வரையில் தங்களுக்காகக் காத்திருந்தேன். கடிகாரம் ஓடிக் கொண்டே இருந்ததே தவிரத் தாங்கள் வருவதாகக் காணோம். கடைசியில் நன்றாக இருட்டியும் விட்டது. நானோ பெண். அதுவும் ஒண்டியாக எவ்வளவு நேரந்தான் உட்கார்ந்திருக்க முடியும்! மனம் படபடத்தும் 'பக் பக்' என்று அடித்துக்கொள்ள ஒரு விதமாக வீட்டுக்கு வந்து சேர்ந்த பாடு பெரும் பாடாகி விட்டது. நம் ஊரில் 'பனகல் பார்க்' ஒன்றுதானா இருக்கிறது! இது மாதிரி இன்னும் எத்தனையோ பார்க்குகள் இருக்கும் பொழுது ஒரு பார்க்கில் சந்திப்பது என்றால் அந்தப் பார்க்கின் பெயரை ஒருத்தி குறித்திருக்க மாட்டாளா என்று நீங்கள் யோசித்துப் பார்க்க வேண்டாமா! அது மட்டும் இல்லை. மாம்பல வாசியான நான் மாம்பலத்தில் உள்ள ஒரு பார்க்கையே தேர்ந்தெடுப்பேனா! புருஷர்களுடைய புத்தியே இப்படித்தான் போலும்! ஏதடா, இவள் இப்படிக் கோபித்துக் கொள்ளுகிறாளே என்று என் மேல் கோபம் கொண்டு என்னை மறந்து விட முயற்சிக்காதீர்கள்.

உங்கள் மீதுள்ள அன்பும் ஆசையும் உங்களைக் காணவேண்டும் என்ற அவாவும் அவசரமும் தான் என்னை இப்படி எழுது மாறு தூண்டுகின்றன. மன்னிக்கவும். இந்தத் தடவை நாம் 'பாரத் கபே'யில் மூன்றே முக்கால் மணிக்கு நாளை மறு தினம் சந்திக்கலாம் என்று எண்ணுகிறேன். தங்களுக்குச் சௌகரியப்படும் என்றால் நாளைக் கட்டுக்கே எனக்குக் கடிதம் எழுதிப் போடுங்கள்.

இந்தத் தடவை நான் மஞ்சள் கலர் புடவையுடனும் கறுப்புக் கலர் ஜம்பருடனும் வருவேன். ஞாபகமிருக்கட்டும். எல்லாவற்றுக்கும் தங்கள் கடிதத்தை மறு தபாலிலேயே எதிர்பார்க்கிறேன்.

தங்களைக் காணத் தவம் கிடக்கும்,

**சாரதா**

## 6

மயிலாப்பூர்
21—9—51

அன்புள்ள சாரதா,

உன் கடிதம் கிடைத்தது. ஒரே ஒரு சின்னச் சந்தேகம். நீ உன் கடிதத்தில் நாம் 'பாரத் கபே'யில் சந்திக்கலாம் என்று எழுதி யிருக்கிறாய். சென்னை மவுண்ட் ரோடில் ஒன்றும் தியாகராய நகரில் ஒன்றுமாக இரண்டு 'பாரத் கபே'க்கள் இருக்கின்றன என்னும் விஷயம் உனக்குத் தெரியாமல் இருப்பதற்கு நியாயம் இல்லை. ஆகவே, நாம் எந்த 'பாரத் கபே'யில் சந்திக்க வேண்டும் என்பது எனக்குச் சரியாகப் புரியவில்லை. என்னுடைய இந்தக் கடிதம் உன் கைக்குக் கிட்டி, அதற்கு நீ பதில் எழுதி என் சந்தேகத்தைத் தீர்த்து வைப்பதற்குள் நீ குறிப்பிட்டிருக்கும் அந்த நாளை மறுதினம் பட்டாய்ப் பறந்துவிடும்.

நாம் எவ்வளவுக் கெவ்வளவு அவசரமாகச் சந்திக்க நினைக்கிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு காலதாமதம் ஆவதை நினைக்கும் பொழுது என் மனத்துக்கு ஒரு புறம் வருத்தமாய்த் தான் இருக்கிறது. உனக்கு என் மேல் எரிச்சல் எரிச்சலாக வரும். காதலர் விஷயத்தில் கடவுளும் சதி செய்வார் என்று நான் யாரோ சொல்லக் கேட்டிருக்கிறேன். அது நம் விஷயத்தில் முற்றிலும் உண்மையாகவே இருக்கிறது. அது கிடக்கட்டும். மனத்தைத் தளர விடாமல் மறுபடியும் நாம் எப்பொழுது எந்த 'பாரத் கபே'யில் சந்திக்கலாம் என்பதைக் குறிப்பிட்டு விவரமாகக் கடிதம் எழுது.

உன் அன்புக்கன்பான,

**ரகுநாதன்**

## 7

மாம்பலம்
23—9—51

அன்பரே!

இப்பொழுது 'அன்பரே' என்று எழுதக் கூட எனக்கு வெட்கமாயிருக்கிறது. உங்களுக்கு உண்மையாகவே என்மீது ஏதாவது அன்பு இருக்குமானால் என்னை இப்படிச் சோதிப்பீர்களா! ஏதடா, ஒரு பெண் தனியாக மவுண்ட் ரோடில் உள்ள 'பாரத் கபே'க்கு வருவாளா என்று சிறிதாவது முன் யோசனை வேண்டாமா! 'மவுண்ட் ரோடா, மாம்பலமா!' என்று சந்தேகம் வரத்தான் வந்ததே! உடனே எனக்கு ஒரு வரி எழுதிப் போட்டிருக்க வேண்டாமா! உங்கள் சந்தேகமும் காலதாமதமும் எனக்குப் பிராணாபத்தாய் வந்து முடிந்தது.

நீங்கள் கட்டாயம் வந்து விடுவீர்கள் என்ற நம்பிக்கையில் சரியாக மூன்று மணிக்கே போய் 'பாரத் கபே'யில் உட்கார்ந்து விட்டேன். ஒன்றும் சாப்பிடாமல் சும்மா எத்தனை நேரம்தான் உட்கார்ந்திருக்க முடியும்! ஒவ்வொன்றாகப் போர்டைப் பார்த்து வரிசையாக ஆர்டர் கொடுத்தேன். அன்று ஹோட்டலில் செய்திருந்த அத்தனை பக்ஷண வகைகளும் 'மாதிரி' பார்த்தாய்விட்டது. கடையிலும் மணி ஐந்தும் அடித்து விட்டது. அப்பொழுதும் நீங்கள் வருவதாகக் காணோம். இனி உங்களை எதிர் பார்ப்பது வீண் என்று எண்ணிப் பில்லைக் கேட்டேன். ஸர்வர் 'பர்ஸன்' என்று போட்டிருக்கும் இடத்துக்கு நேரே ஒன்று என்று எழுதி ரூ. 3—14—6க்குப் பில் கொண்டு வந்து கொடுத்தான்.

மேஜையடிக்குச் சென்று நான் ஐந்து ரூபாய் நோட்டை நீட்டிய பொழுது பெட்டியடியில் உட்கார்ந்திருப்பவர் என்னை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்து விட்டுப் பாக்கிச் சில்லறையைக் கொடுத்தார். எனக்கு அங்கேயே நாக்கைப் பிடுங்கிக் கொண்டு செத்துவிடலாமா என்று தோன்றிற்று. 'என்ன வயிறு இவளுக்கு!' என்று அவர் நினைத்திருக்க மாட்டாரா!

எதற்கும் என் புத்தியைத்தான் நான் நொந்து கொள்ள வேண்டும். ஒரு புருஷனை நம்பி, அதுவும் முன்பின் அறிமுகம் இல்லாத ஒரு புருஷனை நம்பி மோசம் போனேனே! அப்பப்பா! போதும், போதும் உங்கள் சகவாசம்! பெண் புத்தி பின் புத்தி என்று சொல்லுவது சரியாகத்தான் போச்சு! பெரியவர்கள் எதையுமே தெரியாமல் சொல்லுவதில்லை. ஆகவே, உங்களுக்கும் எனக்கும் இனி இந்தக் கடிதத் தொடர்பே வேண்டாம். இத்துடன் நிறுத்திக் கொள்ளுவோம்.

இப்படிக்கு,
**சாரதா**

## 8

மயிலாப்பூர்
23—9—51

அன்புள்ள சாரதாவுக்கு,

மூன்றாவதாக நான் எழுதிய கடிதம் கிடைத்திருக்கும் என்று நம்புகிறேன். இன்று காலமுதல் ஆபீஸுக்குக் கூடப் போகாமல் லீவு எடுத்துக் கொண்டு உன் கடிதத்தை எதிர் பார்த்த வண்ணம் உட்கார்ந்திருக்கிறேன். தபால்காரன் ஒவ்வொரு 'பீட்'டாக வந்து போய்க்கொண்டிருக்கிறானே தவிர உன் கடிதத்தைக் கொண்டு வந்து தரவில்லை. இலவு காத்த கிளிபோல் உட்கார்ந்திருக்கிறதுதான் மிச்சமாகப் போயிற்று. என் மனம் உன்னைக் காண என்ன துடியாகத் துடிக்கிறது, தெரியுமா! எப்பொழுது சந்திக்கலாம் என்பதற்கு உடனே கடிதமாவது கட்டாயம் எழுது.

உன் அன்புள்ள,
**ரகுநாதன்**

## 9

மயிலாப்பூர்
24—9—51

அன்புள்ள சாரதாவுக்கு,

உன் கோபம் நிறைந்த கடிதத்தைக் கண்டதும் என் மனம் சுக்கு நூறாக உடைந்துவிடும் போலாகிவிட்டது. தபால் இலாகாவின் தவறுக்காக என்மேல் கோபம் கொள்ளுவது நியாயம் ஆகுமா!... என் பிழையை நான் ஒப்புக் கொள்ளு



கிறேன். எல்லாம் தெரிந்த ஒரு புருஷனாயிருந்தும், ஒரு பெண் தனியாக மவுண்ட் ரோடில் உள்ள 'பாரத் கபே'க்கு வருவாளா என்பதை யோசிக்கும் சக்தியைக் கூட இழந்திருந்தேனே, அது என்மேல் குற்றம்தான். ஆனால் அந்தக் குற்றம் மன்னிக்க முடியாத அவ்வளவு பெரிய குற்றமா! மனிதன் தன்னையும் அறியாமல் எத்தனையோ பிழைகள் செய்துவிடுகிறான் என்பது படித்த பெண்ணான உனக்குத் தெரியாத விஷயமல்லவே! இதைப் பற்றியெல்லாம் நான் அதிகம் எழுத விரும்பவில்லை. ஏனெனில் கட்டாயம் உன் மன்னிப்புக் கிட்டியே தீரும் என்ற பரிபூரண நம்பிக்கையில் தான் நான் உனக்கு இந்தக் கடிதம் எழுதுகிறேன். நீ கோபத்தை விட்டுச் சற்றுச் சாந்தமாகச் சிந்தித்தால் என்மேல் அவ்வளவு கோபம் கொள்ளச் சிறிதும் நியாயம் இல்லை என்பதை உணர்வாய். நீ கோபத்தை ஒழித்துச் சந்திக்க முன் வந்தால், நான் நேரில் சந்திக்கச் சந்தர்ப்பம் கிடைத்ததும், என் தவறுக்காக நீ தரும் தண்டனைகள் அத்தனையும் ஏற்றுக் கொள்ளச் சித்தமாயிருக்கிறேன். ஆகவேதான் பதில் கிட்டும், தலை பிறக்கும் என்ற நம்பிக்கையுடன் இந்தக் கடிதம் உன்னை நாடி வருகிறது.

உன் அன்புள்ள,
**ரகுநாதன்**

## 10

மாம்பலம்
25—9—51

அன்பரே!

நமஸ்காரம். தங்கள் கடிதம் கிடைப்பதற்கு முன்பாகவே என் தவறு எனக்கு விளங்கி விட்டது. கோபத்தில் செய்யத் தகாத காரியத்தைச் செய்து விட்டோமே என்று எண்ணி மிகவும் மனம் புழுங்கினேன். தங்களுடைய அன்புக்கு இப்படித் தெரியாத்தனமாக முற்றுப்புள்ளி வைக்க முற்பட்டு விட்டோமே என்று ஏங்கினேன். என்னுடைய கோபத்தையும் நிந்தனையையும் பொருட்படுத்தாமல் தாராள மனப்பான்மையுடன் பழையபடியே அன்பைக் காட்ட முன் வரும் தாங்கள் உண்மையில் தெய்வபுருஷர்தான். நீங்கள் மட்டும் பழையபடியே அன்பைக் காட்ட முன் வராமல் இருந்தால், என்னை இந்த உலகத்திலேயே பார்த்திருக்க முடியாது. கடவுள் என் அன்பை வீணாக்க வில்லை. தங்களுக்கு நல்ல புத்தியைக் கொடுத்து என்னை மன்னித்து விட்டார்.

இவ்வளவு இடையூறுகளுக்குப் பின் நாம் இருவரும் சந்திப்பதற்குச் சென்னை உகந்த இடம் இல்லை என்ற முடிவுக்கு வந்து விட்டேன். ஏனெனில் இரண்டு தடவைகளும் நம் சந்திப்பு தட்டி விட்டது. அதன் காரணமாக நம்மிருவருக்கும் மனஸ்தாபம் ஏற்படக்கூடிய அளவில் கடிதப் போக்குவரத்தும் நீண்டுவிட்டது. ஆகவே, நாம் திருவொற்றியூர் கோயிலில் ஒரு நாள் சந்தித்தால் என்ன என்று எண்ணுகிறேன். என்றைக்குத் தங்களுக்குச் சௌகரியப்படும் என்று தெரிவித்தால், அன்றைக்கு நான் அங்கு வரச் சித்தமாயிருக்கிறேன். இது சம்பந்தமாகத் தங்கள் அன்பான கடிதத்தை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

அன்புள்ள,
**சாரதா**

## 11

மயிலாப்பூர்
26—9—51

அன்புள்ள சாரதாவுக்கு,

உன் கடிதம் கிடைத்தது. கோபத்தை மறந்து கடிதம் எழுதியதற்காக உனக்கு என் மனமார்ந்த வந்தனங்கள். உன் உண்மை அன்பை இந்தச் சிறு தகராறு மூலம்தானே தெரிந்து கொள்ளச் சந்தர்ப்பம் வாய்த்தது! ஆகவே, அதுபற்றி மட்டற்ற மகிழ்ச்சி கொள்ளுகிறேன். நீ எங்கே சந்திக்கலாம் என்று கூறுகிறாயோ, அங்கே வந்து சந்திக்க நான் தயார்தான். ஆனால் ஒரே ஒரு விஷயம். என் உள்ளத்தரசியான உன்னிடம் ஒன்று மறைவு எதற்கு! என் அகமுடையாளின் பிறந்தகம் அந்த ஊர்தான். தற்சமயம் அவள் அங்கேதான் இருந்து வருகிறாள். ஆகவே, அங்கே சந்திப்பது உசிதமாக இராதே என்று எண்ணுகிறேன். நீயும் நான் குறிப்பிட்டுள்ள இந்த விஷயத்தை மனத்தில் வைத்துக் கொண்டு வேறு ஒரு இடம்

குறிப்பிடு. என்றைக்குச் சந்திக்கலாம் என்பதற்கு நீயே ஒரு நாளையும் குறிப்பிட்டு எழுதி விட்டால், நான் அதற்கான சௌகரியங்கள் செய்து கொண்டு வந்து சேருகிறேன். உடனே பதில்.

அன்புள்ள,

ரகுநாதன்

## 12

மாம்பலம்
27—9—51

அன்பரே!

தங்கள் கடிதம் கிடைத்தது. உங்கள் சம்சாரம் அங்கே இருக்கிறாள் என்றும் இன்னும் கவலையாயிற்று! அவளைப் பார்க்கப் போவது போல நீங்கள் அங்கே போய்ச் சேருங்கள். நான் வெள்ளிக் கிழமை அன்று சாயந்திரம் புறப்பட்டு ஸ்வாமி தரிசனம் என்னும் வியாஜத்தை வைத்துக் கொண்டு அங்கே வந்து சேருகிறேன். அன்று இரவு ஏழு ஏழரை மணி சுமாருக்குத் தென் பிராகாரத்தில் நாம் இருவரும் பிரதக்ஷிணம் செய்பவர்களைப் போலச் சந்தித்துப் பேசுவோம். இந்தத் தடவை நாம் நமக்குக் கிடைக்கும் அரிய சந்தர்ப்பத்தை நழுவ விடக் கூடாது. நீங்களும் இதே அபிப்பிராயத்துடன் இருப்பீர்கள் என்று நம்புகிறேன்.

இன்னொரு விஷயம். உங்களுடன் கூட உங்கள் மனைவியையும் கோவிலுக்கு அழைத்து வந்து விடாதீர்கள். எல்லாம் தெரிந்த உங்களுக்கு நான் இது சொல்ல வேண்டிய தில்லைதான். இருந்தாலும் சொல்லி வைப்பதில் என்ன தவறு!

அன்புள்ள,

சாரதா

பின் குறிப்பு:—மறந்தே போய் விட்டேனே! அன்றைக்கு நான் நீலக் கலர் புடவையும் மஞ்சள் வாயில் ஜம்பரும் உடுத்திக் கொண்டு வருவேன். காதில் லோலாக்கும் இருக்கும். தங்கள் சம்மதத்துக்கு உடன் பதில் எழுதவும்.

## 13

மயிலாப்பூர்
28—9—51

அன்புள்ள சாரதா,

உன் கடிதம் கிடைத்தது. உன் இஷ்டப்படியே வெள்ளிக்கிழமை அன்று கோவில் பிராகாரத்தில் உன்னைச் சந்திக்கிறேன். கட்டாயம் வந்து சேரு. நீ சொன்னபடி அவளைப் பின்தொடர்ந்து அழைத்து வர மாட்டேன். நான் அவ்வளவு பைத்தியக்காரன் அல்ல.

அன்புள்ள,

ரகுநாதன்

## 14

திருவொற்றியூர்
8—10—51

அன்புள்ள............க்கு,

அநேக நமஸ்காரம். நீங்கள் இங்கே வந்து விட்டுப் போனது முதல் உங்களை ஒன்று கேட்க வேண்டும் என்பது. நான் அங்கே இருக்கும் பொழுது, இன்று சனிப் பிரதோஷம் ஆயிற்றே! கபாலீச்வரர் கோவிலுக்குப் போய்வருவோமே என்றேன், இன்று ஆடிக் கிருத்திகையாயிற்றே! வடபழனிக்குப் போய்வருவோமே என்றோ சொன்னால், கோவிலும் ஆயிற்று, குளமும் ஆயிற்று என்று என்மீது சள்ளென்று எரிந்து விழுவீர்களே! அப்படிப்பட்டவர் அன்று—அதுதான் சென்ற வெள்ளிக் கிழமையன்று கன ஸ்ரத்தையாகத் திருவொற்றியூருக்கு வந்து கோவிலுக்குப் போனீர்களே, எதற்காக! நானும் கூட வருகிறேன் என்று எவ்வளவோ மன்றாடியும் வேண்டாம் என்று என்னைத் தடுத்தீர்களே, எதற்காக! அது போகட்டும்; தென் பிராகாரம் வரும்பொழுதெல்லாம் திரும்பித் திரும்பிக் கழுத்து வலிக்கப் பார்த்தீர்களே, எதற்காக! ஆமாம், அன்றைக்கென்ன, என்றைக்கும் இல்லாத திருநாளாகக் கால் நொடிய அத்தனை பிரதக்ஷிணம் செய்தீர்கள்! அன்றைக்கு உங்களுக்கு எங்கிருந்து அவ்வளவு பக்தி வந்து விட்டது! கோவிலையே [illegible] கொண்டு வந்து விடுவீர்கள் போலிருந்தது! உங்கள் அன்றையச் செய்கையைப் பார்க்கப் பார்க்க எனக்கு ஒரே வியப்பாயிருந்தது.

ஆறுமணிக்குக் கோவிலுக்குள் போனவர் அர்த்த ஜாமம் ஆகும் வரையில் கோவிலுக்குள்ளேயே அடைந்து கிடந்த காரணம் என்ன! நீலக் கலர் புடவையும் மஞ்சள் வாயில் ஜம்பரும் உடுத்திக் கொண்டு காதில் லோலாக்குக் குலுங்க வந்தாளே, அந்தப் பெண்ணைப் பார்ப்பதற்காகத்தானே! அவள் தான் உங்களுக்கும் பின்னாலேயே சுற்றிக்





கொண்டிருந்தாளே! அன்றைக் கென்று உங்கள் கண் ஏன்தான் அப்படி மாயக் கண்ணாகப் போயிற்றோ!

ஐயோ, அப்பா! இந்தப் புருஷர்களுக்குத்தான் பெண்கள் என்றால் என்ன பைத்தியம், பார்! அந்தப் பெண் சாரதாவுக்கு எழுதின கடிதாசுக்குத்தான் ஒரு கணக்கு வழக்கு உண்டா! பெண்களுக்குக் கடிதம் எழுதும் பொழுது தங்களைப் புரிந்தால் தானே! எங்கெங்கேயெல்லாம் சந்திப்பதாகப் புரோகிராம்! இதெல்லாம் எனக்குத் தெரியாது என்றுதானே எண்ணம்! புருஷனை ஒரு பெண் எப்படி யெல்லாம் பம்பரமாய் ஆட்டி வைக்கலாம் என்பதற்குச் சாரதாவின் கடிதப் போக்கு வரத்தே ஒரு சாட்சி ஆயிற்றே!

ஆமாம், நீங்கள் அந்தச் சாரதாவையே கல்யாணம் பண்ணிக் கொண்டு விடப் போகிறீர்களோ! பேஷாகப் பண்ணிக் கொள்ளுங்கள். யார் வேண்டாம் என்று தடுக்கிறார்கள்! எனக்கு யாதொரு விதமான ஆட்சேபணையும் இல்லை. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். எப்படியும் ஒரு பெண் கையில் மாட்டிக் கொண்டு ஆடித்தான் ஆக வேண்டும்.

தங்களுக்கும் சாரதாவுக்கும் நடக்கப் போகும் கல்யாண வைபவத்துக்கு ஏற்பாடு செய்வதற்காகவும் அதைக் கண்டு களிப்பதற்காகவும், சாரதாவுக்குத் தாங்கள் எழுதிய அத்தனை கடிதங்களையும் எடுத்துக் கொண்டு, சாரதாவாக நடித்த சரோஜாவாகிய நான், அதாவது தங்களுடைய சகதர்ம பத்தினியான நான் அடுத்த ஞாயிற்றுக் கிழமை அங்கே வந்து சேருகிறேன்.

ஆமாம், அந்த சமயம் நீங்கள் வீட்டில் இருக்க வெட்கப்படுவீர்கள் என்பது எனக்குத் தெரியும். ஆகவே, அடுத்த வீட்டிலேயாவது சாவியைக் கொடுத்து விட்டுப் போங்கள். பெண்களைப் போல் வெட்கப் பட்டுக்கொண்டு நீங்கள் திரிவது என் மனக்கண் முன்னே நன்றாகத் தெரிகிறது. வெட்கத்தை விடுங்கோன்னா! நீங்களும் ஒரு ஆண் பிள்ளை மாதிரி! நான் அந்த அசட்டுச் சாரதாவைப் போலக் கடிதம் போட்டுக் கொண்டு திரிய மாட்டேன். நேரிலேயே வந்து விடுவேன். ஆமாம் ஜாக்கிரதை!

இப்படிக்குத் தங்கள் அன்புள்ள,

சரோஜா




★ ஆர்டிஸ்டிக் என்கிரேவிங்

★ ஆப்டோன், லயன், கலர் ப்ளாக்குகள்

★ ரப்பர் ஸ்டாம்புகள்

இவைகளுக்கு **86729** நெம்பருக்கு

டெலிபோன் செய்யுங்கள்

அல்லது

நேரிட ஒரு முறை விஜயம் செய்யுங்கள்

*

# நியூடன் & கம்பெனி

80, வாலாஜா ரோடு :: மவுண்ட் ரோடு, மதராஸ்

எமது தீபாவளி வாழ்த்துக்கள்

அதிகாரம் பெற்ற மூலதனம் ரூ. 8 கோடி.
வழங்கப்பட்ட மூலதனம் ரூ. 4 கோடி.
செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 2 கோடி.
ரிசர்வ் நிதி 60 லக்ஷங்கள்

G. D. பிர்லா சேர்மன்.
B. T. தாகூர் ஜெனரல் மானேஜர்.

தி
யுனைடெட் கமர்ஷியல் பாங்க் லிட்.,
கல்கத்தா

உறுதிக்கும், சேவைக்கும் பெயர் பெற்றது



THE
SALESMAN
SANITARY ENGINEERS AND CONTRACTORS
5/319, AVANASHI ROAD, COIMBATORE



We stock all
Sanitary materials, Wash-basins
Closets, Stone ware pipes etc.

*

MOSAIC FLOORING
A SPECIALITY

*

YOUR HOME
OFFICE or FACTORY

*

Let us build it for you.

# Fordson

## *Major* TRACTOR

பிரதி காலனுக்கும்
அதிக வேலை
செய்யும்
டிராக்டர்!

அதிக
சக்தி ஒவ்வொரு
வேலைக்கும்

அதிக
பணம் பிரதி வருடமும்
மிச்சம்

அதிக
ஏகர்கள் பிரதி தினமும்
உழலாம்

அதிக
வேலை, பிரதி காலன்
எண்ணெயிலும் நடக்கும்



THE SYMBOL OF SERVICE

# போர்டுஸன்

## மேஜர் டிராக்டர்

ஹைட்ராலிக் லிப்டுடன் கூடியது

போர்டுஸன் மவுண்ட் செய்த உபகரணங்களுக்கு:

போர்டு மோட்டார் கம்பெனி ஆப் இந்தியா லிட்.
பம்பாய்.

•

விற்பனையாளர்கள்:

**ஸிம்ஸன் & கம்பெனி லிமிடெட்**

202/203, மவுண்ட் ரோடு :: மதராஸ் - 1

கிளைகள்: பெங்களூர். உதகமண்டலம். திருச்சிராப்பள்ளி. செகந்திராபாத் (தக்காணம்)



# அணைந்த மத்தாப்பு

மாயாவி

ஜொலிக்கும் நட்சத்திரங்களை உதிர்த்துத் தள்ளிய அந்த மத்தாப்பு 'டப்' பென்று பாதியில் அணைந்தது. களிப்போடு அதைக் கையில் பிடித்து எரித்துக் கொண்டிருந்த பானுவுக்கு ஏமாற்றத்தைக் கொடுத்தது. "சீ! வெறும் சொத்தை மத்தாப்பு" என்று அதை வெறுப்புடன் தரையில் வீசிவிட்டு, இன்னொன்றை எடுத்துக் கொளுத்தினள்.

அப்பொழுது தீபாவளி நெருங்கிக் கொண்டிருந்தது. பானு பணக்கார வீட்டுப் பெண். பெற்றோருக்கு ஒரே அருமைக் குழந்தை. சதா சர்வ காலமும் பட்டாசும் கையுமாகத்தான் அவள் தென்பட்டாள். எனவே அவளுக்கு அந்த ஒரு மத்தாப்பு சொத்தையாகப் போய்விட்டது அவ்வளவு பொருட்டாகத் தோன்றவில்லை. இது போனால், இன்னொன்று. எல்லாமே தீர்ந்துவிட்டால், இன்னும் வேண்டிய அளவு வாங்கித் தரப் பெற்றோர் இருக்கவே இருக்கிறார்கள்!

எதிர்ச் சாரியில் தன் வீட்டுக்குள் உட்கார்ந்து, பானு பட்டாசு சுடுவதை ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தாள் ரேவதி. பானு வெறுப்புடன் பாதி எரிந்த மத்தாப்புவைத் தூர வீசிவிட்டு, வேறு மத்தாப்புவை எடுத்துக் கொண்டதும், அவள் நெடு மூச்செறிந்தாள்.

ஆம்; அவளுடைய அன்றைய நிலை அந்தச் சொத்தை மத்தாப்புவை ஒத்திருந்தது. அதைப் போல முதலில் அவளும் ஒளி பரப்பிக் கொண்டிருந்த காலம் உண்டு.

"மீண்டும் நீ ஒளி வீசிப் பிரகாசிப்பாய். அதற்குச் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. போய் அவன் காலில் விழுந்து உன்னை ஏற்றுக் கொள்ளும் படி மன்றாடு. உன் வாழ்வு மலரும்" என்று சற்று முன்தான் அவள் தாயார் அவளுக்குப் புத்திமதி கூறினள்.

ஆனால், ரேவதிக்கு அதில் நம்பிக்கை ஏற்படவில்லை. அவன் பணக்காரன்; அவனுக்கென்ன? இந்த மத்தாப்புப் போனால் இன்னொன்று. அதுவும் தீர்ந்து விட்டால் மற்றொன்று. அவளுக்கு அவனுடன் இணைந்து வாழப் பிராப்தமில்லை. இருந்திருந்தால், அன்று அத்தனை முரட்டுத்தனமாக அவளைப் பிரிந்து வந்திருப்பானா?

இதோ, இந்தப் பானு, தெருவில் வீசிய சொத்தை மத்தாப்புவை, அதற்குள் இன்னும் மருந்து இருந்த பொழுதிலும் இனித் திரும்ப எடுத்துக் கொளுத்தப் போகிறளா? அதே போலத்தானே ரேவதியும்.

பெரிய பண்ணையாரின் மனைவி என்று பெருமையும் கர்வமும் கொண்டிருந்த அவளுக்கு இத்தகைய நிலை வரக் காரணம் என்ன? அதற்கு அவளது பெற்றோர் விதியைக் காரணமாகக் கூறினர். ஆனால் ரேவதியோ தன் மதியையே நொந்து கொண்டாள்.

2

ரேவதிக்கு அந்தப் பெருவாழ்வு எதிர்பாராதவாறு கிடைத்தது. அவளுடைய அப்பா கோபாலய்யர் முசிறியில் ஓர் சாதாரண வக்கீல். அவருக்கு நாலைந்து குழந்தைகள். அவர்களில் மூத்தவள் ரேவதி. ஏதோ, காலட்சேபத்துக்குத் தட்டுக்கில்லாமல் நிலைத்து நாலைந்து நிரந்தரக் கட்சிக்காரர்கள் அவருக்கு இருந்தார்கள். அந்த நாலைந்து பேர்களில் முக்கியமானவர் செய்யூர் முத்துசாமி அய்யர்.

செய்யூர் முத்துசாமி அய்யர் பெரிய பணக்காரர். பல வருஷங்களுக்கு முன்பு பர்மாவில் லேவாதேவிக் கடை நடத்தி ஏராளமாகச் சம்பாதித்தார். சில வருஷங்களுக்கு முன்பு பர்மியர்கள் தமிழ் நாட்டினரை அடித்துத் துரத்திவிடுவதென்று ஆர்ப்பாட்டம் செய்தார்களே, அப்பொழுது முத்துசாமி அய்யர் இருந்ததைச் சுருட்டிக் கொண்டு ஊரோடு வந்து விட்டார். செய்யூருக்கு வந்து அதே லேவாதேவிக் கடையை மீண்டும் தொடங்கி நடத்தி வந்தார்.

முத்துசாமி அய்யர் ஐம்பது வயதுக்கு மேற்பட்டவர்; தாரமிழந்த அவருக்கு பாலு என்பவன் ஒரே பிள்ளை. அவன் திருச்சிக் கல்லூரி ஒன்றில் படித்துக் கொண்டிருந்தான்.

முத்துசாமி அய்யர், ஒரு நாள் வண்டி கட்டிக் கொண்டு, வக்கீல் கோபாலய்யரைப் பார்க்க முசிறிக்கு வந்தார். இதுவரை எந்த விஷயமாயினும் அவருடைய கணக்குப் பிள்ளையே வருவது வழக்கம். இன்று பண்ணையாரே நேரில் வந்திருப்பதைக் கண்டதும், வக்கீல் ஆசார உபசாரங்களுடன் அவரை வரவேற்று விஷயம் என்னவென்று விசாரித்தார்.

"பரம ரகசியமான ஒரு காரியத்துக்கு உங்கள் ஆலோசனையைக் கேட்டுப் போக வந்திருக்கிறேன்" என்ற பூர்வ பீடிகையுடன் ஆரம்பித்தார் முத்துசாமி அய்யர்.

"சொல்லுங்கள். யாராயினும் தொலைத்துக் கட்டிவிடுகிறேன்" என்று மார் தட்டினார் வக்கீல்.

"விஷயம் நீங்கள் நினைப்பது போல அவ்வளவு எளிதல்ல. சொல்லுகிறேன், கேளுங்கள். என் பையன் பாலு இருக்கிறானே, அவன் காலேஜில் வாசித்துக் கொண்டிருக்கிறான். படிக்க அனுப்புவதற்கு முன்பு, சின்னப் பையனாயிற்றே, பணமிடுக்கில் கெட்ட சகவாசம் ஏற்பட்டுவிடக் கூடாதே என்று அந்தக் காலேஜிலே புரொபஸராக இருந்த ஜான் அருள்சாமி என்பவரின் மேற்பார்வையில், அவர் வீட்டிலேயே இருந்துவர ஏற்பாடு செய்தேன். அந்த அருள்சாமியை ஏழெட்டு வருஷங்களாக எனக்குத் தெரியும். அவர் என்னிடம் வீட்டை ஈடு வைத்து மூவாயிரம் ரூபாய் வரையில் கடன் வாங்கியிருக்கிறார். அவருக்கு ஒரே பெண். அவள் தன் கணவனுடன் பர்மாவில் வசிக்கிறாள். எனவே அவர் தனிப் பேர்வழியானதால் பையனைக் கவனமாகப் பார்த்துக் கொள்ளுவார் என்று தைரியமாக இருந்து வந்தேன்.

"போன மாதம், பாலு காலேஜ் லீவு விட்டதும் ஊருக்கு வந்தான். வந்த இரண்டொரு நாட்களுக்கெல்லாம் அவன் பெயருக்கு ஓர் கடிதம் வந்தது. விலாசத்தைக் கவனிக்காமல் எனக்கு வந்த கடிதமென்று உடைத்துப் படித்துவிட்டேன். யாரோ மேரி என்ற பெண் 'கன்னு-பின்னு' வென்று அவனுக்கு என்னவோ எழுதியிருந்தாள். குடி கெட்டு விட்டதே என்று உடனே பாலுவைக் கூப்பிட்டுக் கடிதத்தைக் காட்டி, 'இதெல்லாம் என்னடா?' என்று கேட்டேன்.

'மேரியை நான் காதலிக்கிறேன், அப்பா' என்று கூச்சமோ, அச்சமோ நிமிர்ந்து நின்று சொன்னான் அவன்.

'யாரடா அவன் மேரி?' என்று நான் கோபத்துடன் கேட்டேன்.

"அவன் அந்த அருள்சாமியின் பேத்தியாம். பர்மாவில் இருக்கிறானென்று சொன்னேன், பாருங்கள். அவளுடைய பெண்ணும். ஐந்தாறு மாதங்களுக்கு முன்பு அவர்கள் இங்கே வந்திருந்த போது, இந்தப் பெண்ணைத் திருச்சியிலே படிக்க வைப்பதாகக் கூறி நிறுத்திக் கொண்டாராம் அருள்சாமி.

"சும்மா வளர்த்துவானேன்? அந்தப் பெண்ணுக்கும் பாலுவுக்கும் காதல் ஏற்பட்டு விட்டது. எவ்வளவு சொல்லியும் அவன் ஒரே பிடிவாதமாக, 'மேரியைத்தான் மணம் செய்து கொள்ளப் போகிறேன்' என்று உறுதியாகக் கூறி விட்டான்."

முத்துசாமி அய்யர் இப்படிக் கதை சொல்லிக் கொண்டிருந்தபோது, ரேவதி அவ்விருவருக்கும் காப்பி பலகாரம் கொண்டு வந்து வைத்தாள்.

ரேவதி நல்ல அழகி. மூக்கும் விழியுமாக, மலர்ந்த ரோஜாவைப் போல இருப்பாள். அதோடு பருவத்தின் எழில் வேறு அவள் வனப்பை அதிகப்படுத்தியது. அவளைப் பார்த்ததும் முத்துசாமி அய்யருக்கு, காக்கையைப் பற்றி விவரித்துக் கொண்டிருந்த போது, ஓர் மட மயில் தோன்றியது போலிருந்தது.



"இவள் உம்முடைய பெண்ணா?" என்று கேட்டார் அவர்.

"ஆமாம்."

"இவளுக்குக் கல்யாணம் ஆகி விட்டதா?"

"இல்லை. இனிமேல்தான் ஆக வேணும் உங்களைப் போன்ற பெரிய மனுஷாள் தயவிலே."

"தயவு, என்ன தயவு? எனக்கு ஏழை–பணக்காரன் என்பதெல்லாம் பிடிக்காது. வீட்டுக்கு வருகிற பெண் இப்படி மகாலட்சுமி மாதிரி கண்ணுக்கு அழகாக இருக்க வேண்டாமா? இதோ பாரும், கோபாலய்யர். நீர் மாத்திரம் அந்த மேரி பர்மாவுக்குக் கப்பலேற வழி செய்து விடும், உம்முடைய பெண்ணையே என் நாட்டுப் பெண்ணாக்கிக் கொண்டு விடுகிறேன்."

"அவ்வளவு அதிர்ஷ்டம் எனக்கு எங்கே கிடைக்கப் போகிறது?" என்று அழுது வழிந்தார் வக்கீல்.

"நான் சொல்லுகிறபடி செய்யும். அந்த அருள்சாமிக்கு இன்றைக்கே ஒரு நோட்டீஸைக் கொடுத்து விடும். —எனக்குத் தர வேண்டிய மூவாயிரத்துச் சொச்சத்தை உடனே கொடுத்துத் தீர்க்கவில்லையானால், வீட்டை ஏலத்துக்குக் கொண்டு வந்து விடுவதாக மிரட்டும். தன்னாலே வழிக்கு வந்து விடுவார். ஏனென்றால் அவரிடம் ஒரு தம்பிடி கூடக் கிடையாது" என்றார் முத்துசாமி அய்யர்.

## 3

பிள்ளையாரின் ஆலோசனைப்படி வக்கீல் கோபாலய்யர் உடனே அருள்சாமிக்கு நோட்டீஸ் அனுப்பவில்லை. அத்தகைய மிரட்டலுக்கெல்லாம், அவரைப் போன்ற படித்த மனிதர் மசிந்துவிட மாட்டார் என்பது அவருக்குத் தெரியும். ஆகவே, அவர்தாமே திருச்சிக்குச் சென்றார். அருள்சாமியையும் மேரியையும் சந்தித்தார். முத்துசாமி அய்யரின் மிரட்டலை அடியோடு மறைத்து விட்டு, ஏழையான தமது பெண்ணைப் பாலுவுக்குக் கல்யாணம் செய்து கொள்ள அவர் இசைந்திருப்பதாகவும், ஆனால் பாலு மேரியைத்தான் கல்யாணம் செய்து கொள்ளுவேனென்று பிடிவாதம் பிடிப்பதாகவும் சொன்னார்.

"நான் பரம தரித்திரன், அம்மா! அடுக்கடுக்காக ஐந்தாறு குழந்தைகள் கல்யாண வயதாகி இருக்கிறார்கள். இந்தச் சம்பந்தம் கிடைத்தால் அவர்கள் உதவியுடன் மற்ற பெண்களின் கல்யாணத்தையும் நடத்திவிட முடியும். ஐந்தாறு சகோதரிகளின் கல்யாணம் நிறைவேறும் பொருட்டு, உன் ஒருத்தியினுடைய காதலைத் தியாகம் செய்யும்படி யாசிக்கிறேன்" என்றார் கல்லும் கரைந்துருகும்படி.

அவருடைய வேண்டுகோள் அவ்விருவர் மனத்தையும் உருக்கியது. புரொபஸர் அருள்சாமி வக்கீலின் வேண்டுகோளுக்கு இணங்கும்படி மேரிக்குப் புத்திமதி சொன்னார்.

ஆனால் காதல் என்பது அத்தனை எளிதாக அழிந்துவிடும் கரிச் சித்திரமா? மேரி உடனே இணங்கிவிடவில்லை. "உங்கள் பெண்ணுக்கு நான் ஒரு கடிதம் தருகிறேன். அதைக் கொண்டு போய்க் கொடுத்து, அவள் பதிலை வாங்கி வாருங்கள். பிறகு என் முடிவைத் தெரிவிக்கிறேன்" என்றாள்.

என் பெண்ணுக்கு இவள் என்ன எழுதிவிடப் போகிறாள்? 'பாலுவை நான் காதலித்திருக்கும்போது, நீ குறுக்கிடுவது நியாயமா?' என்று வேண்டுமானால் எழுதுவாள். 'நியாயமில்லைதான். ஆனாலும், நானும் என் தங்கைகளும் வாழ்வு பெற நீதான் வழி வகுத்து உதவ வேண்டும்' என்று ரேவதியைக் கொண்டு எழுதச் செய்து விட்டால் காரியம் ஆயிற்று என்று எண்ணியவராய்க் கடிதத்தை வாங்கிச் சென்றார் கோபாலய்யர்.

மேரி வக்கீல் நினைத்தவாறுதான் அந்தக் கடிதத்தை எழுதியிருந்தாள்.

ஆயினும் அதில் அவர் ஊகிக்காத வேறு ஒரு விஷயமும் இருந்தது. "………சகோதரி, காதல் என்பது வெறும் உடலின்பத்தை அடிப்படையாகக் கொண்டதல்ல. அது உள்ளத்தின் அடித்தளத்திலிருந்து ஊறும் ஓர் வற்றாத ஊற்று. அது சிரஞ்சீவித் தன்மை பெற்றது. இந்த உண்மையை நீ நன்கு சிந்திக்க வேண்டும். உன் தந்தையின் வேண்டுகோளின்படி பாலுவை உனக்கு அர்ப்பணம் செய்வது பற்றி எனக்கு ஆட்சேபணை யில்லை. ஆனால் என் மீது அழியாக் காதல் கொண்டிருக்கும் அவரை இப்படி நிர்ப்பந்தமாக மணந்து நீ என்ன வாழ்க்கை இன்பத்தை நுகர்ந்துவிடப் போகிறாய்? பின்னால் ஏற்படும் அசந்தர்ப்பங்களுக்கு நான் ஜவாப்தாரியல்ல. என் மனத்தை முறித்துத்தான் நான் இந்தச் சூதுக்கு உடன்பட வேண்டும்" என்று குறிப்பிட்டிருந்தாள் மேரி.

கடிதத்தைப் படித்து விட்டுச் சிரித்தாள் ரேவதி. அவள் வரையில் காதல் என்பது உடற் கவர்ச்சியில் நிலை பெறுவதென்பதுதான். தன்னுடைய உடல் வனப்பில் அவளுக்குப் பெருமையும் நம்பிக்கையும் இருந்தன. அழகில் தன்னுடன் ஒப்பிட்டுப் பார்க்க முடியாத ஒரு சாதாரணப் பெண்ணிடம் செலுத்தியிருந்த பாலுவின் உள்ளத்தை, ஒரு கணத்தில் ஈர்த்து இழுத்துத் தன் வசமாக்கிக் கொள்வது மிகவும் எளிதென்றே அவள் கருதினாள். ஆகவே, அந்த முடிவு தொனிக்குமாறு மேரிக்குப் பதில் எழுதி அனுப்பி விட்டாள்.

ரேவதியின் பதிலைக் கண்டதும் 'பேதைப் பெண்; கானல் நீரைக் கண்டு கடுகி ஓடுகிறாள். நாளடைவில் உண்மைக் காதலின் சொரூபத்தைக் கண்டு, தன் வாழ்வு பாழடைந்ததை உணர்ந்து கதறப் போகிறாள்' என்று மனம் வருந்தினாள் மேரி. ஆயினும், அவள் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றத் தயங்கவில்லை. தான் பாலுவை மணக்க இயலாதென்று அவனுக்கு ஓர் கடிதம் எழுதி வக்கீலிடம் கொடுத்து விட்டு, அந்த வாரமே பர்மாவுக்குக் கப்பலேறி விட்டாள்.

மேரி கப்பலேறி இரண்டொரு நாட்களான பிறகு, அவள் எழுதிய கடிதம் பாலுவுக்கு வந்து சேர்ந்தது. இதெல்லாம் அப்பாவின் தந்திரம்தான் என்பது அவனுக்கு உடனே தெரிந்து விட்டது. ஆனால், இந்தச் சூழ்ச்சிக்குத் தன் மீது உயிரையே வைத்திருந்த மேரி எவ்வாறு உடன்பட்டாள் என்பதுதான் அவனுக்கு விளங்கவில்லை.

இதற்கிடையில் ரேவதியை அவனுக்கு மணமுடிக்க நிச்சயித்திருப்பதாகவும், அவளைப் பெண் பார்க்கப்போய் வருமாறும் ஒரு நாள் முத்துசாமி அய்யர் அவனிடம் சொன்னார். பாலு மறுக்காமல் இணங்கினான். ஏனென்றால் எந்தப் பெண்ணை அவர் மணக்கச் சொன்னாலும், அவளிடம் தனக்கும் மேரிக்கும் உள்ள அழியாக் காதலைக் கூறி, அதை ஏதோ சூழ்ச்சி செய்து அவர் கருக்கி விட்டாரென்றும், இருந்தாலும் என்றாவது ஒரு நாள் அது மீண்டும் துளிர்க்கக் கூடுமென்றும் வெளிப்படையாக அறிவித்து விடுவதென்று அவன் நிச்சயித்திருந்தான்.

அவ்வாறே அவன் ரேவதியைப் பெண் பார்க்கச் சென்ற போதும், அவளிடம் தனியே சில வார்த்தைகள் பேச வேண்டுமென்று வேறொரு அறைக்கு அழைத்துச் சென்று அனைத்தையும் கூறினான். ஆனால் தன் அழகின் மீது அபார நம்பிக்கை வைத்திருந்த ரேவதி, "உங்கள் உள்ளத்தை என்னுடையதாக்கிக் கொள்ளும் உறுதி எனக்கிருக்கிறது" என்றாள்.

அடுத்திருந்த முகூர்த்தத்தில் பாலுவும் ரேவதியும் தம்பதிகளாயினர்.

## 4

ரேவதியின் பணக்காரப் புக்கக வாழ்க்கை உல்லாசமாகத்தான் ஆரம்பமாயிற்று. மாமனார் முத்துசாமி அய்யர் அவளைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு கூத்தாடினார். பாலுவும் அவளிடம் அன்பாகத்தான் நடந்து கொண்டான். அந்த அன்பைக் கண்டு, கணவனை வெற்றி கொண்டு விட்டதாக இறுமாந்திருந்தாள் ரேவதி. ஆனால் அவனுடைய உள்ளத்தின் அடித்தளத்தில் பழைய காதல் நெருப்பு நீறு பூத்து, எச்சமயமும் கனிந்தெரியக் காற்றை எதிர்நோக்கியிருந்ததென்பதை அவள் எங்ஙனம் கண்டாள்?

கல்யாணமாகி ஒரு வருஷம் முடிவதற்குள்ளாகவே அந்தக் காற்றும் மெல்ல வீச ஆரம்பித்து விட்டது.

அவள் மாமனார் காலமாகி இரண்டொரு மாதங்களுக்கெல்லாம் காற்று புயலாக அடிக்க ஆரம்பித்தது.

தனது காதலைத் தியாகம் செய்து ரேவதிக்கு வாழ்வு வகுத்துக் கொடுத்து விட்டுப் பர்மாவுக்குச் சென்ற மேரியினால் அங்கே கணநேரங்கூட நிம்மதியாக வாழ முடியவில்லை. பெரிய தியாகத்தைச் செய்து விட்ட பெருமிதத்துடன் வந்த அவளுக்கு அது எத்தனை பெரிய பிழை என்பதைக் காலம் காட்டிக் கொடுத்து விட்டது. எவ்வளவு முயன்றும் அவளால் பாலுவை மறக்க முடியவில்லை. அவனுக்கு மனைவியாகி இல்லறம் நடத்த முடியாவிட்டாலும், அவனுடைய முக தரிசனத்தையாவது அடிக்கடி பெறாது, தன்னால் வாழ முடியாது என்பதை அவள் உணர்ந்து கொண்டு மீண்டும் திருச்சிக்கே திரும்பினாள்.

செய்யூரில் ஹரிஜனத் தெருவில் ஒரு சிறிய மாதா கோவிலும் அதைச் சார்ந்த ஆரம்பப் பள்ளியொன்றும் இருந்தன. தாத்தா அருள்சாமியின் சிபாரிசினால் அந்தப் பள்ளிக்கூடத்தின் உபாத்தியாயினியாக வேலை பெற்று, பாலுவின் அருகே வந்த பிறகுதான் அவள் மனம் நிம்மதியடைந்தது.

மேரியைக் கண்டதும் பாலு பரவசமடைந்தான். ஆனால், அவள் ஆரம்பத்திலேயே அவனிடம், "உள்ளத்தை அடிப்படையாகக் கொண்டு உருவான நமது காதல் அந்த உள்ளத்துடனே தான் நிற்க வேண்டும். அதில் உடற்கலப்பு ஏற்படலாகாது; ஏற்படவும் விடமாட்டேன். நாம் சந்திப்போம்; பேசுவோம்; பழகுவோம். ஆனால் உங்கள் மனைவிக்குத் துரோகமாக நடக்கக் கூடாது" என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டாள்.

அப்படித்தான் அவர்கள் பழகிக் கொண்டிருந்தார்கள். ஆயினும் அதை



ரேவதி தவறுகவல்லவோ எடுத்துக் கொண்டு விட்டாள்! தனக்கு அளித்த வாக்குறுதியை மீறித் தன் கணவனைக் கைவசப் படுத்தவே மேரி இங்கே வந்திருக்கிறுளென்று அவள் கருதி விட்டாள். அவள் மனத்தில் பொறுமைத் தீ கொழுந்து விட்டெரிந்தது. தன் உரிமைக்காகப் போராடி, மேரியை விரட்டத் திட்டமிட்டாள்.

ஒரு ஞாயிறன்று பிற்பகலில் மேரியும் பாலுவும் வீட்டில் உட்கார்ந்து சாதாரணமாக பேசிச் சிரித்துக்கொண்டிருந்தபோது, அங்கே காளியாகித் தோன்றினுள் ரேவதி. "இந்த நாடகம் இனி இங்கு நடைபெறக் கூடாது. மேரி இனிமேல் இந்த வீட்டில் அடியெடுத்து வைக்கக் கூடாது" என்று இடிமுழக்கம் செய்தாள்.

பாலு ஏதோ பேச வாயெடுத்தான். மேரி அவனைத் தடுத்து நிறுத்திவிட்டு, "நீங்கள் வீண் சந்தேகம் கொண்டிருக்கிறீர்கள், ரேவதி அக்கா! ஆண்டவனின் ஆணையாகச் சொல்லுகிறேன். உங்கள் இல்லற வாழ்வைப் பாழ்படுத்த நான் வரவில்லை. இவருடைய முக தரிசனத்தைப் பெருமல் என்னுல் வாழ முடியவில்லை. நான் இங்கு வந்ததற்குக் காரணம் இதுதான்" என்றுள் உணர்ச்சியுடன்.

"யாரிடமடி பசப்புகிறுய்? அன்று 'அகந்தான் காதலின் பிறப்பிடம்; உறைவிடம்' என்றெல்லாம் பிரமாதமாக வரிந்து எழுதினுய். இப்பொழுது அந்த அகம் முகத்துக்கு வந்திருக்கிறது. இன்னும் சில நாட்களில் அவர் உடலுக்கும் வந்துவிடும்......"

"சட்! வாயை மூடு" என்று அவளை அடக்கினுன் பாலு. "உனக்காகத் தன் காதலைத் தியாகம் செய்த உத்தமியிடமா இப்படி அடாது பேசுகிறுய்?"

"ஆமாம், பெரிய தியாகி; மகா உத்தமி; அதனுல்தான் உங்களை மீண்டும் இடைவிடாது சுற்றித் திரிகிறுள்" என்று ஆத்திரம் பொறுக்கமாட்டாமல் அழுதுகொண்டே கூறினுள் ரேவதி.

"அப்படித்தான் சுற்றி வருவாள். என் உள்ளம் அவளுக்குச் சொந்தமானது. எனவே அதைச் சுற்றிவர அவளுக்கு முழு உரிமையும் உண்டு. அதற்குரியவள் மேரிதான். இதற்குச் சம்மதமானுல் நீ இங்கு இரு. இல்லாவிட்டால் இந்த வீட்டை விட்டே போய் விடு" என்றுன் பாலு.

## 5

நாட்கள் சென்றன. மாதங்கள் மறைந்தன. ரேவதி வீடுவந்து கிட்டத் தட்ட ஒரு வருஷமும் ஆகிவிட்டது. வீட்டிலும் சரி; வெளியிலும் சரி; ஒருவராவது அவளுடைய செய்கையை ஒப்புக் கொள்ளவில்லை.

யார் என்ன சொன்னுலும், தான் செய்தது தவறேயல்ல என்ற உறுதியே அவளிடம் மேலோங்கி யிருந்தது. 'மேரி ஒழிந்தாலன்றி அந்த வீட்டில் அடியெடுத்து வைக்கமாட்டேன்' என்ற வீராவேசத்துடனே அவள் நாட்களைத் தள்ளி வந்தாள்.

அன்று காலையில் யாரும் எதிர்பாராதவாறு அந்தச் செய்தியும் வந்தது. காலையில் கோர்ட்டுக்குப் போன அவள் அப்பாதான் அந்தச் செய்தியைக் கொண்டு ஓடோடி வந்தார். செய்யூர்க் காரராம், ஒருவர், ஏதோ கேஸ் விஷயமாகக் கோர்ட்டுக்கு வந்திருந்தவர், மேரி எதற்காகவோ பாலுவிடம் சண்டையிட்டுக் கொண்டு செய்யூரை விட்டே போய் விட்டதாக அறிவித்தாராம்.

ரேவதியால், மேரி தன் கணவனை விட்டுப் போய் விட்டாளென்ற செய்தியையே நம்ப முடியவில்லை. அப்போது வாசலில் தபால்காரனின் குரல் கேட்டதும் ரேவதி எழுந்து கடிதத்தை வாங்கினுள். இதென்ன, எனக்கல்லவா



விலாசமிடப் பட்டிருக்கிறது? கையெழுத்தையும் அவள் உடனே புரிந்துகொண்டு விட்டாள்!

அவசரமாக உறையைக் கிழித்துக் கடிதத்தைப் படித்தாள்:

"அன்புள்ள ரேவதிக்கு,

கடைசியில் உங்கள் கணவரைப் பற்றி நீங்கள்தான் அதிகம் அறிந்துள்ளீர்கள் என்பது உண்மையாகி விட்டது. அவருடைய காதலைப் பற்றி நீங்கள் கண்ட முடிவுதான் சரியாயிற்று. அன்று நான் அவரை உங்களுக்கு விட்டுக் கொடுத்து வெளியேறியது முதல் அவர் உள்ளத்தை மாத்திரமே காதலித்து வந்தேன்; உடலை யல்ல. அவரும் அவ்வாறுதான் நீங்கள் இருக்கும் வரையில் இருந்தார். பிறகு......?

அவர் என் உடலிடமும் இச்சை வைக்கலானுர். அதை நான் தடுத்தேன். தடுத்து விட்டுத்தான் உங்களை உடனே புறப்பட்டு வருமாறு பல கடிதங்கள் எழுதினேன். எக்காரணத்தினுலோ நீங்கள் வரவில்லை.

கடைசியில் சென்ற வாரம், அவர் தமது புருஷ பலத்தைப் பிரயோகித்து என்னை ஆட்கொள்ள முனைந்தார். இனி அவரோடு தங்கியிருப்பது ஆபத்தென்று உடனே திருச்சிக்குக் கிளம்பி வந்துவிட்டேன். என் காதல் கனவு முடிந்து விட்டது. எந்தக் காதலை உள்ளத் தூய்மையிலே பிறந்ததென்று போற்றி வந்தேனே, அது உடலை இச்சித்துத் தோன்றியதுதான் என்பதை இன்று உணர்ந்து கொண்டேன்.

இனி நான் எக்காலத்தும், எதற்காகவும் பாலுவை அண்டமாட்டேன். நான் வெளியேறினுல் தான் அந்த வீட்டில் காலடி வைப்பேனென்ற உங்கள் பிரதிக்ஞையும் நிறைவேறி விட்டது. இனிப் பயமின்றிச் சென்று உங்கள் இடத்தை ஆக்ரமித்துக் கொள்ளுங்கள்.

உங்கள் மனச் சந்துஷ்டிக்காக வேறொரு விஷயத்தையும் இங்கே கூறுகிறேன். சென்னையில் நாளைக் கப்பலில் நானும் தந்தையும் பர்மாவுக்குப் போகிறேம்.

அன்புள்ள சகோதரி,

மேரி"

இந்தக் கடிதத்தைப் படித்ததும் "அம்மா, அம்மா!" என்று சந்தோஷக் கூச்சலிட்டுக் கொண்டு உள்ளே குதித்தோடினுள் ரேவதி. "அம்மா! அப்பாவுக்கு ஆள் அனுப்பு. வரும் வழியில் ரயிலுக்குப் போக வண்டியும் ஏற்பாடு செய்து கொண்டு வரச் சொல்லி அனுப்பு" என்று மூச்சுக்கூட விடாமல் சொன்னுள்.

"என்னடி விஷயம்? இப்பொழுது திடீரென்று எதற்காக இந்தக் குதூகலம்?" என்று விஷயம் புரியாமல் கேட்டாள் அவள் தாயார்.

"இதோ, இந்தக் கடிதத்தைப் பாரம்மா!" என்று மேரியின் கடிதத்தை அவளிடம் வீசிவிட்டு வெளியே உலர வைத்திருந்த தனது துணி மணிகளை எடுக்க ஓடினுள் ரேவதி.

வாசலுக்கு வந்தபோது எதிர் வீட்டுப் பாலு, தெருவில் எதையோ கவனமாகத் தேடிக் கொண்டிருந்தான்.

"என்னடா தேடுகிறுய், பாலு?" என்று கேட்டாள் ரேவதி.

"மத்தாப்பு எல்லா வற்றையும் கொளுத்தித் தீர்த்துவிட்டேன், மாமி. அம்மாவைக் கேட்டால் சாயங்காலம் அப்பா வந்துதான் வேறு வாங்கித் தருவார் என்று சொல்கிறுள். சற்று முன் கொளுத்தினபோது ஒரு மத்தாப்பு பாதி எரிந்து அணைந்து போய் விட்டது. அதை வேண்டாம் என்று தூர எறிந்திருந்தேன். இப்போது அதையாவது எடுத்துக் கொளுத்தலாமே என்றுதான் தேடுகிறேன்" என்றுன் பாலு.

"இதோ கிடக்கிறது, பார்!" என்று ரேவதி குனிந்து தன் காலடியில் கிடந்த அந்தச் 'சொத்தை மத்தாப்பு'வை எடுத்துப் பாலுவிடம் கொடுத்தாள்.

"இது இனிமேல் எரியுமோ, மாமி?"

"ஏன் எரியாது? நன்முக எரியும்" என்றுள் ரேவதி. அப்போது அவள் வதனத்தில் புன்முறுவலும் தன்னம்பிக்கையும் ஒளிவிட்டன.

மிக நம்பகமான ஸ்தாபனமாகிய

# யுனைடெட் இந்தியா லைப் அஷ்யூரன்ஸ்

## கம்பெனியில்

இன்ஷ்யூர் செய்யுங்கள்



தலைமை ஆபீஸ்:

"யுனைடெட் இந்தியா லைப் பில்டிங்"

தபால் பெட்டி நெ. 281

**மதராஸ் - 1**

ஸ்ரீ

# இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க்

லிமிடெட்

(ஸ்தாபிதம்: 1937)

வாக்களிக்கப்பட்ட
மூலதனம் ... ரூ. 50,00,000

செலுத்தப்பட்ட
மூலதனம் ... ரூ. 42,99,800

ரிஸர்வ் நிதி ... ரூ. 12,50,000

★

சேர்மன்:

ஸ்ரீ M. CT. M. சிதம்பரம் செட்டியார்

ஜெனரல் மானேஜர்:

ஸ்ரீ A. சுப்பையா

★

இந்தியா, பர்மா, இலங்கை, மலாயா, தாய்லாந்து ஆகிய இடங்களில் 45-க்கு மேற்பட்ட கிளை ஆபீஸ்கள் உள்ளன.

★

முக்கிய இடங்களில் அயல் நாட்டு ஏஜண்டுகள் உள்ளனர்

★

வெளி நாடுகளுடன் வர்த்தகத் தொடர்பு, இறக்குமதி-ஏற்றுமதி மற்றும் வெளி நாட்டு வர்த்தக விஷயமாக வாடிக்கையாளர்களுக்கு உதவி, சேவை செய்ய எங்கள் பாங்கில் ஓர் அயல்நாட்டு இலாகாவை அமைத்துள்ளோம்.



# இந்தக் காலத்துப் பெண்

பி.எஸ்.மணி

"இந்தாருங்கோ! நீங்கள் இப்படி சும்மா உட்கார்ந்திருந்தால் உங்கள் பெண்ணுக்கு மாப்பிள்ளை தானே வந்து குதித்து விடுவானு!...எங்கேயாவது இரண்டு மூன்று இடம் சுற்றிப் பார்த்தால் தானே! வைகாசி மாதமும் கழிந்து விட்டது. இன்னும்...!" என்று கூறி நிறுத்தினுள் ஜயத்தின் தாயார்.

"அதற்கு என்னே என்ன செய்யச் சொல்றெய்! வேணுமானுல் சும்மா உட்காராமல் ஏதாவது சாமானைச் சுமந்து கொண்டு உட்காருகிறேன்" என்றுர் ஜயத்தின் தகப்பனுர் கேலியாக.

"உங்கள் கேலியெல்லாம் அப்புறம் இருக்கட்டும். இவளுடைய தோழி லக்ஷ்மிக்குக் கூடக் கல்யாணம் நிச்சயமாகி விட்டது. இந்தப் பெண் ஜயத்துக்குத் தான் ஒரு இடமும் தகைவில்லை. நீங்கள் சிறிதாவது சிரத்தை எடுத்துக் கொண்டால் தானே!"

"காலம் வந்தால், ஜயத்துக்குத் தானே கல்யாணமாகி விடுகிறது. நீ ஏன் அநாவசியமாகக் கவலைப்படுகிறெய்!"

"என் பெண் கல்யாணத்தைப் பற்றி நான் கவலைப்படாமல் வேறு யார் கவலைப் படுவது!...அது சரி! இதைக் கேளுங்கள். இவள் தோழி லக்ஷ்மியின் அண்ணு—ஓடிப் போனுனே அந்தப் பிள்ளை,—லக்ஷ்மியின் கல்யாணத்துக்காக வந்திருக்கிறுனும். ஏதோ பம்பாயில் பெரிய வேலையிலிருக்கிறுனும். நல்ல சம்பளமாம். அவனுக்கு நம் ஜயத்தைக் கொடுத்து விட்டால் என்ன!" என்றுள் ஜயத்தின் தாயார்.

"பேஷாகக் கொடுக்கலாம். உனக்குச் சம்மதமானுல் சரிதான்" என்று பதிலளித்தார் ஜயத்தின் தகப்பனுர்.

இதெல்லாம் கூடத்து ரூமில் உட்கார்ந்து புஸ்தகங்களைப் புரட்டிக் கொண்டிருந்த ஜயத்தின் காதில் தெளிவாக விழுந்தது. புஸ்தகம் புரட்டுவதையும் அவள் சிறிது நேரம் மறந்து போய் எண்ண அலைகளில் மிதந்து சென்றுள்.

'ஐயோ! நமக்கு லக்ஷ்மியின் அண்ணு சுந்தரமா கணவனுக வாய்க்க வேண்டும்! அவனைப் போன்ற சந்தேகப் பிராணியைக் கல்யாணம் செய்து கொண்டால் நம் வாழ்க்கை பூராவும் பாழ் தான்' என்ற சிந்தனைகள் அவள் மனத்தில் புரை போடின. அத்தகைய எண்ணங்கள் எழுந்ததும் அவளுக்கு எங்கிருந்தோ ஒரு முரட்டுத் தைரியம் வந்தது.

உடனே அவள் விறுவிறென்று தன் தந்தையிடம் சென்று, "அப்பா! நீங்கள் யாரைக் கல்யாணம் செய்து கொள்ளச் சொன்னுலும் பண்ணிக் கொள்வேன். ஆனுல் சுந்தரத்தைப் போன்ற சந்தேகப் பிராணியைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன்" என்று கூறி விட்டுத் தன் அறைக்குத் திரும்பிப் போய் விட்டாள். அதைக் கேட்டு, ஜயத்தின் தகப்பனுரும் தாயாரும் சிறிது நேரம் அப்படியே மலைத்துப் போய் விட்டார்கள்.

"பார்த்தீர்களோ, இல்லையோ! இந்தக் காலத்துப் பெண்களின் இலட்சணத்தை! எதையும் கூசாமல் துணிச்சலோடு சொல்லி விடுகிறுர்கள்!" என்று குறைப் பட்டுக் கொண்டாள் ஜயத்தின் தாயார்.

ஜயம் தனது அறைக்கு வந்து படுக்கையில் சாய்ந்தாள். அவளுக்கே தன்னுடைய தைரியத்தைக் குறித்து ஆச்சரியமாயிருந்தது. ஆம்! இதுவரை ஒருநாளும் அவள் தன் தகப்பனுரிடம் தைரியமாக எதையும் மறுத்துக் கூறியதில்லை. ஆனுல் அன்று அவள் அவ்வளவு தைரியத்துடன் மறுத்துக் கூறியதற்குக் காரணம், பழைய சம்பவம் ஒன்று அவளுடைய ஞாபகத்துக்கு வந்ததுதான்.

அன்று ஜயம் அழகாக ஆடையணிந்துகொண்டு கலாசாலைக்குப் புறப்பட்டாள். போகும் வழியில் லக்ஷ்மியைக் கூட்டிக் கொண்டு போவதற்காக அவள் வீட்டுக்குச் சென்றுள்.

லக்ஷ்மியின் அறையில் நுழைந்ததும் ஜயத்துக்குப் பகீரென்றது. அங்கு கண்ட விபரீதக் காட்சி அவளைத் தூக்கிவாரிப் போட்டது. ஆம்! லக்ஷ்மி விம்மி விம்மி அழுது கொண்டிருந்தாள். அவளது கரு வண்டை யொத்த கரு விழிகளிலிருந்து கண்ணீர் தாரை தாரையாகப் பொழிந்து கொண்டிருந்தது. அழுது அழுது அவள் முகம் வீங்கிப் போய்த் தக்காளியைப் போல் சிவந்திருந்தது. தலை பின்னுமல் கலைந்தபடி கிடந்தது.

சிறிது நேரம் திகைத்து நின்று விட்டுப் பின், "ஏன் லக்ஷ்மி! உன் உடம்புக்கு என்ன! ஏன் விம்மி விம்மி அழுகிறுய்!" என்று கவலையுடன் கேட்டாள் ஜயம்.

"வேண்டாம், ஜயம்! வீணுக நீயும் எனக்காகக் கவலைப்பட வேண்டுமா! என் வருத்தம் என்னுடனேயே இருந்து சாகட்டும்...சரி, உனக்குக் காலேஜுக்கு நேரமாகிவிட்டதே! போக வேண்டாமா!" என்று பேச்சைத் திருப்பினுள் லக்ஷ்மி.

"நான் இன்று கலாசாலைக்குப் போகப் போகிறதில்லை. உன் வருத்தத்துக்குக் காரணம் தெரிந்து கொண்டால்தான்......!" என்றுள் ஜயம் தீர்மானமாக.

இச்சமயத்தில் வீட்டில் லக்ஷ்மியின் தாயாரும், தமையன் சுந்தரமும் காரசாரமாக விவாதம் செய்து கொண்டிருந்தது தெளிவாக அவர்கள் காதில் வந்து ஒலித்தது. ஜயம் கவனமாக அதைக் கேட்கத் தொடங்கினுள். லக்ஷ்மியின் விம்மல் சத்தமும் சிறிது நேரம் அடங்கி நின்றது.

"ஏண்டா சுந்தரம்! அந்தப் பெண் லக்ஷ்மிக்கு அழுது அழுது முகம் வீங்கிப் போய்விட்டது. இந்த வருஷம் மட்டும் அவள் படித்து விட்டுமே! அடுத்த வருஷம் வேண்டுமானுல் அவள் படிப்பை நிறுத்தி விடலாம்......!"

"போதும், அம்மா! அவள் படித்தால் நான் அந்தக் காலேஜில் படிக்க மாட்டேன். எங்கேயாவது ஓடி விடுவேன்."

"அந்தப் பெண் மழையிலே வர முடியாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்ததைப் பார்த்து அவன் குடையைக் கொடுத்தான். அதை அவள் வாங்கிக் கொண்டு வந்து விட்டாள். அதற்காக......!"

"ஆமாம், அம்மா! இன்றைக்குக் குடையை வாங்கிக் கொண்டு வந்தாள். நாளைக்குக் காதல் பிறக்கும். அதைப் பார்த்துக் கலாசாலை பூராவும் சிரிக்கும். என்னுல் அதைப் பார்த்துக் கொண்டிருக்க முடியாது......எல்லா விஷயத்தையும் துலாம்பரமாக அப்பாவுக்கு எழுதி விட்டேன்......!" என்றுன் அவன்.

"அடே! ஏண்டா இப்படிக் கன்று பின்னுவென்று பேசுகிறுய்! அவருக்கு என்ன எழுதினுய்! அதைச் சொல்லு! ஏதாவது விபரீதமாக......!"

"லக்ஷ்மியின் காலேஜ் படிப்பை நிறுத்தச் சொல்லும்படி எழுதியிருக்கிறேன். அவள் படிப்பை நிறுத்த அவருக்கு இஷ்டமில்லா விட்டால் நான் என் படிப்பை நிறுத்தி விட்டு எங்கேயாவது ஓடி விடுவேன் என்றும் எழுதி யிருக்கிறேன்."

"உன்னைச் சொல்லி என்ன பிரயோஜனம்! உன்னைப் பத்து மாதம் சுமந்து பெற்று எடுத்தேனே, அதற்கு என்னைத் தான் நொந்து கொள்ளணும். இந்த மாதிரிப் பிள்ளையைப் பெறவில்லை யென்று யார்தான் குறைப்பட்டார்களோ!" என்று அவள் அலுத்துக் கொண்டாள்.

அத்துடன் அவர்கள் சம்பாஷணை முடிந்தது என்பதற்கு அறிகுறியாக அந்த அறையில் ஆழ்ந்த நிசப்தம் நிலவியது. இவ்வளவு நேரமும் அவர்களுடைய பேச்சைக் கூர்ந்து கேட்டுக் கொண்டிருந்த ஜயம், "ஏன் லக்ஷ்மி! உன் படிப்பை உன் அண்ணா நிறுத்தச் சொல்லக் காரணம் என்ன! அப்படி என்ன பெரிய தவறு செய்து விட்டாய்!" என்று கேட்டாள்.

"ஜயம்! நான் பெரிய தவறு ஒன்றும் செய்து விடவில்லை......அன்று எனக்குப் 'பிராக்டிகல்' வகுப்பு இருந்ததால் காலேஜ் முடிக்கும் வகுப்பு முடியவில்லை. திடீரென்று மழை பெய்து வந்துவிட்டது. குடைகொண்டு வராததால் திகைத்துப் போய் நின்று கொண்டிருந்தேன். என் வகுப்பு மாணவன் பானு சமயத்தில் வந்து குடையைக் கொடுத்து உதவி செய்தான். முதலில் நான் அவனிடமிருந்து குடையை வாங்கிக் கொள்ள விரும்பவில்லை. ஆனால் அவன் கட்டாயப்படுத்தவே அதை வாங்கிக் கொண்டு வீடு திரும்பினேன்.

"வீட்டை நோக்கிப் பாதிதூரம்தான் வந்திருப்பேன். என் அண்ணா சுந்தரம் குடையுடன் காலேஜை நோக்கி வந்து கொண்டிருந்தான். நான் குடையுடன் வருவதைப் பார்த்துத் திகைத்துப் போய், 'என்ன லக்ஷ்மி! ஏது குடை! யாரிடமிருந்து வாங்கிக் கொண்டு வந்தாய்! நீ மழையில் தவித்துக் கொண்டு நிற்பாயே என்பதற்காக நான் வீட்டிலிருந்து குடையை எடுத்துக் கொண்டு ஓடோடியும் வந்தேன்' என்றான்.

"நானும் சங்கோசமில்லாமல், 'அண்ணா! நீ எனக்காக இவ்வளவு சிரமப்பட்டிருக்க வேண்டாம். மழையில் கஷ்டமாயிருப்பதற்காக என் வகுப்பு மாணவன் பானு தன் குடையைக் கொடுத்தான். அதை வாங்கிக்கொண்டு வந்து விட்டேன்' என்றேன் பெருமையுடன்.

"அண்ணா ஆச்சரியத்துடன், 'என்ன, பானுவிடமிருந்தா!' என்று கேட்டான். 'ஆமாம்' என்று தலையசைத்தேன். அதற்குப் பிறகு வழி நெடுக என் அண்ணா பேசவே யில்லை. இருவரும் மௌனமாக வீடு வந்து சேர்ந்தோம்.

"வீடு வந்ததும் அவன் அம்மாவிடம் போய் நான் பானுவுடன் காதல் கொண்டிருப்பதாக வீண் புரளியைக் கிளப்பி விட்டு என் படிப்பையே நிறுத்தும்படி சண்டை பிடிக்கிறான். அப்பாவுக்கும் கண்டபடி எழுதியிருக்கிறான். அது என்ன விபரீதத்தில் வந்து முடியப்போகிறதோ!" என்று கூறிவிட்டு 'ஹோ'வென்று அழத் தொடங்கினாள் லக்ஷ்மி.

"கவலைப்படாதே, லக்ஷ்மி! அப்படியெல்லாம் ஒன்றும் நேர்ந்து விடாது" என்று தேற்றிச் சென்றாள் ஜயம்.

அன்று வெள்ளிக்கிழமை. ஜயம் வழக்கம் போல் கலாசாலைக்குப் போகும் வழியில் லக்ஷ்மியைப் பார்ப்பதற்காக அவள் வீட்டினுள் நுழைந்தாள். லக்ஷ்மி படுக்கையில் குப்புறப் படுத்துக் கொண்டு அழுது கொண்டிருந்தாள்.

"லக்ஷ்மி, ஏன் அழுகிறாய்! உன் அப்பா விடமிருந்து பதில் வந்து விட்டதா!" என்று கேட்டாள் ஜயம்.

"அப்பாவிடமிருந்து பதில் வந்து விட்டது, ஜயம்! 'லக்ஷ்மியைப் பற்றி நீ ஒன்றும் கவலைப்பட வேண்டாம். அதெல்லாம் என்னைச் சேர்ந்தது. அவள் படிப்பைப் பாதியில் நிறுத்த வேண்டாம். உன் படிப்பை நீ கவனித்துக் கொண்டால் போதும்' என்று காரசாரமாக அண்ணாவுக்குக் கடிதம் எழுதி விட்டார்!"

"லக்ஷ்மி! உன் அப்பா உன் படிப்பைத் தான் நிறுத்தச் சொல்லவில்லையே! பின் ஏன் அழுகிறாய்!" என்று ஜயம் பேச்சின் நடுவில் குறுக்குக் கேள்வி கேட்டாள்.

"ஜயம்! என் அண்ணா அந்தக் கடிதத்தைக் கண்டதும் நேற்று கோபித்துக் கொண்டு வீட்டை விட்டே ஓடிவிட்டான். இவ்வளவு பிடிவாதம் பிடிக்கிறவன் என்று தெரிந்திருந்தால் நான் என் படிப்பையே நிறுத்தியிருப்பேன். நான் படித்து யாருக்குச் சம்பாதித்துப் போட வேண்டும்! என்னால் அவனுடைய படிப்பும் வீணாகிப் போய் விட்டதே!" என்று கூறி விம்மி விம்மி அழத் தொடங்கினாள். ஜயம் எவ்வளவோ சமாதானப் படுத்தியும் அவள் துக்கம் தீரவும் அடங்கவில்லை.

லக்ஷ்மிக்கு அவள் தகப்பனார் படிக்க அனுமதி அளித்திருக்கும் கலாசாலைக்குப் போக அவளுக்கு மனம் வரவில்லை. தன் அண்ணா சுந்தரத்தின் படிப்பு வீணான பிறகு தன் படிப்பைத் தொடருவதற்கு லக்ஷ்மிக்கு மனம் வந்தால்தானே!

* * *

சுந்தரத்தைப் பற்றிய அந்தச் சம்பவம் ஜயத்துக்கு ஞாபகத்துக்கு வந்ததும் அவளுக்கு அவன் மீது அளவு கடந்த வெறுப் புண்டாயிற்று. 'லக்ஷ்மி அன்று தெரியாத்தனமாகக் குடை வாங்கிக் கொண்டு வந்ததற்கே சந்தேகப்பட்டு எவ்வளவு பாடு படுத்தி விட்டான்! நாளைக்கு நாம் அவனைக் கல்யாணம் செய்து கொண்டால் நம்மை என்ன பாடு படுத்த மாட்டான்! சே, சே! எடுத்ததற்கெல்லாம் சந்தேகப்படும் அவனையா நாம் மணம் செய்து கொள்ளுவது! அதைவிடக் கன்னியாக இருப்பதே மேல்' என்ற தீர்மானத்துக்கு வந்தாள் ஜயம்.

சிறிது நேரம் கழித்து அவள் அறைக்கு வந்த ஜயத்தின் தாயார், "ஏண்டி, ஜயம்! உன் தோழி லக்ஷ்மியுடன் ரொம்ப இழைந்தாயே! அவள் அண்ணனைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதற்கு என்ன!" என்று கேட்டாள்.

"போ அம்மா! என்னை ஒன்றும் தொந்தரவு செய்யாதே. நான் அவனைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன்" என்று பதிலளித்தாள் ஜயம்.

"இந்தக் காலத்துப் பெண்களே இப்படித்தான். பெரியவர்கள் சொன்னவர்கள் என்கிற மரியாதை கொஞ்சமும் இல்லாமல் இருக்கிறார்கள். அதுதான் காலம் கெட்டுக் கிடக்கிறது" என்று அலுத்துக் கொண்டே ஜயத்தின் தாயார் தன் காரியத்தைக் கவனிப்பதற்காகச் சமையலறைக்குள் சென்று விட்டாள்.

ஒரு வாரம் கழிந்து விட்டது. ஜயம் அன்று தாம்பிரவர்ணி நதியில் குளித்து விட்டு வருவதற்காகக் குடத்துடன் புறப்பட்டாள். பாதி வழி தான் போயிருப்பாள். ஒரு நாய் 'லொள், லொள்' என்று கத்திக்கொண்டே ஜயத்துக்குப் பின்னும் ஓடிவந்தது. யாரோ ஒரு விஷமச் சிறுவன் ஒளிந்து கொண்டு அந்த நாயின்மீது ஒரு கல்லை வீசி எறிந்து விட்டான் போலும்! நாய் தன்னைப் பின் தொடருவதைக் கண்ட ஜயம் பயந்து 'ஹோ' வென்று அலறிக் கொண்டு ஓடினாள். எதிரே குளித்து





விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்த சுந்தரம் ஜயத்தின் பரிதாப நிலையைப் பார்த்து நாயின் மீது ஒரு கல்லை விசி யெறிந்தான். அவ்வளவு தான்; உயிருக்குப் பயந்து ஓடிய நாய் இருபுறத்திலும் தாக்குதல் ஏற்படவே, பயந்து ஓடுவதை நிறுத்திச் சுந்தரத்தின் மேல் பாய்ந்தது.

சுந்தரம் இன்னொரு கல்லையும் தூக்கி வீசி யெறிந்தான். அடுத்த நிமிஷம் அந்த முரட்டு நாய் ஆக்ரோஷத்துடன் அவன் மீது பாய்ந்து அவன் காலை 'லபக்'கென்று கடித்து விட்டது. தூரத்திலிருந்து அதைப் பார்த்துக் கொண்டிருந்த ஜயம் 'ஐயோ!' என்று கதறி விட்டாள். சுந்தரத்தின் காலிலிருந்து உதிரம் பீறிட்டு வழிந்தது. அவன் தட்டுத் தடுமாறி நடந்துகொண்டே வீடு போய்ச் சேர்ந்தான்.

'அடடா! என்னை மட்டும் அந்த நாய் கடித்திருந்தால்!......ஐயோ! நினைக்கவும் கூசுகிறதே! என்னைக் காப்பாற்றுவதற்காக அவர் தன் உயிரையும் பொருட்படுத்தாமல் முன் வந்தாரே! என்னால் தானே அவருக்குப் பலமாகக் காயம் ஏற்பட்டு விட்டது!' என்று நினைத்ததும் அவள் மனம் இளகியது. அவளை யறியாமல் அவள் மனம் நெகிழ்ந்ததற் கறிகுறியாக கண்களிலிருந்து நீர் அருவியாகப் பொழிந்தது. அவர் மீதுள்ள தப்பபிப்பிராயத்தை யெல்லாம் அந்தக் கண்ணீர் அருவி அடித்துக் கொண்டு போய்விட்டது போலும்! இல்லாவிட்டால் சுந்தரத்தின் மீது அவளுக்கிருந்த வெறுப்பு முழுதும் நீங்கி அன்பு சுரக்குமா, என்ன!

அதற்குமேல் ஜயத்துக்கு அங்கு நிற்க மனம் இடம் கொடுக்கவில்லை. வருத்தம் தாங்க முடியாமல் ஏதோ ஒரு பயம் உந்தித் தள்ள அப்படியே குளிப்பதையும் மறந்து வீட்டுக்குத் திரும்பி விட்டாள் ஜயம். அவள் நெஞ்சம் பட படவென்று அடித்துக் கொண்டது. தன் தாயாரிடம் நடந்த சம்பவத்தைக் கூறக் கூடாது என்று நிச்சயித்துக் கொண்டாள். காரணம் தன் தாயாருக்குத் தெரிந்தால் வெளியில் தனியாகப் போனதற்காகப் பெரிதும் கோபித்துக் கொள்வாளே என்பதுதான்.

ஜயம் தன் இடுப்பிலிருந்த குடத்தைக் கீழே இறக்கி வைத்துவிட்டுத் தன் அறையில் போய்ப் படுக்கையில் பொத்தென்று விழுந்தாள். அவள் மனம் இல்லாத எண்ணம் எல்லாம் எண்ணியது.

* * *

"ஜயம்! அன்றைக்கு நாய் கடித்த காயத்தைக் குணப்படுத்தி விடுவார்களாம். ஆனால் காலை மட்டும் சிறிது உந்தி உந்தி நடக்க வேண்டி வருமாம்" என்று லக்ஷ்மி சொன்னபோது ஜயத்துக்குப் பகீரென்றது. 'ஆம்! அவருடைய அங்கஹீனத்துக்குக் காரணம் யார்! நீ தானே!' என்று இடித்துரைத்தது அவள் நெஞ்சம். அதற்கு மேல் அவர்களுடைய வீட்டிலிருக்கப் பிரியப்படாமல் தன் வீட்டுக்குத் திரும்பி வந்து விட்டாள்.

வீட்டுக்குள் ஜயம் நுழைந்தபோது அவள் தகப்பனாரும் தாயாரும் ஏதோ பேசிக் கொண்டிருப்பது தெரிந்தது. பேச்சு அவளைப் பற்றி யிருந்ததனால் ஜயத்துக்கு அதற்குமேல் வீட்டினுள் அடி யெடுத்து வைக்க முடியவில்லை.

"என்னா! இவள் தோழி லக்ஷ்மியின் அண்ணா வந்திருக்கிறான் என்று சொன்னேனே, அவனை ஒரு நாய் பலமாகக் கடித்து விட்டதாம். இனிமேல் அவன் ஒரு காலை உந்தி உந்தித்தான் நடக்க வேண்டி வருமாம். டாக்டர் சொன்னாராம் அந்த வீட்டு மாமி சொல்லி ரொம்ப வருத்தப் பட்டுக் கொண்டாள்" என்றாள் ஜயத்தின் தாயார்.

"ஆமாம்! அந்தப் பிள்ளைக்கு நம் ஜயத்தைக் கொடுக்க வேண்டும் என்று துடியாய்த் துடித்தாயே! அப்பொழுதே ஜயம் அவனை வேண்டாமென்று சொல்லியது எவ்வளவு நல்லதாகப் போய்விட்டது!" என்றார் ஜயத்தின் தகப்பனார்.

"நான் அப்படி யொன்றும் அவளைச் சிரமப்படுத்த வில்லையே! கல்யாணம் பண்ணிக் கொள்கிறாயா என்று தானே கேட்டேன்!" என்றாள் அவள்.

"இந்தக் காலத்துப் பெண்களைப் பற்றி நீ பெரிதும் குறைப்பட்டுக் கொள்ள வில்லையா! இப்பொழுதாவது இந்தக் காலத்துப் படித்த பெண்கள் எவ்வளவு புத்திசாலிகள் என்று தெரிந்து கொண்டாயா!" என்று சிரித்துக்கொண்டே கூறினார் அவர்.

ஜயம் விஷயம் கட்டுக் கடங்காமல் போவதைப் பார்த்து அங்கிருந்து வந்து, "அப்பா! தயவு செய்து என்னைச் சுந்தரத்துக்கே கல்யாணம் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள். நான் அவரைத்தான் மணந்து கொள்ளப் போகிறேன்" என்றாள் நிர்மலமான குரலில். ஜயத்தின் வார்த்தைகள் அவரைத் தூக்கி வாரிப் போட்டன.

அதை அவர் சமாளித்துக் கொண்டு, "ஏன், ஜயம்! நீ தானே அந்தப் பிள்ளையை முதலில் வேண்டாமென்று சொன்னாய்! இப்பொழுது என்ன வந்து விட்டது! அவனுக்கு ஒரு கால் சரியாக நடக்க முடியாதாமே!" என்று கவலையுடன் கேட்டார்.

"அப்பா அவர் கால் சரியாக நடக்க முடியாததற்குக் காரணம் நான்தான்" என்று கூறிவிட்டுப் பின் நடந்த கதையை விவரமாகக் கூறினாள் ஜயம். அதைக் கேட்டுவிட்டு இருவரும் அப்படியே ஸ்தம்பித்துப் போனார்கள்.

பிறகு அவள் தகப்பனார் குறுக்கிட்டு, "ஆமாம்! அவன் அந்த உதவி செய்ததற்காக அவனைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமோ, என்ன!" என்று கேட்டார். சுந்தரத்தை அவள் கல்யாணம் செய்து கொள்ளுவது அவருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை யென்பது அவர் குரலிலிருந்தே தெரிந்தது.

"ஆமாம்! அவரையே மணப்பதென்று நிச்சயித்து விட்டேன். எனக்காகத் தன் உயிரையும் பொருட்படுத்தாமல் என்னைக் காப்பாற்றத் துணிந்தவர் அல்லவா அவர்!" என்றாள் ஜயம்.

"இந்தக் காலத்துப் பெண்களே இப்படித்தான். எந்தக் காரியத்தையும் வெகு துணிச்சலுடன் செய்வதற்கு முன் வந்து விடுகிறார்கள்" என்று முணு முணுத்தாள் ஜயத்தின் தாயார்.




"ஊர் சுற்றிய எம். எல். ஏ.க்கள் தேர்தலுக்குப் பிறகு என்ன செய்வார்கள்?"
"ஏன்? குடை ராட்டினம் இருக்கவே இருக்கிறது சுற்றுவதற்கு!"


HANOMAG
DIESEL TRACTORS
Macfarlanes
VALA
PAINTS
DEMPSTER
Automatic Water System (U.S.A.)
ELECTRICAL
GOODS
அனைவருக்கும்
நமது
மங்களகரமான தீபாவளி
வாழ்த்துக்கள்!
சௌத் இந்தியா கார்ப்பொரேஷன்
(மதராஸ்) லிமிடெட்
தபால் பெட்டி நெம்பர் 113
80, செம்புதாஸ் தெரு, மதராஸ் - 1
தந்தி: GOODWILL
போன்: 2724 & 3690
Gnel 125
MOTOR-CYCLES
'OTTO SUHNER'
FLEXIBLE
SHAFTS
and
ATTACHMENTS
CLEARING
&
FORWARDING
MORTON
CONFECTIONERY
CIVIL
ENGINEERING
AUTO-RIKSHA
FEDERALS.709




கோயில் மணி டாண் டாண் என்று ஒலித்தது.

பேரிகை தம்தம் என்று முழங்கியது. நாதஸ்வரக் கோஷ்டியார் கானாம்ருதம் பொழிந்து கொண்டிருந்தனர்.

அந்த மங்களகரமான வேளையில் பராக்கிரம பாண்டிய மன்னர் மந்திரிப் பிரதானிகள் சூழ குவித்த கரத்தினராய் ஆலயத்துக்குள் நுழைந்தார். அவருடன் அந்த ஆலயத்தை நிர்மாணித்து முடித்த சிற்பி சொக்காசாரியாரும் அரசருக்குச் சமமாக அலங்கரித்துக் கொண்டு நுழைந்தார்.

ஆம், அந்த ஆலயம் புத்தம் புது ஆலயந்தான். அதற்கு முதல் கும்பாபிஷேகமே அன்றுதான். அந்தக் கும்பாபிஷேக வைபவத்தில் சிற்பி சொக்காசாரியாருக்கு, ஆலயத்தை இவ்வளவு அழகாக நிர்மாணித்து முடித்தமைக்காகப் பரிசுகள் வழங்க ஏற்பாடாகியிருந்தது. ஆகவே, கோயிலில் நகர மக்கள் அனைவரும் குழுமியிருந்தனர். ஏற்கெனவே ஆணவம் பிடித்த சிற்பி சொக்காசாரியாருக்கு, இந்தக் கூட்டத்தைக் கண்டதும் இன்னும் ஆணவம் தலையுச்சிக் கேறியது!

இதைக் கண்ட மக்களில் சிலர் "இந்த மனுஷனின் ஆணவச் செருக்கைத் தணிக்க இன்னும் வேளை வரவில்லையே, ஈசனே!" என்று ஏங்கினர்.

சிற்பி சொக்காசாரியாரின் கையில் கலையிருந்தாலும் உள்ளத்தில் கொடுமை நிறைந்திருந்தது. தாம் ஒருவரே சிற்பக்கலை தெரிந்தவர், மற்றவர்கள் எல்லாம் ஒன்றுக்கும் உதவாதவர்கள் என்ற எண்ணம் கொண்டிருந்தார். அது மட்டுமல்ல; யாராகிலும் அரசனிடம் வந்து, "நானும் சிற்பக்கலை பயின்றவன்; எனக்கும் தங்கள் ஆதரவு..." என்று இறைஞ்சினால், உடனே அந்தச் சிற்பியிடம் சொக்காசாரியார் வாதத்துக்குப் போவார்; அல்லது போட்டிக்கு இழுப்பார். பிறகு அவரைப் போட்டியில் தோல்வியுறச் செய்துவிட்டு, அரசரிடம் சென்று, "சிற்பக் கலையின் 'அ'னா 'ஆ'வன்னா கூடத் தெரியாதவன் தங்கள் சமூகத்தில் வந்து சிற்பக் கலை தெரிந்தவனாகப் பேசிக் கொள்கிறான். அந்த ஆணவத்துக்குத் தண்டனை அவன் கையைச் சிதைத்து அனுப்புவது தான்" என்பார். அரசரும் தமது ஆஸ்தான சிற்பியின் வார்த்தையை வேதவாக்காக மதித்து நடந்து வந்தார்.

இப்படி சொக்காசாரியார் தமது ஆணவத்தினாலும் சூழ்ச்சியினாலும் தமக்கு அரசரிடமிருக்கும் செல்வாக்குக் காரணமாக அவமானப்படுத்தி அனுப்பிய சிற்பிகளின் எண்ணிக்கைக்கு அளவு கிடையாது. அவர்கள் எல்லாம் சிற்பி சொக்காசாரியாருக்கு, "இன்னும் காலம் வரவில்லையா!" என்று தான் ஏங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய ஏக்கம் இறைவனது காதில் விழுந்து விட்டது போலும்!

★

கோயில் கர்ப்ப கிருஹத்தில் தீப ஆராத்தி நடந்து கொண்டிருந்தது. மன்னர் பராக்கிரம பாண்டியர் கற்றுவின் மனம் போலக் கசிந்து கண்ணீர் மல்கி தெய்வ சன்னிதானத்தில் தன்னை மறந்து நின்றார். அவர் பக்கத்திலிருந்த சிற்பி சொக்காசாரியாரின் மனமோ, தம்மைப் பற்றிய நினைவிலேயே ஈடுபட்டிருந்தது. தம்மைப் பற்றி யாராவது பேசுகிறார்களா என்று அவர் கண்களும் காதுகளும் கவனித்தன.

அப்படி அவர் கவனித்தது வீண் போகவில்லை. நிச்சப்தம் நிலவிய அக் கோயிலில், "அட, சும்மா இரு, அப்பா!" "சொன்னால் தெரியவில்லையே, உனக்கு!" "சிறு பிள்ளையாக இருக்கிறாயே!" "என்ன விபரீதம் விளையும், தெரியுமா?"—இப்படியாகப் பற்பல குரல்கள் எழுந்தன.

தீப ஆராத்தி முடிந்து சற்று ஓய்ந்த போது சொக்காசாரியார் வெளியே கலவரம் நிகழும் விஷயத்தை மன்னரின் பார்வைக்குக் கொண்டு வந்தார். உடனே மன்னர் பெருமான், "அங்கே என்ன கலவரம்? கலவரம் செய்பவர் யாராயினும் இங்கே இழுத்து வா!" என்று கட்டளை யிட்டார்.

உடனே நான்கு போர் வீரர்கள் அவ்விடத்தை நோக்கிச் சென்றனர்.

சென்றவர்கள் இந்தக் கலவரத்துக்குக் காரணமாயிருந்த ஒரு இளைஞனை அழைத்து வந்தார்கள். அவன் முகத்தில் பால் வடிந்தது; கலை சொட்டியது; அறிவுச் சுடரும் அன்புக் கதிரும் பின்னிப் பிணைந்தன.

"மகாராஜா, இந்த இளைஞன் நமது சிற்பாசாரியாரை மிகவும் மதிப்புக் குறைவாகப் பேசினான். அதுதான் அங்கு நடந்த கலவரத்துக்குக் காரணம்" என்று கூறினான் போர் வீரர்களில் ஒருவன்.

அவன் சொல்லி முடிப்பதற்குள், "மகாராஜா, ஒருவருக்கு மதிப்புக் கொடுப்பதோ, அல்லது மதிப்பைக் குறைப்பதோ அவரை ஓரளவாவது தெரிந்த பிறகுதான் சாத்தியம். நானோ இந்த ஊருக்குப் புதிது. இப்பொழுது தான் இந்த ஊருக்குள் நுழைந்தேன். கோயில் மணிச் சத்தம் கேட்கவே, சத்தம் வந்த திசை நோக்கி வந்தேன். கோயிலைக் கண்டவுடன் 'புத்தம் புது ஆலயமாக இருக்கிறதே!' என்று எண்ணிக் கொண்டேன். அதற்குள் இன்று தான் கும்பாபிஷேகம் என்று சொன்னார்கள். எனக்கும் ஓரளவு சிற்பக் கலையில் பயிற்சி யுண்டாதலால் முதலில் இங்கிருந்த சிற்பங்களைப் பார்த்த வண்ணம் நுழைந்தேன். முதல் சிற்பத்தைப் பார்த்தவுடனேயே என் மனதில் ஒரு சந்தேகம் உதித்தது. அதைத் தட்டிப் பார்த்தேன். என் சந்தேகம் ஊர்ஜிதமாகி விட்டது. 'ஐயோ, சிற்பக் கலையின் அடிப்படை விஷயங்கள் தெரியாதவர்கள் கூடச் சிற்பி என்று சொல்லிக் கொண்டு சிற்பம் செதுக்க வந்து விடுகிறார்களே' என்று பக்கத்திலிருந்தவர் காது கேட்கச் சொல்லி விட்டேன். இதைக் கேட்ட எனக்கு அக்கம் பக்கத்திலிருந்தவர்கள் என் வாயை அடக்க வந்தார்கள். 'ஐயா, என் மனசுக்குள் தோன்றியதைக் கூறினேன். அதில் தவறு என்ன?' என்றேன். அதற்கு அவர்கள் நான் யாரைப்பற்றிக் குறை கூறுகிறேன் என்று விஷயம் புரியாமல் விளையாடுவதாகச் சொன்னார்கள். 'நான் விளையாடவில்லை; உண்மையைத்தான் சொன்னேன்' என்றேன். அதற்குள் தங்கள் ஆட்கள் என்னைப் பிடித்துக் கொண்டு வந்து இங்கே நிறுத்தி விட்டார்கள்" என்று சொல்லி நிறுத்தினான்.

இளைஞன் இதைச் சொல்லிக் கொண்டு வந்தபோது சிற்பாசாரியா

ரின் கண்களில் கனல் பறந்தது. உள்ளம் ஆத்திரத்தால் தகித்தது. உடல் பதறியது. எல்லாவற்றையும் விட மன்னர் பராக்கிரம பாண்டியர் அந்த இளைஞன் கூறியதைப் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்தது அவருக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை.

பராக்கிரம பாண்டியரோ, "தம்பி, இந்தச் சிற்பங்களில் என்ன குற்றத்தைக் கண்டாய்? நமது சிற்பிக்குச் சிற்பக் கலையில் அடிப்படை ஞானம் கூட இல்லை என்று சொல்லும்படி அப்படி என்ன குற்றத்தைக் கண்டுவிட்டாய், சொல்லு?" என்று முகத்தில் புன்னகை தவழக் கேட்டார்.

"மகாராஜா, ஓரளவு சிற்ப ஞானம் படைத்தவர்கள்கூடச் சிற்பங்கள் செய்வதற்கு இத்தகைய கற்களைத் தேர்ந்தெடுக்க மாட்டார்கள்!" என்றான்.

"ஏன்?" என்று கேட்டார் மன்னர்.

"நான் தட்டிப் பார்த்த கல் தேரை இருக்கும் கல். தேரை இருக்கும் கல்லை யாரும் சிற்பம் செதுக்க உபயோகிக்க மாட்டார்கள்" என்றான் இளைஞன்.

இதைக் கேட்ட சிற்பாச்சாரியார், "இதை இப்போது நிரூபிக்க முடியுமா?" என்று ஆத்திரம் பொங்கக் கேட்டார்.

"ஓ! நிரூபிக்கச் சித்தமாகயிருக்கிறேன்!" என்றான் அந்த இளைஞன் சாவதானமாக.

"தம்பி, நீ நிரூபிக்கத் தவறினால் என்ன நேரும், தெரியுமா? நமது சிற்பி வொச்சாரியாரின் கடுங்கோபத்துக்கு ஆளாவாய். அந்தக் கோபத்தில் சிற்பியார் மிகக் கடுமையான தண்டனை விதிப்பார் என்பது நினைவிருக்கட்டும்" என்றார் மகாராஜா.

'சிற்பி வொச்சாரியார்' என்றதும் இளைஞனின் முகம் கருப்பேறது. சொல்லொணாத வேதனையின் பிரதிபலிப்பு முகத்தில் தெரிந்தது.

இதைக் கவனித்த பாண்டியர், "என்ன தம்பி, முகம் ஒரு மாதிரி வாட்டமுறுகிறது! நிரூபிக்க முடியாமற் போனால் என்ன செய்வது என்று அச்சமாக இருக்கிறதோ?" என்றார்.

"அப்படியெல்லாம் இல்லை. உண்மைக்கு என்றும் பழுதில்லை. நான் கூறியது உண்மை. அதை இக்கணமே நிரூபிக்கிறேன்" என்று சொல்லி வேகமாக அந்தச் சிற்பத்தை நோக்கிச் சென்றான். தான் வைத்திருந்த பையிலிருந்து கல் செதுக்கும் உளி ஒன்றை எடுத்தான். இதற்குள் மகாராஜா, சிற்பாச்சாரியார், மற்றுமுள்ள மந்திரிப் பிரதானிகள் ஆகிய அனைவரும் அவ்விடத்தைச் சூழ்ந்து கொண்டனர்.

அழகுத் தெய்வமே உருவெடுத்தாற் போல் நின்ற ஒரு அப்ஸரஸின் சிற்பம் அது. அவள் தன் நெற்றிக்கு வண்ணத் திலகமிட்டுக் கொண்ட பிறகு தன் அழகை முகம் பார்க்கும் கண்ணாடியில் பார்த்துக்கொண்டு அகமகிழும் காட்சியைச் சிற்பி செய்திருந்தார். அந்த அழகிய உருவத்தின் கைக்கு அருகில் உளியைக் கொண்டு லேசாகத் தட்டினான். அந்தச் சமயத்தில் சிற்பி வொச்சாரியார் பாண்டிய மன்னர் பக்கத்திலிருந்தவர்கள் அனைவரும் இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தனர். இப்படி இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தவர்களின் கண்கள் இன்னும் அகல விரிந்தன, அந்தச் சிற்பத்தில் உடைந்த பகுதியிலிருந்து ஒரு வெள்ளைத் தேரை வெளிப்பட்ட போது! ஜனங்கள் கோவிலே அதிரும்படி ஆரவாரம் செய்தனர். மன்னன் பெரு மகிழ்ச்சி யடைந்தான். ஆனால் சிற்பி வொச்சாரியாரின்



கண்கள் அவமானத்தால் இன்னும் சிவந்தன. அந்த இளைஞனை என்ன செய்தாலும் பாவமில்லை என்று தோன்றியது!

பராக்கிரம மன்னரோ, "தம்பி, உன் கலைத் திறமையை எப்படிப் பாராட்டுவதென்றே எனக்குத் தெரியவில்லை! நீ எந்த ஊர், எங்கிருந்து வருகிறாய்? உன் பெற்றோர் யார்?" என்று பரிவுடன் கேட்டார்.

"மகாராஜா, நான் என் அத்தை வீட்டில் சின்னஞ்சிறு வயதில் விடப்பட்டவன். ஆகவே, எனக்கு என் தந்தையைப் பற்றி ஒன்றுமே தெரியாது. என் மாமா இறக்கும் தறுவாயில் என் தந்தையைப் பற்றி ஏதோ கூற வாயெடுத்தார். ஆனால் அதற்குள் காலதேவன் அவர் உயிரைப் பற்றிச் சென்று விட்டான். பிறகு என் அத்தையிடம் என் தந்தையைப்பற்றிக் கேட்டேன். அவளும் 'தம்பி, உனக்கு ஒரு தந்தை இருப்பதாக எண்ணவே வேண்டாம்' என்று சொல்லிக் கடைசி வரையில் என் தந்தையைப் பற்றிக் கூறவில்லை. அவர்கள் இருவரும் காலகதி யடைந்த பிறகு நான் எங்கள் ஊர் அண்மையிலிருந்த சிற்பி ஞானப் பிரகாச ஆச்சாரியாரிடம் சிற்பக் கலை பயின்றேன். அவர் ஒரு கை முடமானவர். அவர் கை எப்படி முடமாயிற்று என்று கேட்டபோது, சிற்பி வொச்சாரியாரின் பொறுமையினாலே தம் கை முடமானதாகக் கூறினார். அன்பே உருவாய் அமைந்த என் குருநாதரின் கையை முடமாக்கியவன் மனிதனாக இருக்க முடியாது; மனித உள்ளம் அவனுள் துடிக்க முடியாது. அப்பொழுதிலிருந்து சிற்பி வொச்சாரியார் என்றாலே எனக்கு அளவுகடந்த வெறுப்புத்தான். ஆகவே தாங்கள், நான் இதை நிரூபிக்க முடியாவிட்டால் சிற்பி வொச்சாரியாரிடம் தண்டனை அடைய நேரும் என்றபோது எனக்குச் சொல்லொணா மனவேதனை யுண்டாயிற்று. மகாராஜா, என் மனதிலுள்ளதை யெல்லாம் தங்களிடம் சொல்லிவிட்டேன். குற்றம் குறையிருந்தால் தயவு செய்து மன்னித்துவிடுங்கள்" என்றான்.

"தம்பி, உன் அத்தையின் பெயர் என்ன, அப்பா?" என்று வொச்சாரியார் கேட்டார். அப்போது அவர் குரலில் கொஞ்சமும் கடுமை தொனிக்கவில்லை.

"திலகவதி அம்மையார்" என்று சொன்னான் இளைஞன்.

உடனே வொச்சாரியார், "தம்பி, அம்பலவாணா!" என்று கூவி அந்த இளைஞனை அப்படியே தழுவிக்கொண்டார்.

உண்மையை நிரூபித்தமைக்காகச் சிற்பி வொச்சாரியார், அந்த இளைஞனுக்கு என்ன தண்டனை விதிப்பாரோ என்று அங்கிருந்தவர்கள் யாவரும் பயந்து கொண்டிருந்தனர். அந்தச் சமயத்தில் சற்றும் எதிர்பாராதவிதமாகச் சிற்பியார் அந்த இளைஞனைப் பெயரிட்டு அழைத்துக் கண்ணீர் பெருக்கியது அவர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்திவிட்டது.

சிற்பி வொச்சாரியார் தம் தொண்டையைக் கனைத்துக்கொண்டு கூறினார்.

"மகாராஜா, இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு எனக்கு என் பெற்றோர் கல்யாணம் செய்து வைத்தனர். அப்போது எனக்கு மனைவியாக வாய்த்தவள் கற்புக்கரசியாய், வாழ்க்கைத் துணைவியாய் இருந்தாள். ஆனால் என் துரதிர்ஷ்டத்தின் காரணமாக, அவள் ஒரு வயதுக் குழந்தைக்குத் தாயாக இருந்தபோது குழந்தையையும் என்னையும் பரிதவிக்க விட்டுப் போய் விட்டாள். நான் ஒரு வயதுக்

குழந்தையைப் பராமரிக்க முடியாமல் ஒரு தவறு செய்தேன். இரண்டாம் முறையாக மணந்தேன். அதனால் நான் அடைந்த இன்னல்களும், குழந்தை பட்ட கஷ்டங்களும் சொல்லி முடியாது. இந்தச் சமயத்தில்தான் என் தமக்கை நிலவெழியார் வீட்டுக்கு வந்திருந்தாள். என் சிசு என் இரண்டாம் மனைவியிடம் படும் நரக வேதனையைக் கண்டு தாளாமல் தம்முடன் அழைத்துச் சென்றார். வாழ்க்கையில் ஏற்பட்ட பல கசந்த அனுபவங்கள் என்னை ஒரு சுயநலக்காரனாக மாற்றிவிட்டன. என்னைத் தவிர ஒரு சிற்பியும் வாழக்கூடாது என்ற உணர்ச்சி ஏற்பட்டது. இதன் காரணமாக நான் இழைத்த தீமைகள் கொஞ்ச நஞ்சமல்ல. நூற்றுக்கணக்கான சிற்பிகளை அவமானப் படுத்தினேன். அதற்கெல்லாம் தகுந்த தண்டனை கிடைத்து விட்டது. நானே சிற்பக் கலையில் மகா பிராக்ஞன் என்று இறுமாந்திருந்தேன். அந்த ஆணவம் இன்று என் அருமைப் புதல்வனான அம்பலவாணனால் தகர்க்கப்பட்டு விட்டது. என் புதல்வன் என்னைவிடச் சிற்பக் கலையில் தேர்ந்தவன் என்பதைக் காண, என் உள்ளம் பெரிதும் மகிழ்ச்சி யடைகிறது. மகாராஜா, இன்றிலிருந்து இவனையே, என் அருமைப் புதல்வனுமே இந்த அம்பலவாணனையே தங்கள் ஆஸ்தான மகா சிற்பியாக ஏற்க வேண்டும். நான் இத்தனை நாளும், என் சகபாடிகளுக்கு, இந்தக் கலையிலுள்ளவர்களுக்கு இழைத்த தீமைக்குப் பிராயச்சித்தமாக, உலகை எதிர்த்து விட்டுக் காஷாயம் பூண்டு துறவறம் மேற்கொள்ளப் போகிறேன். இதற்குத் தாங்கள் அனுமதி தர வேண்டும்" என்றார் சிற்பி லொச்சாரியார்.



இதை யெல்லாம் கேட்டவுடன் பராக்கிரம பாண்டியர் கண்களிலும் கண்ணீர் மல்கி விட்டது. இதயம் தழுதழுத்தது.

"தம்பி, அம்பலவாணா! உன் பொறுப்பில் உன் சிற்றம்மையை விட்டுச் செல்கிறேன். அவள் உன் சிறு வயதில் உனக்குத் தீங்கிழைத்திருந்தாலும், அதை யெல்லாம் சற்றும் பாராட்டாமல் அன்புடன் நீ நடந்து கொள்ள வேண்டும். இதுதான் நான் உன்னிடம் தந்தை என்ற உரிமையுடன் கேட்டுக் கொள்கிறேன்" என்று சொல்லிவிட்டு சிற்பி லொச்சாரியார் அங்கு கூடியிருந்த எல்லோரிடமும் பிரியா விடை பெற்றுக் கொண்டு கோயிலின் பிராகாரத்தை விட்டு வெளியேறினார்.

அம்பலவாணன் கண்களில் கண்ணீர் ஆறாகப் பெருகியது. அங்கே கூடியிருந்தவர்கள் எல்லாரும் வெளியே சென்று கொண்டிருந்த சிற்பியையே பார்த்த வண்ணம் நின்று கொண்டிருந்தனர்.


பருத்தி நூல்களுக்குப் பிரதான ஸ்தாபனம்

**மதுரை மில்ஸ் கம்பெனி லிட்.**

**மதுரை - தூத்துக்குடி - அம்பாசமுத்திரம்**

*

**5,00,000 நூற்கும் கதிர்கள் நெம்பர் 80 வரை நூல்கள்**

*

எங்களுடைய விசேஷமான நூல்கள் :

கைத்தறி, மில்தறி, பின்னல் தறிகளுக்கேற்ற சகலவிதமான ஒற்றை, இரட்டை, மடக்கு, காரிக்கன் நூல்கள்

நாங்கள் நூற்பதைத் தவிர நெய்வதில்லை.

மானேஜர்கள்

**ஏ. & எப். ஹார்வி லிமிடெட்**

போன் : 250 (4 Lines) மதுரை தந்தி : "ஹார்வி"

# சாவித்திரியின் சகோதரி

ஸோமாஸ்



வாசுதேவன் எப்பொழுது வரப் போகிறான் என்று காத்துக் கொண்டிருந்த கருணாவுக்கு அவன் வாசற்படியில் ஏறுவதைப் பார்த்ததும் ஆனந்தம் தாங்கவில்லை. வேகமாகப் போய்ப் புன்னகையுடன் அவனை வரவேற்றாள். அவன் தன் அறைக்குச் சென்று உடைகளை மாற்றிக் கொண்டு, கை, கால், முகங்களை அலம்பிக் கொண்டு, வழக்கமாக உட்காரும் சாய்வு நாற்காலியில் வந்து உட்காருவதற்குள் துடித்துப் போய் விட்டாள் கருணா.

கணவன் சாய்வு நாற்காலியில் அமர்ந்ததும், கருணா டிபனைக்கொண்டு வந்து வைத்தாள்.

டிபனைச் சாப்பிட்டுக் கொண்டே வாசுதேவன், "கருணா, என்ன விசேஷம்? உன் முகம் ஒரேயடியாக மலர்ந்திருக்கிறது! சந்தோஷம் தாங்க முடியாமல் பொங்குகிறது! விஷயத்தைச் சொன்னால் நானும் உன்னோடு சேர்ந்து சந்தோஷப் படுவேனே!" என்றான்.

உடனே கருணா பரபர வென்று கூடத்துக்குப் போய் ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து வாசுதேவன் கையில் கொடுத்து, "அக்காவும் அத்திம்பேரும் நாளைக்கு இங்கே வருகிறார்கள். அக்கா எழுதியிருக்கிறாள். தீபாவளி மிகவும் அமர்க்களமாகத்தான் இருக்கும். இல்லையா?" என்று கேட்டுக் கொண்டே அவன் முகத்தைப் பார்த்தாள். வாசுதேவன் அந்தக் கடிதத்தைப் படிப்பதில் முனைந்து விட்டான்.

அன்புள்ள கருணாவுக்கு,

நீயும் மாப்பிள்ளையும் எழுதிய கடிதம் கிடைத்தது. நானும் அத்திம்பேரும் இன்றைக்குப் புறப்பட்டு நாளைக்காலை அங்கு வந்து சேருகிறோம். மாப்பிள்ளையிடமும் சொல்லு. பல கஷ்டங்களுக்கு மத்தியில் அத்திம்பேருக்கு லீவு கிடைத்தது. ஒரு மாதம் உங்களோடு இருக்கப் போவதை நினைத்தால் சந்தோஷமாயிருக்கிறது. மற்றவை நேரில்.

உன் அன்புள்ள,
சாவித்திரி.

இந்தக் கடிதத்தைப் படித்து முடித்ததும் வாசுதேவனின் மனம் பழைய நினைவுகளைச் சாவதானமாகத் திருப்பிப் புரட்ட ஆரம்பித்தது.

அப்பொழுது வாசுதேவனுக்குப் பத்து வயது இருக்கும். சென்னை திருவல்லிக்கேணியில் அவன் குடும்பம் இருந்தது. வாசற்புறத்து அறையையும் பின் கட்டிலிருந்த ஒரு சமையல் அறையையும் மாத்திரம் வாடகைக்கு விட்டு விட்டு, மற்றபடி வீடு முழுவதையும் வாசுவின் தகப்பனாரே வைத்துக் கொண்டிருந்தார்.

அந்த இரண்டு அறைகளும் அப்பொழுதுதான் காலியாயின. ஜகதீசன் என்னும் ஒரு வாலிபன் அந்த இரண்டு அறைகளையும் எடுத்துக் கொண்டான். அவன் வந்ததிலிருந்து வாசுதேவனுக்குப் பொழுது போவது கஷ்டமில்லாமலிருந்தது.

சாப்பிடுவதற்கு முன்பு ஜகதீச மாமாவின் அறையில், சாப்பிட்டபின்பு ஜகதீச மாமாவின் அறையில், படுக்கும் முன்பு ஜகதீச மாமாவின் அறையில், படுக்கையை விட்டு எழுந்ததும் ஜகதீச மாமாவின் அறையில்—இப்படியாக வாசுதேவன் அல்லும் பகலும் அனவரதமும் ஜகதீசனோடேயே இருந்து கொண்டிருந்தான்.

ஜகதீசனுக்கும் வாசுதேவனிடம் தனிப் பிரியம் உண்டாகி விட்டது. காலையில் எழுந்ததும் அவன், முதல் காரியமாகக் காப்பி போடுவான். அந்தக் காப்பியில் கொஞ்சம் வாசுதேவனுக்குக் கொடுப்பான். அப்படி ஒரு நாள் அவனுக்குக் காப்பி கொடுக்கா



விட்டால் ஜகதீசனுக்கு என்னவோ போல் இருக்கும். அன்றைக்கு முழுவதும் அவனுக்குக் காப்பி சாப்பிட்ட மாதிரியே இருக்காது.

"அடே வாசு, அசடாயிருக்கிறாயே! காப்பி சாப்பிடும்போது மாமாவைத் தொந்தரவு செய்யாதேடா, இங்கே வா!" என்று காலையில் எழுந்ததும் காப்பியைத் தயார் செய்து வைத்துக் கொண்டு அவன் அம்மா கூப்பிடுவாள்

அப்பொழுது, "இல்லை, மாமி! நான்தான் அசடு! வாசுவைக் காப்பி சாப்பிடச் சொல்லித் தொந்தரவு செய்கிறேன். வாசு ரொம்ப சமர்த்து!" என்று சொல்லுவான் ஜகதீசன்.

ஜகதீசன் ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டு அந்த வீட்டில் இருந்தான். அவனுக்குக் கல்யாணம் ஆகி இருந்தது. அவன் மனைவி சாவித்திரி பிறந்தகத்திலிருந்து இன்னும் வரவில்லை. சௌகரியமாக இடம் கிடைக்காத காரணத்தினால் குடும்பம் வைக்க முடியவில்லை. இந்த வீட்டில் கூட முதலில் வாசற்புறத்து அறை மட்டும் தான் கிடைத்தது. இரண்டு மாதங்களுக்குப் பிறகுதான் அவனுக்குச் சமையற்கட்டு கிடைத்தது.

ஜகதீசன் தினந்தோறும் 'ஸ்டவ்' அடுப்பை மூட்டிக் காப்பி போடுவதையும், பிறகு காப்பிப் பாத்திரங்களையெல்லாம் அவனே வேலைக்காரியிடம் தேய்ப்பதற்குப் போட்டு வாங்கி வைப்பதையும் பார்த்தால் வாசுதேவனுக்கு ஆச்சரியமாயிருக்கும்.

ஒரு நாள் வாசு, "ஏன் மாமா, உங்கள் வீட்டில் மாமியில்லையா? பெண்கள் செய்ய வேண்டிய காரியங்களையெல்லாம் நீங்கள் செய்கிறீர்களே! ஹோட்டலில் என்னத்துக்காகக் கண்டதைச் சாப்பிட்டுக் கொண்டு ஒண்டியாக இருக்கிறீர்கள்?" என்று ஜகதீசனைக் கேட்டான்.

"மாமிதானே, வாசு! ஊரில் இருக்கிறாள். வருவாள். கடிதம் வந்ததும் அன்றே ஸ்டேஷனுக்குப் போய்

மாமியை அழைத்துக் கொண்டு வர வேண்டியதுதான்!" என்று ஜகதீசன் சொன்ன பிறகுதான் வாசு ஒருவாறு சமாதான மடைந்தான்.

தினந்தோறும் ஜகதீசன் வந்ததும் வாசு அவன் அறைக்கு ஓடுவான்.

"மாமா, இன்று ஊரிலிருந்து கடிதாசு வந்ததா? மாமி எப்பொழுது வருகிறாள்?" என்று கேட்பான்.

இன்றைய தினமும் வாசு அதே கேள்வியைத் தான் கேட்டான். தினமும் அவனுக்குக் கிடைக்கும் பதில் தான் இன்றைக்கும் கிடைக்கும் என்று எதிர்பார்த்தான் வாசு. ஆனால் இன்று அவனுக்குக் கிடைத்த பதில் உற்சாக மாகவே இருந்தது.

"இன்னும் புறப்படுவதாகக் கடிதாசு வரவில்லை, வாசு! நல்ல நாள் பார்த்துக் கொண்டு வந்து விடுவார்கள்! இது ஆடி மாசம். ஆடி மாசத்தில் குடித்தனம் வைக்கக் கூடாது. அடுத்த மாசம் தான் வருவார்கள். அடுத்த மாசம் வரையில் ஹோட்டலில் தான் சாப்பிட்டாக வேண்டும்!" என்று ஜகதீசன் சொன்னதைக் கேட்க வாசுவுக்குச் சந்தோஷமாயிருந்தது. வெகு நாட்களாக அவன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் அந்த 'மாமி' ஒரு மாதத்தில் எப்படியும் வந்து விடுகிறாள் என்று நினைத்த போது அவன் மிகவும் சந்தோஷமடைந்தான். மாமியைப் பார்க்க வேண்டும் என்னும் ஆவலும் அவனுக்கு அதிகமாயிற்று.



அன்று ஜகதீசன் ஆபீஸிலிருந்து வரும்போதே, "வாசு, வாசு!" என்று மகிழ்ச்சி பொங்கக் கூப்பிட்டுக் கொண்டு வந்தான்.

"ஏன் மாமா?" என்று கேட்டுக் கொண்டே ஓடி வந்தான் வாசு.

"வாசு, நாளைக்குக் காலையில் உன் மாமி வருகிறாள்! கடிதாசு வந்திருக்கிறது. நான் காலையில் ஸ்டேஷனுக்குப் போய் அவளை அழைத்துக் கொண்டு வரவேண்டும். நல்ல வேளை, நாளைக்கு ஞாயிற்றுக் கிழமை! ஒரு வேளை ரயில் தாமதமாக வந்தால் கூடக் காத்திருந்து நிதானமாக அழைத்துக் கொண்டு வரலாம்!" என்றான் ஜகதீசன்.

"ஏன் மாமா, மாமி நாளைக்கு நிச்சயமாக வந்து விடுவாள், இல்லையா?"

"நிச்சயம் வந்து விடுவாள், வாசு!"

"மாமி தனியாகவா ரயிலில் வருவாள்? ஏன் மாமா?" என்று வாசுதேவன் இன்னொரு கேள்வியையும் கேட்டு வைத்தான்.

"இல்லை, வாசு! உன் மாமியின் அம்மாவும் அவள் கூட வருகிறாள்!" என்று சொன்னான் ஜகதீசன்.

"எந்த ஊரிலிருந்து மாமா வருகிறார்கள்?" என்று கேட்டான் வாசு.

"கும்பகோணத்திலிருந்து வருகிறார்கள்!" என்றான் ஜகதீசன்.

வாசு அதற்கு மேல் ஜகதீசனை ஒன்றும் கேட்கவில்லை. அவன் மனம் ஊரிலிருந்து வரப்போகும் மாமியைப் பற்றிய நினைப்பிலேயே லயித்திருந்தது. மாமி எப்படியிருப்பாள்? என்ன மாதிரி பழகுவாள்? தன்னிடம் பிரியமாயிருப்பாளா? இப்படியெல்லாம் அவன் மனத்தில் பல கேள்விகள் எழுந்தன. அன்று முழுவதும் வாசுதேவன் அதே நினைவில் இருந்தான்.

மறுநாள் அதிகாலையில் வாசுவை அவன் வீட்டு வாசலில் வண்டி வந்து நின்ற சத்தம் உலுக்கி எழுப்பியது. அவன் எழுந்து ஓடி வாசலில் போய்ப் பார்த்தான். வண்டியிலிருந்து முதலில் ஜகதீசன் இறங்கினான். அவனுக்குப் பின்னாலேயே ஒரு பெண் இறங்கினாள். அவளுக்கு இருபது வயது இருக்கும். அவளுக்குப் பின்னாலே கொஞ்சம் வயதான அம்மாள் இறங்கினாள்.

வாசுதேவன் அவர்களைப் பார்த்ததும் உள்ளே ஓடி விட்டான். அவசரம் அவசரமாகப் பல் தேய்த்து விட்டுத் தலை வாரிக் கொண்டு கூடத்துக்கு வந்து நின்று கொண்டான். ஜகதீசன் அறையில் நடப்பதையெல்லாம் இங்கிருந்தபடியே கவனித்தான்.

சற்று நேரத்துக்கெல்லாம் ஜகதீசன், "வாசு! வாசு!" என்று அப்போது கூப்பிட்டான்.

அவன் கூப்பிட்டதும் முன்மாதிரி வாசுதேவன் அந்த அறைக்கு ஓடவில்லை. அங்கு போவதற்கே அவனுக்கு வெட்கமாயிருந்தது. 'மாமி' என்றால் அவன் மனத்திரையில் கற்பனை செய்து வைத்த மாதிரி 'கோசுவம்' புடவையும் அதுவுமாகக் கர்நாடகமாயில்லை. நேரில் மாமியைப் பார்த்ததும் அவனுக்கு எங்கிருந்தோ கூச்சம் வந்துவிட்டது. பத்தரை மாற்றுத் தங்கம் மாதிரி இருந்தாள் சாவித்திரி. அவள் தலையில் அடர்ந்து வளர்ந்திருந்த கூந்தல் கொஞ்சம் கொஞ்சம் சுருண்டு அலை அலையாகப் படிந்து அவளுக்கு அதிக அழகைத் தந்தது. கணீர் என்ற அவளுடைய பேச்சும் கலகல என்ற சிரிப்பும் அந்த வீடு முழுவதும் நிறைந்து ஒரு அலாதிக் களையை உண்டாக்கியது.

"வாசு, வாசு!" இந்தத் தடவை ஜகதீசனோடு சேர்ந்து சாவித்திரியும் கூப்பிட்டாள்.

வாசு வெட்கத்தோடு அந்த அறையின் வாசற்படியண்டை நின்றான்.

"வாசு, உள்ளே வா! தினம் என்னோடேயே இருப்பாயே! இன்றைக்கு என்ன உனக்கு அவ்வளவு வெட்கம்! மாமி வருவதற்கு முன்னால் தினம் நூறு தடவை விசாரித்தாய். மாமியை நேரில் கண்டால் பேசமாட்டேன் என்கிறாயே!" என்றான் ஜகதீசன்.

"அம்பி, வா! இந்தா, உனக்காகப் பக்ஷணம் செய்து கொண்டு வந்திருக்கிறேன். உன்னைப் பற்றி மாமா நிறைய எனக்கு எழுதியிருக்கிறார்! நீ ஆண் பிள்ளை. வெட்கப்படலாமோ?" என்று கேட்டுக் கொண்டே சாவித்திரி அறையை விட்டு வெளியே வந்தாள். அவன் கையைப் பிடித்துக் கொண்டு அதில் ஒரு தித்திப்பு ஸோமாஸை வைத்தாள். வாசுதேவனுக்கு ஒன்றும் புரியவில்லை. நெருங்கி வந்த அவள் முகத்தைக் கவனித்துப் பார்த்தான். அந்த முகத்தில் இருந்த வசீகரமும் வாத்ஸல்யமும் அவனை ஆனந்த பரவசப் படுத்தின.

இரண்டு நாட்கள்தான் வாசுதேவன் மாமியுடன் நெருங்கிப் பழக வெட்கப்பட்டான். வர வர, அவன் மிகவும் சுதந்திரத்துடன் பழகலானான். மாமியோடு விளையாடினால்தான் அவனுக்கு விளையாடினது போலத் தோன்றும். பள்ளிக்கூடத்துக்குப் போகும் நேரம் தவிர மற்ற நேரம் எல்லாம் சாவித்திரியுடன்தான் விளையாடுவான். அவர்கள் விளையாட்டில் அதிகமாக இடம் பெற்றது பரமபத பட விளையாட்டுத்தான். பாம்பு வழியாக எத்தனை தடவை இறங்கினாலும் அவனுக்கு அலுக்காது. ஒரு தடவை பாம்பின் வாயில் விழுந்து கீழே இறங்கும்போது சாவித்திரி குழந்தை மாதிரி 'ஓ' வென்று கத்திச் சிரிப்பாள். வாசுவும் சிரிப்பான்.

ஒருநாள் பரமபத படம் வைத்துக் கொண்டு வாசுவும் சாவித்திரியும் விளை

யாடினார்கள். ஆரம்பத்திலிருந்தே சாவித்திரிக்கு அன்று ஒரே தோல்வியாக இருந்தது. அவள் எத்தனை தடவைதான் பாம்பின் வாயில் விழுவாள்? வாசு ஓயாமல் ஜெயித்தான். அவளுக்கு அன்றைய தினம் விளையாட்டில் அலுப்புத் தோன்றி விட்டது.

"விளையாடினது போதும், போடா வாசு!" என்று அலுப்போடு கூறி விட்டு, சாவித்திரி எழுந்து விட்டாள்.

வாசு, "அதெல்லாம் முடியாது, மாமி! நீங்கள் விளையாடித்தான் ஆக வேண்டும்!" என்று அவள் கைகளைப் பிடித்துக் கொண்டு கட்டாயப்படுத்திப் பார்த்தான். அவள் கையைத் திமிறிக் கொண்டு எழுந்து விட்டாள். உடனே வாசு கண்களில் நீர் ததும்ப எழுந்து போய் ஒரு மூலையில் உட்கார்ந்துவிட்டான். அவனது முகத் தோற்றத்தைக் கண்ட சாவித்திரிக்கு மனம் இளகி விட்டது.

"அழாதேடா, வாசு! வா, விளையாடலாம்!" என்று சொல்லி விட்டு, சாவித்திரி மீண்டும் அவனோடு விளையாட உட்கார்ந்தாள்.

அந்தச் சம்பவத்தை இப்போது நினைத்துப் பார்த்தால் கூட வாசுவுக்கு ஆச்சரியமாயிருந்தது. இன்னொரு சம்பவம், அவன் மனதிலே மறக்க முடியாமல் பலமாக இடம் பெற்றிருந்தது.

ஒரு நாள் ஜகதீசன் ஆபீஸிலிருந்து வந்தது முதல் யாருடனும் பேசவில்லை. வாசுவைக் கூடக் கவனிக்கவில்லை. மௌனமாகச் சாப்பிட்டு விட்டுத் தன் அறைக்கு வந்து உட்கார்ந்து விட்டான். சற்று நேரத்துக்கெல்லாம் சாவித்திரியும் சமையல் அறையைப் பூட்டிக்கொண்டு முகத்தை உர்ரென்று வைத்துக் கொண்டு ஒன்றும் பேசாமல் உள்ளே வந்து உட்கார்ந்தாள்.

வாசு வழக்கம் போல அந்த அறைக்கு வந்து பார்த்தான். மாமாவும் மாமியும் இருந்த மாதிரி அவனுக்குப் பிடிக்கவில்லை.

"மாமா, மாமா!" என்று இரண்டு தடவை அழைத்துப் பார்த்தான். ஆனால் ஜகதீசன் பதில் பேசவில்லை.

மறுபடியும் வாசு, "மாமி, மாமி!" என்று அழைத்தான். மாமியும் பதில் பேசவில்லை.

உடனே வாசு, தனக்குத் தானே, 'என்னடா இது! அதிசயமாயிருக்கிறதே! மாமா மாமியுடன் கோபித்துக்கொண்டிருந்தால், இருந்துவிட்டுப் போகட்டுமே! மாமி என்னத்துக்காகப் பதிலுக்குக் கோபித்துக்கொள்ள வேண்டும்? அவள் பாட்டுக்கு என்னோடு பேசிச் சிரித்துக் கொண்டிருந்தால் என்ன?' என்று உரக்கவே கேட்டுக் கொண்டான்.

மாமா, மாமி இருவருமே 'குப்'பென்று சிரித்து விட்டார்கள். இந்தக் கடந்த காலச் சம்பவத்தை நினைத்துப் பார்த்து வாசுதேவன் தனக்குத் தானே சிரித்துக் கொண்டான்.

எல்லாவற்றையும் விட அவன் மனதில் பசுமையாயிருந்த சம்பவம் ஒன்றே ஒன்றுதான்.

அன்று அவன் பள்ளிக்கூடத்துக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தான்.

"வாசு, வாசு!" என்று மாமி அன்போடு கூப்பிடும் குரல் கேட்டு அந்த அறைக்கு ஓடினான்.

"வாசு, ஒரு முக்கியமான சமாசாரம் உனக்குத் தெரியுமோ? மாமாவுக்கு உத்தியோகத்தில் 'பிரமோஷன்' கிடைத்து, பம்பாய்க்கு மாற்றலாகி உத்தரவு வந்து விட்டது. நாளைக்குப் பம்பாய்க்குப் போக வேண்டும்!" என்றாள் சாவித்திரி.

"நீங்களும் கூடப் போகிறீர்களா, மாமி?" என்ற கேள்வி வாசுவையும் அறியாமலே அவன் வாயிலிருந்து வந்து விட்டது.

"ஆமாண்டா, கண்ணே! மாமாவை விட்டு விட்டு நான் எப்படி இருக்க முடியும்?" என்று சொல்லிக் கொண்டே அவனைத் தழுவிக்கொண்டு சாவித்திரி கண்ணீர் உகுத்தாள்.

"இனிமேல் இங்கே வரவே மாட்டீர்களா, மாமி?" என்று கேட்கும் போது வாசுவின் குரல் தழ தழத்தது. துக்கம் தொண்டையை அடைத்தது. கண்களில் நீர் பெருகியது. அவனுக்கு உலகமே இருண்டு விட்டது போலிருந்தது.

இப்பொழுது நினைத்துப் பார்த்தால் கூட வாசுவுக்கு ஆச்சரியமாக இருந்தது. மாமியைப் பிரிந்த தன்னுடைய அந்த நிலைக்குத் தாயைப் பிரிந்த கன்றின் தீன நிலையை ஒப்பிடுவதா, பகவானைப் பிரிந்த பக்தனின் பரிதவ நிலையை ஒப்பிடுவதா, பார்வையில்லாதிருந்த ஒருவன் பார்வையைப் பெற்றுத் திடீரென்று அதை இழந்து விட்ட நிலையை ஒப்பிடுவதா? ஒன்றுமே தோன்றவில்லை வாசுவுக்கு.

மறுநாள் இரவு மாமாவும் மாமியும் தங்கள் இடத்தைக் காலி செய்துவிட்டு ஊருக்குப் புறப்பட்டு விட்டார்கள். போகும்போது மாமா வாசுவுக்கு ஒரு பேனாவைப் பரிசாக அளித்தார். மாமி அவனை அணைத்துக் கொண்டு "வாசு, என்னை மறந்து விடமாட்டாயே!" என்று கேட்டு அவனுக்குச் சட்டை, நிஜார் எல்லாம் கொடுத்தாள். வாசுவுக்கு இன்ன பதில் சொல்லுவதென்றே தெரியவில்லை.

பல வருஷங்கள் சென்றுவிட்டன. வாசு திருச்சியில் ஒரு கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான். அவன் படிப்பு முடியும் கடைசி வருஷம் ஒரு மாணவி அதே கல்லூரியில் சேர்ந்தாள். எத்தனையோ மாணவிகள் படிக்கிறார்கள். அவள் மட்டும் என்ன அப்படி விசேஷம் வாய்ந்தவள் என்று கேட்கலாம். அவள் முகத்தை வாசு யதேச்சையாக ஒரு நாள் பார்த்தான். அப்பொழுது அவன் மனத்திரையில் ஏற்கெனவே சென்னையில் இருந்த போது பார்த்துப் பழகிய ஒரு முகம் நினைவுக்கு வந்தது. அந்த நினைவு முகம் எது என்பதும் தெளிவாகப் புலனாயிற்று. ஆம். அது அவன் வீட்டில் குடியிருந்த சாவித்திரி மாமியின் முகம்தான். கொஞ்சம் கூட வித்தியாசம் இல்லை. 'சை, இது என்ன அசட்டுத்தனம்! எப்பொழுதோ நம் வீட்டில் குடியிருந்த சாவித்திரி மாமிக்கும் இந்தப் பெண்ணுக்கும் என்ன சம்பந்தம்?' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டு அந்த நினைவை மறந்து விட முயன்றான். ஆனால் அந்த முகம் அவனை மறந்துவிடத் தயாராயில்லை. சதா அவன் நினைவில் இருந்து கொண்டு பழைய நினைவைக் கிளறிக்கொண்டிருந்தது.



அன்று ஞாயிற்றுக் கிழமை. வாசு ஹாஸ்டலில் தன் அறையில் படுத்துக் கொண்டு, ஏதோ ஒரு நாவலைப் புரட்டிக் கொண்டிருந்தான்.

அப்பொழுது கதவைத் திறந்து கொண்டு திடீரென்று யாரோ ஒருவர் பிரவேசித்தார்.

"வாசு!" என்று அழைத்த பழைய குரலைக் கேட்டதும் வாசு திடுக்கிட்டான். அது அவன் முன்பு எப்போதோ கேட்டுப் பழகிய குரல். புஸ்தகத்தைக் கீழே வைத்து விட்டு நிமிர்ந்து பார்த்தான் வாசு. அவனையும் அறியாமல், "மாமா!" என்று கத்திவிட்டான்.



ஆம், சென்னையில், அவன் வீட்டில் குடியிருந்த ஜகதீச மாமா தான் அவர். இப்பொழுது அவர் முகம் கொஞ்சம் மாறியிருந்தது. பத்து வருஷம் ஆகி விட்டதல்லவா?

"வாருங்கள், மாமா! உட்காருங்கள். மாமி சௌக்கியமா யிருக்கிறாளா?"

"வாசு, உன் மாமி சௌக்கியமா யிருக்கிறாள்! நாங்கள் சென்னையை விட்டுப் புறப்பட்டதிலிருந்து தினம் உன் ஞாபகந்தான். எந்தத் தின்பண்டம் செய்தாலும் 'இது வாசுவுக்குப் பிடிக்கும்' என்று சொல்லாமல் இருக்கமாட்டாள். சென்னையில் உங்கள் வீட்டுக்குப் போய் விசாரித்ததில் உன் தகப்பனார் திடீரென்று காலமான விவரமும், உடனே நீங்கள் திருச்சிக்குப் புறப்பட்டு வந்து விட்டீர்கள் என்ற விவரமும் தெரிய வந்தன. உன் மாமியின் தங்கை கருணா இந்தக் கல்லூரியில்தான் படிக்கிறாள். மாமியின் ஜாடையாகவே இருப்பாள்" என்றுசொல்லி ஜகதீசன் வீட்டு விலாசத்தைக் குறித்துக் கொடுத்தான்.

அதற்கப்புறம் வாசு அந்த வீட்டுக்கு முதலில் நினைத்தபடி சும்மா போக முடியவில்லை. 'மாமி'யின் முயற்சியினால் அவன் அந்த வீட்டுக்கு மாப்பிள்ளை ஸ்தானத்தில் பெண் பார்க்கப் போனான். அடுத்த சுப முகூர்த்தத்திலேயே கருணா வாசுவின் மனைவியும் ஆகி விட்டாள்.

யாருடைய வாழ்க்கையிலும் நிகழ்ந்திருக்கக் கூடாத இந்த அதிசயச் சம்பவங்களெல்லாம் வாசுவின் மனத்திரையில் தோன்றி அவனைப் புளகாங்கிதம் அடையும்படி செய்தன.

"என்ன இது! சவாசனம் போட்டுப் பழகுகிறீர்களா? காப்பியைச் சாப்பிடாமல் சிந்தனை செய்ய ஆரம்பித்து விட்டீர்களே? உங்கள் அருமை 'மாமி' நாளைக்கு வரப் போகிறாள்! மாமாவும் வருகிறார். நாளை மறுநாள் தீபாவளி. பக்ஷணங்களெல்லாம் இன்று ராத்திரியே செய்தாகவேண்டும். இப்படித் தியான சமாதியில் இருந்தால் இந்தக் காரியங்களெல்லாம் எப்படி ஆகும்?"



என்று கருணா பொரிந்து தள்ளினாள். வாசு காப்பியைச் சாப்பிட்டுக் கொண்டே, "கருணா, இந்த வருஷம் நமக்கு இரண்டாம் தலை தீபாவளி யல்லவா? ரொம்ப அமர்க்களமாகக் கொண்டாட வேண்டும். காலையில் மாமியையும் மாமாவையும் ரயில்வே ஸ்டேஷனுக்குப் போய் அழைத்து வரவேண்டும். சீக்கிரம் படுத்துக் கொண்டால்தானே சீக்கிரம் எழுந்திருக்க முடியும்?" என்றான்.

"ஆமாம், ராத்திரி உங்களுக்குத் தூக்கம் வருமோ?" என்று கேட்டாள் கருணா. வாசு செல்லமாக அவளுடைய கன்னத்தில் தட்டினான்.


# எஸ். விஜயராகவன்

ஏஜண்டு: பர்மாஷெல் ஆயில் ஸ்டோரேஜ் & டிஸ்ட்ரிப்யூட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்

பொள்ளாச்சி :: பழனி

மொத்த வினியோகஸ்தர்: இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட் பார்மா தயாரிப்புகள்

ஸ்டாக்கிஸ்டு: மோட்டார் டயர்கள், டியூப்கள், ஸ்பேர் சாமான்களும் மற்றும் உபகரணங்களும்

## இப் புனிதத் தீபாவளித் திருநாளில்

தனது சகலவிதமான வாடிக்கையாளர்கள் நண்பர்கள், ஆதரவாளர்கள் யாவர்க்கும் மனமார்ந்த நல் வாழ்த்துக்களை அறிவித்துக் கொள்கிறார்


கிடைப்பது எளிது
IC
குறிப்பதும் சுலபம்
திடத்திலும்
தரத்திலும்
தேர்ந்தது
சர்க்கார் சோதனைச் சாலையின் நற்சாட்சி பத்திரம் பெற்றது.
தென்னிந்தியா முழுவதிலும் எங்கள் ஸ்டாக்கிஸ்டுகள் உள்ளனர்.
சூலம் மார்க்
சங்கர் பிராண்ட்
போர்ட்லண்ட்
ஸிமெண்ட்
இந்தியா ஸிமெண்ட்ஸ் லிட்.
தொழிற்சாலை : சங்கர் நகர், திருநெல்வேலி ஜில்லா.
ரிஜிஸ்டர்ட் ஆபீஸ் : 11/12. செகெண்ட் லேன் பீச், மதராஸ் - 1

# மிகவும் இசைந்த பரிசு... இக் குதூகலமான

# தீபாவளிக்கு

எந்த ரேடியோ அபிமானியையும்
திருப்தி செய்விக்கும் இவ்விணையிலா

# டெஸ்லா

ரேடியோவை அன்பளிப்பாக அளியுங்கள்

TESLA



இதோ உள்ளது... டெஸ்லா ஏரி

சக்தி வாய்ந்த இந்த 5 வால்வு செட் 7 வால்வுகளின் சக்தியை அளிக்கிறது. ஒலிகளை தத்ரூபமாக பிரதி பலிக்கும். பளபளப்பான வால்நட் காபினெட்டில் விசேஷ இந்தியன் டயலுடன் ஏ. ஸி. மெயின்களில் இயங்குமாறு உள்ளது. விலை ரூ. 390/-



## இதர புகழ்பெற்ற டெஸ்லா ரகங்கள்

டெஸ்லா ஸிம்போனி
விலை ரூ. 480/-
டெஸ்லா பயனீர்
விலை ரூ. 375/-
டெஸ்லா டாலிஸ்மான்
விலை ரூ. 235/-

ANY TIME - ANYWHERE WITH TESLA

டெஸ்லா (இந்தியா) ரேடியோ மானுபாக்சரிங் கோ., லிட்.
11/13, ஹார்னிமான் சர்கிள், பம்பாய்-1

TS 516


சோப்புகளுக்கு ராஜா
கால் நூற்றாண்டுகளுக்கு மேலாக கோத்ரேஜ் நெ. 1 சோப் அரசாண்டிருந்து வருகிறது. தலைமுறை தலைமுறையாக உபயோகிக்கும் பலவித ஜனங்களே அதற்கு இப்பெருமையுள்ள பட்டத்தை அளித்திருக்கின்றனர். ஏனெனில் அது கிடைக்கக் கூடிய சிறந்த பொருள்களிலிருந்து வெகு சாமர்த்தியமாகத் தயாரிக்கப்படுகிறது. அதன் புதிய இனிய வாசனை, ஏராளமான நுரை, பெரிய சைஸ் (மார்க்கெட்டில் மிகப் பெரிய சோப்) அதையே எல்லோரும் விரும்பச் செய்கின்றன.
முற்றிலும் சுத்தமானது - மிருகக் கொழுப்பற்ற தென்பதற்கு உத்தரவாதம்.
Godrej
கோத்ரேஜ் சோப்ஸ், லிட்.
மதராஸ்: 164, பிராட்வே; கொச்சி: 6/36, கல்வத்தி.
தாவர எண்ணெய்களிலும் சோப்பு தயாரிப்பதில் முதன்மையானவர்கள்.
SOAPS · GLYCERINE · HAIR OIL
கோத்ரேஜ் ஸேபை மிகவும் பத்திரமுள்ளதாகச் செய்வது எது?
Godrej
கோத்ரேஜ்
...எங்களுடைய உயர் ரக ஸேப்புகளைக் குறிக்கும் பெயர்—50 வருஷங்களின் உயர்ந்த எஞ்ஜினீரிங் அறிவைக் கொண்டு மிகச் சிறந்தவைகளையே தயாரித்துப் பெற்ற உன்னத நிலைமை; ஸேப் தயாரிக்கும் கலையின் புதிய அம்சங்களோடு கூடிய புதிதாகப் பரிசோதிக்கப்பட்ட ரகங்கள் திருடர்களிடமிருந்தும் நெருப்பிலிருந்தும் அதிகப் பாதுகாப்பை அளிக்கின்றன.
ஆழ்ந்த ஆராய்ச்சி...
...வேலை ஒருபோதும் நிற்பதில்லை. புதிய புதிய நல்ல நல்ல மாடல்கள் உற்பத்தி செய்யும் வரையில் புதிய மூலப் பொருள்களும் இணைப்பு அம்சங்களும் பரிசோதனைக் குள்ளாகின்றன.
அளவிறந்த சாதனைகள்...
...திருடர்களை எதிர்க்கும் ஸேப்புகளில் புதிய ரகங்கள் தயாரிப்பதையும் இணைப்பு அம்சங்களை பேடெண்ட் செய்வதையும் கவனமாக்கின.
முதிர்ந்த அனுபவம்...
...தயாரிப்பவரின் சாமர்த்தியத்தையும் தொழிலாளியின் வேலைத் திறமையையும் பிணைப்பது. இவ்விதம் தயாரிக்கப்பட்ட சாமானே மிகச் சிறந்த தென்பதற்கு உத்தரவாதம்.
அதிக உற்பத்தி...
...செலவைக் குறைக்க உதவுகிறது.
கோத்ரேஜ்
26" ஸேப்
திருட்டுக்கு எதிர்ப்பு
ரூ. 420
திருட்டு, நெருப்புக்கு எதிர்ப்பு
ரூ. 510
கோத்ரேஜ் & பாயிஸ் மானுபாக்சரிங் கம்., லிட்.
பம்பாய் — கல்கத்தா — மதராஸ் — டில்லி — கான்பூர் — ஹைதராபாத்
ஆக்ரா, அகமதாபாத், அஜ்மீர், அலகாபாத், அமிர்தசரஸ், பனாரஸ், பெங்களூர், பெஜவாடா, கொச்சி, கோயமுத்தூர், நாக்பூர், இந்தூர், ஜெய்ப்பூர், குவாலியர், லக்னோ, மதுரை, மங்களாபுரம், நாகபுரி, பாட்னா, பூனா, ராஜமஹேந்திரபுரம், ராஜ்கோட், திருச்சிராப்பள்ளி, திருவனந்தபுரம், கொழும்பு, கராச்சி, ரங்கூன் முதலிய இடங்களில் ஏஜண்டுகள் உள்ளனர்.
பாதுகாப்பு எஞ்ஜினீயரிங்கில் முதல்வர்கள்


ஸ்டெயின்லஸ் ஸ்டீல்
பாத்திரங்கள்
ஒடுங்காது, கருக்காது, கைக்காது. எப்பொழுதும் வெள்ளிப் பாத்திரங்களைப் போல் பளபளப்பாக இருக்கும். ஈயம் பூசவேண்டிய தேவை இல்லை. தேய்க்க வேண்டிய சிரமமும் இல்லை. ஹோட்டல்கள், ஆஸ்பத்திரி, கான்டீன்களுக்கான சகல பாத்திரங்களும் கிடைக்கும்.
I.M.M.C. MADRAS
செம்பு, பித்தளை, அலுமினியத்தில் தகடுகள், துண்டுகள், வட்டங்கள் முதலியவைகளும் தயாரிக்கிறோம்.
தொழிற்சாலை:
மேட்டூர் அணை & மதராஸ்.
ப்ளாஸ்டிக் சாமான்கள்
IMMC
இந்தியன் மெட்டல் & மெட்டலர்ஜிகல் கார்ப்பொரேஷன்
498, தங்கசாலைத் தெரு மதராஸ் 3.


35 M. M. மைக்ரோன் புரொஜக்டர்கள்
MICRON XX
B
(MORGANITE)
மற்றுமுள்ள மைக்ரோன் மாடல்கள் XIs & XXs.
இந்தியாவில் ஸோல் ஏஜண்டுகள்
தேவி பிலிம்ஸ் லிமிடெட்
498, தங்கசாலை தெரு, மதராஸ்-3.



# மூன்று தீபாவளிகள்

லக்ஷ்மி ராஜேந்திர சங்கர்

"இந்த வருஷமும் தீபாவளி வந்து விட்டது! என்ன தீபாவளி? என்ன பண்டிகை? முப்பது வருஷங்களுக்கு முன் தீபாவளி என்றால் எவ்வளவு உற்சாகமாகவும் மங்களகரமாகவும் இருக்கும்! கிராமங்களில் சாமான்களுக்குப் பஞ்சமே இராது. பக்ஷணங்களும் பணியாரங்களும் வித விதமாக ஒவ்வொருவரும் போட்டி போட்டுக் கொண்டு செய்வார்கள். பரம ஏழைகள் கூட ஒரு குலாம்பாப் புடவையாவது வாங்கிக் கட்டிக் கொண்டு சந்தோஷமாக இருப்பார்கள். இப்பொழுதோ தீபாவளி என்றால் எல்லோருக்கும் யோசனைதான்! வெல்லம் ரேஷன்! இறைபட்டுக் கிடந்த அரிசியும் சோளமும் ரேஷன்! துணிகளின் விலையோ கேட்கவே வேண்டாம். அப்பப்பா! என்ன கொடுமையான காலம்! பண்டிகைகளைச் சந்தோஷமாகக் கொண்டாடும் காலமும் இனி வருமா?" என்றெல்லாம் பலவாறாக எண்ணமிட்ட வண்ணம் ஜன்னல் கம்பியில் சாய்ந்தபடி தெருப் பக்கம் பார்த்துக் கொண்டிருந்தேன். ஏழைக் குழந்தைகள் கீழே உதிர்ந்து கிடந்த பட்டாசுத் துண்டுகளைப் பொறுக்கிக் கொண்டிருந்தார்கள்.

பின்னால் காலடிச் சத்தம் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினேன். காமு தான் பேசாமல் நின்று கொண்டிருந்தாள். "என்ன காமு, கங்கா ஸ்நானம் ஆச்சா? தீபாவளி எல்லாம் நன்றாக நடந்ததா? புடவை ரொம்ப நன்றாயிருக்கிறதே! எங்கே வாங்கினாய்? என்ன விலை?" என்று கேட்டேன்.

"நானாவது, புடவை வாங்கவாவது? இந்த வருஷம் எனக்குத் தீபாவளி உங்கள் மைத்துனர் வீட்டில்தான். உங்கள் 'ஓப்படி' ரொம்பவும் கேட்டுக் கொண்டார், "பம்பாயிலிருந்து மாப்பிள்ளை வருகிறார்; நீ இல்லாவிட்டால் முடியாது!" என்று. இன்று எல்லாம் நல்லபடியாக முடிந்து இந்தப் புடவை உடுத்தும்படி ஆகிறதே!" என்றாள் காமு.

"ஏன்! என்ன நடந்தது? பம்பாயிலிருந்து மாப்பிள்ளை வந்திருக்கிறாரோ, இல்லையோ?" என்று கேட்டேன்.

"வந்திருக்கிறார். இன்று அவர் பிழைத்ததே புனர் ஜன்மம். நேற்று இரவு ரயிலடியிலிருந்து வண்டி வைத்துக் கொண்டு வந்தார்களாம். ஆற்றில் ஜலம் அதிகமாகப் போவதனால் பாலம் சுற்றிப் போக வேண்டும் என்று உங்கள் மைத்துனர் எவ்வளவோ சொல்லியும் மாப்பிள்ளை கேட்கவில்லையாம். 'சாமான்களுடன் வண்டியில் நீங்கள் போங்கள். நான் ஆற்றைக் கடந்து சீக்கிரமாகப் போய் விடுகிறேன்!" என்று பிடிவாதம் செய்தாராம். மனைவியையும் குழந்தையையும் பார்க்க அவ்வளவு அவசரம்! வேறு வழியில்லாமல் உங்கள் மைத்துனர் மட்டும் வண்டியுடன் புறப்பட்டு வந்தாராம்.

"ஆற்றில் ஆள் உயரத்திற்கு மேல் தண்ணீர். ஏதோ சின்னப் பையனாயிருக்கும்போது நீந்தப் பழகியதாம். அந்த முரட்டுத் தைரியத்தை வைத்துக் கொண்டு தண்ணீரில் இறங்கி யிருக்கிறார். வர வர ஆழம் அதிகமாகிச் சமாளிக்க முடியாமல் போகவே இரண்டொரு வாய் தண்ணீர் குடிக்கும்படியாகிவிட்டது. அதிர்ஷ்ட வசமாக உங்கள் மைத்துனர் வீட்டு நாய் யாரோ தண்ணீரில் மிதந்து போவதைக் கண்டதும் குதித்து ஓடி நீந்திப் போய், சட்டையைக் கடித்து இழுத்துக் கொண்டு வந்து கரையில் போட்டதாம். பிறகு வீட்டுக்கு ஓடிச்சென்று, கணவனை எதிர்பார்த்து வாசலில் நின்று கொண்டிருந்த கௌசல்யாவின் புடவையைப் பிடித்துப் பிடித்து இழுத்ததாம். ஏதோ விஷயம் இருக்கிறது என்று உணர்ந்து கௌசல்யா நாயைத் தொடர்ந்து சென்றாளாம். அவர்கள் வீட்டுத் தோட்டத்துக் கருகில் ஆற்றோரத்தில் அவள் அகமுடையான் நினைவிழந்து கிடப்பதைக் கண்டதும் பதறிப் போய் அவள் தோட்டத்துக்கு ஓடிவந்து ஒரு ஆளைக் கூப்பிட்டுக் கொண்டு போனாளாம். பிறகு இருவருமாகச் சேர்ந்து மாப்பிள்ளையை வீட்டுக்குத் தூக்கி வந்தார்களாம்.

"வயிற்றிலிருந்த நீரை எல்லாம் எடுத்து மருந்தும் கொடுத்ததில் இரவு பதினொரு மணி சுமாருக்குத்தான் அவர் பிரக்ஞை தெளிந்து பேசினார். பிறகு தான் சற்று கவலை நீங்கியது. தன் முட்டாள்தனத்தால் அநாவசியமாக எல்லோருடைய சந்தோஷத்தையும் கெடுத்ததைக் குறித்து வருந்தினார். நல்ல பிள்ளை, பாவம்!

"அதுவரை யாருக்கும் வேலை ஓடவில்லை. எப்படி ஓடும்? அவருக்குப் பிரக்ஞை வந்த பின்தான் வேலையைக் கவனிக்க முடிந்தது. ஆனால் மனது மட்டும் கலவரப் பட்டுக் கொண்டேயிருந்தது. கௌசல்யாவுக்கு மாங்கல்ய பலம் இருந்திரா விட்டால் என்ன நடந்திருக்கும் என்பதை நினைக்கவே முடியவில்லை!" என்று கூறி முடித்தாள் காமு.

"நன்றாய்த்தானிருக்கிறது. என்ன கண்டம்! அவர்கள் வீட்டிலே போன வருஷமும் தீபாவளியின் பொழுது இப்படித்தான் ஒரு கலவரம் நடந்தது. நீ அப்பொழுது காசிக்குப் போயிருந்தாய். அதனால் உனக்குத் தெரிந்திராது!" என்றேன்.

"அப்படியா? அதென்ன விஷயம்?" என்று காமு ஆவலுடன் கேட்டாள்.

"போன வருஷம் தீபாவளிக்கு முந்திய நாள். அப்பொழுது கௌசல்யாவின் குழந்தைக்கு ஏழெட்டு மாதமிருக்கும். கிருஷ்ணன் பொம்மை மாதிரி அவ்வளவு அழகாக இருக்கும். தீபாவளியே என்று குழந்தைக்குத் தேகம் முழுவதும் நகை நட்டுகளைப் போட்டு வைத்திருந்தார்கள்.

"விளக்கு ஏற்றி இரண்டு நாழிகை இருக்கும். விடிந்தால் தீபாவளி. திடீரென்று குழந்தையைக் காணவில்லை என்று வீடு முழுவதும் அமளி துமளிப் பட்டது. தேடாத இடம் இல்லை. பாவம்! கௌசல்யா கண்ணீர் வழிய, "பெரியம்மா! என் ராஜாவைக் காணவில்லையே!" என்று அழுதது இன்னும் என் கண் முன்னால் நிற்கிறது. கடைசியில் இந்த நாய் எங்கிருந்தோ ஓடோடி வந்தது. அதன் செய்கையைக் கண்டு சில போலீசாரும் வீட்டிலுள்ள மற்றவர்களும் அதைப் பின் தொடர்ந்து சென்றார்கள்.

"அக்கரை மாரியம்மன் கோயிலுக்கருகில் குடிசைகள் போட்டுக்கொண்டு ஒரு நாடோடிக் கூட்டம் இருந்ததாம். ஒரு குடிசையில், குழந்தையின் நகைகளைக் கழற்றி தூங்க வைத்திருந்ததாம். நல்ல வேளை! பாவிகள், குழந்தையை ஒன்றும் செய்யவில்லை. திருடர்களும் பிடிபட்டு விட்டார்கள். கடைசியில் குழந்தையும் நகைகளும் வந்து சேர்ந்தன" என்றேன்.

இதே சமயத்தில், "தீபாவளி மலர் வந்து விட்டதோ, பெரியம்மா?" என்று கேட்டுக் கொண்டே கௌசல்யா உள்ளே நுழைந்தாள்.

"வா, அம்மா! இப்பொழுது தான் நேற்று நடந்ததை யெல்லாம் காமு சொன்னாள். நல்ல காலம்! மாப்பிள்ளைக்கு உடம்புக்கு ஒன்றும் இல்லையே?" என்று கேட்டுக் கொண்டே தீபாவளி மலரை எடுத்து மேஜையின் மேல் போட்டேன்.



"இல்லை, பெரியம்மா! ஏதோ தெய்வாநுகூலம்தான். 'மின்னி' சமயத்தில் ஆற்றோரமாகச் சுற்றிக் கொண்டிருந்ததால் சீறிச் சென்று அவரைக் காப்பாற்றி விட்டது!" என்றாள் கௌசல்யா.

"நாய்களுக்கு வரப்போகும் ஆபத்து முன்பே தெரிந்துவிடும்' என்று பெரியவர்கள் சொல்லுவார்கள். அதனால் தான் அது அச்சமயத்தில் அங்கு அலைந்து கொண்டிருந் திருக்கவேண்டும்!" என்றாள் காமு.

"என் மின்னி எல்லா நாய்களையும் போல் இல்லை. இதற்கு இருக்கும் அறிவும் விசுவாசமும் மனிதர்களுக்குக் கூட வராது!" என்று பெருமையுடன் சொல்லிக் கொண்டாள் கௌசல்யா.

"ஏன், கௌசல்யா! உனக்கு இந்த நாய் எப்படிக் கிடைத்தது?" என்று கேட்டாள் காமு.

"அதுவா? அது ஒரு பெரிய கதை. எனக்குக் கல்யாணமான வருஷம் தலை தீபாவளிக்கு ஒரு மாதம் முன்னாலேயே வீட்டை வெள்ளையடித்துச் சாயம் பூசப் பிரமாதமான ஏற்பாடுகள் செய்திருந்தாள் அம்மா.

"அதற்கு முதல் நாள் என் கிரேஸின் வீட்டுக்குப் போயிருந்தேன். அவர்கள் ஆங்கிலோ இந்தியர்கள். லூஸி என் வகுப்புத் தோழி. எனக்குக் கல்யாணமாகிவிடவே, அம்மா அந்த வருஷத்தோடு பள்ளிப் படிப்புக்கு முற்றுப் புள்ளி வைத்துவிட வேண்டும் என்று சொல்லி விட்டாள். அதனால் தோழியைப் பார்த்து விட்டு வருவோம் என்று போயிருந்தேன். அவள் தகப்பனாருக்கு ரயில்வேயில் உத்தியோகம். அவருக்கு வேறு ஊருக்கு மாற்றலாகி விடவே, 'சில தினங்களுக்கெல்லாம் நாங்கள் புறப்பட்டுவிடப்போகிறோம்' என்று லூஸி சொன்னாள். பேசிக் கொண்டேயிருக்கும் போது ஒரு அழகிய நாய்க்குட்டி ஓடி வந்து என் காலை நக்கிற்று.



படுத்திருப்பவர்:—அப்பப்பா! நீங்கள் படுத்துகிற பாட்டுக்கு [illegible] தேவலை போலிருக்கிறதே!

எனக்கு ஒருபுறம் பயமாகவும் இன்னொருபுறம் சந்தோஷமாகவும் இருந்தது. லூஸி என்னைப் பார்த்து, 'நாங்கள் நாளைக்கு ஊருக்குப்போகிறோம். வேண்டுமென்றால் இதை எடுத்துக் கொள். நல்ல சீமை ஜாதி நாய்!' என்றாள். எனக்கும் ஒரு ஆசை வந்து விட்டது. அம்மா என்ன சொல்லுவாளோ என்று பயந்தான். ஆனாலும் 'சரி' என்று எடுத்துக் கொண்டு வந்து விட்டேன். 'இந்த நாய் என்னுடைய பரிசு. இதை நன்றாகப் பார்த்துக் கொள்ள வேண்டியது உன் பொறுப்பு!' என்று சொல்லி லூஸி அதைக்கொடுத்தாள். அப்பொழுது அவளுடைய குரல் கம்மியது. கண்கள் கூடக் கலங்கின. அதிலிருந்து அவளுக்கு அந்த நாய்க்குட்டியிடமிருந்த அன்பு தெரிந்தது. 'நமக்குத்தான் ஒன்றிலும் பற்றுதலில்லை. இவர்கள் பிராணிகளிடம் கூட எவ்வளவு பற்றுதலுடையவர்களாக இருக்கிறார்கள்!' என்று எண்ணிக் கொண்டே வீட்டுக்கு வந்தேன். அம்மா எவ்வளவோ தடுத்தாள். நான் பிடிவாதமாக இதை வளர்த்தேன்!" என்று கூறி முடித்தாள் கௌசல்யா.

"ஆமாம்! உன் புருஷனுக்கு வீடு கிடைத்து விட்டதோ?" என்றேன்.

"வீடு கிடைத்து விட்டதாம். இன்னும் இரண்டு நாளில் நானும் போய் விடுவேன்!" என்றாள் கௌசல்யா.

"'மின்னி'யை என்ன செய்யப் போகிறாய்?" என்றாள் காமு.

'மின்னி'யையும் கூடவே அழைத்துப் போகப் போகிறேன்"

"அப்படியா? உன் அம்மாவுக்கு ஒரு பாரம் நீங்கிவிட்டது! இந்த நாய் வந்தபின்தான் இந்தக் கஷ்டங்கள் எல்லாம் என்று உன் அம்மா கரித்துக் கொட்டிக் கொண்டிருந்தாள். இனிமேல் ஒழிந்தது சனியன் என்று சந்தோஷப்படுவாள்!" என்றாள் காமு.

"அதுதான் இல்லை! நான் இதைப் பம்பாய்க்கு அழைத்துக் கொண்டு போகப் போகிறேன் என்ற விஷயத்தைச் சொன்னதும் அம்மாவின் கண்களும் கலங்கிவிட்டன. இங்கேயே விட்டு விட்டுப் போ என்கிறாள். இவ்வளவு நாள் பழகியதை விட்டுவிட்டுப் போக எனக்குத்தான் மனமில்லை. அப்படியே நான் விட்டு விட்டுப்போக எண்ணினாலும் இந்த 'மின்னி' என்னை விடாது!" என்றாள் கௌசல்யா.

அதற்குள் மின்னி எங்கிருந்தோ ஓடி வந்து அவள் புடவைத் தலைப்பைப் பிடித்திழுத்தது. "மின்னி அழைக்க வந்து விட்டது. வருகிறேன், பெரியம்மா!" என்று சொல்லிக் கௌசல்யா விடை பெற்றுக் கொண்டாள்.




தமிழகத்தின் பழைய வரலாறு ஓர் இருள் நிரம்பிய குழப்பம். பல்லவர்கள் தோன்றிய பின்னரே வெளிச்சம் வருகிறது. தெளிவான சரித்திர காலத்துக்கு வருகிறோம். இவர்கள் ஆட்சியில் கலைகள் புத்துயிர் பெற்றன. குடைவரைக் கோயில்களும் கற்றளிகளும் எழுந்தன. கம்பீரம் வாய்ந்த சிற்பங்கள் மலிந்தன. ஒப்பற்ற ஓவியங்கள் தோன்றின. சாசனங்கள் தலைகாட்டின.

இம் மன்னர் மரபில் அழியாப் புகழ் பெற்றவன் மகேந்திர விக்கிரமனே. அர்ஜுன் வடக்கே செங்கோல் ஓச்சும்போது தெற்கே கொற்றக்குடை நிழற்றியவன் இவனே. சித்திரம், சங்கீதம், காவியம், நாடகம் இன்னும் எத்தனையோ கலைகளில் இவன் புலமை மிக்கவன். அபூர்வ ரஸம் நிரம்பிய காதம்பரி இயற்றிய பட்டபாணர் அர்ஜுனுடைய சபா கவி. ரோதார்ஜுனீயம் பாடிய பாரவி இவன் ஆஸ்தானத்தை அலங்கரித்தவர்.

இதே மகேந்திரனிடத்தில் எனக்குத் தனி மதிப்பு. இவனுடைய சின்னங்கள் தமிழ் நாடெங்கும் சிதறிக் கிடக்கின்றன. இவனைப் பற்றி விரிவாக ஆராயப் பேராவல் எனக்கு. சித்தனவாசல் ஓவியங்களைப் பார்த்தேன். திருச்சி, பல்லாவரம், மாமண்டூர், மண்டகப்பட்டு, வல்லம் குகைக் கோயில்களைக் கண்டு வந்தேன். தமிழ் இசைக்கே புது வழியைக் கோலி, இன்று வழங்கும் 'சரிகம' என்ற ஸ்வரங்களை வகுத்தவன் இவனே. தானத்தில் ஸங்கீர்ண ஜாதி இவனுடைய படைப்பே. குடுமியான் மலையில் தென்படும் சங்கீதக் கல்வெட்டை ஆராய எனக்கு ஒரு சமயம் சந்தர்ப்பம் வாய்த்தது.

புதுக்கோட்டைக்கு அருகில்தான் அம்மலை. மேலைக் கோயில் என்று வழங்கும் சிகாநாதர் ஆலயத்துக்குப் பின்னால் மலைச்சரிவில் வடபுறமாக இந்தக் கல்வெட்டு இருக்கிறது. நான் போனது நல்ல பகல் வேளை. எழுத்துக்கள் தெற்றென விளங்கின. பல்லவ கிரந்த லிபி தான். கவயமாகப் படித்தேன். ஏழு ஸ்வர க்ரமங்களின் பெயரும் பதினாறு வரிசைகளில் நன்னான்கு ஸ்வரங்களின் அடுக்கும் செதுக்கி யிருந்தன. இரு விநாயக உருவங்கள்; ஒன்று வலம்புரி; மற்றொன்று இடம்புரி. 'ஸித்தம் நமஸிவாய' என்று ஆரம்பமாகிறது கல்வெட்டு.

அந்த மகேந்திரன்தான் என்ன மேதையோ! இவ்வளவு கலைப் பண்பு எந்த அரசனுக்கு இருந்தது? எத்தனை சங்கீத ரஸிகர்கள் அன்று அந்த 'வர்ண'த்தைப் பாடிக் களித்தனரோ? அதை விட்டு வர மனமே இல்லை. பெயர்த்து வைத்துக் கொண்டால் என்ன என்ற அசட்டு யோசனை கூட வந்தது. ஆனால் 'இதை எனக்கு மட்டுமா செதுக்கினான் அரசன்!' என்ற சொற்கள் என்னை மீறி என் வாயிலிருந்து வந்தன.

"இசையை வழிபடுவோர்க் கெல்லாந்தான் ...... என்ன பெரிய மனக அவனுக்கு! மகேந்திரன் தனக்கென எதையும் வைத்துக் கொள்ளவில்லை" என்றது ஒரு குரல் என் பின்னால். தூக்கி வாரிப்போட்டது; திரும்பிப் பார்த்தேன். நடு வயதினர் ஒருவர். அவருடைய கண்களில்தான் என்ன ஒளி! இந்தக் காலத்து மனிதராகவே தோன்றவில்லை. நீள நீளமான கை விரல்கள். விநாயகர் உருவத்தின் தலை மீது தென்படும் எழுத்துக்களைச் சுட்டிக் காட்டினார். படித்தேன், 'பரிவாதினீ' என்று. "அப்படி என்றால் என்ன?" என்று மிகுந்த ஆர்வத்துடன் அவ்வதிசய மனிதரைக் கேட்டேன்.

"அது ஒரு தந்தி வாத்தியம், யாழ் என்பார்களே, அதனுடைய சீர்திருந்திய உருவம். வண்டின் இறகொலி போல் நரம்புகள் இம்மென ஒலிக்கும். விரல் வைக்கிற இடத்தில் குரலிசைபோலவே தோன்றும். அபாரமான சாதகம் தேவை. பருந்தும் அதன் நிழலும் போல் விரல்கள் மின்னென விரைய வேண்டும்" என்றார்.

"நீங்கள் யாரோ தெரியவில்லை, இவ்வளவு தெளிவாக எடுத்துக் காட்டுகிறீர்களே......" என்றேன். இவர் எங்கிருந்து என் பக்கத்தில் திடீரெனத் தோன்றினாரென்ற கேள்வி என் மனத்துள் மெல்ல எழுந்தது.

"நானும், உங்களைப்போல ஒரு கலைப்பித்தன். இசை என் உயிர்" என்றார் அவர்.

"உங்களுக்கு இந்த ஊர்தானா?" என்றேன்.

"இல்லை......ஆனால் எல்லாம் எங்கள் ஊரே, எல்லாரும் எங்கள் நண்பர்கள்தாம். இன்னும் புரிபடாத எத்தனையோ விஷயங்கள் மகேந்திரனுடைய கீர்த்தியான இந்தக் கல்வெட்டில் இருக்கின்றன. பல வருஷங்களாக அதை ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன். அதோ அந்தக் குடிசை வீடுதான் என் இருப்பிடம்.........ஏகாந்தமான இடம்" என்றார்.

சற்றுத் தொலைவில் மலை இறக்கத்தில் குடிசைபோல் ஒன்று பச்சைக் கொடிகள் படர்ந்து தென்பட்டது. அவ்வதிசயமான சுற்றத்தில் எனக்குப் பொழுது போனதே தெரியவில்லை. சூரியன் அஸ்தமிக்கும் வேளையும் ஆகிவிட்டது. எனக்கோ அலுப்பு. கண்ணயர வேண்டும் போலிருந்தது. ஒரு பாறைமீது போய் உட்கார்ந்ததுதான் தெரியும். அது தூக்க மயக்கமோ, கனவோ, பிரமையோ, வேறு என்ன மாயமோ, நான் இந்த உலகிலேயே இல்லை; இந்தக் காலத்திலேயும் இல்லை.

ஒரு பெரிய ராஜ வீதி. இருமருங்கிலும் வெண்கதை மாடங்கள், அரமியங்கள். அந்திவேளை. பலகணி வழி

யாகப் படர்ந்து கீற்றுகச் செல்லும் அகிற் புகையின் மணம் தெருவெங்கும் கமழ்ந்தது. குழலை வகுத்தும், கொண்டையைத் தொகுத்தும், பனிச்சையை விரித்தும் ஒரு பிடியில் அடங்கும் இடையுடைய மடந்தையர் சிலர் எங்கோ விரைவாகச் சென்றனர். பெரிய தோரணவாயில் தோன்றியது. அரசர் மாளிகை. கதைகளைத் தரையில் ஊன்றிய வண்ணம் மிரட்டும் விழியும், தூக்கிய புருவமும், ஓங்கிய கையினருமான காவலாளர் யாரையும் தடுக்கவில்லை. அன்று விழா நாள். அரசன் கட்டளை — யாரும் உள்ளே போகலாம். பெரிய ஆடரங்கு. தூணுக்குத் தூண் மணி விளக்குகள். என்ன விசித்திரம், ஓர் அப்ஸரி மேடைமீது தோன்றினாள்! கொடிபோல் அவள் அங்கங்கள் வளைந்தன. அவள் பின்னால் வாசித்த யாழ் நரம்பில்லாதபடி இசையாகவே வழிந்தோடியது. அரங்கில் யவனிகை விழுந்து அடுத்த காட்சி ஆரம்பமாகியது. பைத்தியக்காரன் வேஷத்தில் ஒருவன் வந்தான். அவன் கையில் ஒரு மண்டையோடு. பைத்தியக்கார சேஷ்டை தத்ரூபமாயிருந்தது. உயர்ந்த நடிப்பு. அந்த நகைச் சுவை சபையையே குலுக்கியது. கடைசியில் பரத வாக்கியம் 'சத்ருமல்லேன லோக:' என்று பாடி முடிக்கும் போது மஹேந்திரனுடைய 'மத்த விலாஸ ப்ரஹஸனம்' என்பது தெரிய வந்தது.

ஜனங்கள் சென்ற பின்னர் அந்த விசாலமான நாடக சாலை வெறிச்சென்றிருந்தது. உட்புறம் அலங்கார அறையில் வேஷம் களைந்து கொண்டிருந்தனர். கம்பீரமாக நிற்கும் ஓர் ஆள் கடல் மல்லை வராக மண்டபத்துள் இருக்கும் சிலையின் மூல புருஷனாகவே தோற்றினான். அவன் தான் சந்தேகமில்லை; மகேந்திர ராஜா! பைத்தியக்காரனாக நடித்தவனும் அவனே. பொன் சிலம்பு கலீர் என ஏங்க அரங்கில் ஆடிய நடனப் பாவை அரசன் பக்கத்தில் தோன்றினாள். முறுகு விம்மியது அவள் உடலில். எவர் உள்ளத்தையும் இழுத்து உள்ளே கடும் ஓர் உருக்கம் அந்தக் கண்ணோக்கில். யாழாசிரியரை அணுகினான். அரசனும் அவள் பின்னாலேயே வந்தான். "ஓய், உம்முடைய வாசிப்பு இன்றைக்கு ரொம்ப அற்புதம்" என்று பாராட்டினான் ருத்திரனாரை.



"என் வாசிப்பில் என்ன இருக்கிறது? சிருங்கார திலகையின் அபூர்வ நிருத்தியமே எனக்கு உணர்வைத் தந்தது. நான் யாழ் கற்றதின் பயன் இன்று கண்டேன்" என்றார் யாழாசிரியர் ருத்திரனார்.

"நாளைக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது. துர்விநீதன் இங்கே வருகிறான். நான் இத்தனை நாள் சொல்லவில்லை உம்மோடு. 'ஒரு காவியம் எழுதி இருக்கிறேன். உங்கள் இருவர் எதிரிலும் அதைப் படித்துக் காட்டினால் தான் எனக்குத் திருப்தி" என்றான் அரசன்.

"அதற்கென்ன, உங்கள் உத்திரவைத் தட்ட முடியுமா?" என்றார் ருத்திரனார்.

"சரி வருகிறேன். நாளைக்குக் கட்டாயம் பார்க்கலாம்" என்று சொல்லி அரசன் அந்தப்புரத்தை நோக்கி நடந்தான். சிருங்கார திலகையும் தொடர்ந்தாள். அவள் கால் ஒரு வழியும், மனம் வேறு வழியும் சென்றன.

அரசனோடு இருக்க வேண்டியவளை எப்படித் தன்னுடன் வாவென்று அழைப்பது? மதிப்புடைய யாழாசிரியருடைய கௌரவத்துக்குக் குறைவல்லவா? இரண்டு வருஷ காலம் ருத்திரனாரிடம் சிருங்கார திலகை அபிநயம் கற்றுக் கொண்டாள். மெல்லத் தன் காதலை வாய் விட்டுச் சொன்னார் ஆசிரியர். அவளும் தன் உள்ள வேதனையை இமைப்பினுள் அடக்கிக் கொள்வாள். வாய் முறுவல் செய்யும், கண்ணில் பனி துளிக்கும். உடல் நடுக்குறும்.

அரசனுடைய மகுடத்திலிருக்கும் பூவுக்கு ஆசைப் பட்டால் கிடைக்குமா? சிருங்கார திலகை ஆசிரியரிடம் நடனம் பயில வருவதை நிறுத்திக் கொண்டாள். பேதை, அவளும் செப்பினுள் மூடி வைத்த மாலை போல் துவண்டாள். அவ்விருவருக்கும் மூண்ட காதல் அவிழ்த்தற்கு எளிதன்று. பிறப்பிடைத் தோன்றி சிறப்போடு பெருகி, நெஞ்சில் பின்னி நீங்கல் செல்லா அன்பாயிற்று. யாழாசிரியர் துரும்பாய் இளைத்து வந்தார். சிருங்காரதிலகை அவர் நெஞ்சில் வந்து போவதால் இன்னும் உயிர் வைத்திருந்தார். கூட்டுக் கிளியோடு அந்த நடன சுந்தரியும் தன் வேதனையைச் சொல்லிக் கொண்டு அழுவாள்.

அடுத்த நாள் அரசனுடைய அந்தப்புரத்தில் ஒரு தனி அறையில் இலக்கிய ரசிகர்கள் கூடினர். துர்விநீதன் அன்றுதான் ருத்திரனாரின் புலமை எத்தகையதென்பதைக் கண்டான். அரசன் தான் புனைந்த 'கந்த மாதனம்' என்னும் காவியத்தை விளக்கத்துடன் படித்துக் காட்டினான். கூடியிருந்த ரசிகர்கள் அனைவரும், "ஆகா! கவித்திறன் அபாரம்!" என்று அரசனின் கவித்துவ சக்தியைப் பெரிதும் புகழ்ந்து பாராட்டினர். ஆனால் ஆசிரியர் ருத்திரனார் அக் கவிதையைக் கம்பீர முத்திரையுடன் கேட்டுக்கொண்டிருந்தார். அவர் தம் அபிப்பிராயத்தைப் பளிச்செனச்சொல்லச் சற்றும் தயங்காதவர். "அரசே, இதில் சம்போக சிருங்காரத்தை (கூடல்) மிகவும் அழகாய்ச் சித்திரித்திருக்கிறீர். ஆனால் விப்ரலம்ப (பிரிவு) சிருங்காரம் நன்றாக அமையவில்லை. பிரிவின் துன்பத்தைக் கண்டவர்களால்தான் இதை வர்ணிக்க முடியும். ஒரு பழந்தமிழ்ப் புலவர், அகச்சுவையில் திளைத்தவர் இந்தத் துறையில் ஓர் அழகிய பாட்டைப் பாடி இருக்கிறார்:

**'நெடும்கழை முளிய வேனில் நீடிக்**
**கடுங்கதிர் ஞாயிறு கல்பகத் தெறுதலின்**
**வெய்ய ஆயின முன்னே; இனியே**
**ஒண்ணுதல் அரிவையை உள்ளுதோறும்**
**தண்ணிய ஆயின சுரத்திடை யாறே'**

எவ்வளவு உருக்கும் உள்ளச்செறிவு இதில் தென்படுகின்றது" என்றார்.

"நான் இத்தனை நாள் வீண் காலம் போக்கினேனே, இந்தத் தமிழ் நயங்களைத் தெரிந்துகொள்ளாமல். இவ்வளவு விஷயம் உம்மிடம் இருக்கிறதென்று எனக்குத் தெரியாது போய்விட்டது" என்றான் அரசன்.

"இதெல்லாம் கற்று வருவதன்று; கற்பனையைக் கொண்டு கோப்பதுமன்று. பிரிவின் வெம்மையில் உள்ளம் வெந்து சாம்பலாக வேண்டும். அப்போதுதான் பிறக்கும்

உண்மையான கவிதை உணர்வு. உள்ளக்கரவின்றி உங்களுக்குத் தமிழ் இசையின் நுட்பங்களைச் சொல்லி விட்டேன். எனக்கு உத்தரவு தாரும். என் தனிமைக்கே நான் போகிறேன். அந்தப் பழைய சுற்றத்தில்தான் எனக்கு பாவனைகள் தளிர்க்கும்" என்றார் ருத்திரனார்.

"என் மேல் ஏதாவது வருத்தமா? நீர் போய் விட்டால் கலையில் எனக்குள்ள ஆர்வம் எல்லாம் கருகிவிடுமே, இன்னும் கொஞ்ச நாள் இரும்" என்று அரசன் கேட்டுக் கொண்டும் யாழாசிரியருக்கு மனம் சற்றும் இசைக்கவில்லை. அரசன் சபையில், "என்னை விட்டு விடும்...என் வழியே போகிறேன். இது வரை உங்கள் நிழலில் இருந்தேன். இனி அந்த நிழல் என் வளர்ச்சிக்கு ஊறு செய்யும். வருகிறேன்" என்று ருத்திரனார் கிளம்பி விட்டார். குயில் எதிர்குரல் பயிற்றும் இன்பவேனில், காதல் மிகின் தாங்குவது எளிதோ? யாழ் ஏந்திய கலப்பையுடன் அவர் உருவம் அந்தப் பூமலி காலை வேளையில் தோரண வாயிலை விட்டு மெல்ல அகல்வதைச் சலியாது இமைத்திப்பக்கும் கண்ணீர் உகுத்தாள் சிருங்கார திலகை. அவர் அடி வைத்துச் செல்லும் இடமெல்லாம் அவள் நெஞ்சு படர்ந்தோங்கியது. பச்சை மட்கலத்தில் நீர் தங்குமோ? கசிந்து ஒழுகிவிடும். உடல் இங்கும் உயிர் அங்குமாயினாள்.

ருத்திரனார் போனதும் படுகிடையாகப் படுத்துக் கொண்டாள் சிருங்கார திலகை. கழலும் செஞ்சோடு கை வளையும் சோர்ந்தது. அரசனுக்கு எல்லாம் வெளிச்சமாயிற்று. இருவர் உள்ள நோயின் காரணத்தைக் கண்டு கொண்டான். என்ன செய்வ தென்று தோன்றவில்லை. அரசனுக்கு மேலும் மேலும் தொல்லைகள் மூண்டன. புலகேசி பெரும்படை திரட்டிக் கொண்டு வரும் செய்தியை ஒற்றர்கள் அறிவித்தனர். கலைகளில் காலத்தைப் போக்கிய அரசனுக்கு படைப் பலம் திரட்டப் போதிய அவகாசமில்லை. காஞ்சியின் மதிலை திண்ணமி தாக்கினான். பல யந்திரப் பொறிகளை அமைத்தான். எல்லாவற்றையும்விட தன் சங்கீதக் கலை தன்னோடு போய்விடுமோ என்று ஒரு வேதனை அவனுக்கு. உடல் தேய்ந்து கொண்டே வரும் சிருங்கார திலகையை அணுகி, "உன்னுற உன்னை வாட்டும் வேதனை என்ன, சொல்லு" என்றான். தம் அந்தரங்கத்தைப் பெண்கள் எங்கேயாவது வெளியிடுவார்களா? "ருத்திரனிடம் உன்னைக் கொண்டு விடட்டுமா? நகரிலும் ஒரே குழப்பமாயிருக்கிறது......நான் போகப் போகிறேன். வருகிறேயா?" என்றான். அவள் முகத்தில் சற்றுத் தெளிவு ஏற்பட்டது. தலையசைத்தாள், எழுந்தாள்.

மலைச் சரிவு, வெறும் வெண்மை மூச்சுவிடும் பாலை. ஓமை மரப்பட்டையினுள் பதுங்கி பின் விடு கறங்கும் பாழ் இடம். பகற் பொழுதில் வான் அளாவப் புழுதித் தேர் செல்லும். தனிமை மிகுந்த மாலைப் பொழுதில் யாழில் விளரிப் பண்ணை இட்டு,

'பிரிவின் வாழ்தல் இலமே
மறப்பரும் காதலி ஒழிய
இறப்பது என்பது இங்கே
இளமைக்கு முடிவே'

என்று ஒரு குரல் பாடி நெக்குருகும். வேறு யாரும் இல்லை. ருத்திரனார்தான், காலையும் மாலையும் யாழோடு தம் துயரைக் கூறிக் கொண்டும், பகலில் பிரிவாற்றுமையில் பிறந்த அகச்சுவை நூல் ஒன்றை வரைவதுமாய் நாட்களைக் கழித்தார். கடல் போல் விரியும் கங்குலில் விரக வெள்ளத்தில் நீந்துவார்.

அவர் எழுதிய காவியம் ஒரு நாள் முற்றுப் பெற்றது. ஓலைச் சுவடியை மூடிக் கட்டி வைத்த சமயம் யாரோ மெல்ல உள்ளே வரும் காலரவம் கேட்டுத் திரும்பினார். சிருங்கார திலகையும், அவள் பின்னால் மகேந்திரனும் வந்தனர். அவரால் நம்ப முடியவில்லை.

"என்னை மன்னிக்கவும், இவ்வளவு பழகியும் உங்கள் இருவர் மனத்தையும் அறிந்து கொள்ள முடியாமல் போயிற்றே. ஆ, இந்தத் தனிமையில் என்ன துயரில் உழன்று துடித்தீரோ! அறியாமல் பாவம் செய்து விட்டேன். சிருங்காரதிலகை உமக்கே உரியவள். ஏற்றுக் கொள்ளும். இந்தப் பாறைச் சுவர் ஒரு காரியத்துக்கு உதவும். உம் எதிரிலேயே நான் கற்ற சங்கீத வித்தையைப் பொறித்து விடுகிறேன். அது அழியாமல் நிலைப்பதற்கு இதுவே தகுந்த இடம்" என்று பகர்ந்தான் அரசன் தன் ஆசிரியனை வணங்கி.

குரல் அடைத்தது ருத்திரனாருக்கு. "அரசே, என்ன மனசு உங்களுக்கு! இதோ நான் உங்களுக்கு ஓர் அழியாப் பொருளைத் தருகிறேன்" என்று கூறி ஓலைச் சுவடி ஒன்றை அவனிடம் தந்தார்.

அரசன் ஆவலுடன் திறந்து பார்த்தான். "'சிருங்கார திலகம்' மீண்டும் என்னிடமே திரும்பிவிட்டாள். என் பாக்கியமே பாக்கியம்! 'சிருங்காரி' என்றே ஆரம்பித்திருக்கிறீர்கள். என்ன அழகு!" என்றான். கலையின் பொருட்டு இவன் எந்தத் தியாகந்தான் செய்ய மாட்டான்!

* * *

சில்லென்று பனி உறைக்கவே விழித்துக் கொண்டேன். கீழ்த்திசை வெளுத்துக் கொண்டிருந்தது. கண்ணைக் கசக்கிக் கொண்டு பார்த்தேன். அங்கே அரசனும் இல்லை, அணங்கும் இல்லை, ஆசிரியரும் இல்லை. அந்தச் சிருங்கார திலகையின் கை விரல்கள் போல் என் பக்கத்தில் செங்காந்தள் மலர்கள் காற்றில் அசைந்தன. குடுமியாமலைக் கல்வெட்டின் மீது வெளிச்சம் படிந்தது. 'ஸ்ரீ ருத்ராசார்ய சிஷ்யேண பரமமாஹேச்வரேண ராக்ஞா சிஷ்யஹிதார்த்தம் க்ருதா ஸ்வராகமா:' என்ற எழுத்துக்கள் என் கண்ணில் பட்டன. 'சிருங்கார திலகம்' என்ற நூலை யாத்தவர் இவர்தானோ?......ஆனால் பட்டம் பகலில் கல்வெட்டை விளக்கிய அந்த ஆள் அவராகத்தான் இருக்குமோ? ஆனால் எப்படித் திடுமென மறைந்து போய் விட முடியும்? 'தாம் வேண்டும் உருவின் அணங்குமார் வருமே, கனவின் வாயே போல் துஞ்சுநர்க்குக் கனவு ஆண்டு மருட்டலும் உண்டே' என்று நீங்கள் படித்திருக்கலாம். என்னையும், என் காலத்தையும் அடியோடு மறந்து விடுவேன். மறைந்த யுகத்தில் சஞ்சரிப்பேன், அக்காலத்தவருடன் பழகுவேன், பேசுவேன், அவர்களும் என்னோடு அளவளாவுவார்கள்...ஆனால் நீங்கள் நம்பமாட்டீர்களே!



காலேஜ் பையன்:—நம்முடைய கல்யாணத்துக்கு மூன்று பேர்கள் குறுக்கே நிற்கிறார்கள் என்றாயே, அவர்கள் யார்?

பெண்:—அவர்களா? அப்பா ஒண்ணு, அம்மா ஒண்ணு, நான் ஒண்ணு!

# சந்தனத்தின் பரிசுத்தம்



மைசூர் சந்தன சோப்பின் ஒப்பற்ற சிறப்பிற்கு இதுவேதான் காரணம். இந்தியாவில் சந்தனம் பரிசுத்தத்தின் அறிகுறியாக விளங்குகிறது. சிறிதும் கெடுதலற்று, மிகத் தூய்மையுடன் ஒளிதமளிக்கும் அதன் உயரிய விசேஷமான குணங்கள் யாவராலும் நன்கு அறியப்பட்ட உண்மை. இச்சீரிய குணங்கள் வாய்ந்த சந்தன எண்ணெயும் சோப்பின் உற்பத்தியில் விசேஷமாக கையாளப்படும் முறைகளும் ஒருங்கே சேர்ந்து மைசூர் சந்தன சோப்பை நறுமணத்திற்கும், தூய்மைக்கும் ஈடில்லாத தனிச் சிறப்புடன் விளங்கச் செய்கிறது.

## மைசூர் சந்தன சோப்

மைசூர்
கவர்ன்மெண்ட்
தயாரிப்பு



# இந்தியன் பாங்க், லிமிடெட்



(ஸ்தாபிதம் 1907)

தலைமை ஆபீஸ்: 'இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்' - மதராஸ் – 1

★

| | | | |
|---|---|---|---|
| அதிகாரம் பெற்ற மூலதனம் | - | ரூ. | 1,00,00,000 |
| வாக்களிக்கப்பட்ட மூலதனம் | - | ரூ. | 72,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | - | ரூ. | 53,00,000 |
| ரிஸர்வ் நிதி | - | ரூ. | 62,00,000 |

★

டைரக்டர்கள்:

ஸ்ரீ L. அழகசுந்தரம் செட்டியார்
ராவ் சாகிப் E. M. முத்தப்ப செட்டியார்
ஸ்ரீ P. V. RM. குழந்தையன் செட்டியார்
ஸ்ரீ K. பாலசுப்ரமண்ய அய்யர்
ஸ்ரீ M. A. சிதம்பரம் செட்டியார்
ஸ்ரீ R. K. வெங்கடாசலம்
ஸ்ரீ R. சுந்தரம் அய்யர்
ராவ் பகதூர் M.R.M.S. பெரியண்ணன் செட்டியார்
ஸ்ரீ O. M. SP. L. M. மெய்யப்ப செட்டியார்
ஸ்ரீ A. M. A. MR. முருகப்ப செட்டியார்
ராவ் பகதூர் டாக்டர் M. R. குருஸ்வாமி முதலியார்
ஸ்ரீ C. கிருஷ்ணமூர்த்தி முதலியார்

★

எல்லாவித பாங்கிங் அலுவல்களும் செய்யப்படும்

N. கோபாலய்யர்

காரியதரிசி

## விசுவாமித்திரர்



திரிசங்கு என்ற மன்னன் தன் ஊன் உடலுடன் தேவலோகத்துக்குப் போக விரும்பினன். விசுவாமித்திரர் தம் தவத்தின் மகிமையால், அவன் விருப்பத்தை நிறைவேற்றி வைத்தார். இந்திரன் திரிசங்குவைத் தலை குப்புறப் பிடித்துத் தள்ளினன். இதைக் கண்ட விசுவாமித்திரர் கோபமுற்று, நான்முகனும் நட்சத்திர கணங்களும் கூடிய ஒரு புது உலகத்தையே திரிசங்குவுக் கென்று சிருஷ்டித்துக் கொடுத்தார்.

அத்தகைய தவசிரேஷ்டரான விசுவாமித்திரர், தமக்கு இடையூறு விளைத்த அரக்கர்களை வதஞ் செய்யச் சின்னஞ் சிறு பாலர்களான ராம லக்ஷ்மணர்களின் உதவியை நாடினர். தாடகை வதம் ஆன பிறகு, விசுவாமித்திரர் பெரிதும் மகிழ்ந்து, ராம லக்ஷ்மணர்களுக்கு பலா, அதிபலா என்ற அரிய மந்திரங்களை உபதேசித்தார்.



பதியே தெய்வம் என்று போற்றி வந்த அநசூயா தேவிக்குத் தம் வாழ்க்கையில் எத்தனையோ சோதனைகள் ஏற்பட்டன. ஏன், மும்மூர்த்திகளே அந்த அம்மையாரின் கற்பைப் பரிசோதிக்கத் தலைப்பட்டு விட்டனர்! ஆனால் இந்த மும்மூர்த்திகளைவிடச் சக்தி வாய்ந்ததாக இருந்தது அவருடைய கற்பு. அந்தக் கற்பின் சக்தியால் மும்மூர்த்திகளையும் குழந்தை வடிவமாகச் செய்து தொட்டிலில் போட்டு ஆட்டினார் அநசூயா தேவியார்.

அத்தகைய மகா உத்தமியின் ஆசிரமத்தில் ராமர், சீதை, லக்ஷ்மணர் ஆகிய மூவரும் தங்க நேர்ந்தது. அப்போது பிராயம் முதிர்ந்த அநசூயா தேவியார் சீதையின் யௌவன சௌந்தர்யத்தைக் கண்டு மெய் சிலிர்த்து, தம்மிடமிருந்த ஒளி வீசும் ஆபரணங்களை சீதைக்கு அணிந்து பார்த்து உள்ளம் பூரித்தார்.




ராமர், லக்ஷ்மணர், சீதை ஆகிய மூவரையும் வனத்தில் விட்டு விட்டு, கங்கரையில் தேரைத் திருப்பிக் கொண்டு அயோத்தி நோக்கிப் புறப்பட்டான் சுமந்திரன். புறப்படுமுன் சீதையிடம் விடை பெற்றுக்கொள்ள வந்தபோது, வனவாசத்தில் நேரப்போகும் கஷ்டங்களைப் பற்றிச் சிறிதும் கவலையில்லாமல் சீதை, "அயோத்தியில் நான் கிளியையும் மைனாவையும் வளர்த்து வந்தேன். அவற்றை ஜாக்கிரதையாக வளர்த்து வருமாறு என் தங்கைமார்களிடம் சொல்ல வேண்டும்" என்றாள்.

இந்தச் சம்பவத்தை, அசோக வனத்திலிருந்த சீதையிடம், ராமன் நினைவுறுத்தச் சொன்னதாகக் கூறினான் அநுமன். இதைக் கேட்டதும் 'அநுமன் உண்மையிலேயே ராம தூதன்தான்' என்ற நம்பிக்கை ஏற்பட்டு விட்டது சீதைக்கு. அதைக் கண்ட அநுமன் 'இதுதான் தக்க சமயம்' என்று ராமன் கொடுத்த கணையாழியைப் பவ்யமாக நீட்டிக் கொடுத்தான்.

# விபீஷணன்



சிபிச் சக்கரவர்த்தியின் மடியில் ஒரு புறா வந்து விழுந்தது. சற்று நேரத்துக்கெல்லாம் ஒரு ராஜாளி வந்து, "அந்தப் புறா என்னுடைய ஆகாரம். நான் அதைத் துரத்தி வந்தேன். ஆகவே அதை என்னிடம் கொடுத்து விடுங்கள்" என்றது. சிபிச் சக்கரவர்த்தி, "என்னைத் தஞ்சம் என்று அடைந்த புறாவை நான் கைவிட மாட்டேன். வேண்டுமானால் புறாவின் எடைக்குத் தகுந்த மாமிசம் என்னுடலில் வெட்டித் தருகிறேன்" என்றார். ராஜாளி சம்மதித்தது. சிபிச் சக்கரவர்த்தி தம் தொடையிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக மாமிசம் வெட்டி வெட்டி எடுத்து வைத்தார்; சமநிலைக்கு வரவில்லை. கடைசியில் தாமே அந்தத் தட்டில் அமர்ந்தார். இரண்டு தட்டுக்களும் சமநிலைக்கு வந்தன!

விபீஷணன் ராமரிடம் சரணாகதி யடைந்தபோது அவனைச் சேர்த்துக் கொள்ளலாமா கூடாதா என்ற பிரச்னை எழுந்தது. அப்போது ராமர் மேற்கண்ட சிபியின் கதையை நினைவுறுத்தி, "அபயம் என்ற போழ்ததே அபயதானம் தருவதே கடப்பாடு" என்று கூறிச் சேர்த்துக் கொண்டார்!


எல்லா ஆதரவாளர்களுக்கும்
எமது மனமார்ந்த
தீபாவளி வாழ்த்துக்கள்!
மினிவேச்சர் "H-2"
ரோல்டு கோல்டு, 30 மைக்ரோன்ஸ் ரு. 180
நியூ காலிபர் "G"
நிக்கல் ஸில்வர், ஸ்டீல் பின்புறம் ரு. 125
ஸைப்பிரைட் ஸ்டீல் ... ரு. 142
ரோல்டு கோல்டு, 30 மைக்ரோன்ஸ் ரு. 164
WEST END WATCH Co.
BOMBAY
CALCUTTA


தீபா
ஹேர் ஆயில்
டாய்லட் சோப்
பிரில்லியண்டைன்
ஸ்னோ
ஊதுபத்திகள்
காவேரி
சந்தன சோப்
டூத் பேஸ்ட்
டூத் பவுடர்
சந்தன ஷாம்பூ
சந்தனாதி தைலம்
எல்லோரா
சந்தன சோப்
க்யூரால்
சோப்
டாய்லட் பவுடர்
கங்கா
ஒர்க்ஸ்
அடையார்
மதராஸ்-20




விவரங்களுக்கு :
காமதேனு டெக்ஸ்டைல்ஸ், ஈரோடு



# கெம்ப் & கோ., லிட்.

## மருந்து உலக சரித்திரத்திலேயே பிரசித்திபெற்ற பெயர்.

1868-ம் வருஷத்திலிருந்தே, கெம்ப் அண்டு கம்பெனி லிமிடெட், இந்திய மருந்துத் தொழிலில் சிறந்த உற்பத்திக்கும் சேவைக்கும் எடுத்துக் காட்டாக விளங்கி வருகிறது.

இடைவிடா நுண்ணிய ஆராய்ச்சியினால் கெம்ப் அண்டு கம்பெனி குடும்ப வைத்தியப் பாதுகாப்புக்கு வேண்டிய மருந்துகளைத் தயாரிப்பதில் இணையற்று விளங்கி தனது பெயரை நிலைநாட்டியுள்ளது.

மருந்து தயாரிப்பில் இணையற்று விளங்குவதோடு கீழே காணும் உலகப் பிரசித்திபெற்ற மருந்துக் கம்பெனிகளின் விசேஷ உரிமையையும் பெற்று ஏஜெண்டாக இருக்கிறது.

- எலி லில்லி & கோ., லிட்., ஆப் இந்தியா. யு.எஸ்.ஏ.
- வில்லியம் ஆர். வார்னர் & கோ., யு.எஸ்.ஏ.
- வி. இ. புல்போர்டு லிமிடெட், இங்கிலாந்து
- அல்லேடு லாபோரேட்டரீஸ் லிட்., இங்கிலாந்து
- காண்டினெண்டல் லாபோரேட்டரீஸ் லிமிடெட், இங்கிலாந்து

மற்றும் அநேக உலக மருந்து உற்பத்தி ஸ்தாபனங்களுக்கும்

இந்தியா முழுவதும் அநேக கெமிஸ்டு கம்பெனிகள் மூலம் கெம்ப் & கம்பெனி, மருந்து தயாரிப்பையும் விற்பனையையும் இரவு பகல் எல்லா நேரங்களிலும் நன்கு நடத்தி வருகிறது.

Trade Mark

Kemp & Co. Ltd.

எல்பின் ஹவுஸ், பம்பாய் - 28

கல்கத்தா : டெல்லி : மதராஸ்

# கைதி சொன்ன கதை






ஒரு காலத்தில் மிகப் பிரபல நாடக நட்சத்திரமாக விளங்கினாள் காஞ்சனா. பத்திரிகைகளில் அவளைப் பற்றி ஏதாவது செய்திகள் வந்து கொண்டேயிருக்கும். நாடக ரஸிகர்கள் அவளைப் பற்றிப் பேசிப் புகழ்ந்து கொண்டேயிருப்பார்கள். அவள் எந்தத் தெருவில் வசிக்கிறாள், எந்த மாதிரி புடவை உடுத்திக் கொள்கிறாள் என்றெல்லாம் தெரிந்து கொள்வதில் ஜனங்களுக்கு இருந்த ஆவலைச் சொல்லி முடியாது. புஷ்பக் கடைக்குப் போனால் காஞ்சனா சுகந்தம்; ஜவுளிக் கடைக்குப் போனால் காஞ்சனா புடவை; நகைக் கடைக்குப் போனால் காஞ்சனா வளையல்! இப்படி எங்கு போனாலும் காஞ்சனா, காஞ்சனா, காஞ்சனாதான்! ஏன்! நானே காஞ்சனாவைப் பேட்டி கண்டு பத்திரிகைகளுக்குக் கட்டுரை எழுதுவேன். அதில் ஒன்றும் விஷயம் இருக்காது. ஆனால் ஜனங்கள் அதை விழுந்து விழுந்து படிப்பார்கள். என்னைப் பிரமாதமாகப் புகழ்வார்கள். அதெல்லாம் அந்தக் காலம். இப்பொழுது காஞ்சனா பிரபல நாடக நட்சத்திரப் பதவியிலிருந்து துறவு பூண்டு விட்டாள். அப்படி அவள் துறவு பூண்டதைப் பற்றி ஜனங்கள் பலவிதமாகப் பேசிக் கொண்டார்கள். அதையெல்லாம் கேட்கும்போது எனக்குச் சிரிப்பு வரும். கூடவே இனந் தெரியாத வேதனையும் உண்டாகும். காஞ்சனா துறவு பூண்டதில் நானும் சம்பந்தப்பட்டிருக்கிறேன் என்பது ஒருவருக்கும் தெரியாது. எப்படியோ நாடக உலகம் ஒரு பிரபல நட்சத்திரத்தை இழந்து விட்டது. நாடக ரஸிகர்கள் தலைசிறந்த நடிப்புக் கலையைப் பார்த்து அனுபவிப்பதை இழந்து விட்டார்கள்.

* * *

வழக்கம் போல அன்றும் நான் கோர்ட்டுக்குப் போயிருந்தேன். கோர்ட்டில் ஒரு விசித்திர வழக்கு. எந்தக் கேள்விக்கும் சரியாகப் பதில் சொல்லாமல் பேந்தப் பேந்த விழித்துக்கொண்டு கைதிக் கூண்டில் ஒரு கைதி நின்று கொண்டிருந்தான். அவனுக்குச் சுமார் நாற்பது வயது தான் இருக்கும். இருந்தாலும் அவனுடைய முகச் சுருக்கங்களும் நரைத்துப் போன தாடியும் அவனை ஒரு கிழவன் போலக் காண்பித்தன. அவனைத் திருட்டுக் குற்றத்துக்காக விசாரித்து, மூன்று வருஷக் காவல் தண்டனையும் கொடுத்துச் சிறையிலே தள்ளினார்கள்.

கோர்ட்டிலே அவன் நடந்து கொண்ட விதமும் அவன் குற்றம் புரிந்த சந்தர்ப்பமும் எனக்கு வியப்பை அளித்தன. அவனை நேரில் பார்த்து விசாரிக்க வேண்டும் என்று ஏதோ ஒன்று என்னைத் தூண்டியது. சிறையில் அவனைப் பார்த்துப் பேச அனுமதி பெற்றேன். முதலில் அந்தக் கைதி என்னிடம் எதுவுமே பேச மறுத்து விட்டான். "உன் கதையை என்னிடம் சொல்லுவதால் உனக்கு நன்மைதான் விளையும். பயப்படாதே!" என்று அவனைச் சமாதானம் செய்தேன்.

அவன் ஒன்றுக்கும் பதில் சொல்லாமல் மௌனமாக உட்கார்ந்திருந்தான். "உன் மனதில் இருப்பதை யாரிடமாவது சொன்னால் அதுவே உனக்கு ஒரு ஆறுதலைக் கொடுக்கும்" என்றேன். கடைசியில் அரை மனதோடு தன் வாழ்க்கைக் கதையைச் சொல்ல ஒருவாறு இசைந்தான்.

"நீங்கள் நினைப்பதும் சரிதான். நானும் கொஞ்சகாலம் எல்லாரையும் போல மனித சமூகத்தில் கண்ணியமாகவும் கௌரவமாகவும் வாழ்ந்தவன்தான். எப்பொழுதுமே இப்படி அனாதையாகப் பரதேசி போலத் தெருத் தெருவாக அலைந்து திரிந்துகொண்டிருக்கவில்லை" என்று அவன் தொடங்கினான். அவனுடைய சுருக்கம் விழுந்த முகத்திலும் குழி விழுந்த கண்களிலும் பழைய கால நினைவுகள் ஒன்றோடு ஒன்று மோதி அடித்துக்கொண்டு வரும் ஒரு பரபரப்பு நன்றாகத் தெரிந்தது.

"நான் பிறக்கும்பொழுதே பெரிய பணக்காரக் குடும்பத்தில் பிறந்தேன். அத்துடன் என் தகப்பனாரும் வெளி நாட்டிற்குச் சென்று வியாபாரம் செய்து ஏராளமான செல்வங்களைச் சேர்த்தார். என் இளமையிலேயே தாயாரை இழந்தேன். ஆகையால் என் தந்தை என்னை மிகவும் செல்வமாக வளர்த்தார். இரண்டாந்தாரம் கலியாணம் செய்து கொள்ளும்படி எத்தனையோ பேர் அவரை வற்புறுத்தியும் எனக்காகவே அதை வெறுத்தார். என்னை உயர்ந்த படிப்புக்குப் படிக்க வைத்தார். நான் படிக்கும்போதெல்லாம் அடிக்கடி நாடகம் பார்க்கப் போய்விடுவேன். கடற்கரைக்குப் போவேன்; காற்று வாங்குவேன். விதம் விதமான ஆடைகளை அணிந்துகொள்வதில் எனக்கு அலாதி பிரியம். சுருக்கமாகச் சொல்லப் போனால் பிறர் பார்த்துப் பொறாமைப் படும்படி உல்லாசமாக வாழ்ந்தேன். அப்பொழுது நடந்த ஒவ்வொரு சிறு சம்பவமும் எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. அவைகளை நினைத்து நினைத்துத்தான் நான் இப்பொழுதெல்லாம் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறேன். என் வாழ்க்கையில் நான் இந்தக் கதிக்கு ஆளான நிலைமையைப் பற்றிச் சொல்ல வேண்டுமானால் உங்களுக்குச் செங்கமலத்தைப் பற்றிய எல்லா விவரங்களையும் சொல்லி விடவேண்டும்.

"செங்கமலம், ஐயா! செங்கமலம் உண்மையில் செங்கமலம் போலவே இருப்பாள். கைதேர்ந்த சிற்பி காலம் எல்லாம் கஷ்டப்பட்டுக் கடைந்தெடுத்த பொற்பாவை உயிர்பெற்று வந்து விட்டதோ என்று எண்ணப் பிரமிக்கும்படி இருப்பாள். அப்பொழுது அவளுக்கு வயது பதினாறு இருக்கும். இளமையின் எழிலும் யௌவனத்தின் சோபையும் அவள்மீது ததும்பிக் கொண்டிருந்தது. எப்பொழுதும் நீல நிறப் பட்டாடைதான் உடுத்திக் கொள்வாள். சாதாரணமாக எல்லாரும் உடுத்திக் கொள்வது போல்தான் உடுத்திக் கொள்வாள். இருந்தாலும் அவள் உடுத்தியிருக்கும் விதம் அற்புதமாயிருக்கும். அவள் கழுத்து அசைவிலும் கைகளின் வீச்சிலும் கணீரென்ற பேச்சிலும் களங்கமற்ற பார்வையிலும் இளமையின் அழகு துள்ளி நடனமாடும். மாலை வேளைகளில் தோட்டத்தில் உலாவுவாள். பெண் உருவம் கொண்ட மயில் நடனம் பயிலுவது போலத் தோன்றும். அடாடா! அந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டே இருக்கலாம். சில சாதாரணமான பொருள்களெல்லாம்கூட அவள் கைபட்டவுடன் விந்தை உலகத்துக் காட்சிகளாக மாறிவிடும். ஏன்! நானே அவளைச் சந்தித்த பிறகு ஒரு புதிய மனிதனாக மாறிவிட்டேன். கம்பளத் துணி மீது தெளித்த மழைத் துளிகளை உதறி விடுவதுபோல என்னிடம் இருந்த அற்பத்தனங்களை எல்லாம் உதறித் தள்ளி விட்டேன்.

"எங்கிருந்தோ திடீரென்று வந்து என் வீட்டுக்குப் பக்கத்துவீட்டில் குடியேறினாள் செங்கமலம். அவளுடன் வயது சென்ற பாட்டி ஒருத்திதான் வந்திருந்தாள். செங்கமலத்துக்கு நல்ல புஸ்தகங்களைப் படிப்பதில் அதிகப் பிரியம். என்னிடம் நிறையப் புஸ்தகங்கள் இருக்கின்றன என்பதைத் தெரிந்துகொண்டு தன் பாட்டி மூலம் வாங்கிப் படிக்க ஆரம்பித்தாள். அதனால் அவளுடன் பழகும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது. அப்பொழுது நான் பிறர் பார்த்துப் பிரேமை கொள்ளும் யௌவன வாலிபனாக இருந்தேன். என் இளமையும் அழகும் அவள் சிந்தையைக் கவர்ந்து விட்டன. அவள் என்னைக் காதலித்தாள். நான் நிறைய நாடகங்கள் பார்த்திருந்தாலும் ஏராளமான கவிதைகளைப் படித்து அனுபவித்திருந்தாலும் அவள் மனதை என்னால் சுலபமாகக் கவர முடிந்தது. அவளால் என்னைக் காதலிக்காமல் இருக்க முடியவில்லை. அவள் முதன்

முதலில் என்னிடம் எப்படி நெருங்கிப் பழகித் தன் மனதைத் திறந்து காண்பித்தாள் என்பது எனக்கு இப்பொழுது நினைவில்லை. ஆனால் சில காட்சிகள், நானும் செங்கமலமும் சேர்ந்திருந்த இன்ப நினைவுகள், இத்தனை வருஷங்களுக்குப் பிறகும் என் மனக்கண் முன்னால் தோன்றி மயக்குகின்றன. நினைத்துப் பார்த்தாலே நேற்று நடந்தது போல் இருக்கிறது.

"ஒருநாள் இரவு. நிலவு பால்போலக் காய்ந்து கொண்டிருந்தது. நானும் செங்கமலமும் என் வீட்டுத் தோட்டத்திலிருந்த சலவைக்கல் மேடைமீது உட்கார்ந்திருந்தோம். சலவைக்கல் மேடை ஓரமாக ஒரு மகிழ மரம் அடர்ந்து வளர்ந்திருந்தது. அப்பொழுது அடித்த இளம் தென்றலில் சில மகிழம் பூக்கள் எங்கள்மீது உதிர்ந்தன. 'கந்தர்வர்கள் காதலர்களை மலர் தூவி ஆசீர்வதிக்கிறார்கள்' என்றேன். அவள் என்னைத் திரும்பிப் பார்த்து ஒரு மோகனப் புன்னகை செய்தாள். அப்பொழுது மகிழமரக் கிளையின் இடுக்குவழியாக வந்த நிலவொளி அவள் முகத்தில் பட்டது. வானத்துச் சந்திரிகையே என் அருகில் வந்து அமர்ந்திருக்கிறாளோ என்று எண்ணினேன். சூழ்ந்த பொருளெல்லாம் மோனத்திலிருந்தன. மகிழ மலரின் சுகந்தமும் நிலவொளியால் அந்த மரத்தின் அடியில் ஏற்பட்டிருந்த இருண்ட நிழலும் என்னை என்னவோ செய்தன.

"மெதுவாக அவள் அருகில் நெருங்கி உட்கார்ந்தேன். அவள் விலகவில்லை. அவளுடைய மலர்க்கரத்தைப் பற்றினேன். அவள் தடுக்கவில்லை. அந்த வேளையில் நானும் செங்கமலமும் அந்தச் சலவைக்கல் மேடையோடு எங்கேயோ வானவெளியில் மிதந்து மேலே மேலே செல்லுவதுபோல இருந்தது. செங்கமலம் வேரற்ற முல்லைக் கொடிபோல என்மீது துவண்டு சாய்ந்தாள். இந்த மோன நிலையில் நாங்கள் எத்தனை நேரம் இருந்தோமோ! என் வேலையாளின் கனைப்புச் சத்தம் கேட்டுத் திடுக்கிட்டேன். செங்கமலம் சிரித்தாள். இப்படி எத்தனையோ இரவுகள்!" என்று சொல்லிக் கைதி கதையை நிறுத்தினான்.

ஏதோ என்னைக் கேட்க ஆசைப்படுபவன்போல என் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். நான் வாயைத் திறக்கவில்லை. சிறிது நேரம் ஏதோ சிந்தனை செய்து கொண்டிருந்தான். சிறை வாசலில் பாரா கொடுக்கும் காவல்காரனின் கால் பூட்ஸ் சத்தம் 'டக், டக்' என்று கேட்டது.

கைதி தானாகவே மீண்டும் கதையைச் சொல்லத் தொடங்கினான்.

"செங்கமலத்துக்கு நாடகம் என்றால் உயிர். ஒருநாள் நானும் செங்கமலமும் 'கண்ணகி' நாடகம் பார்க்கப் போயிருந்தோம். நாடகத்தில் மாதவியும் கோவலனும் பிரியாது வாழ்கிறார்கள்; கண்ணகியையும் மறந்து இதய அன்பு முழுவதையும் கோவலன் மாதவிபால் செலுத்திவிடுகிறான். நிலா முற்றத்திலும் மலர்ப் படுக்கையிலும் இன்பச் சோலையிலுமாக ஆனந்தமாகக் கழித்து இன்பம் நுகருகிறார்கள் அவர்கள். இந்தக் காட்சிகளை எல்லாம் செங்கமலம் கவனமாகப் பார்த்தாள். அப்பொழுது நடந்த சம்பாஷணைகளை எல்லாம் கேட்டு அநுபவித்தாள். அடிக்கடி என்னைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தாள். நாடகம் முடிந்து வெளியில் வந்தோம். 'நீங்கள் கோவலனைப் போல இருந்தாலும் நான் கண்ணகியாகவே இருப்பேன்' என்றாள். 'நான் ஒருநாளும் கோவலனைப்போல் நடந்துகொள்ள மாட்டேன். ராமனைப்போல் ஏகபத்தினி விரதனாய்த் தான் இருப்பேன்' என்றேன். அவள் சிரித்தாள். பிறகு, "நாம் ஒருமுறை காவேரிப்பூம் பட்டினம் போய் வருவோமா!" என்று கேட்டாள். 'கரும்பு தின்னக் கூலியா! நாளைக்கே போவோம்' என்றேன்.

"மறுநாள் செங்கமலமும் நானும் காவேரிப்பூம்பட்டினத்துக்குச் சென்றோம். செங்கமலம் பூரித்துப் போனாள். இரு கரையிலும் புன்னை மரங்களும் தாழம்புச் செடிகளும் நிறைந்து கண்ணுக்கு எட்டிய தூரம் ஒரே, பசுமை! பசுமை! பசுமை! என்று விளக்கும்படி செய்து கம்பீர நடையுடன் மந்தஹாசம் தவழக் குலுங்கிச் சென்றுகொண்டிருந்தது காவேரி. செங்கமலம் காவேரி நதியில் இறங்கி நின்று சிறு குழந்தைபோலத் தண்ணீரை வாரி இறைத்துச் சந்தோஷப் பட்டாள். காவேரிக் கரையுடனே சென்றோம். இரு புறமும் நிலத்தை உழுவதால் ஏற்பட்ட இசைமயமான ஓசையும் காவேரி நீர் மதகுகளின்மீது மோதும்போது உண்டாகும் 'குடும் குடும்' என்ற ஓசையும் சேர்ந்து எங்கள் காதில் தேன்மாரி பெய்தன. சிறு வாய்க்கால்களில் வெள்ளம் இரு கரையும் ததும்பிக்கொண்டு ஓடிக்கொண்டிருந்தது. இந்தக் காட்சிகள் எங்களை இன்ப உலகத்துக்கு அழைத்துச் சென்றன. செங்கமலம் நடு நடுவே 'மாதவியும் கோவலனும் இந்த வழியெல்லாம் போயிருப்பார்கள் அல்லவா!' என்று கேட்டாள். அவளுடைய குழந்தை மனதை எண்ணி வியந்தேன். பகலெல்லாம் இந்த இயற்கைக் காட்சிகளைக் கண்டு களித்தோம். சூரியன் மலை வாயில் விழும் நேரத்துக்குக் கடற்கரைக்குச் சென்றோம்.

"அங்கு சென்றவுடன் இருவரும் அலைமோதும் கடலைப் பார்த்தவண்ணம் நடந்து கொண்டிருந்தோம். மெல்லிசையுடன் மணலில் எங்கள் கால் பட்டு 'சர சர' வென்ற சத்தம் எழுந்தது. அவ்வப்போது கடல் நுரையும், கடலில் எப்படியோ வந்து சேர்ந்த பல தென்னை மட்டைகளும் அலையினால் கரையில் ஒதுக்கப்பட்டன. 'ஜில்' லென்று கடற்காற்று வீசிக் கொண்டிருந்தது. எங்கள் உள்ளத்தைக் குளிரச் செய்து அது அந்தப் பரந்த வெளியில் வீசியது. நாங்கள் கடற்கரை வெண் மணலில் உட்கார்ந்தோம். மாலைக் கதிரவனின் பொன் ஒளி சிறிது சிறிதாக மங்கிச் சந்திரனுடைய தூய வெண்மை நிற ஒளி வானவெளி முழுவதிலும் பரவிற்று. எல்லையில்லாத கடல்மீதும் அகண்ட வான முழுவதும் வெள்ளம்போல நிரம்பி நின்ற நிலவைக் கண்டு நாங்கள் கவலையும் சிந்தனையும் அற்ற கந்தர்வ லோகத்திற்கே சென்றுவிட்டோம்.

"அன்றும் செங்கமலம் ஒரு நீல நிறப் பட்டைத்தான் உடுத்தி யிருந்தாள். நிலவொளி பட்டு அது இந்திரஜால வர்ணப் புடவையாகத் திகழ்ந்தது. செங்கமலம் கந்தர்வ குமாரிபோலக் காட்சி அளித்தாள். எங்களைச் சுற்றிலும் சந்திரனின் பேரொளி






வைத் தவிர வேறு ஒன்றுமில்லை. அந்த எல்லையற்ற பேரொளியில் செங்கமலம் தன் மலர்க் கரத்தை நீட்டி என் கையைப் பற்றினாள். என் உடம்பில் ஒரு மின்சார சக்தி பாய்ந்து ஓடத் தலைப்பட்டது. 'ஆகா! இப்படித் திறந்த விசாலமான வான வெளியில் மேலே அல்லவா, காதலர்கள் ஒன்று கூடிக் களிக்க வேண்டும்' என்று நினைத்தேன். அந்த இன்ப நினைவில் இந்த உலகையே மறந்தேன். செங்கமலத்தின் மலர்க் கரத்தைப் பற்றியபடியே வாழ்நாள் முழுவதையும் கழிக்க மாட்டோமா என்று நினைத்தேன்.

"அப்பொழுது அங்கே சூழ்ந்திருந்த மௌனத்தைக் கலைத்துக் கொண்டு ஒரு பொன் வீணை தமிழில் பேசுவது போலச் செங்கமலம் பேசினாள். 'ஊருக்குப் போனவுடன் நமது திருமணத்தை முடித்து விட வேண்டும்' என்றாள். 'அப்பா வெளியூர் சென்றிருக்கிறார். அவர் வந்தவுடன் முதலில் நமது திருமணம்தான்' என்றேன். அவள் முகம் நாணத்தால் சிவந்தது அந்த வெண் நிலவில் நன்றாகத் தெரிந்தது. வெளி வெளியாக சுருண்டிருக்கும் கேசம் அழகிய அவள் கன்னத்தில் புரண்டு கொண்டிருந்தது. அந்தக் கேசத்தைத் தள்ளி ஒதுக்கி விட்டு அவள் தலையை அன்போடு வருடிக் கொண்டே நான் மேலே பேச ஆரம்பித்தேன். என்ன பேசினேன் என்று எனக்கே தெரியாது. 'உன்னைக் கல்யாணம் செய்து கொண்டு மறுபடியும் ஒரு முறை இங்கே வந்து நான் கோவலனைப்போல் மாறவில்லை. பார்த்தாயா!' என்று கேட்கப் போனேன்.—இப்படி ஏதேதோ பேசினேன்.

நான் பேசினேனா! இல்லை; என் இதயம் பேசிக் கொண்டிருந்தது. என்னையே பார்த்துக் கொண்டிருந்த அவள் என்ன நினைத்தாளோ! கலீரென்று சிரித்தாள். அவள் சிரித்த பொழுது ஏனோ தெரியவில்லை. எனக்கு வெட்கமாகப் போய் விட்டது. தலையைக் குனிந்து கொண்டேன். அவள் என் தலையைத் தன் கைகளால் நிமிர்த்தி முகத்தைப் பார்த்தவாறே லேசாகச் சிரித்தாள். அந்த மோகனச் சிரிப்பு என்னை எங்கேயோ அழைத்துச் சென்று விட்டது.

"மறு நாளே ஊருக்குத் திரும்பி விட்டோம். ஊரில் எனக்கு ஒரு துக்கச் செய்தி காத்திருந்தது. தாயை இழந்த நான் இப்பொழுது தந்தையையும் இழந்து விட்டேன். வெளிநாடு சென்றிருந்த என் தந்தையார் அங்கேயே திடீரென்று இறந்து விட்டார் என்று தந்தி வந்திருந்தது. நான் மிகவும் வருத்தப்பட்டேன். என்னைவிடச் செங்கமலம் அதிக வருத்தப் பட்டாள். அவளைச் சமாதானம் செய்தேன். 'செங்கமலம், இனி மேல் இந்தச் செல்வங்களுக்கெல்லாம் நான்தான் தலைவன். எனக்கும் நான்தான் தலைவன். அடுத்த தை மாதம் நமக்குத் திருமணம்' என்று சொன்னேன்'' என்று கூறிக் கைதி கதையை நிறுத்தி விட்டான்.

நான் மேலே கதை கேட்கும் ஆவலுடன் அவன் முகத்தைக் கூர்ந்து பார்த்தேன். அவன் சட்டென்று எழுந்து அந்த அறையில் இரண்டு மூன்று தரம் இப்படியும் அப்படியும் உலாவி விட்டு என் எதிரில் வந்து மௌனமாக உட்கார்ந்தான்.

அவனுக்கு மேலே கதையைச் சொல்ல இஷ்டமில்லை. இருந்தாலும் அவனையும் மீறிய ஒரு சக்தி அவனை மேலே கதையைச் சொல்லத் தூண்டுகிறது என்று அவனுடைய முகம் எடுத்துக் காட்டிற்று. கதையைத் தொடர்ந்தான்.

"இந்தச் சமயத்தில்தான் நான் என் பகுத்தறிவை இழந்து விட்டேன். தேன் நிறைந்த புஷ்பங்களை வண்டுகள் வந்து மொய்ப்பது போல, செல்வம் நிறைந்த என்னைச் சுற்றிலும் மனிதர்கள் மொய்க்க ஆரம்பித்து விட்டார்கள். வீணர்களின் பெருங்கூட்டம் நண்பர்கள் என்ற பெயரில் கூடிற்று. இந்தக் கூட்டத்தார் சதா என்னைச் சூழ்ந்து கொண்டிருந்ததால் நான் அடிக்கடி செங்கமலத்தைப் போய்ப் பார்க்க முடியவில்லை. அத்துடன் என்னுடைய புத்தியை வேறு வழியில் திருப்பி விட்டார்கள். புத்திசாலிகள் கூட சில சமயங்களில் தலைமைப் பதவிக்கு ஆசைப் பட்டு மதியிழந்து விடுகிறார்கள். அதற்காகத் தன்னைச் சுற்றிலும் முகஸ்துதி செய்யும் கயவர்களின் கூட்டத்தைச் சேர்த்து வைத்துக் கொள்கிறார்கள். அது போலவே என் சிநேகிதர்களுக்குத் தலைவனாக இருப்பதில் எனக்கு ஆசை ஏற்பட்டு விட்டது. என் மதியை இழந்து அவர்களுக்குத் தினம் தினம் புதுமைகள் காட்டுவதற்காக வீண் செலவு செய்தேன். அதற்காக நண்பர்கள் என்னைப் புகழ்வார்கள். அந்தப் புகழ்ச்சியை மேலும் மேலும் வளர்ப்பதற்காக என் செல்வங்களை வீணான வழிகளிலும் ஆடம்பர வாழ்க்கையிலும் வாரி இறைத்தேன்.

"என்னுடைய போக்கைக் கண்டு செங்கமலம் திடுக்கிட்டாள். என்னைத் திருத்துவதற்கு அரும்பாடு பட்டாள். எவ்வளவோ வழிகளில் என் தவறான பாதையை எடுத்துக் காண்பித்தாள். அவள் அப்படிச் சொல்லுவதனாலேயே அவள் மீது எனக்கு வெறுப்பு ஏற்பட்டது. முன்பெல்லாம் செங்கமலத்தைப் பார்க்கும் போது இருக்கும் இன்பம் இப்பொழுது எனக்கு ஏற்படுவதில்லை. ஆதலால் அவளை நான் பார்க்க விரும்புவதில்லை. இருந்தாலும் ஒருநாள் இரண்டு நாளைக்குப் பிறகு மீண்டும் அவளைப் பார்க்காமல் இருக்கவும் முடியவில்லை. அவளைத் தேடிப் போவேன். அங்கு போனவுடனேயே அவள் என் நண்பர்களைப் பற்றிக் குறை கூற ஆரம்பிப்பாள். நான் மனம் வெறுத்துத் திரும்பி விடுவேன்.

"இதற்கு மத்தியில் ஒருநாள் என் நண்பர்கள் புடைசூழ நாடகம் பார்க்கப் போயிருந்தேன். நாடகத்தில் அழகான இளம்பெண் ஒருத்தி நாட்டியமாடினாள். அவள் நாட்டியத்தை என் நண்பர்கள் புகழ்ந்தனர். மறுநாளே அந்த நாட்டியக்காரியை வீட்டுக்கு அழைத்து வந்து என் நண்பர்களுக்கு மத்தியில் நடனமாடச் செய்தேன். நண்பர்கள் மகிழ்ந்தனர். அவளை என் வீட்டிலேயே வைத்துக் கொண்டேன். அடிக்கடி அவளை நடனமாடச் சொல்லிப் பார்த்து மகிழ்ந்தேன். அந்த நாட்டியக்காரி எப்படியோ என்னை மயக்கி விட்டாள். அவளுடைய ஆட்டத்துக்கு அடிமையாகிக் கிடந்த நான் இப்பொழுது அவளுக்கே அடிமையாகிவிட்டேன். அவள் என் வாழ்வில் புகுந்த பிறகு நான் செங்க

மலத்தின் வீட்டுக்குப் போவதைக் கொஞ்சம் கொஞ்சமாக நிறுத்தி விட்டேன். அந்த நாட்டியக்காரியுடன் ஊர் ஊராகச் சுற்றினேன். வடக்கே காஷ்மீரிலிருந்து தெற்கே இலங்கைவரையில் அவளை அழைத்துக் கொண்டு உல்லாச யாத்திரை செய்தேன். அவள் விரும்பியதை எல்லாம் வாங்கிக் கொடுத்தேன். அவள் முகம் கோணாமல் அவளைத் திருப்திசெய்து வந்தேன்.

"கையிலுள்ள பொருளெல்லாம் கரைந்து விட்டது. கடன் வாங்கினேன். விற்க முடிந்த பொருளை எல்லாம் விற்றேன். அப்படியும் பணம் தேவையாக இருந்தது. கேட்கத் தகாதவர்களை எல்லாம் கேட்டேன். எல்லாரும் கைவிரித்து விட்டனர். பொழுது விடிந்தால் நான் சிறைச்சாலைக்குப் போகும்படியான அபாயம் காத்திருந்தது. பொழுது விடிவதற்குள் கடன்காரர்களுக்கு நான் பணத்தைக் கொடுக்கவேண்டும். என்ன பண்ணுவது என்று புரியாமல் நின்றுகொண்டிருக்கும்போது செங்கமலத்தின் நினைவு வந்தது. ஆனால் அவளைப் போய்ப் பார்க்கத் தைரியம் வரவில்லை. வேறு வழியில்லாமல் அவளைத் தேடிப் போனேன்.

"செங்கமலம் சோர்ந்த முகத்துடன் உட்கார்ந்திருந்தாள். 'செங்கமலம்' என்று கூப்பிட்டேன். முகத்தை ஒருபுறமாகச் சாய்த்துக் கொண்டு பேசாமலிருந்தாள். நான் என்னுடைய கஷ்ட நிலையை எடுத்துச் சொன்னேன். வெளுத்த கன்னத்தின் மீது சுருண்டு தொங்கிய கேசத்தைத் தள்ளிவிட்டுக் கொண்டு என்னைத் திரும்பிப் பார்த்தாள். அவள் கண்கள் கண்ணீரில் மிதந்தன. தொண்டை அடைக்கத் தழுதழுக்க 'இதோ என் பெட்டிச் சாவி. பெட்டியில் என்னுடைய நகைகள் எல்லாம் இருக்கின்றன. எடுத்துக் கொள்ளுங்கள். இனிமேலாவது இந்த மாதிரி வழிக்குப் போகாதீர்கள். விரைவில் நமது திருமணத்துக்கு ஏற்பாடு செய்யுங்கள்' என்று கெஞ்சும் குரலில் சொன்னாள்.

"அவளுடைய அன்பு நிறைந்த புத்திமதிகளைக் காதில் வாங்கிக் கொள்ளாமலே அவள் பெட்டியைத் திறந்து அதிலிருந்த நகைகளை அவசரம் அவசரமாக எடுத்துக் கொண்டு வந்து விட்டேன். அந்த நகைகளை எல்லாம் விற்றுக் கடன் கொடுக்க வேண்டியவர்களுக்கெல்லாம் கொடுத்தேன். அப்படியும் கடன் தொல்லை அடங்கவில்லை. சிறைக்குச் செல்லாமல் தப்பியதே பெரிய காரியமாகி விட்டது. எனக்கு வீழ்ச்சி காலம் ஆரம்பமாகி விட்டது. என்னைச் சுற்றிக்கொண்டு சாப்பிட்ட நண்பர்களே எனக்கு விரோதிகளாக மாறி விட்டனர். நான் யாருக்காக என் சொத்து சுகங்களை இழந்தேனோ, யாருக்காக நான் என் அருமைச் செங்கமலத்தைக்கூட மறந்தேனோ அந்த நாட்டியக்காரி, கைவஞ்சகி, விஷப் பாம்பு எனக்குத் தெரியாமல் யாருடனோ ஓடிவிட்டாள். சமூகத்தில் கௌரவமான மனிதர்களின் கோஷ்டியிலிருந்து சரிந்து விழுந்து விட்டேன். எனக்கு யார் முகத்திலும் விழிக்க முடியவில்லை. செங்கமலத்தைப் போய்ப் பார்க்கவும் தைரியம் வரவில்லை. எந்த முகத்தை வைத்துக்கொண்டு அவளைப் பார்ப்பேன். ஆகவே ஒருவருக்கும் தெரியாமல் ஊரை விட்டே ஓடிவிட்டேன். என் வாழ்வு முறிந்து விழுந்து விட்டது.

"ஊரைவிட்டு ஓடி வந்த பிறகு ஊர் ஊராக தெருத் தெருவாக அலைந்து திரிந்தேன். உடுக்க உடைகூட இல்லாமல் திண்டாடினேன். பல தினங்கள் பட்டினி கிடந்தேன். திருடர்கள் கூடும் இடங்களிலும் சத்திரம் சாவடிகளிலும் சாலை ஓரத்திலும் மரத்து அடியிலும் கோவில் பிராகாரங்களிலுமாகக் காலம் கழித்தேன். ஒரு வேளைச் சோற்றுக்கு வழி இல்லாமல் திண்டாடினேன். அப்பொழுதுதான் எனக்கு ஏழை எளியவர்களின் கஷ்டங்களை எல்லாம் உணர முடிந்தது. பிறந்த நாள் முதலாகவே பட்டினி கிடக்கும் பல ஏழை மக்களைக் கண்டேன். பட்டினி கிடக்க வேண்டும் என்று சட்டம் சொல்லவில்லை. இருந்தும் என்னைப் போல எத்தனையோ மக்கள் பசியோடுதான் கிடக்கிறார்கள். காரணம் என்ன! விளைச்சலில்லையா! வேண்டிய அளவு விளையவில்லை என்று சொல்லுவார்கள். அது அல்ல உண்மைக் காரணம். நம்மவர்கள் மண்டையில் மூளை இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். மேல் நாடுகளில் விளையவில்லையா! அங்கு மக்கள் மண்டையைச் சொரிந்து கொண்டு வானத்தைப் பார்த்துக் கொண்டிருக்க வில்லை. அவர்கள் சிந்திக்கிறார்கள். ஆற்றுத் தண்ணீரை வீணாக்காமல் விவசாயத்துக்கு உபயோகிக்கிறார்கள். தன்னைப் போலவே பிறரையும் மனிதர்களாக நினைக்கிறார்கள்.



அடாடா! எதையோ சொல்ல வந்தவன் என்னவோ சொல்லிக் கொண்டிருக்கிறேனே. ஏதோ ஆத்திரத்தில் நான் பட்ட பட்டினி அவஸ்தையில் சொல்லிவிட்டேன். அப்பொழுதெல்லாம் எனக்குத் தெரிந்தவர்கள் யாரையாவது பார்த்து விட்டால் மிகவும் வேதனையாக இருக்கும். ஒரு சௌகரியம். அவர்கள் என்னைப் பார்த்து அடையாளம் தெரிந்து கொள்ள முடியாதபடி என் உருவம் கோரமாக மாறிவிட்டது. இப்படிப் பல கஷ்டங்களுக்கிடையே பத்து வருஷ காலம் ஓடி மறைந்தது.

"ஒருநாள் பசியால் வாடி நடக்கக்கூடச் சக்தியில்லாமல் ஒரு வீட்டுத் திண்ணை ஓரமாகப் போய் நின்றேன். அந்த வீட்டின் தெரு ஓரமாக இருந்த அறையின் ஜன்னல் திறந்திருந்தது. திறந்த ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தேன். அந்த அறையின் சுவரில் இரண்டு படங்கள் மாட்டியிருந்தது தெரிந்தது. அதைப் பார்த்தவுடன் எனக்கு மூர்ச்சை போட்டுவிட்டது. சற்று நேரம் கழித்து அந்தப் படங்களை மீண்டும் பார்த்தேன். என்னால் என் கண்களையே நம்ப முடியவில்லை. கண்களைக் கசக்கி விட்டுக்கொண்டு மறுபடியும் ஒருமுறை பார்த்தேன். ஆம், அதே படம்தான். நான் அழகும் பொலிவும் நிறைந்த செல்வச் சீமானாக இருந்தபோது எடுத்த அதே படம்தான். அந்தப் படத்துக்கு மாலை போட்டு வைத்திருந்தது. அதற்குப் பக்கத்தில் செங்கமலத்தின் படமும் இருந்தது.

"நான் செங்கமலத்தை மறந்து எத்தனையோ வருஷங்கள் ஆகிவிட்டன. இப்பொழுதுதான் மீண்டும் முதல் முதலாக அவளை நினைக்க ஆரம்பித்தேன். அவளுடைய முழு உருவமும் என் கண் முன்னால் மிதந்து வந்தது. என் இதயத்தின் ஆழத்தில் புதைந்து கிடந்த எத்தனை எத்தனையோ இன்ப நினைவுகள், ஆனந்த உணர்ச்சிகள், சிந்தனைகள் எல்லாம் சிறகடித்துக் கொண்டு பறந்து வந்தன. ஜன்னல் வழியாகச் செங்கமலத்தின் படத்தை மீண்டும் ஒரு முறை பார்த்தேன். பார்த்துக் கொண்டே இருந்தேன். அப்படி எத்தனை நேரம் நின்று கொண்டிருந்தேனோ தெரியாது. 'என்னடா! எதையாவது திருடுவதற்கு வழி பார்க்கிறாயோ?' என்று கேட்டுக்கொண்டே வந்த வேலைக்காரன் என் கழுத்தைப் பிடித்துத் தள்ளி அங்கிருந்து அனுப்பி விட்டான்.

"அன்று முதல் என்னுடைய நாடோடி வாழ்க்கையில் ஒரு மாறுதல் ஏற்பட்டு விட்டது. என்னிடம் புதிதாகக் குடிகொண்டிருந்த சிறுமைகளையும் நான் இவ்வளவு கேவலமாக விழுந்து விட்டதையும் உணரத் தொடங்கினேன். செங்கமலம் சாதாரணமான மனிதப் பிறவியே இல்லை; அவள் மனிதர்களுக்குள் ஒரு தெய்வம்; அவளை மீண்டும் அடைய முடியுமா என்று ஏங்கினேன். எங்கிருந்தாவது திடீரென்று பெரும் பொருள் எனக்குக் கிடைத்து விடாதா! என் உறவினர்களில் யாராவது இறந்து அவர்கள் சொத்து முழுவதும் எனக்கு வந்து சேராதா! மீண்டும் இந்த மனிதக் கூட்டத்தில் கண்யமுள்ள மனிதனாக வாழ மாட்டோமா என்று இன்பக் கனவு கண்டேன்.

"அதே சமயத்தில் என் உள் மனது என்னைப் பார்த்துச் சிரித்தது. வெறும் மனக்கோட்டை கட்டாதே என்று அறிவுறுத்தியது. செங்கமலம் மானிடர்களுக்கு எட்டாத வானத்துச் சந்திரிகை. அவளை நினைத்து ஏங்காதே என்று ஏளனம் செய்தது. நான் உடனே அவளைப் பற்றிய நினைவை மறக்க முயன்றேன்.

"ஆனால் செங்கமலத்தை ஒரு முறை பார்க்க வேண்டும். அவளைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசையை மட்டும் என்னால் மறக்க முடியவில்லை. பைத்தியக்காரன் போல யார் யாரையெல்லாமோ செங்கமலத்தைப் பற்றி விசாரித்தேன். ஒருவருக்கும் அவளைப் பற்றித் தெரியவில்லை. செங்கமலத்தின்

படம் இருக்கும் வீட்டில் யார்தான் குடியிருக்கிறார்கள் என்று விசாரித்தேன். என்னை ஒரு மாதிரி ஏளனமாகப் பார்த்து எள்ளி நகையாடினர். கடைசியில் என்னைப் போன்ற ஒரு பரதேசி சொன்னான். அந்த வீட்டில் யாரோ ஒரு பிரபல நாடகக்காரி இருக்கிறாள் என்றும் அவள் பெயர் காஞ்சனா என்றும் சொன்னான். காஞ்சனாவைப் பற்றி விசாரித்தேன். அவளுடைய பூர்வோத்திரம் யாருக்கும் தெரியவில்லை. அவளையே நேரில் பார்த்து விசாரித்தால் செங்கமலத்தைப் பற்றிய விவரங்கள் எல்லாம் தெரியும் என்று நினைத்தேன். என்னுடைய இந்த நிலைமையில் அவள் வீட்டு வாசலில் கூட நிற்க அனுமதிக்க மாட்டார்கள் என்று தெரியும். இருந்தாலும் செங்கமலத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தில் ஒரு அசட்டுத் தைரியம் என் மனதில் ஏற்பட்டது. அந்த நாடகக் காரியையே போய்ப் பார்த்து விசாரித்து விட வேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று.

"அந்த ஆசை என் உள்ளத்தில் கட்டுக்கடங்காமல் எழவே காஞ்சனாவின் வீடு தேடிச் சென்றேன். என்னைப் பார்த்தவுடன் அந்த வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்த ஒரு பெண் சட்டென்று உள்ளே சென்றாள். அவள் என்னுடனிருந்து என் சொத்தை எல்லாம் பாழ்படுத்திய நாட்டியக்காரியைப் போலவே இருந்தாள். இவள்தான் காஞ்சனாவோ! சரி, இவளை எப்படியாவது பார்த்துச் செங்கமலத்தைப் பற்றி விசாரித்து விட வேண்டும் என்று அந்த வீட்டுக்குள் நுழைய முயன்றேன். வேலைக்காரன் என்னைத் தடுத்து நிறுத்தி விட்டான். என்னென்னவோ சொன்னேன். ஏழை சொல் அம்பலம் ஏறுமா! உள்ளே விட மறுத்து விட்டான். வெளியில் வர மாட்டாளா என்று அந்த வீட்டு வாசலிலேயே காத்திருந்தேன். அன்று பகல் முழுவதும் அவளைப் பார்க்கவே முடியவில்லை. இரவு வெகு நேரம் வரைக் காத்திருந்தேன். என்ன காத்திருந்து என்ன பயன்! அவளைப் பார்க்கவே முடியவில்லை. இப்படிப் பல நாள் காத்துப் பார்த்து விட்டுக் களைத்து விட்டேன்.

"ஒரு நாள் காஞ்சனாவின் வீட்டு வாசலில் வேலைக்காரர்கள் யாருமில்லை. என் தைரியத்தை எல்லாம் வரவழைத்துக் கொண்டு மெதுவாக வீட்டுக்குள் சென்று எட்டிப் பார்த்தேன். யாரும் இல்லை. உள்ளே சென்றேன். வாசல் ஓரமாக இருந்த அறையில் தான் செங்கமலத்தின் படம் இருந்தது. அதையாவது எடுத்துக் கொண்டு வந்து விடுவோம் என்று ஒரு எண்ணம்; ஆசை; வெறியே உண்டாகி விட்டது. சட்டென்று அந்த அறைக்குள் நுழைந்தேன். என்னையும் மீறிய ஆசையால் அந்தப் படத்தை ஆவலோடு கழற்றி எடுத்து மார்போடு அணைத்துக் கொண்டேன். யாரோ வருவது போலச் சத்தம் கேட்டது. படத்தைக் கெட்டியாக அணைத்துப் பிடித்துக் கொண்டு திகைத்து நின்றேன். அங்கு வந்த யாரோ சிலர் என்னைக் கையும் களவுமாகப் பிடித்து விட்டதாக நினைத்துப் போலீஸாரிடம் ஒப்படைத்து விட்டனர்.

"நான் ஒரு திருடனாம். காஞ்சனா வீட்டில் கொள்ளையடிப்பதற்காக அவள் வீட்டில் இல்லாத வேளையில் புகுந்து அவள் பொக்கிஷ அறைப் பூட்டை உடைத்துத் தங்க பிரேம் போட்ட படத்தை எடுத்துக் கொண்டேனாம். விசாரணையின் போது போலீஸார் இப்படி எல்லாம் சொன்னார்கள். இவ்வளவுதான் ஐயா என் கதை" என்று சொல்லி நிறுத்தினான் கைதி. அவன் முகத்தில் இதுவரையில் இல்லாத ஒரு தெளிவு காணப்பட்டது.

அவன் சொன்ன கதையைக் கேட்டதும் என்னையும் அறியாமலே அவன் மீது



எனக்கு இரக்கம் உண்டாகி விட்டது. கருணையோடு அவனைப் பார்த்தேன்.

"எனக்குக் காஞ்சனாவை நன்றாகத் தெரியும். நான் நாளைக்கே அவளைப் பார்த்துச் செங்கமலத்தைப் பற்றி விசாரிக்கிறேன். உன்னையும் விடுதலை செய்ய ஏற்பாடு செய்கிறேன்" என்றேன்.

அந்தக் கைதி என்னைப் பார்த்து ஒரு அசட்டுச் சிரிப்புச் சிரித்தான். "விடுதலையா! எனக்கா! இனிமேல் ஒரே ஒரு விடுதலைதான். இந்த உலகத்தை விட்டே விடுதலை பெற வேண்டியதுதான்" என்று நொந்து போன உள்ளத்துடன் கூறினான். அவன் உதடுகள் துக்கத்தால் துடித்தன.

சற்றுப் பொறுத்து, "ஐயா! நீங்கள் எப்பொழுதாவது செங்கமலத்தைப் பார்த்தால் என்னை மன்னித்து விடும்படி சொல்லுங்கள். நான் ஒரு பாவி! அவளுடைய அருமையான வாழ்க்கையைக் கெடுத்து விட்டேன்......" என்று வார்த்தையை முடிப்பதற்குள் 'ஹோ!' என்று அழ ஆரம்பித்து விட்டான்.

அந்தப் பரிதாபக் காட்சியை என்னால் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை. உடனே அங்கிருந்து புறப்பட்டேன்.

நேரே நாடக நட்சத்திரம் காஞ்சனாவின் வீட்டுக்கு வந்தேன். அவள் ஊரில் இல்லை என்று சொன்னார்கள். ஒருவாரம் கழித்துக் காஞ்சனா ஊரிலிருந்து வந்து விட்டதாகக் கேள்விப்பட்டு அவளைப் போய்ப் பார்த்தேன். அவளிடம் கைதி சொன்ன அந்தக் கதையைச் சொன்னேன்.

நான் கதையைச் சொல்ல ஆரம்பித்தவுடன் மிகவும் ஆவலோடு அதைக் கேட்க ஆரம்பித்தாள். சில சமயம் புன்முறுவல் பூத்தாள். சில சமயம் கண்ணீர் விட்டாள். சில சமயம் "மேலே கதையைச் சொல்லுங்கள்" என்று அவசரப்படுத்தினாள். கடைசியில் தூண்டிற் புழுவைப்போலத் துடிதுடித்து விட்டாள்.

அவளுடைய அந்த பரிதாபமான நிலையைப் பார்க்க முடியாமல் அங்கிருந்த ஜன்னல் வழியாக ஆகாயத்தைப் பார்த்தேன். திடீரென்று வான வெளியில் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. படபடவென இடி இடித்துப் பூமியும் ஆகாயமும் அதிர்ந்தன. காஞ்சனா ஏதோ சொல்ல ஆரம்பித்தாள்.

"ஐயா! நான்தான் அந்தச் செங்கமலம். அவர்தான் என் சுவாமி! என் காதலர்! அவர் எப்பொழுதாவது திரும்பி வருவார் என்று நினைத்தே நான் நிறையப் பொருள் சேர்த்தேன். நாடகத்தில் நடிப்பதற்காக வேண்டுமென்றே என் பெயரை மாற்றிக் காஞ்சனா என்று வைத்துக் கொண்டேன். உடனே அவரை விடுதலை செய்வதற்கு ஏற்பாடு செய்யுங்கள்" என்று கெஞ்சினாள்.

எங்கோ வெகு தூரத்தில் இடி இடிப்பது போன்ற சத்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து மேலும் பயங்கர இடி இடித்தது. பின்னர் அமைதி நிலவியது.

நான் காஞ்சனாவை—இல்லை;—செங்கமலத்தை அழைத்துக் கொண்டு சிறைச்சாலைக்கு வந்தேன். அந்தக் கைதியைப் பார்ப்பதற்காகக் காஞ்சனா பறந்து கொண்டிருந்தாள். சிறையதிகாரியிடம் விஷயத்தைச் சொல்லி அந்தக் கைதியைப் பார்க்க உத்தரவு கேட்டோம்.

அவர் தலையில் கை வைத்துக்கொண்டு ஏதோ சிந்தனையிலிருந்தார்.

இந்தச் சமயத்தில் மழைத் தூற்றல் விழத் தொடங்கியது. அது பின்னும் நடக்கப்போவது எதையோ முன்கூட்டி அறிவிப்பது போலிருந்தது.

நாங்கள் அவரை அவசரப் படுத்தினோம்.

"சென்ற ஒரு வாரமாகவே அந்தக் கைதிக்கு சித்த சுவாதீனம் இல்லை. 'செங்கமலம் என்னை மன்னித்து விடு!' 'செங்கமலம் என்னை மன்னித்து விடு!' என்று சொல்லிக் கொண்டே யிருந்தான். சரியாகச் சாப்பிடுவதுமில்லை. நேற்றுக் காலையில் 'செங்கமலம்! செங்கமலம்!' என்று கத்தினான். நாங்கள் ஓடிப்போய் அவனைப் பார்த்தோம். என்னை ஒரு முறை வெறித்துப் பார்த்தான். சட்டென்று கீழே சாய்ந்து விட்டான். அவன் உடலை விட்டு உயிர் பிரிந்து விட்டது" என்றார்.

எனக்குத் திடீரென்று தலையில் இடி விழுந்து என் வழியாகப் பூமியில் ஓடுவது போலிருந்தது. காஞ்சனாவைப் பார்த்தேன். அவள் அகல விழித்த கண்களுடன் பிரமை பிடித்தவள்போல நின்று கொண்டிருந்தாள். அவளை என்னால் கண் கொண்டு பார்க்க முடியவில்லை.

"இறந்து விட்டாரா! என் சுவாமி என்னைவிட்டுப் பிரிந்துவிட்டாரா!" என்று இரண்டு தரம் ஏக்கம் நிறைந்த குரலில் கேட்டாள். அடுத்த கணம் 'ஹோ!' என்று அலறியபடி மூர்ச்சையாகி விட்டாள்.

வெளியே இடியும் மின்னலும் அதிகரித்தன. இடிச் சத்தமும் மின்னல் ஒளியும் இப்பொழுது இன்னும் பயங்கரமாயிருந்தது. 'ஜோ' என்று மழை பெய்ததால் ஏற்பட்ட அழுகுரல் போன்ற சத்தம் மிகவும் வேதனையைக் கொடுத்தது. உலகமே 'ஹோ!' என்று கதறுவது போலிருந்தது!

○ ○ ○

இந்தச் சம்பவத்துக்குப் பிறகு காஞ்சனாவின் வாழ்க்கை மாறிவிட்டது. நாடக நட்சத்திரப் பதவியிலிருந்து துறவு பூண்டு விட்டாள். பிரபல நாடக நட்சத்திரமாயிருந்த காஞ்சனா ஏழை எளியவர்களுக்குத் தொண்டுபுரியும் செங்கமலமாகி விட்டாள்.

# பம்பாய் வளையல்

அநுத்தமா

பவானி பட்சணங்களைக் கடைசியாகச் செய்து முடித்து விட்டு எழுந்தாள்.

"அம்மா, எனக்கு ஒரு மைசூர்ப்பாகு, அம்மா!" என்று கெஞ்சினான் குமார்.

"போகாமல் இருடா. நாளைக்கு எல்லாம் வேண்டிய மட்டும் தின்னலாம்" என்று கூறிவிட்டு அந்த டப்பாவை எடுத்து மேலே வைத்துவிட்டாள் தாயார்.

குமார் முகத்தைச் சுளுக்கிக் கொண்டே நடந்தான். அவன் கையில் ஒரு சிறு கம்பு இருந்தது. அதனால் வழியில் இருந்த எல்லாச் சாமான்களையும் ஒரு தட்டு தட்டிக்கொண்டே போனான். கூடத்தில் பெட்டியைத் திறந்து வைத்துக்கொண்டு அதிலிருந்து சில வளையல்களைப் பொறுக்கிக் கையில் போட்டுக் கொண்டிருந்தாள் அவன் அக்கா கல்பகம். குமாரின் கம்பு அகஸ்மாத்தாக அரிசிப் பீப்பாயின் மேல் வைத்திருந்த ஒரு ஜதை வளையல்களைத் தட்டி விட்டது.

கல்பகம் துள்ளி எழுந்தாள்.—"ஏண்டா இப்படி! உனக்கு என்னடா வந்து விட்டது! நல்ல வளையலை உடைத்து விட்டாயே! பார், இன்றைக்கு நான் அப்பாவிடம் சொல்லி உன் முதுகு எலும்பை நொறுக்கச் சொல்லுகிறேன்" என்று ஆத்திரத்துடன் கூறியதோடு திருப்தி அடையாமல் குமாரின் கன்னத்தில் ஓங்கி ஓர் அறையும் கொடுத்தாள்.

குமார் சிவந்த தன் கன்னத்தைத் தடவிக்கொண்டே, தன்னை மீறி வந்த கண்ணீரையும் அடக்கிக்கொண்டு அவளுக்கு அழகு காட்டினான்.

"எனக்காடா அழகு காட்டுகிறாய்" என்று அவள் துரத்துவதற்குள், "மூஞ்சியைப் பார், ராஜகுமாரி! இன்றைக்கு அத்திம்பேர் வரமாட்டார், போ!" என்று ஆத்திரத்துடன் சொல்லி விட்டு ஓடியே போய்விட்டான் குமார்.

கல்பகம் தன் உடைந்த வளையல்களைக் கையில் எடுத்தாள். அவள் முகத்தில் வேதனை தோய்ந்திருந்தது. 'அவர் ஆசையோடு பம்பாயிலிருந்து வாங்கி வந்தார். அதை உடைத்துவிட்டானே இந்தப் பயல்!' என்று பொருமியது அவள் உள்ளம்.

"கல்பகம், கொஞ்சம் எழுந்து வந்து சமையலறையை அலம்பிச் சுத்தம் செய்" என்று அழைத்தாள் அவள் தாயார்.

"எல்லாம் வருகிறேன். உன் அருமைப் பிள்ளையைப் பார்த்தாயோ, இல்லையோ! அவர் வாங்கிக் கொடுத்த அந்த பம்பாய்க் கண்ணாடி வளையலை உடைத்து விட்டான்" என்று எரிச்சலுடனும் கோபத்துடனும் கூறிக்கொண்டே எழுந்தாள் அவள்.

"வரட்டும், கோபித்துக் கொள்கிறேன். குழந்தைதானே அவன்! என்னை மைசூர்ப்பாகு கேட்டான். நான் கொடுக்கவில்லை. அந்தக் கோபமாக இருக்கும்" என்று தாயார் மிகவும் சாந்தமாகவே பதில் சொன்னாள்.

"உனக்குச் செல்லம் வந்து விடும்! நன்றாக உதைக்கிறதற்கு இல்லாமல்...... இவ்வளவு பெரியவன் என்னைக் 'குரங்கு' என்று வைகிறான். நாளைக்கு அவர் முன்பாகவும் இப்படித்தானே சொல்லுவான்!" என்று இரைந்து விட்டுத் தன் வேலையைக் கவனிக்கப் போனாள் மகள்.

பவானி பதில் ஒன்றும் கூறவில்லை. முற்றத்தில் போய் உட்கார்ந்து கொண்டாள்.

ஒரு காலத்தில் நன்றாக வாழ்ந்தவள் தான். இன்று தன்னுடைய ஒரே பெண்ணின் தலை தீபாவளிக்குத் தாராளமாக பட்சணங்கள் கூடச் செய்ய முடியாமல் போய்விட்டது அவளுடைய குடும்ப நிலைமை. அவளுடைய கணவர் ஒரு பள்ளிக்கூடத்து வாத்தியார். விலைவாசிகள் ஏகத்தாறுக ஏறி ஜீவனம் கஷ்டமாக இருக்கும் இந்தக் காலத்தில் அவர், எப்படியோ கடன்பட்டு உடன்பட்டுப் பெண்ணுக்கு விவாகம் செய்து விட்டார். வரனும் பம்பாயில் வேலையாக இருக்கும் ஒரு சுருக்கெழுத்தாளன். சம்பளம் இருநூறு ரூபாய். நல்ல தங்கமான குணமுடையவன்தான் சாம்பசிவன். ஆயினும் தொன்று தொட்டுவந்த பழக்கங்கள், தலை தீபாவளிக்கு மாப்பிள்ளைக்குச் செய்ய வேண்டிய சீர்களைச் சொல்லவே செய்யத் தூண்டின. கல்யாணத்துக்காகப் பட்ட கடன் அடைய வழியைக் காணோம். அதற்குள் தீபாவளி தூக்கிக் கொண்டு வந்து விட்டது.

பவானி குடும்பத்தில் கருத்துள்ள ஒரு பெண்மணி. கணவனுடைய கஷ்டத்தை அனுசரித்துச் சிக்கனமாகக் குடும்பத்தை நடத்திக் கௌரவமாக வாழ்க்கையை நடத்துபவள். ஆகையால் தீபாவளி பட்சணங்களை எவ்வளவு முடியுமோ, அவ்வளவு குறைவாகச் செய்து பண்டிகையை மெல்ல ஒப்பேற்ற முயன்றாள்.

சம்பந்திமார் யார் யார் வருவார்களோ என்று பயந்தவளாய், தன் குழந்தைக்கு ஒரு துண்டுகூட மைசூர்ப்பாகு கொடுக்க மறுத்து விட்டாள். ஆனால் அவள் மனத்தில் மட்டும் உதிரம் கசிந்தது.

குமார் தாயுள்ளத்தின் ஓட்டங்களை எவ்வாறு அறிவான்! கோபத்துடன் வெளியேறிய அவன் வாசற் குறட்டின் படிக்கட்டில் முகத்தைத் தொங்க விட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

இருட்டிய பிறகுதான் அவன் வீடு வந்து சேர்ந்தான். அவனுடைய அக்கா கல்பகம் அவனைக் கண்டவுடனே பிடித்துக் கொண்டாள்.

"இதோ பார், குமார்! இந்தா, மைசூர்ப்பாகு. அத்திம்பேர் வந்திருக்கிறார். தோய்ந்த சொக்காயைப் போட்டுக் கொண்டு, நல்லவனாகக் கொண்டு சமர்த்தாக இருக்கணும், தெரியுமா!" என்று நல்ல தனமாகக் கூறினாள்.

அவளை ஒருமுறை வெறித்துப் பார்த்தான் குமார். பிறகு அவள் கொடுத்த அந்த மைசூர்ப்பாகுத் துண்டை அவள் எதிரிலேயே முற்றத்தில் கோபத்துடன் வீசி எறிந்து விட்டான்.

"ஏண்டா!"

அவன் பதில் சொல்லவே இல்லை. வாய் திறவாமல் உள்ளே போய் விட்டான்.




அவன் குழந்தை உள்ளத்தில் ஏக்கம் நிரம்பி இருந்தது. அவன் தோழர்கள் யாவரும் தீபாவளித் தின்பண்டங்களைப் பற்றியும், பட்டாசுகளைப் பற்றியும், துணிமணிகளைப் பற்றியும் விவரித்து அவன் மனதைக் கலக்கி விட்டனர். அவன் அப்பாவோ இந்த வருஷம் மாப்பிள்ளையைத் தவிர வேறு யாருக்கும் புத்தாடை இல்லை என்று திட்டமாகச் சொல்லி விட்டார். நாளை விடிந்தால் தன்னுடைய நண்பர்கள் கேலி செய்வார்களே என்று நினைத்த பொழுது அவனுக்குத் துக்கம் நெஞ்சை அடைத்தது.

"குமார், இங்கே வா. நாம் இருவரும்பட்டாசு சுடுவோம். கண்ணாலேயே காணுமே உன்னை!" என்று அத்திம்பேர் குரல் கேட்கவே, குமார் எழுந்து ஓட எத்தனித்தான்.

"என்னடா வெட்கம்! இங்கே வா, அத்திம்பேரிடம்!" என்று சாம்பசிவன் அன்புடன் அவனைத் தழுவிக் கொண்டதும் குமாருக்குத் துக்கம் பீறிட்டது.

"சமத்து இல்லையா நீ! உனக்காகத் தானே நான் எல்லாம் வாங்கி வந்திருக்கிறேன்!" என்று தன் கைப்பிடியைத் தளர்த்தாமல் பேசினான் சாம்பசிவன்.

"எங்கள் ஊர் வெங்காய வெடி உனத் திலேயே ஒத்திவோம்" என்றான் குமார் தன் அத்திம்பேரிடம்.

"அப்படியானும் அதையும் வாங்கிக் கொண்டேன். இந்தா, ஒரு ரூபாய்!" என்று கொடுத்தார் அத்திம்பேர்.

மாப்பிள்ளையும் மாமனும் சாப்பிட உட்கார்ந்தார்கள். குமாரும் அவர்களுடன் போய் உட்கார்ந்தான். பவானி மிகவும் சிரத்தையுடன் பரிமாறினாள். இலையில் பட்சணம் வைக்க வரவும் மைசூர்ப் பாகு டப்பியைக் காணவில்லை. தாயார் பெண்ணை அழைத்துக் கேட்டாள்.

"இங்கேதானம்மா, பலகைமேல் இருந்தது!" என்றாள் அவள்.

ஆனால் அது கிடைக்கவில்லை. குமார் அவர்களைப் பார்த்து விஷமச் சிரிப்புச் சிரித்து, "மைசூர்ப் பாகைக் காணோமா!" என்று உரக்கக் கேட்டான்.

அவன் தமக்கை அவனைக் கட்டெரித்து விடுபவள் போல் பார்த்தாள். தாயார் வேதனையுடன் அவனை வாயடக்க முயன்றாள். கடைசியில் ஒன்றுமே நடக்காதது போல் பாயசத்தைப் பரிமாறி விட்டு மேலே பரிமாறிக் கொண்டு போனாள் தாயார். கல்பகத்துக்குத் தன் தம்பிமேல் கோபம். தன் கணவன் முன் அவமான மடையச் செய்துவிட்டானே தம்பி என்று அவள் பொங்கினாள். அவள் எழுந்து கைஅலம்பச் சென்றபொழுது அவன் தலையில் நறுக்கென்று ஒரு குட்டு வைத்தாள்.

குமார் அழுது கொண்டே போய் மூலையில் படுத்துக் கொண்டான். அப்படியே உறங்கி விட்டான். விடியற்காலம் வாசலில் நாதஸ்வர கீதமும், பட்டாசுகளின் சப்தமும், மத்தாப்புகளின் பிரகாசமும் குமாரைத் தட்டி எழுப்பின. குழந்தைகளுக்குள்ள ஆசையுடன் அவன் விழித்துக் கொண்டான். கூடத்தில் அக்காவும் அத்திம்பேரும் எண்ணெய் தேய்த்துக் கொள்ள உட்கார்ந்திருந்தனர். அவர்கள் எதிரே தாம்பாளத்தில் வெற்றிலைப் பாக்கு புஷ்பம் ஆகியவற்றுடன் அப்பா வாங்கின வேஷ்டி துண்டுகளையும், அவன் அக்காவுக்காக அவள் கணவன் வாங்கி வந்த பட்டுப் புடவை ரவிக்கையும் இருந்தன.

"அவளுக்கு மட்டும் பட்டுப் புடவை. எனக்கு நூல் வேஷ்டி கூட இல்லை" என்று முணு முணுத்தது குமாரின் பிஞ்சு மனம்.

"குமார், வாடா உனக்கும் எண்ணெய் தேய்க்கிறேன்" என்று அழைத்தாள் தாயார். குமார் எழுந்திருக்கவில்லை. பிறகு தந்தையும் தாயுமாக அவனைச் சமாதானப் படுத்தி எண்ணெய் தேய்த்து விட்டனர். அவனைக் குளிப்பாட்டும் போது அவன் தாயார் "கண்ணு, மைசூர்ப் பாகு டப்பியை நீ பார்த்தாயா!" என்று அவனை மெதுவாகக் கேட்டாள்.

"நான் பார்க்கவே இல்லையே! அக்கா தான் வைத்துக் கொண்டிருந்தாள்" என்று பதில் அளித்தான் குமார்.

அப்பொழுதுதான் புதுப் புடவையை உடுத்திக் கொண்டு அங்கு வந்த கல்பகம், "அம்மா, ஓமப் பொடியும், திரட்டுப் பாலும் வைத்துக் கொடுக்கட்டுமா, மாப்பிள்ளைக்கு!" என்று கேட்டாள்.

"கொடு!"

"எனக்கு அம்மா!"

"இவனுக்கும் கொஞ்சம் கொண்டு வந்து கொடு!" என்று சொல்லி விட்டு அவன் உடம்பைத் துடைத்தாள் பவானி.

"கிடையாது. அந்த மைசூர்ப் பாகு டப்பியைக் கொண்டு வந்து கொடுக்காத வரையில் அவனுக்கு ஒன்றும் கொடுக்கப் போவதில்லை" என்றாள் கல்பகம்.

"நிஜம்மா நான் தொடவில்லை அம்மா!" என்றான் குமார்.

அவள் ஏதோ சொல்வதைக் கேட்ட தந்தை, "என்னது!" என்று கேட்டார்.

"மைசூர்ப்பாகைக் கைமறதியாக எங்கேயோ வைத்து விட்டேன்" என்று சொல்லி மழுப்பினாள் பவானி.

"அப்படிப்பட்ட மறதி என்ன வந்து விட்டதோ உனக்கு!" என்று சீறிவிட்டுச் சென்றார் தந்தை.

தந்தை தன்னை அடிக்காமல் இருக்கத் தான் அவ்வாறு தாயார் பொய் சொன்னாள் என்பதைக் குமார் அறிந்து கொண்டான். தான் கழற்றிய அதே கிழிசலையும் சட்டையையும் அணிந்து கொண்டு முன் பக்கம் சென்றான் அவன். அங்கு கல்பகமும் சாம்பசிவனும் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தனர். "என்னடா அம்பி! கோடி உடுத்தவில்லையா!" என்று யதார்த்தமாகக் கேட்டு வைத்தான் சாம்பசிவன்.

குமாரின் கண்களில் நீர் முட்டிற்று. கல்பகம் வேதனையுடன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள்.

சாம்பசிவன் எழுந்து சென்று பெட்டியைத் திறந்து, "இந்தாடா, அம்பி! உனக்காகத்தான் வாங்கிவந்தேன்" என்று பட்டு 'புஷ் கோட்' ஒன்றும் நிஜார் ஒன்றும், எடுத்துக் கொடுத்தான். குமார் அவற்றை வாங்கிக் கொண்டு தன் தாயாரிடம் ஓடினான். அந்த அம்மாள் கவலை தோய்ந்த முகத்துடன் மைசூர்ப் பாகைத் தேடிக் கொண்டிருந்தாள். அதைக் குறிப்பால் உணர்ந்த அவன் வெகு வேகமாக வாசற் புறம் ஓடினான்.

"டேய், அம்பி! வா, பட்டாசு சுடுவோம்! வெங்காய வெடி வாங்கினாயா!" என்று சாம்பசிவன் கூப்பிட்டுக் கேட்டது கூட அவன் காதில் விழவில்லை.

சற்றுப் பொறுத்து அவன் வீட்டின் பின்புறமாகத் திரும்பினான். அவன் கையில் ஒருசிறு பொட்டலம் இருந்தது.



"அம்மா, இதோ பார், மைசூர்ப் பாகு........" என்று சொல்லியபடி அவன் நீட்டினான்.

"உன்னை என்ன செய்வது! அடித்தால் கூட கல் பிள்ளையார்மாதிரி இருந்தாயே! மைசூர்ப் பாகை திருடியா வைத்தாய்! வா, உன் கையை நொறுக்கி விட்டு மறு காரியம் பார்க்கிறேன்" என்று அம்மா கையில் விசிறிக் காம்புடன் அவனை நோக்கி வேகமாக வந்தாள்.

அதே சமயம் கல்பகம் நாணத்தினால் முகம் சிவக்க அங்கே வந்தாள். "அம்மா, இந்த மைசூர்ப்பாகு டப்பாவை நான்தான் ஞாபக மறதியாகக் காமிரா உள்ளே வைத்து விட்டேன், உன் மாப்பிள்ளையுடன் பேசிக்கொண்டே!" என்றாள்.

தாயார் மகளைப் பார்த்தாள். அவள் தன் கண்களைத் துடைத்துக் கொண்டே ஹோட்டலிலிருந்து வாங்கி வந்த பொட்டலத்தைக் கீழே வைத்தாள்.

"ஏதடா, காசு!" என்று கேட்டாள்.

"அத்திம்பேர் வெங்காய வெடி வாங்கக் கொடுத்தார்!" என்று விம்மினான் குமார்.

கல்பகம் அவனை அணைத்துக் கொண்டாள். "கண்ணே! உன் தலையில் கறுக் கென்று குட்டி விட்டேனடா!" என்றாள்.

"அக்கா உன் வளையலை உடைத்து விட்டேனே, அத்திம்பேர் கோபித்துக் கொள்வாரா! அவரிடம் சொல்லாதே, அக்கா! அப்பாவிடம் சொல்லி அதேபோல் உனக்கு வளையல் வாங்கித் தந்து விடுகிறேன்" என்று கெஞ்சினான் தம்பி.

புத்தாடை இல்லையே என்ற தன் ஏக்கத்தைத் தீர்த்த அத்திம்பேரிடம் நல்ல பெயர் வாங்கவேண்டும் என்பது அவன் எண்ணம்.

"அத்திம்பேர்தான் உன் அன்பராச்சே! அவருக்குக் கோபமேவராது" என்று கூறி விட்டு அவனுடைய கன்னத்தில் தன் இதழ்களைப் பதித்தாள் தமக்கை. 'கண்ணாடி வளையல் உடைந்து விட்டால் வேறு வாங்கிக் கொள்ளலாம். என் கண்மணியின் கண்ணாடி போன்ற இருதயம் உடைந்து விட்டால் அதை எப்படிப் புதுப்பிக்க முடியும்!" என்ற சிந்தனை ஓடியது அவள் மனத்திலே.

குமாரும் அளவற்ற சந்தோஷத்துடன் பட்டாசுக் கட்டுகளை வாரிக் கட்டிக் கொண்டு அத்திம்பேரிடம் ஓடினான்.

## டப்பா சங்கீதம் பரவுகிறது!






**D. K. MURTHY & COMPANY**
MANUFACTURING JEWELLERS
6, SUNDARESWAR ST., (NEAR R. R. SABHA)
MYLAPORE :: MADRAS - 4




BHARATHA NATYAM JEWELS — A SPECIALITY

WE REPRESENT
**M/s. SAMUEL JONES & CO. (Export) LTD.**
LONDON
MANUFACTURERS OF
**"BUTTER FLY"**
BRAND PAPERS

WE SOLICIT INDENTS FOR
ALL KINDS OF PAPERS

Please consult us for your requirements of Paper and Printing Materials.

*

WE HOLD STOCKS OF:

- PRINTING INKS
- PRINTING MACHINES
- AND ALLIED PRODUCTS

*

**K. ORR & COMPANY**
40, CHINNATHAMBI STREET, MADRAS - 1
Telephone: 3519 Telegrams: PRESUNDRY


நல்லெண்ணம் நிலவி, மகிழ்ச்சி ஓங்கி,
அன்புச் சுடர் விட்டெரியும்
இவ்வானந்தத் தீபாவளி உங்களது
வாழ்க்கையை உன்னதமாக்கட்டும்.
★
தி டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பெனி லிமிடெட்


N.P.B.
தீபாவளி வாழ்த்துகள்
VANGUARD
வான்கார்டு இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லி-ட்.
வான்கார்டு பயர் & ஜெனரல்
இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லி-ட்.
"வான்கார்டு ஹவுஸ்", மதராஸ்-1

# ரானே (மதராஸ்) லிமிடெட்,

கணபதி ஐயர் பில்டிங்ஸ் - பட்டுலோஸ் ரோடு,

**மவுண்ட் ரோடு, மதராஸ் - 2.**

டெலிபோன்: 85741 & 86848 - தந்தி: AUTO-WORKS - தபால் பெட்டி நிர்: 386

பிராஞ்சுகள்: கோயமுத்தூர் & பங்களூர்.

*கீழ்க்கண்டவற்றிற்கு வினியோகஸ்தர்கள்:*

**பான்டியாக்** கார்கள்

**GMC** டிரக்குகள்

வில்லீஸ் யுனிவர்ஸல்



**ஜீப்கள்**

நம்பகமான **சாம்பியன்** ஸ்பார்க் பிளக்குகள்



**போர்க்-வார்னர்** இன்டர்நேஷனல் பிராடக்ட்ஸ்

**வான் நார்மன்** ஆட்டோமோபைல் சாமான்கள்



**ஜெனித்** கார்பரேட்டர்கள், பில்டர்கள்

Bendix Products

பெண்டிக்ஸ் ஹைட்ரோ-வேக் பிரேக்குகளும் பாகங்களும்



**வீவர்** ஏர் கம்பிரஸர்கள்

**ஹாப்மன்** பேரிங்குகள்

**ஸெர்விஸிற்கு தேவையான சகல வசதிகளுடன், ஆட்டோமோபைல் இன்ஜினீயர்களும் உள்ளனர்.**




தி கிராமபோன் கம்பெனி, லிமிடெட்
கல்கத்தா — பம்பாய் — மதராஸ் — டில்லி


"தொழிலாளர்கள் தங்கள் குறைகளை அஹிம்சா தர்மப்படி, சட்ட ரீதியான வழிகளில் நிவர்த்தி செய்து கொள்ளவே தொழிற் சங்கங்களை அமைக்க வேண்டும். வேலை நிறுத்தம் செய்வதற்கு மட்டும்தான் சங்கம் என்று நினைப்பது தவறு. இதனால் வேலை நிறுத்தமே செய்ய வேண்டாம் என்பதல்ல. ரொம்பவும் அவசியம் நேர்ந்த போது நியாயமாகச் செய்யலாம். ஒரு மனைவி தனது கணவனுடன் எப்பொழுதாவது சண்டை போட்டுக் கொண்டு, சாப்பிட முடியாதென ஒரு நாளைக்குச் சொல்லலாம். ஆனால் சண்டை போட்டுக் கொண்டிருக்கவே கல்யாணம் செய்து கொண்டாள் என்று சொல்லுவது தவறு. கணவனும் மனைவியும் சேர்ந்தே குடும்பத்தை நடத்த வேண்டும்."

—ராஜாஜி


பங்கஜா மில்ஸ், லிமிடெட்
தபால் பெட்டி நெ. 150 :: கோயமுத்தூர்




**ரமா நினைக்கிறாள் :**

நான் மலைவாசத்துக்குப் புறப்படும் பொழுது எனக்குச் சந்தோஷம் தலைகால் புரியவில்லை. நகரத்தில்தான் அவர் வியாபாரத்தையும் காரியாலயத்தையும் கட்டிக் கொண்டு அழுந்து கொண்டிருந்தார். அவருக்குக் குழந்தைகளுடன் பேசக் கூட அவகாசமில்லை. வீட்டிலிருக்க நேரமிருந்தால்தானே குழந்தைகளுடன் பேச அவகாசமிருப்பதற்கு!

இங்கே வந்து பத்து தினங்கள் வரை எவ்வளவு சந்தோஷமாகவும் குதூகலமாகவும் இருந்தார்! இது தன் வீடுபோலவும் நான் புதிதாக வந்திருப்பவள் போலவும் என்ன உபசாரம் செய்தார்! அதில் தான் என்ன இன்பம்! குழந்தைகளைக் கீழே விடாமல் எவ்வளவு வாத்ஸல்யமாக வைத்துக் கொண்டிருந்தார்! அப்படிப்பட்டவர் திடீரென்று இப்படி மாறிவிட்டது அதிசயமாக அல்லவா இருக்கிறது!

என் தோழிகள் அவரவர் புருஷர்களைப் பற்றிக் குற்றம் சொல்லும்பொழுது அவர்களுடன் என் கணவரை எடை போட்டு எப்படி இறுமாந்திருந்தேன்! இவருக்கும் சந்தர்ப்பம் கிடைத்தால் மோசமாகத் தான் நடந்து கொள்வாரென்று நான் கனவிலும் நினைக்கவில்லை.

புருஷர்களின் போக்கே இப்படித்தான்! இவர் மட்டும் அதற்கு விலக்கா! சரசு வந்ததிலிருந்து எப்படி மாறிவிட்டார்!

சரசுவை வரும்படி வருந்தி வருந்திக் கடிதம் எழுதினேனே, என்னைச் சொல்ல வேண்டும். சரசு வந்து நான்கு நாட்கள் வரை நானும் அவர்களுடன் சந்தோஷமாகத் தானிருந்தேன். என் வெள்ளை மனம் விஷமத்தைப் புரிந்து கொள்ளவில்லை. வேலைக்காரி சொக்கம்மா சொன்ன பிறகு அல்லவா விஷயம் புரிந்தது!

"படகில் இப்படி என்னம்மா அந்தப் பெண்ணுடன் சிரித்துப் பேசி ஐயா கொம்மாளம் அடிக்கிறாரு! உங்களுடன் இப்படி வெல்லாம் சிரித்துப் பேசினதை நான் பார்த்ததே கிடையாதே!" என்று சொல்லி என் மௌடீகத்தை நீக்கினாள். அதோ சிரிப்பும், பேச்சும் குழந்தைகளின் ஆரவாரமும் கேட்கின்றன. எல்லோரும் திரும்பி வந்து விட்டார்கள் போலும்.

**சரசு நினைக்கிறாள் :**

எதற்கும் இல்லாமல் இன்று ரமா என்னவோமாதிரி பதில் சொன்னாள். நான் வந்த அன்று எவ்வளவு ஆசையாக என்னை வரவேற்றாள்! முகுந்தனின் கம்பீரத்துக்கும், சாமர்த்தியத்துக்கும் ரமா தகுதி இல்லாதவளாயினும் கள்ளம் கபடமற்ற பெண்ணாகக் காணப்பட்டாளே! குழந்தை போன்ற சுபாவமுடைய அவள் நடத்தையில் ஒரு வாரமாக இவ்வளவு மாறுதல் ஏற்பட்டுவிட்டதற்குக் காரணம் என்னவாயிருக்கலாம்!

முகுந்தனுடன் குழந்தையிலிருந்து நான் ஒன்றாக விளையாடியும் படித்தும் வளர்ந்திருக்கிறேன். தாய் தந்தையற்ற அனாதையான என்னை மாமியும் மாமாவும் எவ்வளவு அருமையாக வளர்த்தார்கள்! ஏன், அவர்கள் என்னை மருமகளாகக்கூட ஏற்கத் தயாராக இருந்தார்களே! ஆனால் முகுந்தன் அல்லவா என்னைச் சகோதரியாகக் கருதி திருமணத்துக்குச் சம்மதிக்கவில்லை. ஏன், நானும் கூடத்தான் அவனுடன் புருஷன்-மனைவியாக உறவு கொள்ளப் பிரியப்படவில்லை. முகுந்தன் சின்ன வயது முதற்கொண்டே உயர்ந்த குணம் படைத்தவன். மனைவியிடம்தான் அவனுக்கு என்ன இணையற்ற அன்பு! அவன் புத்திக்கும் அழகுக்கும் எல்லையே இல்லை. ரமாவின் பக்கம் பாக்கிய தேவதை இருக்கிறாள். இல்லாவிட்டால் அவனை மணந்து கொள்ளும் அதிர்ஷ்டம் அவளுக்கு எப்படிக் கிடைத்திருக்க முடியும்!

அன்று ரமா தலைவலி என்று படுத்துக் கொண்டிருந்தாள். முகுந்தன் தவித்துப் போய்விட்டான். தலைவாரிக் கொள்ளாமல், குளிக்காமல் உட்கார்ந்து விட்டாள். அவள் முகம் அதிகாலைச் சந்திரன்போல மங்கி இருந்தது. எனக்கும் பம்பாயில் ஒரு தடவை தலைவலி காய்ச்சல் வந்து படுத்துக் கொண்டிருந்தேன். காரியாலயத்திலிருந்து வந்ததும் என் கணவர், "என்ன படுக்கை போட்டு விட்டாய்! இரவு சமையல் எப்படி ஆவது! பெண்களுக்கு வியாதி என்று சொல்லிக் கொள்வதில் தனி ஆசை. அதற்குத்தான் எனக்குக் கல்யாணமே வேண்டாம், வேண்டாம் என்று அடித்துக் கொண்டேன். எங்கம்மா ஒரு காலில் நின்று எனக்குக் கல்யாணத்தைச் செய்து விட்டுத்தான் மறு காரியம் பார்த்தாள். இப்போது அநுபவிக்கிறேன்" என்று அலுத்துக் கொண்டார்.

நான் வேறு வழியின்றி முக்கி முனகிக் கொண்டு சமையல் செய்யும்படி ஆயிற்று.

ஆனால் ரமாவோ! தலைவலிக்கு மறுநாள் ரமா தோட்டத்தில் ஒரு மாதிரி நின்று கொண்டிருந்தாள். முகுந்தன் அவள் மேல் ஒரு கம்பளிச் சால்வையைப் போர்த்தி, "பைத்தியம், மேலே போர்த்திக் கொள்ளாமல் நிற்கிறாயே! பனி பட்டால் உடம்புக்கு ஆகுமா! நேற்று முழுதும் நீ தலைவலியோடு படுத்துக் கொண்டிருந்த பொழுது என் மனம் என்ன பாடு பட்டது, தெரியுமா!" என்று கடிந்து கொண்டான்.

அந்த வார்த்தைகளின் தோரணையிலும், குரலிலும் எவ்வளவு அன்பு தோய்ந்திருந்தது! அன்பில் ஊறின அந்த வார்த்தைகளில்தான் என்ன சுகம்! போர்வையைக் கொண்டு ரமாவுக்கு அவன் போர்த்தி விட்டது, தன் இருதயத்தில் அவளை வைத்துப் போர்த்துவது போலல்லவா இருந்தது!

ஆனால் உலகத்தில் எல்லாப் பேறுகளையும் அடைந்த பெண் இப்படி மனமுடைவுறுகிறாளே, ஏன்! கண்ணால் காணுவதைத் திரித்துப் பெரிதாக்க விடுகிறாளே, ஏன்! பிரமன் இந்த உலகத்தை எல்லோரும் ஒரே மாதிரியான கண்களுடன் பார்க்க விடவில்லையே, ஏன்! முகுந்தன் விரும்புவது போல் நான் இன்னும் இரண்டு வாரம் இங்கே தங்கக் கூடாது. ஏனெனில் பேதை ரமா மனத்தைச் சரியாக வைத்துக் கொள்ளத் தெரியாமல் ஏதாவது பிணக்கு உண்டாக்கிக் கொண்டு விடுவாளோ என்று பயமாயிருக்கிறது. இன்னும் நாலு தினங்களில் ஊருக்குத் திரும்பி விட வேண்டும்.

**முகுந்தன் நினைக்கிறான் :**

சரசு வந்த பிறகு எல்லாம் வேளா வேளையில் குறித்தபடி நடக்கிறது. ரமாவுக்கு குடும்பம் நடத்திப் பழக்கமில்லை. செல்வமாக வளர்ந்த பெண். சரசுவின் பேச்சும் சிரிப்பும் வீட்டைப் புஷ்பசோலையாக அல்லவா ஆக்குகின்றன! குழந்தைகள்தான் சரசுவிடம் 'அத்தை, அத்தை' என்று எப்படி ஒட்டிக் கொள்கின்றன! குழந்தைகளுக்கு குளிப்பாட்டுவதும், கதை சொல்லுவதும் சரசுவின் வேலையாக இருக்கிறது. அவர்கள் முகத்தில் ஒரு பளபளப்பு! மழை பெய்து விட்டதும் சிரித்துக் குலுங்கி நிற்கும் புஷ்பச் செடிகளைப் போல் நிற்கிறார்கள்!

ரமா மட்டும் அவர்களைச் சிங்காரிக்கவில்லையா! வித விதமான ரிப்பன், பாவாடை, சொக்காய் எல்லாம் எவ்வளவோ செலவு செய்து அலங்கரிப்பாள். ஆனால் கோபம் வந்தால், அவ்வளவுதான்! புது உடுப்புகளைப் போட்டு விட்டு அடிப்பாள். நகையும், துணியும் போட்டுக் கொண்டு அவர்கள் முகம் வெளுக்க அழுவது, நட்ட செடிக்குத் தண்ணீர் வார்க்காமல் பூக்களை மட்டும் ஒட்ட வைத்தாற்போல் இருக்கும்! ரமா குழந்தை மாதிரி. அவள் உலகில் அறிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் பல இருக்கின்றன. பாவம், அவளை ஜாதிப் பூவில் ஜலம் தெளிப்பது போல் வைத்துக் கொள்ள வேண்டும்.

சரசு வந்த பிறகு நாலு நாள் வரை ரமா, சந்தோஷமாக அவளுடன் உலாவ வந்தவள் இப்பொழுது ஒரு மாதிரியாக இருக்கிறாளே; அவளுடைய அழகிய நீண்ட

விழிகள் நீர் கொண்ட மேகம் போல் ஆகி விட்டனவே, ஏன்!

என் அருமை ரமா மனத்தை அலட்டிக் கொள்ளுகிறளோ! அவள் காலில் முள் குத்தினும் என் இருதயத்தில் குத்துவது போல் அல்லவா இருக்கிறது! ரமா ஏன் வருந்துகிறு ளென்று எவ்வளவு கேட்டாலும் சொல்லாமல் தலையைக் கவிழ்த்துக் கொள்ளுகிறளே! நேற்றுப் படகில் போக மறந்து விட்டாள். படகில் போகக் குழந்தை மாதிரித் தினமும் குதிப்பாளே! நேற்று ஏன் வர மறந்து விட்டாள்! இன்று அருவிக்கு ரமாவை எப்படியாவது அழைத்துப் போக வேண்டும்.

சரசுவுக்குத்தான் என்ன பொறுமை! என்ன குணம்! எவ்வளவு சுறு சுறுப்பாக எல்லா வேலைகளையும் செய்கிறாள். அவள் இங்கிதம் தெரியாத மூடனுக்கு வாழ்க்கைப்பட வேண்டும் என்பது விதிபோலும்! அவள் வாழ்க்கை இன்பமாக இல்லை யென்று தெரிகிறது. அவள் வாழ்க்கையைப் பற்றிக் கேட்டால் கொஞ்சமும் விட்டுக் கொடுக்காமல் எப்படிப் பேசுகிறாள்! விவாகத்தின் போதே மகா முரடனுகக் காணப்பட்டான் அவன். இவ்வளவு வருஷங்களாக இங்கே அனுப்பாமலே இருந்தான். சொந்தத் தாயும் தந்தையும் பாழாய்ப் போகிறதா வென்று குத்திக் காட்டுவான். இந்தத் தடவை பெரியவர்களும் மறைந்த பிறகு அண்ணன் முறை வைத்து இங்கே அனுப்பி இருப்பதே அதிசயந்தான். சரசு இங்கே ஒரு மாதமாவது ஆனந்தமாக இருக்கட்டும். ஆம், குறைந்த பட்சம் ஒரு மாதம், முப்பது நாட்களாவது இங்கு இருக்க வேண்டாமா!

**ரமா நினைக்கிறாள் :**

பத்து தினங்களுக்கு முன் இந்த மோகன மயமும் கண் கொள்ளாக் காட்சிகளும் வானளாவிய மரங்களும் எனக்கு இன்பச் சோலையாகத் தோன்றின. காலைக் கதிரவனின் கிரணம் பட்டு உதிரும் பனித் துளிகள் பூந்தளிரின் ஆனந்தக் கண்ணீராகத் தோன்றின. இன்பமாகக் காலம் கழிக்கக் குளிர்ந்த பிரதேசந்தான் தகுதியான இடமென்று கூட நினைத்தேன்.

ஆனால் இன்று இந்த மலைகள் ஏன் கல்லாகச் சமைந்திருக்கின்றன! இந்த மரங்களெல்லாம் உயிரற்ற ஜடப் பொருளாக அல்லவா தோன்றுகின்றன! புஷ்பங்கள் கூட என் மன வாட்டத்தைப் பிரதிபலிப்பதாக அல்லவா இருக்கின்றன!

அன்று படகில் நான் மட்டும்தான் வருவேன், குழந்தைகள் கூட வரக்கூடாது என்றேன். அவர் கை பிடித்து ஏற்றி, 'அதற்கென்ன பேசாமல் போவோம். இன்று உனக்கு அலுக்கும் வரை சுற்றி வருவோம்' என்றார். அப்பொழுது என்ன வெல்லாம் அளந்தார்! 'இந்தப் படகின் அசைவு எனக்கு இன்பத் தோணியாக இருக்கிறது. உன்னுடன் போவதில் ஏற்படும் ஆனந்தம் எனக்கு வேறு எதிலும் கிட்டுவதில்லை' என்று சொன்னார்.

அவர் சொன்னதற்கு அர்த்தம் என்ன! காற்றடைக்கப்பட்ட பொம்மைகள் காற்றை எடுத்தால் எப்படி ரூபமின்றிப் போகுமோ, அப்படி காற்றடைக்கப்பட்ட இந்த வார்த்தைகளும் உருவமின்றிச் சுருங்க வேண்டியதுதானே! ஒரு வேளை என் மனத்தில்தான் ஏதாவது கோளாறோ! அவர் அன்று அவ்விதம் அன்புடன் சொன்ன பொழுது என்னைப் பார்த்த பார்வை இன்னும் என் மனத்தில் இன்பத் தேனுக வந்து பாய்கிறதே! அவர் சொன்ன அந்த வார்த்தைகளும் பார்த்த பார்வையும் வெறும் வேஷமா!

வேஷமாகத்தானிருக்கும். சரசு வந்த பிறகு அவையெல்லாம் மாயமாய் மறைந்து விட்டனவே! சரசு என் வாழ்க்கைப் பாதையில் வந்து குறுக்கிட்டுக்கிறாள். அவளை அந்தப் பாதையிலிருந்து அகற்ற வேண்டும். அவ்விதம் அகற்றும் சக்தி எனக்கு உண்டா!

சொக்கி வேலைக்காரிதான். ஆயினும் என்ன! அவள் அல்லவா என் கண்களைத் திறந்தாள்! என் கண்களில் தெரிந்து கொள் இருந்து அதற்கு மருந்து போடுவதாகச் சொல்லி எதையோ போட்டு ஒருவேளை என் கண்களை அவித்து விட்டாளோ! சே, சே, அப்படி யெல்லாம் இராது. அவள் சொல்ல தென்ன! நானேதான் என் கண்ணுல் பார்க்கிறேனே!

இன்று காலையில் 'அருவியில் போய்ச் சாப்பிடுவோம், குழந்தைகள் ஆசைப் படுகிறார்கள்' என்று சரசு ஆரம்பித்தாள். 'அப்படியே செய்வோம்' என்று சொல்லி 'ரமா தயார் செய்கிறாயா!' என்றாரே. அப்பொழுதுதான் அவருக்கு என்ன உற்சாகம்! 'ரமாவுக்கு இன்னும் உடம்பு சரியாகவில்லை. நானே தயார் செய்கிறேன்' என்று சமையல்காரனுக்கு அவள் உத்தரவிட்டாள். வந்த அன்று என் உபசரிப்பை எதிர்பாக்காமல் தானே அவள் குளித்து விட்டுச் சாப்பிட்டாள். விருந்தினர் வந்தால் இப்படி அல்லவா சுவாதீனமாக இருக்கவேண்டும் என்று என் கணவரிடம் சொன்னேன். 'நம் சரசு அல்லவா!' என்று அவரும் ஆமோதித்துப் புகழ்ந்தார். ஆனால் அன்று அவருடைய செய்கைக்கும், இன்றைய செய்கைக்கும் எவ்வளவு வித்தியாசம் இருக்கிறது!

நேற்று இரவு என்ன கோபமென்று என் தாவாக்கட்டையைப் பிடித்துக் கெஞ்சினார். நான் பதில் சொல்லவில்லை. பதில் சொல்வதற்கு என்ன, எனக்கும் வைத்தியமா! அவரைத் தவிக்க விடவேண்டும்... அவரா தவிக்கிறார்! நான் அல்லவா தவிக்கிறேன்! இல்லை, இல்லை. அவரும் மலைப் பாம்பு மாதிரி பெருமூச்சு விட்டாரே! நான் இரவு போர்த்துக் கொள்ளக்கூட இல்லை. என் மன உஷ்ணத்தில் உடம்பு வியர்க்கக்கூட ஆரம்பித்து விட்டது. அந்த வியர்வையினாலும் என் மனத்தைக் குளிரச் செய்ய முடியவில்லை. கொழுந்து விட்டெரியும் தீயில் ஒரு செம்பு ஜலத்தைக் கொட்டினால் அது அணைந்து விடுமா!

இந்தச் சரசுவின் மாயாஜாலம் குழந்தைகளைக் கூட மயக்கிவிட்டதே! சரசு அத்தையிடம் தான் படுத்துக் கொள்வோம் என்கிறார்கள். நான்தான் அருவிக்கு வரவில்லை என்றேனே, இவர்களும் போகாமல் நிறுத்தி விடுவதுதானே! "ரமாவுக்குத்தான் உடம்பு சரியாயில்லையே! ஆனலே, அவள்




நூற்கிறோம்
உங்கள்
நன்மைக்காக
எமது
மனமார்ந்த
தீபாவளி
நல்வாழ்த்துகள்
ஸ்தாபிதம்
1910
லக்ஷ்மி மில்ஸ்
கம்பெனி லிமிடெட்.
பாப்பநாயக்கன்பாளையம்......அவனாசி ரோடு......கோயமுத்தூர்.
மானேஜிங் ஏஜண்ட்ஸ்: ஜி. குப்புசாமி நாயுடு & கம்பெனி.





தி நியூ கார்டியன் ஆப் இந்தியா லைப் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

தலைமை ஆபீஸ்: சென்னை

(ஸ்தாபிதம்: 1934)

(சேர்மன்: ஸ்ரீ எம். ஸிடி. முத்தையா)

1950 டிசம்பர் 31-ம் தேதி பூர்த்தியான ஐந்து வருஷக் கணக்குகளை ஸ்ரீ என்.வி. நாயுடு. எம்.ஏ. பி.எல்., எப்.ஐ.ஏ. அவர்கள் பரிசோதனை செய்து வெளியிட்ட அறிக்கை மிகவும் திருப்திகரமான பலன்களை அளிக்கின்றன.

நடைமுறையிலுள்ள உத்திரவாதத் தொகை: ரூ. 1,28,43,128 லிருந்து ரூ. 2,63,00,000 அதிகமாக உயர்ந்திருக்கிறது.

லைப் அஷ்யூரன்ஸ் நிதி: ரூ. 16,05,094 லிருந்து ரூ. 46,89,680-க்கு அதிகமாகி யுள்ளது.

விலை மதிப்பீட்டின் உபரி லாபம்: விலை மதிப்பீட்டின் பிறகு உள்ள கூடுதல் உபரி லாபம் ரூ. 2,49,232.

போனஸ்: இந்த ஐந்து வருஷகால முடிவுக்கு, லாபத்துடன் கூடிய முழு ஆயுள் பாலிசிதாரர்களுக்கு வருஷம் ஒன்றுக்கு ரூபாய் ஆயிரத்துக்கு போனஸ் ரூ. 7 வீதமும் லாபத்துடன் கூடிய எண்டௌமெண்ட் பாலிசிதாரர்களுக்கு வருஷம் ஒன்றுக்கு ரூபாய் ஆயிரத்துக்கு போனஸ் ரூ. 5 வீதமும் அளிக்கப்பட்டிருக்கிறது.

முன்னணியில் நிற்கும் இந்த லைப் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியின் ஒரு பாலிஸி ஓர் சிறந்த ஆஸ்தியாகும். இந்தக் கம்பெனியில் ஏஜென்ஸி எடுத்துக் கொள்ளுவது மிகவும் லாபகரமானது.

○●○

தி நியூ கார்டியன் ஆப் இந்தியா
லைப் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

தலைமை ஆபீஸ்: "யுனைடெட் இந்தியா லைப் பில்டிங்ஸ்" :: சென்னை - 1

அஞ்ச வேண்டாம். குழந்தைகளுக்கு ஏமாற்றமில்லாமல் நாம் மட்டும் போய் வருவோம்' என்றாளே அந்த நாகரிகாரி. அவளுக்குத்தான் என்ன நெஞ்சு அழுத்தம்!

**சரசு நினைக்கிறாள்:**

இன்று என் கணவரிடமிருந்து உடனே என்னைப் புறப்பட்டு வரச் சொல்லிக் கடிதம் வந்திருக்கிறது. அவர் சாப்பாட்டுக்குக் கஷ்டப்படுகிறாராம். நான் வந்த பிறகுதான் என் அருமை தெரிகிறதாம்! இந்த வாக்கியத்தில் என்ன கவர்ச்சி இருக்கிறது! ஆனால் அந்த வாக்கியம் என் மனத்தை எப்படிக் கவர்ந்து விட்டது! அதை எவ்வளவு தடவை படித்தேன். முகுந்தனிடம் நான் புறப்படுவது பற்றிச் சொல்ல வேண்டும். ரமாவுக்கு உடம்பே சரியில்லை. எவ்வளவு சோர்வாக இருக்கிறாள்! பேசினால் கூட பலஹீனத்தில் படபடப்பாகப் பேசுகிறாள். என் சகோதரனுக்கு ஏற்ற மனைவி! ரமா கையைப் பிடித்த நாளன்றே முகுந்தன் இவ்வளவு செல்வாக்குடன் வாழுகிறான்! தங்கம் தங்கமான குழந்தைகள்—அவர்களைப் பிரியவே மனம் வரவில்லை.

ரமாவைப் பற்றித்தான் முகுந்தன் எவ்வளவு புகழ்கிறான்! இரண்டு குழந்தைகளைப் பெற்று, கிட்டத்தட்ட பத்து ஆண்டு வாழ்க்கை நடத்தியபின் கூட முகுந்தனின் அன்பு எள்ளளவும் குறையாமல் இருக்கிறதே! அன்று அருவிக் கரையில் நான் விளையாட்டாக 'அண்ணா! உன் மண வாழ்க்கை அமைதியாகவும் இன்பமாகவும் போவதால்தான் நீ ரமாவை இவ்வளவு காதலிக்கிறாய். புயல் அடித்தால் இவ்வளவு ஆழமான அன்பு ஏற்படுமா?' என்று கேட்டேன். அதற்கு முகுந்தன் அளித்த பதில் சிந்திக்க வைக்கிறது. 'அதென்ன, அப்படிச் சொல்லி விட்டாய்! கஷ்ட காலத்தில்தான் உண்மை அன்பு சாணை பிடித்ததுபோல் இருக்கும். தங்கத்தை நெருப்பில் போட்டால் கருமை மறைந்து விடுமா!' என்றான். எவ்வளவு நான் சந்தோஷமாக இன்று கழித்தாலும் அவர் நினைவு அடிக்கடி என் மனத்தை வாட்டுகிறது. அண்ணாவைப் போல் நானும் என் வாழ்க்கையை இன்பம் தோய்ந்ததாகச் செய்யவேண்டும்.

**முகுந்தன் நினைக்கிறான்:**

சரசு நல்ல பெண். அவள் ஊருக்குப் போனபின்பு வீடு எப்படி ஆகிவிட்டது! இந்தச் சலசலப்பான அருவிக் கரையில் அவள் கலகலப்பான பேச்சு எவ்வளவு உற்சாகத்தைக் கொடுத்தது! அவள் புறப்படும்பொழுது ரமாகூடச் சேர்ந்து கொண்டு அவளுக்கு வழிப் பிரயாணத்துக்கு வேண்டியதைத் தயார் செய்தாள். அவளுக்கு ஏதோ பரிசுகூடக் கொடுத்தாள். ராஜுவும், சுதாவும் சரசுவைக் கட்டிக்கொண்டு அழுதுவிட்டனர். தாய் தந்தையற்ற பெண்; இயற்கைத் தாய் அவள் பெண்மைக்கு வேண்டிய குணங்களை அளித்திருக்கிறாள். பெண்மை நிரம்பிய அவள் வாழ்க்கையில் தோல்வி அடையமாட்டாள். அவள் உயர்வை அறியாதவன் அவள் கணவன். ஆனால் என்ன! தன் அன்பைப் பொழிந்து என் செல்வத் தங்கை மண வாழ்க்கையில் கட்டாயம் வெற்றி காண்பாள்.

'சரசு, உன் கணவர் உன்னை இப்பொழுதெல்லாம் அன்பாக நடத்துகிறாரா! குதிரைப் பந்தயம் அவரை விட்டதா! உனக்கு ஏதாவது செலவுக்குத் தட்டினால், வேறு எந்த உதவி வேண்டுமானாலும் எனக்கு எழுது' என்று புறப்படும்பொழுது காதில் தழுதழுக்கச் சொன்னேன். எங்களைப் பிரியக் கஷ்டம், அவள் கணவன் நடவடிக்கைகளினால் ஏற்பட்டுள்ள வருத்தம் இருந்தும்கூட "அண்ணா! அவர் குதிரையும் என் அன்புக் குதிரையும் பந்தய மைதானத்தில் ஓடுகின்றன. அவர் குதிரை உணவின்றியோ, வேறு காரணத்தினாலோ களைத்துக் கீழே விழுந்துவிடும். என் மனக் குதிரைக்குச் சோர்வே இல்லை. ஒரு நாள் அவரை அது தன் முதுகில் ஏற்றிக்கொண்டு விடும்" என்று சொல்லிச் சிரித்தாள். பாரதப் பெண்மணியின் பண்பு சரசுவிடம் பூரணமாக அமைந்திருக்கிறது. அடாடா! ரமா தனிமையாக என்ன செய்கிறாளோ! இவ்வளவு நேரம் சிந்தனையில் மூழ்கி விட்டேனே! அவளை இன்று நிச்சயமாகப் படகில் அழைத்துச் செல்ல வேண்டும்.

**ரமா நினைக்கிறாள்:**

முதல்நாள் வரை வெறுத்த சரசுவை அன்று புறப்படும் பொழுது பார்க்க என்னவோ மாதிரியாக இருந்தது. அவள் எப்பொழுது தொலைவாள், ஆள் அடுத்த மாதிரி உட்கார்ந்து விட்டாளே என்று காத்தேன். அந்தப் பெண்ணை எவ்வளவு வெறுத்தேன்! அதற்கெல்லாம் அந்தப் பெண் முகத்தைச் சுளிக்கவே இல்லையே!

அன்று ஒரு நாள் அவரிடம் 'ஏன், சரசுவையே கல்யாணம் செய்து கொள்வதுதானே!' என்று சீறினேன். அவர் சிரித்துக்கொண்டு போய்விட்டார். இவர்கள் இருவரும் என் கோபத்தை வென்று விட்டார்கள். கடைசியில் தோல்வி அடைந்தவள் நான்தானே!

நேற்று இரவுதானே என்னிடம் விவரமாகச் சொன்னார். சரசுவை மருமகளாக அடையத்தான் அவர் பெற்றோர்கள் விரும்பினார்களாம். இவர், தான் அவளைச் சகோதரியாக பாவிப்பதால் மனைவியாகக் கொள்ள முடியாதென்று கண்டிப்பாகச் சொல்லி விட்டாராம். தான் சரசுவுக்கு ஏற்ற கணவன் இல்லையென்று உருக்கமாகச் சொன்னார்.

இன்று சரசுவிடமிருந்து கடிதம் வந்தது. தன்னுடைய அன்பைக் கொட்டி எழுதியிருக்கிறாள் பேதைப்பெண். 'முகுந்தண்ணா! நான் அங்கே இருந்த பதினைந்து நாட்கள் மறக்க முடியாத தினங்கள். உன் பெருந்தன்மைக்கு ஏற்ற மனைவி ரமா வந்திருக்கிறாள். நீங்கள் மணியும்—ஒளியும்போல, மலரும்—மணமும் போல வாழப் பிரார்த்திக்கிறேன். ரமா பலஹீனமாயிருக்கிறாள். அலக்ஷியமாக இராதே. தகுந்த வைத்தியம் செய். இணையற்ற தங்கமான அந்தப் பெண் என் மன்னியாக வந்தது என் பாக்கியம். நோய் காரணமாகக் குழந்தைகளிடம் கூடச் சிடுசிடுப்பாகச் சில சமயம் இருந்தாள். சுதா, ராஜு இவர்களின் மோகன வடிவங்கள் அடிக்கடி என் கண் முன் நிற்கின்றன. அவர்களுக்கு என் அன்பு!' இவ்விதம் அவள் தன் தூய மனத்தையும் சகோதர பாசத்தையும் பேனாவில் தோய்த்துச் செதுக்கியிருக்கிறாள். அவைகள் வெறும் எழுத்துக்களல்ல, அவள் மனத்தைக் கண்ணாடி போல்காட்டும் படம். என்ன தவறு செய்து விட்டேன்! அந்தப் பெண்ணிடம் எவ்வளவு ஆத்திரம் கொண்டேன்! நேற்று என் கணவரிடம் நான் ஏதோ மன்னிப்புக் கேட்க வாயெடுத்தேன். "ரமா, உனக்குக் குழந்தை சுபாவம். என்னை அறிந்து கொண்டு விட்டால் உனக்கு உலகமே இன்ப மயமாக இருக்கும். கவலையின்றி உடம்பைக் கவனித்துக் கொள்" என்று அருமையாகச் சொல்லி என் தலையை அன்புடன் கோதினார்.



நான் முதன் முதலாகக் கணவன் வீட்டுக்குப் புறப்பட்டு வரும் பொழுது "ரமா, உனக்கு லக்ஷ்மியின் பெயர். லக்ஷ்மிக்கு 'சஞ்சலா' என்று மற்றொரு பெயர் உண்டு. உன்னை அருமையாக வைத்துக் கொள்ளத் தகுந்த கணவன் கிடைத்திருக்கிறான். நீ அவனுக்கு ஏற்றவள் என்று பெயர் வாங்க வேண்டும்" என்றாள் என் அம்மா.

நான் பெண்தானே; வாழ்க்கைப் படகில் சிற்றலைகள் அடிக்காமல் இருக்குமா! காலம் உருளாமல் நின்றால் எல்லாமே நிற்கும். அதுதான் புரண்டு கொண்டிருக்கிறதே.

அடாடா! எவ்வளவு நேரம் உட்கார்ந்து விட்டேன். இன்று காற்றே இல்லை. படகில் போகலாம் என்று கூப்பிடுகிறார் அவர். பனித்திரை விலகியபின் உட்கார்ந்திருக்கலாமா! இதோ புறப்பட்டு விட்டேன்.

# காவியும் கதையும்




சாமியார்கள் சொன்னதாக, எத்தனையோ கதைகள் வெளி வந்திருக்கின்றன. கதாசிரியர், தனிமையின் இனிமையை அனுபவித்துக் கொண்டோ, இயற்கையின் எழிலைப் பருகிக் கொண்டோ அல்லது என்ன கதை எழுதலாம் என்று யோசித்துக் கொண்டோ, உட்கார்ந்திருப்பார். திடீரென்று 'ஜகத் ஜனனி' என்று ஒரு குரல் கேட்கும், சங்கநாதம் அல்லது ஓங்காரநாதம் போல. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்ப்பார் ஆசிரியர். புராண காலத்து மகரிஷிகளை நினைவுறுத்தும் உருவம் ஒன்று அவரை நோக்கி வந்து கொண்டிருக்கும். அனுபவமும் அந்த உருவத்தின் தோற்றத்தை ஆசிரியர் கூர்ந்து கவனித்து, "சாந்தமும் பெருமிதமும் கலந்த நடை - அடையடையான ஜடாமுடி - மார்பை மறைக்கும் வெண் தாடி - அடர்த்தியான புருவங்கள் - ஞான ஒளி வீசும் கண்கள்" என்று வர்ணனைச் சொல்லடுக்குகளைப் புனைந்து கொள்வார்.

மறுபடியும், 'ஜகத் ஜனனி' என்று அந்தத் தெய்வீக சங்கநாதம் அல்லது ஓங்கார நாதம் போல முழங்கி விட்டு, ஆசிரியரின் எதிரே, எத்தனையோ விதமான ஆசனங்களில் ஏதாவதொரு ஆசனம் போட்டுக் கொண்டு அமருவார். சிறிது நேரம் மௌனம் நிலவியிருக்கும். பிறகு, அந்த யோகியார் தொண்டையைக் கனைத்து விட்டுக் கொள்வார், அல்லது தாடியைக் கோதி விட்டுக் கொள்வார் அல்லது நீண்டதொரு பெருமூச்சு விடுவார். இவற்றில் ஏதாவதொரு அறிகுறியின் மூலம், அருமையானதொரு கதையை ஆசிரியர் எதிர்பார்த்து, தமது ஒலிப்பதிவு அவயவங்களையும் சாதனங்களையும் ஆயத்தப்படுத்திக் கொள்வார். அவர் எதிர்பார்த்தது வீண் போகாதபடி, அபூர்வமானதொரு கதையை நல்ல நடையில் நல்ல உத்தியுடன் சாமியார் சொல்லுவார். கதையின் இறுதியில் பெரியதொரு வினாக் குறியையோ வியப்புக் குறியையோ அவர் வீசி விட்டு, வந்ததுபோலவே திடீரென மறைந்து விடுவார். தூரத்திலிருந்து-வெகு தூரத்திலிருந்து, 'ஜகத் ஜனனி' என்ற சங்கநாதம் அல்லது ஓங்கார நாதம் கிளம்பி, ஆசிரியரின் இருதயத்திலே எதிரொலி எழுப்பும்.

பல கதாசிரியர்களுக்கு வாய்க்கும் இவ்வித அதிர்ஷ்டம் எனக்கும் வாய்க்காதா என்று நான் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தேன். ஆனால், எந்தச் சாமியாரும் என்னைத் தேடி வரவும் இல்லை; கதை சொல்லவும் இல்லை. ஆகவே, கடைசியில் நானே சாமியார்களைத் தேடிச் சென்று கதை கேட்பது என்று தீர்மானித்தேன்.

முதல் நாளன்று, நோட்டுப் புஸ்தகம் பென்ஸில் சகிதம், என் கிராமத்தை அடுத்துள்ள நதியை நோக்கி நடந்தேன். ஆற்று மண்டபங்களில் ஏதாவதொன்றில் யாராவதொரு சாமியாரைக் காணலாம் என்ற நம்பிக்கையுடன்தான். போகிற போக்கில் சூழ்நிலையை நன்றாகக் கவனித்துக் கொண்டு போனேன். அதிர்ஷ்ட வசமாய், நல்ல கதையாக ஒன்று அகப்பட்டால் அதற்கு முன்னுரை வேண்டும் அல்லவா! அதற்காகத்தான். வானத்தில் சூரியன் காய்ந்து கொண்டிருந்தது; அதிலிருந்து வெய்யில் அடித்துக் கொண்டிருந்தது; நிலத்தில் மரங்கள் நின்று கொண்டிருந்தன; அவற்றில் இலைகள் ஆடிக் கொண்டிருந்தன. காற்றில் பட்சிகள் பறந்து கொண்டிருந்தன. நதியில் நான் காண முடியாதபடி மீன்கள் நீந்திக் கொண்டிருந்தன.

இவ்விதச் சூழ்நிலையை, என் மனதுக்குள் இலக்கியமாக மாற்றியவாறே, நான் சென்று கொண்டிருக்கையில் மூன்று வாசல் மண்டபத்துக்குள் ஒரு காவி நிறம் புலப்பட்டது. கண்டேன் காவியை என்று உற்சாகம் அடைந்து, அதை நோக்கி விரைந்தேன். அங்கே ஒரு சாமியார் பாதி உட்கார்ந்தவாறும் பாதி சயனித்தவாறும் இருப்பதைக் கண்டேன். அவருடைய கண்கள் மூடி யிருந்தன. ஆனால் அவர் நித்திரையில் இருந்தாரா அல்லது நிஷ்டையில் இருந்தாரா என்று தெரியவில்லை.



அவருடைய நித்திரையோ நிஷ்டையோ கலையும்வரை காத்திருக்கலாம் என்று நினைத்து, அவர் எதிரே சற்றுத் தூரத்தில் உட்கார்ந்து கொண்டேன். சும்மா உட்கார்ந்திருப்பானேன் என்று அவருடைய முகத்தை எழுத்தாளன் தோரணையில் ஆராயலானேன். நெற்றியிலே பல வடுக்கள் — அவை வித வித அனுபவங்களின் அடையாளங்களாய் இருக்கலாம். கன்னங்களிலும் மார்பிலும் காயத் தழும்புகள்—அவற்றில் வீர தீர வரலாறுகள் பொதிந்திருக்கக் கூடும். இப்போது முதுமையினால் கனிழந்து வாடி இருக்கும் இந்த முகம், முன்பு இளமைப் பருவத்தில் எத்தனையோ பெண்களைக் கவர்ந்திருக்கக் கூடும். ஒருகால் காதலில் ஏற்பட்ட ஏமாற்றம் அல்லது காதலி ஒருத்தி செய்த வஞ்சகம் அல்லது காதலியை இழந்ததால் நேர்ந்த ஆறாத் துயரம் இந்தக் காவிக் கோலத்துக்குக் காரணமாய் இருந்திருக்கலாம். இவற்றில் எது உண்மை என்பதை யார் கண்டார்கள்!

வெகு நேரமாகியும் சாமியார் கண் திறந்தபாடில்லை. 'இன்னும் எத்தனை நேரந்தான் கதைக்காகக் காத்திருக்க வேண்டுமோ, தெரியவில்லையே!' என்று நான் அலுத்துக் கொண்டிருந்த சமயத்தில், நல்ல வேளையாக எனக்கு உதவியாய் ஒரு வண்டு பறந்து வந்து, சாமியாரின் காதருகே ரீங்காரம் செய்து, அவரை எழுப்பி விட்டது. எழுந்தவர் என்னைக் கண்டு திடுக்கிட்டார். "யார், நீங்கள் யார்?" என்று நாக்குழறக் கேட்டார்.

"நான் யார் என்பது முக்கியம் அல்ல; தாங்கள் யார் என்பதுதான் முக்கியம். அதற்காகத்தான்..." என்று தயங்கினேன்.

இதைக் கேட்டுச் சாமியார் மேலும் கலக்கமுற்று "ஐயா! நான் ஒரு ஏழைப் பரதேசி" என்று மிரள மிரள விழித்துக் கொண்டே பதில் சொன்னார்.

விஷயத்தில் இப்படிச் சொல்லுவதே போதும் என்று எண்ணி, அவருடைய இப்போதையப் பெயர் என்ன, முன்னையப் பெயர் என்ன, அவர் பிறந்த ஊர் எது, முன்பு நடத்திய தொழில் என்ன என்று அடுத்தடுத்துக் கேள்விகள் தொடுத்தேன். சாமியார் பீதியுற்று, என்னை ஏற இறங்க ஒரு தரம் பார்த்து விட்டு, வாரிச் சுருட்டிக் கொண்டு, எடுத்தார் ஓட்டம்! "ஸ்வாமிகளே, ஸ்வாமிகளே!" என்று நான் கூப்பிடக் கூப்பிட, அவருடைய ஓட்டத்தின் வேகம் மேலும் மேலும் அதிகமாயிற்று.

இந்த அனுபவத்தில், கதை ஏதும் கிடைக்கா விட்டாலும், நல்ல பாடம் ஒன்றைக் கற்றுக் கொண்டேன். அதாவது, நோட்டுப் புஸ்தகம், பென்ஸில், காக்கிச் சட்டை, கைத்தடி முதலியன சாமியார் பேட்டிக்கு ஒவ்வாதன என்று. ஆகவே, அடுத்தபடியாகக் கதை-வேட்டை ஆடுவதற்காக, நான் குற்றாலத்துக்குப் போனபோது, இவற்றைத் தவிர்த்தேன்.

ஜன்மம் உனக்கு எப்படி மறந்து போயிற்றோ, அப்படியே எனக்கும் பூர்வாசிரமம் மறந்து போய் விட்டது."

"இதுவும் என் துரதிர்ஷ்டந்தான். தங்கள் வரலாற்றைக் கேட்டு ஒரு கதை எழுதலாம் என்று நினைத்தேன்."

"ஓஹோ! கதை எழுதலாம் என்று நினைத்தாய்! அதற்குப் போயும் போயும் என் கதையையா எழுத நினைத்தாய்!"



"தாங்கள் மாத்திரம், தங்களுடைய வரலாற்றைத் தெரிவிப்பீர்களானால், அது ரொம்பவும் ரஸமான கதையாய் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை."

"அப்பனே, என் கதையைவிட, இதோ வெளிகிறதே, இந்தப் புழுவின் கதை எவ்வளவோ ரஸமானதாய் இருக்கும். ஏன், இதன் கதையைத்தான் எழுதேன்!"

"கேவலம், இந்த அற்பப் புழுவின் கதையையா எழுதுவது!"

"என்ன! இதை அற்பப் புழு என்று நினைக்கிறாய் நீ! நான் இதை அற்புதப் புழுவாகக் கருதுகிறேன். இதன் பெருமையை நீ அறியமாட்டாய்! அறிந்தால், ஒரு பெரிய புராணமே எழுதலாமே!"

இதற்குமேல் அவருடன் பேசுவதில் பயனில்லை என்பதை உணர்ந்து, "நல்லது ஸ்வாமி, போய் வருகிறேன்" என்று சொல்லி விட்டு, மிக்க ஏமாற்றத்துடன் அந்த மரத்தடியை விட்டு வந்தேன். பின்னர் சிறிது நேரத்துக்கெல்லாம் குற்றாலத்தையே விட்டுப் புறப்பட்டேன்.

இந்த அனுபவத்துக்குச் சில நாட்களுக்குப் பிறகு, ஒரு நாள் காலை, என் வீட்டு ஜன்னலண்டை நான் உட்கார்ந்திருந்தபோது நவீன சாமியார் ஒருவர் தெரு வழியே போய்க்கொண்டிருந்தார். பவள நிறப் பட்டு வஸ்திரம், தொப்பி, தங்க பிரேம் மூக்குக் கண்ணாடி, கைக்கடிகாரம், உடைக்கு ஏற்ற கைப் பை, பளபளப்பான பிளாஸ்டிக் பாதரக்ஷைகள் முதலானவை அவருக்கு 'நவீன' என்ற அடைமொழியை அளிக்கச் செய்தன. சாமியார்களின் சகவாசமே வேண்டாம் என்று, நான் ஏற்கெனவே தீர்மானித்திருந்த போதிலும், கடைசியாக ஒரு 'சான்ஸ்' பார்க்கலாமே என்ற ஆசையால் தூண்டப்பட்டு, அவரைக் கைதட்டிக் கூப்பிட்டேன்.

"என்ன, கை ரேகை பார்க்க வேண்டுமோ? ஐந்து ரூபாய் 'பீஸ்'" என்றார் அவர்.

"எனக்குக் கை ஒன்றும் பார்த்துச் சொல்ல வேண்டாம்." என்றேன் நான்.

"பின்னே யோகாஸன 'ட்யூஷன்' வேண்டுமோ? முதல் 'கோர்ஸுக்கு' முப்பது ரூபாய்" என்றார் அவர்.

"அதுவும் வேண்டாம்." என்றேன்.

"ஒருவேளை இயற்கை வைத்தியம் சம்பந்தமாக ஏதேனும் ஆலோசனை வேண்டுமோ? பத்து ரூபாய் தான் நான் வழக்கமாகச் 'சார்ஜ்' பண்ணுகிறது."

"எனக்கு வியாதி ஏதும் இல்லாததால், இயற்கை வைத்தியமும் வேண்டாம்; செயற்கை வைத்தியமும் வேண்டாம்."

"பின்னே, ரஸவாதம், மந்திரவாதம் முதலானதுகளிலே நாட்டம் உண்டோ! அப்படியென்றால், அதற்கு நானல்ல ஆள்!"

"இதெல்லாம் ஒன்றும் வேண்டாம், ஸ்வாமிஜி! உங்கள் வரலாற்றை மாத்திரம் எனக்குத் தெரிவித்தால் போதும்."

"எதற்காகவோ!"

"அதை ஒரு கதையாக எழுதலாம் என்று நினைக்கிறேன்" என்றேன்.

"அப்படியா! தாராளமாய்ச் சொல்கிறேன். ஆனால், அதற்கு நூறு ரூபாய் சார்ஜ் ஆகுமே! என்றார் அவர்.

"இது என்ன, ஸ்வாமிஜி! எதற்கெடுத்தாலும் பீஸும் சார்ஜும் கேட்கிறீர்களே!"

"ஏன் கேட்கக் கூடாது! நன்றாகக் கேட்பேன். ஆனால், ஒரு காசுகூட என் சொந்தச் செலவுக்காக அல்ல. நவீன ஆசிரமம் ஒன்றை அமைத்துக் கொண்டிருக்கிறேன். அதற்காகத்தான் இப்போது நிதி சேர்த்துக் கொண்டிருக்கிறேன்" என்றார் சாமியார்.

"ரொம்ப சந்தோஷம். ஆனாலும், ஒரு கதைக்கு நூறு ரூபாய் கொடுப்பதானால் கட்டி வராது. உங்களைக் கூப்பிட்டதற்காக என்னை மன்னிக்க வேண்டும்."

"தாராளமாக மன்னிக்கிறேன். ஆனால் அதற்கும் ஐந்து ரூபாய் 'சார்ஜ்' செய்கிறேன். சீக்கிரம் கொடுத்து அனுப்புங்கள். ஆசிரமத்துக்கு நன்கொடையாக வரவு வைத்துக் கொள்கிறேன்."

இவ்வாறு சொல்லி விட்டு அந்த நவீனச் சாமியார், பையிலிருந்து ரசீது புஸ்தகத்தைத் தயாராய் எடுத்து வைத்துக் கொண்டார். அவரைத் தொலைப்பதற்கு, அவர் கேட்ட நன்கொடையைக் கொடுத்தே ஆகவேண்டி இருந்தது.

இப்படியாக, சாமியார் - கதை ஏதும் எனக்குக் கிடைக்காமற் போனது வருத்தத்துக்குரியதே யாயினும், சாமியார்களைப்பற்றி, இதுமாதிரி ஒரு கட்டுரையாவது எழுத முடிந்ததே என்பதை எண்ணி அளவற்ற மகிழ்ச்சி எனக்கு உண்டாகிறது.



பேத்தி:—"பாட்டி! மாப்பிள்ளை தீபாவளி மலரில் கதை எழுதி இருக்கிறார், பாருங்கோ!"

பாட்டி:—"மாப்பிள்ளையா எழுதி இருக்கிறான்? ஏதுடீ, அச்சடிச்சாப் போலே எழுதி இருக்கிறானே!"

பொன் போட்டால் பொன் விளையும் பூமி நம் பாரத நாட்டுப் பூமி. இதைப் பண்படுத்தி பயிர் செய்குவோம். பூமியின் கீழே இருக்கும் நீரை முறையாக வெளியே கொணர்ந்து பயன்படுத்திக் கொண்டால் உங்கள் பூமியில் பயிர் செழித்து, உங்கள் மனம் செழித்து, உங்கள் நாடும் செழிக்கும். எலக்ட்ரிக் மோட்டாருடன் இணைத்தும், ஆயில் என்ஜினுடன் பிணைத்தும் இவற்றை இயக்கலாம். தேவைக்கு எழுதுங்கள்.

எங்கள் பம்புகளை விற்க நாடெங்கும் வியாபாரிகள் தேவை.



# சரோஜினி பம்புகள்

1½"-2"-2½"-3"-4"-5"-6"

சைஸ்களில் கிடைக்கும்

## தி ஜெனரல் என்ஜினியரிங் ஒர்க்ஸ்.

P.B. நெ. 3 • நாமக்கல் • சேலம் Dt.

# HUMBER



# ஹம்பர்

உன்னத எஃகினால்
அமைக்கப்பெற்றது.
நீண்ட காலம்
உழைக்கக் கூடியது.

•

மைசூர், திருவாங்கூர், கொச்சின் சமஸ்தானங்கள் உட்பட தென்னிந்தியாவுக்கு சோல் ஏஜண்டுகள்:

## பாபுலர் ஸைகிள் இம்போர்டிங் கம்பெனி

8/9, பிராட்வே :: சென்னை - 1

தந்தி: POPCOMPO டெலிபோன்: 55100

அனைவருக்கும் எமது

## மங்களத் தீபாவளி வாழ்த்துக்கள்!

●

சர்ம வியாதிகளை சடுதியில் போக்கிடவல்ல களிம்பு என்று சகலரும் சந்தோஷத்துடன் வாங்கிடுவது




# சைபால்

(முகப்பரு, வேனல் கட்டி, தீப்பட்டபுண், சேத்துப் புண், பத்து, கொப்புளம் முதலிய சகல சர்ம ரோகங்களையும் போக்க இணையில்லாக் களிம்பு)

●




தாய்மார்கள் இதுவே தக்கதெனத் தேர்ந்தெடுத்தது!

ரமணீஸ்

# பேபி கிரைப்

குழந்தைகளுக் குண்டாகும் வயிற்றுவலி, மாந்தம், வயிற்றுப்பொருமல் முதலிய சகல அஜீரணக் கோளாறுகளையும் போக்கி புஷ்டி அளிக்கவல்லது.

தயாரிப்பவர்கள்

**தி சௌத் இந்தியன் மான்யுபாக்சரிங் கம்பெனி**

மதுரை

## இந்த தீபாவளி புனித தினத்தில்

சகல பட முதலாளிகளுக்கும்
தியேட்டர்காரர்களுக்கும்
நண்பர்களுக்கும்
பொதுமக்களுக்கும் எங்களது

## மனமார்ந்த நல் வாழ்த்துக்கள்!



தங்கள் ஆதரவை என்றும் நாடும்

# நியூடோன் ஸ்டுடியோஸ்

## லிமிடெட்

கீழ்ப்பாக்கம் :: மதராஸ்

(டெலிபோன்: 3633)

★

**RM. ராமநாதன் செட்டியார்**
*மானேஜிங் டைரக்டர்*

**தின்ஷா கே. தெஹ்ரானி**
*சௌண்டு இன்ஜினீர்*

**ஜீதன் பானர்ஜி**
*டெக்னிகல் டைரக்டர்*

**F. நாகூர்**
*ஆர்ட் டைரக்டர்*



# தியாக சிகரம்

கின்ஜா

விமலா - தம்புநாதனின் திருமணம் வெகு விமரிசையாக நடந்தேறியது. நூற்றுக் கணக்கான தேச பக்தர்களிடமிருந்து ஆசிச் செய்திகள் வந்து குவிந்து கிடந்தன. நூற்றுக் கணக்கான தேசபக்தர்கள் மிக மகிழ்ச்சியுடன் தம்பதிகளை ஆசீர்வதிக்க நேரிலும் வந்திருந்தார்கள். இப்படியெல்லாம் தன் விவாகத்தை விரிவாக்க தம்புநாதன் விரும்பவே யில்லை. ஆயினும் அவன் நண்பர்கள் அவன் விருப்பத்தை அங்கீகரிக்காமலே அவன் விவாகத்தை விரிவாகவும் விமரிசையாகவும் நடத்தி விட்டார்கள்.

விவாகத்துக்கு வந்திருந்த விருந்தினர் யாவரும் சென்ற பிறகு தம்பதிகள் மேஜை மீது இருந்த ஜாதி மல்லிகை மாலைகளை ஆளுக் கொன்றாக எடுத்துக் கொண்டு பக்கத்து அறையை அடைந்தனர்.

அந்த அறையின் சுவர் யாவும் தேசத் தலைவர்களின் படங்களால் அலங்கரிக்கப் பட்டிருந்தது. ஒரு பக்கச் சுவரின் மத்திய பாகத்தில், வலதுபுறம் மகாத்மாவின் படமும், இடதுபுறம் கஸ்தூரிபாவின் படமும் ரோஜா மாலைகளால் அலங்கரிக்கப் பட்டிருக்க, நடுவில் அழகே உருவாக, அமைதியே அவதாரமாகத் திகழ்ந்த தேச சேவிகை கமலா கம்பீரமாக நின்றிருந்தாள். ஆம்; உயிர் பெற்று ஓடி வரத் தயாராய் நிற்கும் பொற்சித்திரம் போல் அமைந்து விட்டது அவளுடைய அந்த உருவப் படம்.

உள்ளே நுழைந்த தம்பதிகள் ஒருவர் பின் ஒருவராகக் கையிலுள்ள மலர் மாலைகளைக் கமலாவின் படத்துக்கு அணிவித்து விட்டு ஆசை தவழும் அந்த அழகிய முகத்தைப் பார்த்தபடி நின்றனர். விமலாவின் கண்களிலிருந்து நீர் பொங்கி வழிந்தது. விம்மலுக்கிடையே, "அக்கா! கமலா!" என்று அவள் உதடுகள் முணுமுணுத்தன. அமைதியாக நின்றிருந்த தம்புநாதனின் கண்களிலும் நீர் பெருகியது.

பிறந்தவுடனே வீரிட்டு அழும் குரலைக் கேட்டதும், 'அது பெண் குழந்தையேதான்' என்று சொல்லி விட்டாள் கமலாவின் பாட்டி. "பிடாரி போன்ற குரலைக் கேட்டதுமே பெண்தான் என்று தெரிந்து விட்டதே! என்ன பெண் ஜன்மம் வேண்டி கிடக்கிறது!" என்று பாட்டி அலுத்துக் கொண்டாலும், கமலாவுக்கு மட்டும் தனக்குத் தங்கச்சிப் பாப்பா பிறந்ததில் அதிக ஆனந்தமே ஏற்பட்டது. மூன்று வயதுக் குழந்தையான கமலாவுக்கு அப்போது ஆனந்தத்துடன் அடக்கமும் ஏற்பட்டது. அதற்குக் காரணம் அவள் பாட்டி அவளுக்குச் செய்த போதனைதான். அவள் இனிப் பெரியவள்; அக்கா! இனி அவள் அழவே கூடாது! தங்கச்சிப் பாப்பா ஏது கேட்டாலும் அதைக் கொடுத்து அவளைச் சமாதானம் செய்து அழவிடாமல் பார்த்துக் கொள்ள வேண்டியவளான அவள் அழுதால் அழகாய் இருக்குமா! 'தங்கச்சிப் பாப்பாவின் அருமை அக்கா'வான அவள் தன் ஆவலை அடக்கிக் கொண்டு அதை விமலாவிடம் கொடுத்து விடுவாள்! இப்படியாக அந்த இரு சகோதரிகளிடையே, 'ஆசையை அடக்கியாண்டு அன்பை வளர்க்கும் பண்பு' பெரியவளுக்கும், 'ஆசைப்பட்டதை அடம் செய்தாவது அடைந்தே தீருவது' என்ற அடங்காப் பிடாரித்தனம் சிறியவளுக்கும் அந்த இளம் வயதிலேயே படிந்து படிப்படியாக அவர்கள் வயதுடன் கூடவே வளர்ந்து வந்தது.

கமலாவுக்கு வயது பத்து ஆகும்பொழுது தான் அந்த துக்ககரமான சம்பவம் நிகழ்ந்தது. கமலாவின் பெற்றோர் ஊர் பார்த்து இறந்துவிட்ட துக்க சம்பவத்தை முன்னிட்டு, குழந்தைகளை வீட்டிலேயே விட்டு விட்டு வெளியூர் சென்றிருந்தனர். அவர்கள் திரும்பி வரும்பொழுதுதான் அந்தக் கோர ரயில் விபத்து நேர்ந்தது.

அவ்விபத்தில் உயிரிழந்தவர்களில் கமலாவின் பெற்றோரும் இருந்தனர். இதை இனி அழுகை வந்தால் கூட அடக்கிக் கொள்ள வேண்டும். எதையும் வேண்டுமென்று அடம் பிடிப்பது, அழுவது இவைகளுக் கெல்லாம் அவளுக்கு உரிமை கிடையாது. இனி அவ்வுரிமை முற்றிலும் தங்கச்சிப் பாப்பாவைச் சேர்ந்தது! ஆகையால் இனி கமலா — அக்காவான கமலா எல்லாவற்றையும் பொறுத்து சகித்துக் கொள்ளத்தானே வேண்டும்! இந்த உபதேசம் அவளுக்குத் தங்கை விமலா விடத்திலே எல்லையில்லாத அன்பும் பாசமும் விழும்படி செய்து விட்டது.

விமலா விளையாடும் பருவத்தை அடைந்த பொழுது கமலா தன் விளையாட்டுச் சாமான்கள் அனைத்தையும் அவளுக்கே கொடுத்து விட்டாள். தான் விளையாட வேண்டுமென்ற ஆவலையும் அடக்கிக் கொண்டு விட்டாள். கமலா எதை அதிக விருப்பத்தோடு கேட்டு வாங்கிக் கொள்வாளோ, அதுவே தனக்கு வேண்டுமென்று அடம் பிடித்து அழுவாள் விமலா. கமலா அறிந்தபொழுது கமலா துடி துடித்துப் போனாள். அந்த வயதிலே அவளுக்கு அழுவதைத் தவிர வேறு ஒன்றுமே செய்யத் தோன்றவில்லை. ஆயினும் அழுது விம்மிய அவளுக்குச் சிறிது நேரத்தில் ஒரு விஷயம் நன்றாகத் தெரிந்தது:—"அப்பாவும் அம்மாவும் செத்துப் போய் விட்டார்கள்; இனி அவர்களைப் பார்க்க முடியாது. பாட்டி இறந்தபொழுது அப்பா என்ன சொன்னார்! 'பெரியவளாக இருந்து எல்லாவற்றையும் கவனித்து வந்தவள் போய் விட்டாள்; இனி எல்லாவற்றையும் கவனித்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு என்னுடையதுதான்' என்று சொல்லித் தன் துக்கத்தை அடக்கிக்கொண்டு மற்றவர்களையும் தேற்றினாரே, அதுபோலத்தான் நான் இனித் துக்கத்தை அடக்கிக்கொண்டு குழந்தை விமலாவைத் தேற்ற வேண்டும். அவளைக் கவனித்துக் காப்பாற்றும் முழுப் பொறுப்பும் இனி என்னுடையதே." இவ்வித எண்ணங்கள் எழுந்ததும் கமலா, பத்து வயதுச் சிறுமியான கமலா பல்லைக் கடித்துக் கொண்டு தன் துக்கத்தை அடக்கிக் கொண்டாள். அழுது விம்மும் அருமைத் தங்கை விமலாவையும் அருகில் இழுத்து அன்புடன் அணைத்துக் கொண்டாள்.

பெரியவளான கமலா தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, பாவாடையை இழுத்துக் கட்டிக் கொண்டு அடுக்களையில் உள்ள பாத்திரங்களைத் திறந்து ஆராய்ந்தாள். சுர்சட்டியில் இருந்த அந்தப் பழைய சாதத்தைப் பார்த்ததும் கமலாவுக்குப் பசி மிகுதியினால் நாக்கில் ஜலம் ஊறியது. ஆயினும் அவள் அந்தச் சாதத்தைப் பிழிந்தெடுத்துப் பிசைந்ததும் தன் பசியை மறந்தாள். அவள் பிசைந்த சாதம் விமலாவுக்குக் கூடப் போதாமல் இருந்ததுதான் அதற்குக் காரணம்.

விவரம் அறிந்து பதறி ஓடி வந்த மாமா சேகர் குழந்தைகளைக் கண்டு கதறினார். பிறகு அங்குள்ள விஷயங்களை ஒருவிதமாக முடித்துக் கொண்டு, சின்னஞ்சிறு குழந்தைகள் இருவரையும் தம்முடன் அழைத்துக் கொண்டு மதுரைக்கு வந்து சேர்ந்தார்.

அன்று, ஹரிஜன நிதிக்காகச் சுற்றுப் பிரயாணம் செய்துவரும் மகாத்மா காந்திஜியைத் தரிசிப்பதற்காகச் சென்ற சேகர் தம்முடன் குழந்தைகளையும் கூட்டிக் கொண்டு சென்றிருந்தார். அன்று அங்கு நடந்த அந்தச் சம்பவம் அவர் உள்ளத்தைப் பெரிதும் உலுக்கச் செய்தது.

மகாத்மாவின் கையெழுத்தைப் பெற வேண்டிக் கையில் நோட்டுடன் நின்றிருந்த கமலா, அவர் விருப்பத்தை அறிந்ததும் அதிக ஆனந்தத்துடன் தன் நகைகள் யாவற்றையும் கழற்றிக் கொடுத்துக் கையெழுத்தும் பெற்றுக் கொண்டாள். விமலாவோ தன் நகைகளைக் கொடுக்க சம்மதிக்காததால் கையெழுத்தைப் பெறாத பொறாமையுடன் வீடு திரும்பினாள்.



வீட்டுக்கு வந்ததும் கமலா, தான் அருமையாகப் பெற்ற காந்திஜியின் கையெழுத்தைப் பத்திரமாகப் பெட்டியில் வைத்துப் பூட்டினாள். இவற்றைக் கவனித்த சேகர் கமலாவைப் பெரிதும் புகழ்ந்து பாராட்டினார். அன்று இரவு நடந்த சம்பவம், அவரைக் கமலா விடத்திலே அதிக மதிப்பும் கொள்ளச் செய்தது.

அன்று இரவு சாப்பாட்டு அறையில் கமலா, விமலா இருவரையும் காணாமற் போகவே, அவர்களைத் தேடிச் சென்ற சேகர் விமலா விக்கி விக்கி அழுவதைக் கண்டு திகைத்து நின்றார். கமலாவோ அவளை அணைத்தபடி அவள் அழுகைக்குக் காரணம் கேட்டவண்ணம் அவளைச் சமாதானப் படுத்திக் கொண்டிருந்தாள்.

அழுகையை நிறுத்திய பிறகு விமலா சொன்ன விஷயத்தைக் கேட்டபொழுது கமலாவே திடுக்கிட்டாள். தான் மிக அருமையாகப் பெற்ற அந்த உயிருக்குயிரான காந்திஜியின் கையெழுத்தையே வேண்டுமென்று விமலா அடம் பிடிப்பாள் என்று அவள் எதிர்பார்க்கவில்லை. குழந்தை குணம் மாறாத விமலாவுக்கு அந்தக் கையெழுத்தின் அருமையாவது தெரியுமா! தான் இழப்பது மின்றி அதன் அருமை தெரியாத விமலாவிடத்திலே அதைக் கொடுத்துப் பாழாக்குவதா! இதை நினைக்கும்பொழுது பொறுமையே உருவான கமலாவுக்குக்கூடக் கோபமும் ஆத்திரமும் வந்தன. ஆனால் அது ஒரு நிமிஷம்தான். அடுத்த நிமிஷம், 'நான் பெரியவள்; ஆவலை அடக்கிப் பொறுத்துக் கொள்ளும் சக்தி படைத்தவள்; ஆனால் பாவம்! விமலா ஒன்றுமறியாத குழந்தை; ஆவலை அடக்கக் கற்றறியாத பச்சைக் குழந்தை. தன் ஒருத்தியின் ஆதரவையே நம்பி நிற்கும் தாயற்ற குழந்தை' என்ற எண்ணம் எழுந்தது. கமலா தன் ஆவல் முழுவதையும் அடக்கிக்கொண்டு, அந்தக் கண்ணுறை கையெழுத்துள்ள நோட்டைக் கொடுத்து விமலாவைச் சமாதானம் செய்தாள். இதை நேரில் கண்டபோதுதான் சேகருக்குக் கமலாவிடத்திலே மிகுந்த மதிப்பு ஏற்பட்டது.

காலம் மெல்ல ஓடி, யுவப் பருவத்தை இருவரும் அடைந்தபொழுது, தேசாபிமானம் அவர்கள் உள்ளத்திலே ஒரு பெரும் ஆறாகவே ஓடத் தொடங்கியது.

கமலா ஆசையோடு சேர்ந்த பி. ஏ. படிப்பை மறந்தாள். ஏன்; பசி, தாகம், சுகம் யாவற்றையும் மறந்து 'அஹிம்ஸா மூர்த்தியின்' அன்புக் கயிற்றில் பிணைப் புண்டு, ஆனந்த சுதந்திரத்தை அடைய அல்லும் பகலும் உழைத்தாள். காந்திஜியின் அஹிம்ஸைக் கொள்கைதான் சுயராஜ்யம் பெறுவதற்குச் சரியான வழி என்பது அவர்கள் அபிப்பிராயம். ஆனால் அவள் அருமை சகோதரி விமலா—'தேச சேவை' என்பதையே இன்னதென்றறியாத விமலா பலாத்காரத்தின் மூலமேதான் சுயராஜ்யம் பெற முடியும் என்று எண்ணினாள். பலாத்கார நடவடிக்கைகளில் ஈடுபட்டு விட்டாள்! இவ்விஷயம் கமலாவுக்குக் கொஞ்சமாவது தெரிந்திருந்தால்தானே!

'மஹாத்மா கைதியாக்கப்பட்டார்' என்பதை அறிந்தவுடன் கொதித் தெழுந்த மக்கள், அராஜக வேலையில் குதித்த பொழுது, ஏதோ ஒருவித வெறியினால் உந்தப்பட்டு விமலாவும் அவளுடைய தோழிகளுடன் பலாத்காரச் செயலில் இறங்கி விட்டாள். நினைத்த காரியத்தைச் செய்தே தீருவது என்ற பிடிவாத குணம் கொண்ட விமலா அவள் மேற்கொண்ட காரியத்தின் பலாபலன்களைப் பற்றிச் சிந்திக்காமலே மிகத் தீவிரமாக பலாத்காரச் செயலில் இறங்கி விட்டாள். அதன் காரணமாகச் சேகர் வீடு ஒரு மருந்துக் கிடங்காக மாறியது. காரியம் மிஞ்சிய பிறகே கமலா தன் அருமைத் தங்கையின் அபாயநிலையை உணர்ந்தாள். அவள் அதை உணரும் பொழுதுதான் அந்த வீட்டைப் போலீஸ் சூழ்ந்து கொண்டு விட்டது.

ஏதோ ஒரு வெறியில் இறங்கி விட்ட விமலா, 'போலீஸ்' 'ஜெயில்' என்றதும் வெல வெலத்துப் போனாள். அவள் முகம் பயத்தினால் வெளுத்து விட்டது. தங்கையின் பரிதாப நிலையைக் கண்ட தமக்கை கதி கலங்கிப் போனாள். அவள் கண்ணெதிரில் அவள் அருமைத் தங்கை கைதியாக்கப் படுவதா! ஜெயில் வாசத்தைத் தாங்கும் மனோ திடம் குழந்தையான அவளுக்கு ஏது!

பல பொதுக் கூட்டங்களில் கமலாவைக் கண்டும், அவள் பேச்சுக்களைக் கேட்டும் இருந்த ஸப் இன்ஸ்பெக்டர், அன்று அவ் வீட்டைச் சோதனை போட்டுப் பல அபாயகரமான மருந்துகளையும், சந்தேகாஸ்பதமான கடிதங்களையும் கைப்பற்றிய பொழுது அவர் கமலாவையே குற்றவாளியாகக் கருதினார். விமலாவின் பெயரையே கேட்டறியாத அவர், விமலாவே நேரில் வந்து தன் குற்றத்தை ஒப்புக் கொண்டிருந்தால் கூட நம்பி யிருக்க மாட்டார். அப்படியிருக்கும் பொழுது தானே குற்றவாளி என்று ஒப்புக் கொண்டு கைதியாகத் தயாராய் முன் வந்த கமலாவையா அவர் விட்டு விடுவார்! அவளைக் கையும் மெய்யுமாகப் பிடித்துக் காரில் ஏற்றிச் சென்று விட்டார். விமலாவோ வியப்பினால் வாயடைத்து நின்று விட்டாள்.

கமலாவும், அவள் கூட்டாளிகளும் சேர்ந்து செய்த சதிச் செயலின் விசாரணை விரைவாக ஆரம்பமாயிற்று. முரண்பட்ட சாட்சியங்களால் விரிந்த விசாரணை சுமார் எட்டு, ஒன்பது மாத காலம் இழுத்துப்



பரித்துக் கொண்டு நின்றது. முடிவில் கமலாவுக்கு இரண்டரை வருஷத்துக்குச் சிறைத் தண்டனை கிடைத்தது.

கமலா சிறைவாசம் முடிந்து வெளி வந்தபோது அவள் மாமா மரணப் படுக்கையில் கிடப்பதைக் கண்டு கலங்கினாள். அதிக சிறைவாசத்தால் சீர்குலைந்து போன கோமளம் உடல்நிலை சீக்கிரமே அந்திம காலத்தை அடைந்து விட்டது.

சிறைவாசத்தாலும், சேர்ந்தாற்போலவே நிகழ்ந்த மாமாவின் மரணத்தாலும், மனமும் உடலும் சோர்ந்துபோன கமலா பல தினங்கள் உடல் நலமின்றிக் கஷ்டப் பட்டாள். அந்நாட்களில் அறைக்கு வெளியில் நடக்கும் எந்த விஷயத்திலும் மனம் செல்லவில்லை. அத்துடன் அவள் அறைக்குள் அடிக்கடி வந்து அவள் உடல் நிலையைக் கவனித்து, வேளா வேளையில் மருந்துகளை வற்புறுத்திக் குடிக்கச் செய்தும், மேலும் வேண்டியவற்றை அன்போடும் ஆதரவோடும் செய்து வந்த அம்மாஞ்சியின் மீதோ, "அக்கா! அக்கா!" என்று பரிந்து குழைந்து உபசரிக்கும் தங்கை விமலாவின் மீதோ அவள் மனத்தில் எவ்விதமான சம்சயமும் எழுந்ததில்லை. ஆயினும் விதியின் விளையாட்டில், விரைவில் அவள் மனத்தை ஆட்டி அலைக்கழிக்கும் நிஷ்டூரம் ஒன்றாக இருந்தது!

நீண்ட நாள் படுக்கையில் கிடந்த பின் தேறி எழுந்த கமலாவுக்கு அன்று மிகவும் உற்சாகமாக இருந்தது. கிரகணத்திலிருந்து விடுபட்ட பௌர்ணமிச் சந்திரனைப் போல அன்று அவள் முகம் மிகவும் பிரகாசமாக இருந்தது. அம்மாஞ்சிக்கு மிகவும் பிடித்தமான பச்சைக் கரைப் பட்டை அணிந்து கொண்ட கமலா, தன் அழகைத் தானே பார்த்துப் பரவசம் கொண்டாள். அவளுக்குத் திடீரென்று தன் அம்மாஞ்சி முன் தோன்றி அவனைத் திகைக்கச் செய்யவேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. ஆகவே, ஆவலே வடிவாக அம்மாஞ்சியின் அறையை நோக்கி நடந்தாள். அம்மாஞ்சியின் அறைக்குள் காலடி எடுத்துவைத்தவள் அப்படியே வாயடைத்து நின்று விட்டாள். அவள் உள்ளத்தில் திடீரென்று ஆயிரம் ஈட்டிகள் ஏக காலத்தில் குத்திவிட்டது போன்ற வலி ஏற்பட்டது. அவள் உடல் குப்பென்று வியர்த்தது. தள்ளாடியவள் தன் இரு கைகளாலும் நிலைப்படியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள்.

இவ்விதம் கமலாவை நிலைகுலையச் செய்த விஷயம் இதுதான்: அறையினுள் ஜம்புநாதன் சாய்மான நாற்காலியில் சாய்ந்திருந்தான், அந்த நாற்காலியின் பின்புறம் நின்று அதே நாற்காலியின்மீது தன் இரு கைகளையும் ஊன்றியவண்ணம், ஜம்புநாதன் படித்துக் கொண்டிருந்த புஸ்தகத்தைத் தானும் பார்த்துக் கொண்டிருந்தாள் விமலா. அந்தி மங்கி வரும் அந்நேரத்தில் தூரத்தில் நின்று அவ்விருவரையும் பார்ப்பவர்களுக்குச் சற்று விபரீதமாகவே தோன்றும். விமலாவைப் பற்றிய எண்ணமே சிறிதுமின்றி விரைந்து அம்மாஞ்சியைச் சந்திக்கும் ஆவலுடன் வந்த கமலாவுக்கு அவர்கள் தனிமையும், அவர்கள் இருந்த விபரீத நிலையும் மிகுந்த அதிர்ச்சியைக் கொடுத்தது. நிச்சலமாய் பிடித்து நின்ற கமலா, கலகலவென்று சிரித்த விமலா — ஜம்புநாதனின் சிரிப்பொலி கேட்டுச் சீக்கிரத்தில் தன்னைச் சமாளித்துக் கொண்டு, சிறிதும் தாமதிக்காமல் வேகமாகத் தன் அறைக்குத் திரும்பினாள்.

சுருட்டி வைக்கப்பட்ட படுக்கையின் மீது வந்து பொத்தென்று விழுந்த கமலா, தன் அகன்ற விழிகளை இறுக மூடிக்கொண்டாள். அப்போது அவள் முன்னுள்ள உலகம் இருண்டது; உள்ளம் இருண்டது; அவள் வாழ்வே இருண்டு முடிந்துவிட்டது போல் தோன்றியது. அவள் களங்கமற்ற கண்களினின்றும் கண்ணீர் பிரவாகமாய்ப் பெருகி ஓடியது.

துக்கம், கோபம், ஆத்திரம் முதலிய உணர்ச்சிகளால் உலுக்கப்பட்ட கமலாவுக்குத் தங்கை விமலாவின்மீது எல்லையில்லாத ஆத்திரம் வந்தது. எவளை அவள் தன் உயிருக்கும் மேலாகக் கருதி வந்தாளோ, அவளே இன்று அவளுடைய நல் வாழ்வுக்கு முடிவு கட்டி விட்டாள்! இதை எண்ண எண்ண அவள் மனம் எரிமலையாகவே ஆகி விட்டது. அவள் உயிருக்குயிரான தங்கையே—அவள் அரவணைப்பில் வளர்ந்த தங்கையே அவள் வாழ்வுக்குப் போட்டியாகச் சத்துருவானாள். அப்பப்பா! என்ன கொடுமை! உள்ளக் குமுறலில் அகப்பட்ட அவள், "பாதகி! உன்னைச் சுட்டுக் கொல்லத்தான் வேண்டும். துரோகி! உன்னைச் சுட்டுக் கொன்றாலும் பாபம் இல்லை" என்று முணுமுணுத்துக் கொண்டாள். அவளுடைய உள்ளத்தின் எதிரொலியே போன்று, "மஹாத்மா சுட்டுக் கொல்லப்பட்டார்!" என்று ரேடியோ அலறியது:—"ஐயோ! இதுவென்ன!" என்று துடிதுடித்து எழுந்தாள் கமலா. அவள் காதுகளையே அவளால் நம்ப முடியவில்லை. ஆயினும்



திரும்பத் திரும்பக் கேட்ட அக் கொடும் செய்தியை, பாதகச் செயலை அவள் நம்பித்தான் வேண்டியிருந்தது.

உலகமே ஸ்தம்பித்து நின்ற அவ்வேளையில் அவ்வீட்டின் வேலைக்காரி அலறி அடித்துக் கொண்டு மேலே ஓடிவந்தவள், "அம்மா! குடி முழுகிப் போச்சு! விமலா அம்மாவைப் பாவி யாரோ கத்தியால் குத்தி விட்டானும்!" என்றாள். "ஐயோ!" என்று அலறிய கமலா சில நிமிஷங்கள் பேசும் சக்தியையே இழந்து விட்டாள். பின் அவள் வேலைக்காரியைப் பிடித்து உலுக்கி, "என்னடி சொல்கிறாய் நீ" என்று கேட்டவள் வேலைக்காரியின் பதிலை எதிர்பாராமலே வெளியே ஓடினாள்.

'எப்படி ஓடினாள்; எப்படித் தன் அருமைத் தங்கை கிடக்குமிடத்தை அடைந்தாள்' என்பதொன்றும் கமலாவுக்கே தெரியாது. ரத்த வெள்ளத்திலே கிடந்த தன் தங்கையைக் கண்டபோது அவள் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. அவள் உள்ளமே ஆயிரம், பதினாயிரம் கருந் தேள்களாக மாறி அவள் உடலைச் சல்லடைக் கண்போலக் கொட்டித் துளைத்தது.

ஆஸ்பத்திரியில் விமலாவைப் பரிசோதித்த டாக்டர் கவலையோடு, "மிகுந்த ரத்தம் வெளிப்பட்டு விட்டதால் பிழைப்பது கஷ்டம்தான்" என்று சொல்லி விட்டார். கமலா துடித்தாள்.

தன் சாபமே விமலாவை இக்கதிக்குக் கொண்டு வந்து விட்டதோ என்றும் எண்ணம் மேலோங்கி கமலாவை சித்திரவதை செய்தது. அதனால் அவள் டாக்டரை வெகுவாக வேண்டினாள். என்ன செய்தாவது விமலாவைப் பிழைப்பிக்கும்படி மன்றாடினாள். அதன் மேல் ஆலோசனை செய்த டாக்டர் சொன்னார்: "உன் சகோதரியின் உடலில் உன் ரத்தத்தை அளவுக்கு அதிகமாகவே ஏற்றினால் ஒரு வேளை அவள் பிழைக்கலாம்; ஆனால் அதன் பிறகு நீ ஆறுமாத காலம் வரை அதிக ஜாக்கிரதையாக ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டும். இல்லை என்றால் உன் உயிருக்கே அபாயமாக முடிந்துவிடும்" என்று தயக்கத்தோடு கூறினார்.

கமலா கணம் கூடத் தயங்கவில்லை. மேற்கொண்டு டாக்டரின் ஆலோசனைக்கும் அவகாசம் அளிக்காமல் அவரை வற்புறுத்தித் தங்கை விமலாவின் உயிரை மீட்கத் தன் ரத்தத்தின் பெரும் பகுதியைத் தாராளமாய்க் கொடுத்து விட்டாள்.

எங்கோ முக்கிய காரியமாகச் சென்றிருந்த ஜம்புநாதன் இவையாவும் நடந்து முடிந்த பின்னரே பதறிக்கொண்டு ஓடி வந்தான். பல மாதங்கள் கோபவசப்பட்டதால் பலஹீனப்பட்டுள்ள கமலாவின் ரத்தம் பெரும் அளவு எடுக்கப்பட்டு விட்டது என்பதை அறிந்தபோது அவன் திடுக்கிட்டான். மிகுந்த மனவருத்தத்தோடு அவன் கமலாவின் முகத்தைப் பார்க்கத் திரும்பியபொழுது, கமலா மிகுந்த வெறுப்புடன் தன் முகத்தை அவன் பக்கமிருந்து 'சட்'டென்று திருப்பிக் கொண்டு விட்டாள்.

கமலாவின் இந்த மாறுதல் அவனுக்குப் புரியாத புதிராக இருந்தது. அது அவள் உயிருக்கே அபாயமாக முடியும் என்பதை எண்ணிய ஜம்புநாதன் மிகுந்த குழப்பமும், பரபரப்பும் கொண்டான்.

அன்று கமலா, அலங்கிய தலையோடும், அசட்டையாக அணிந்த ஆடையோடும்

அவசரமாக வெளிப் புறப்பட்டுக் கொண்டிருந்தாள். அப்போது அங்கு வந்த ஜம்புநாதன் கனிந்த குரலில், "கமலா, இதெல்லாம் என்ன! மிகுந்த ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டிய நீ இப்படி ஓடி ஓடி அலைந்தால்...!" என்று கேட்டவன் அதிக ஆவலோடு அவள் முகத்தைப் பார்த்தான்.

எதிர்பாராதவிதமாய், நேருக்கு நேராகச் சந்திக்க நேர்ந்ததும் கமலா சற்றுத் தடுமாறினாள். மிகவும் மெதுவாக மென்று விழுங்கியபடி, "இன்று 'அஸ்தி' கரைக்கும் தினமல்லவா! நான் அவசியம் போக வேண்டும்" என்றாள் தலைகவிழ்ந்தபடியே.

ஜம்புநாதன் அன்பும் ஆர்வமும் தொனிக்க, "ஆம்; அவசியம் போகலாம். நானே உன்னைக் காரில் அழைத்துச் செல்கிறேன். ஆனால் கமலா, நீ கூட்டத்தில் போவதோ, வேலை செய்வதோ கூடாது. இப்படியே நீ அலைந்தால் அது உன் உயிருக்கே அபாயம். ஆகையால் கமலா, நீ விரும்பாவிட்டாலும் கொஞ்சநாள் என் பராமரிப்பில் இருந்தேயாக வேண்டும்; தெரிந்ததா!" என்று பரிவோடும் உரிமையோடும் சொன்னான்.

கவிழ்ந்திருந்த தலையை நிமிர்த்தினாள் கமலா. கோபத்தினால் முகம் சிவக்க, உதடுகள் துடிக்க, "அப்பப்பா! என் உயிரைப் பற்றி எத்தனை அக்கறை! உங்கள் வார்த்தைகளைக் கேட்டு நான் மலைத்தும் நான் மலைபேறி விட்டது. நான் போக வழி விடுங்கள்" என்றாள்.

திடுக்கிட்டுப்போன ஜம்புநாதன் சிறிது நேரம் எதுவுமே பேச முடியாமல் தவித்தான். பிறகு துன்பத்தால் கரகரத்த குரலில், "கமலா, நீதானா இத்தகைய கடுஞ் சொற்களைப் பேசுவது! அதுவும்...... கமலா நீ என்ன வேண்டுமோ பேசு, ஆனால் இப்பொழுது நீ உள்ள நிலையில் உன்னை வெளியில் போகவிட்டும் அனுமதிக்க முடியாது......" என்றான். மேலும் அவன் வார்த்தைகளைத் தொடருமுன் குறுக்கிட்ட கமலா, "நீங்கள் யார் என்னை அனுமதிக்காமலிருக்க! நான் போகத்தான் போவேன்" என்று கூறி விரைந்து படியிறங்கிப் போய் விட்டாள்.

கற்சிலை போல் நின்று விட்ட ஜம்புநாதனுக்குக் கணநேரம் ஒன்றுமே விளங்கவில்லை. சிறிது நேரம் சிந்தித்த போது அவனுக்குச் சிறு சந்தேகம் எழுந்தது, அது வர வர விரிவடையத் தொடங்கியது. எப்படியாவது அவனுடைய அந்தச் சந்தேகத்தைப் போக்கியே தீர வேண்டும் என்று அவன் தீர்மானித்தான்.

கமலா கரைத்துச் சேர்ந்துப் போய் வீட்டுக்குத் திரும்பினாள். அதிக உணர்ச்சிவசப்பட்டுவிட்டதால் ஓய்ந்து போன அவள் உடலும் ஏதோ ஒரு ஆதரவைத் தேடித் தவித்து ஏங்கியது. உள்ளத்தைக் குடைந்து வேதனைப் படுத்தி வந்த எண்ணங்களைப் பேச்சாக வெளியே கொட்டி விட்டதைச் சற்று அமைதியுடன் சிந்தித்துப் பார்த்த பொழுது, ஏனோ அவள் மீதே அவளுக்குக் கோபம் வந்தது. அம்மாஞ்சியிடம் தான் நடந்து கொண்ட முறை எவ்வளவு தப்பானது என்று எண்ணிய அவள் அவனிடம் மன்னிப்புக் கேட்க அவனுடைய அறையை நோக்கி ஓடினாள்.

விமலா அழுது விம்மியபடி ஏதோ சொல்லிக் கொண்டிருப்பது அவள் காதில் விழுந்தது. அவள் தூணைப் பிடித்துக் கொண்டு அவர்கள் பேச்சைக் காது கொடுத்துக் கவனமாகக் கேட்டாள்.

"அம்மாஞ்சி, நான் என்ன செய்ய! எவ்வளவு முயன்றும்...என்னால்...அது முடியவில்லை." அதை அடுத்து ஜம்புவின் குரல் மிகக் கடுமையாகக் கேட்டது:—"வீண் பிடிவாதம் விமலா! உன் பிடிவாதத்துக்கும் ஒரு வரம்பு வேண்டும்; இன்று உன் பிடிவாதம் வரம்பு மீறிப் போகிறது. இனியும் என்னால் பொறுக்க முடியாது. நன்றாக யோசித்துப்பார்! அன்று முதல் இன்று வரை அவள் உன் பொருட்டு அளவற்ற கஷ்டங்களை ஏற்று அனுபவித்தாள்! இன்றும் உனக்காகவே தன் உயிரையும் தியாகம் செய்யத் தீர்மானித்து விட்டாள். இதை என்னால் தாங்க முடியவில்லை. விமலா இது வரை நான் உனக்குச் செய்த உபதேசமெல்லாம் வீண்தானா? மீண்டும் கடைசி முறையாகச் சொல்லுகிறேன். நீ உன் மனத்தை மாற்றிக் கொள்ளத்தான் வேண்டும். கமலாதான் என் உயிர், உடல் பொருள், ஆவி அனைத்தும். அளவற்ற கஷ்டங்களை அனுபவித்துள்ள அவளை இனிச் சந்தோஷமாக வைப்பதே என் வாழ்வின் லட்சியம். இனி என் வாழ்வின் ஒளியும் அவள்தான். கமலாதான் என் கண்கள்; கமலாதான் என் இன்பம், இனி எனக்கு எல்லாம் அவள்தான்; நீ அல்ல" என்று ஆவேசம் வந்தவன்போல் படபடவென்று கூறி முடித்தான்.

கமலாவின் வாயினின்றும், "ஆ; என் அம்மாஞ்சி!" என்ற சொல் அதிகச் சப்தத்துடன் வெளி வந்தது. அதை அடுத்துத் தூணைப் பற்றியிருந்த அவள் கரம் நழுவியது. அடியற்ற மரம் போல் அப்படியே கீழே சாய்ந்து விட்டாள்.

பலமான அடியினால் பிரக்ஞை இழந்து விட்ட கமலாவைப் பரிசோதனை செய்த டாக்டர், "இன்னும் ஒரு மணி நேரத்துக்குப் பிறகு சுய உணர்வு வரலாம். ஆனால், அதன் பிறகு அதிக நேரம் உயிர் உடலில் தங்காது" என்று உறுதியாகச் சொல்லி விட்டார்.

டாக்டர் சொன்னபடி ஒரு மணி நேரத்துக்குப் பிறகு கமலாவுக்கு சுய பிரக்ஞை திரும்பியது. கண்களைத் திறந்து ஆவலோடு நோக்கிய கமலா அருகில் நின்ற ஜம்புநாதனை அன்போடு பார்த்துச் சொன்னாள்:—"அம்மாஞ்சி! தவறாக நினைத்துத் தங்கள் மனத்தைப் புண்படுத்தி விட்டேன். இனி அதை எண்ணிப் பயனில்லை. அம்மாஞ்சி, இன்னும் சிறிது நேரமே உயிருடன் இருக்கப் போகிற என் விருப்பத்தை நிறைவேற்றுவதாகச் சொல்வீர்களா! அறியாப் பேதைப் பெண் விமலாவை மணந்து, அவளுடன் வாழ்க்கை நடத்துவதாக வாக்களிப்பீர்களா! இனி அவளுக்கு எல்லா ஆதரவும் தாங்கள்தான். என் கண்ணான அவளை இனி உங்கள் கண்ணாக ஏற்றுக் கொள்வீர்களா!" என்று கேட்டவள் விமலாவின் கையைத் தன் கையில் எடுத்துக்கொண்டு அம்மாஞ்சியின் முகத்தை ஆவலோடு பார்த்தாள்.

அமைதியாக நின்று அவள் வார்த்தைகளைக் கேட்ட ஜம்புநாதன் அன்பு பொங்கும் குரலில், "கமலா! உன் விருப்பப்படி விமலாவை மணந்து கொள்ளுகிறேன். ஆனால் கமலா...அன்றும், இன்றும், இனி என்றுமே என் கண்மணி நீதான்...!" என்று கூறினான்.

இதைக் கேட்டதும், கமலாவின் கண்களிலே தோன்றிய அற்புத ஒளி, அவள் முகத்திலே தோன்றிய மலர்ச்சி, மகிழ்ச்சி, உதட்டிலே மலர்ந்த உணர்ச்சிப் புன்னகை இவைகளை வர்ணிக்க வார்த்தைகள் இல்லை. அழகி கமலா சட்டெனத் தன் கைகளை எடுத்து அவன் தோள் மீது வைத்துக் கொண்டு, "ஆ! நானே உங்கள் கண்மணி! அம்மாஞ்சி, நானே பாக்கியசாலி! உங்கள் கண்ணான நானே பாக்கியசாலி!" என்றாள். கணீரென்று ஒலித்தது அவள் குரல். அதை அடுத்து அவன் தோள்மீது இருந்த அவள் கரம் துவண்டது.

மீளாத ஆனந்த நித்திரையில் ஆழ்ந்து விட்ட கமலாவின் களை சொட்டும் கம்பீரமான முகத்தையே பார்த்துக் கொண்டிருந்த ஜம்புநாதனுக்கு, அவள் முகத்திலே தோன்றிய அந்த ஆனந்தமே பெரும் ஆறுதலாக இருந்தது. தங்கைபால் உள்ள பாசத்தையும் வென்று வெளிப்பட்ட கமலாவின் கடைசி வார்த்தைகளும் அவள் கண்களில் மிதந்த அற்புத ஒளியும் அவனுக்கு மனச் சாந்தியையும் மிகுந்த ஆறுதலையும் அளித்தன.




கே.பி.கேஸ்டர் ஆயில்
20 வருஷ ஆராய்ச்சியின் பயன்
KP
உயர்தரமான ஆமணக்கு விதை
களைக் கொண்டு ரசாயன முறை
யில் காய்ச்சிப் பக்குவம் செய்
யப்பட்ட சுத்தமான ஆமணக்
கெண்ணை. பாட்டில்களிலும்
டின்களிலும் அனுப்புகிறோம்.
டிரேட் மார்க்கை
கவனித்து வாங்கவும்
CASTOR OIL
கே.பி.கேஸ்டர் ஆயில் ஒர்க்ஸ்..
Phone. 127. ஆர். எஸ். புரம் கோயமுத்தூர் Grams. KEPEECY


62 ஆண்டுகளாக நூற்கும் கலையில் வல்லவர்கள்!
C. S & W
COIMBATORE.
SPINNING &
WEAVING
CO LTD.
தீபாவளி
வாழ்த்துகள்
நூல்கள் :
20's, 30's, 60's, 80's & 100's
கதிர்கள் :
72,832
தறிகள் :
407
தயாரிப்புகள் :
லாங்க்ளாத், டவல்கள், வேஷ்டிகள்
மற்றும் ஹோசரி சரக்குகள்
கோயமுத்தூர் ஸ்பின்னிங் & வீவிங் கம்பெனி லிட். கோயமுத்தூர்.
ஏஜண்டஸ் & செக்ரெட்டரீஸ்: R.G.S. நாயுடு & கோ. தந்தி: "ஸ்பின்வீவ்"

# ஸ்ரீ ரங்க விலாஸ் ஜின்னிங் ஸ்பின்னிங் & வீவிங் மில்ஸ் லிட்.

(ஸ்தாபிதம்: 1922ல்)

டெலிபோன் நெ. 17] **கோயமுத்தூர்** [தந்தி: "ரங்கவிலாஸ்"

ரிஜிஸ்தரான ஆபீஸ்: பூளைமேடு, கோயமுத்தூர்

★

அதிகாரம் பெற்ற மூலதனம் ரூ. 16,00,000

வசூல் செய்யப்பட்ட மூலதனம் ரூ. 15,02,500

வேலை செய்யும் மொத்த கதிர்கள்: 30,000 — தறிகள்: 80

★

2-ம் நெம்பர் முதல் 80-ம் நெம்பர் வரை உயர்தர நூலும், ஜவுளி நிஜககள் காடாவும், வேஷ்டிகளும் தயார் செய்யப்படுகின்றன. இன்னும் அதிக யந்திரங்களை வைப்பதற்குக் கட்டிடங்கள் தயாராயிருக்கின்றன.

இந்திய மூலதனம். இந்தியக் கைத்தொழிலாகிய
இந்த சுதேசித் தொழிலை ஆதரியுங்கள்

மானேஜிங் ஏஜண்ட்ஸ் & பேங்கர்ஸ்:

**பி. எஸ். கோவிந்தசாமி நாயுடு & சன்ஸ்**

பூளைமேடு :: கோயமுத்தூர்



எமது கம்பெனியின் வாடிக்கைக்காரர்களுக்கும்
நண்பர்களுக்கும் ஆதரவாளர்களுக்கும் எங்கள் மனமார்ந்த

# தீபாவளி நல் வாழ்த்துக்கள்!

★ ★





# M. C. அப்பாசாமி செட்டி & கோ.,

கலர் பிளாக் தயாரிப்பதில் நிபுணர்கள்:

14, ஜோன்ஸ் தெரு, மண்ணடி, மதராஸ் — போன்: 3202


பாப்பா மலர்
ஹாஸ்ய வெடிகள்
பெண்: ஐந்நூறு ரூபாய்க்கு வெடிகள், நூறு ரூபாய்க்கு வாணங்கள் எல்லாம் வாங்கிக் கொண்டு இன்னும் ஏதாவது வாங்கலாம் என்று போனேன், அம்மா கெடுத்து விட்டாடா!
பையன்: ஏன்? அம்மா வாங்கினது போதும் என்றாளா?
பெண்: இல்லையடா! என்னைத் தூக்கத்திலிருந்து எழுப்பி விட்டாடா!
தங்கை: அண்ணு! நீ எவ்வளவு பெரியவன்! தம்பியை அடிக்கிறாயே!
அண்ணு: பாரடி! எனக்கு வைத்திருந்த வாணங்களை அவன் கொளுத்தி விட்டான்!
தங்கை: பயலே! உன்னை விட்டேனு பார்...!
"ராமு, ஆப்பிரிக்கா எங்கேடா இருக்கிறது?"
"பார்க்கவில்லை ஸார்! சற்றுமுன் இவ் சீனு யாருக்கும் தெரியாமல் மடியில் எதையோ செருகிக் கொண்டான். அவனைக் கேளுங்கள்."
"நான் குழந்தையாக இருந்த போது வெடி வெடிச்சு, காயம் பட்டுப் பிழைக்க மாட்டாமல் கிடந்தேனும்!"
"அப்புறம் நீ பிழைத்தாயோ?"
"ஞாபகம் இல்லை! அம்மாவைக் கேட்கணும்."



# பொன்னனின்



பொன்னனுக்குப் புல்லாங்குழல் வாசிப்பதில் அசாத்தியப் பிரியம். அவன் எப்பொழுதும் புல்லாங் குழலும் கையுமாகத்தான் இருப்பான். அவன் புல்லாங் குழல் வாசிக்கத் தொடங்கிவிட்டால், மிருகங்கள் எல்லாம் மந்திர வசப்பட்டவை போல் அவனருகில் வந்து சூழ்ந்து நின்று விடும். மரம், மட்டைகள்கூட அவன் வாசிப்பில் மதிமயங்கி ஆடாமல் அசையாமல் நிற்கும் என்றால், அவன் வாசிப்பைப் பற்றி அதிகம் சொல்லுவானேன்?

திடீரென்று ஒரு நாள் பொன்னனின் அந்தப் புல்லாங்குழல் மாயமாக மறைந்து விட்டது. அவ்வளவுதான்! அவன் பைத்தியம் பிடித்தவன் போல் அங்கு மிங்கும் ஓடினான். "ஐயோ! என் புல்லாங் குழல் எங்கே? எங்கே என் புல்லாங்குழல்!" என்று ஏங்கினான், அலறினான், அழுதான், கீழே விழுந்து புரண்டான்.

பொன்னனின் பிரலாபத்தைக் கேட்டு மிருகங்கள் ஓடோடியும் வந்தன. அவன் வாசிப்பில் மதி மயங்கிய மிருகங்கள் அல்லவா? அவற்றால் ஓடி வராமல் எப்படி இருக்க முடியும்? அவனுடைய பரிதாப நிலையைக் கண்டு ஒன்றின் முகத்தை மற்றொன்று பார்த்துக் கொண்டன. அவன் கையில் புல்லாங்குழல் இராமற் போகவே, அவனது துக்கத்துக்குக் காரணம் அதுதான் என்பதை ஊகித்தன. அடுத்த நிமிஷம் அவை ஏதோ வைத்த சாமானை எடுத்து வரப் போவது போல் மூலைக்கு ஒன்றாக ஓடின. சில நிமிஷங்களுக்கெல்லாம் புலி எங்கிருந்தோ தன்னுடைய வாயில் ஒரு துப்பாக்கியைக் கௌவிக்கொண்டு வந்து பொன்னனின் எதிரில் வைத்தது.

"ஏ பொன்னு! நீ கவலைப்படாதே. இந்தத் துப்பாக்கி முனையும் புல்லாங்குழலைப் போலவே இருக்கிறது. இதை நீ புல்லாங் குழலுக்குப் பதிலாக உபயோகித்துக் கொள்" என்றது.

பிறகு ஒரு மாடு பழைய ஊதுகுழல் ஒன்றை வாயில் கௌவிக் கொண்டு பொன்னனின் எதிரில் கொண்டு வந்து பயபக்தியுடன் வைத்தது.

"இந்த மூங்கிலை உன் புல்லாங் குழலாக வைத்துக்கொள்!" என்று சொல்லி ஒரு பெரிய மூங்கிலைக் கொண்டு வந்து மிகவும் அன்போடு கொடுத்தது ஒரு பெரிய யானை.

பாப்பு ஒன்று டாப்பாட்டி ஊதும் மகுடியை எடுத்துக்கொண்டு வந்து கொடுத்தது.

ராஜி

# புல்லாங்குழல்

வௌவால் ஒன்று கோவிலில் உபயோகப்படுத்தும் ஒரு சிறிய நாதஸ்வரத்தைக் கொண்டு வந்து பொன்னனின் எதிரில் தொப் பென்று போட்டுவிட்டுப் பறந்தது.

அடுப்பு ஊதுவதற்காக வைத்திருந்த ஒரு பித்தளை ஊதுகுழாயைப் பூனை கௌவிக் கொண்டு ஓடோடியும் வந்தது. ஒரு குரங்கு தன்னை ஆட்டி வைக்கும் எஜமானனின் கைப்பிரம்பை எடுத்துக் கொண்டு வந்து கொடுத்தது.

இவ்வாறாகச் சிறிது நேரத்துக்குள் பொன்னனின் எதிரில் பல விதமான ஊது குழல்களும், வாத்தியங்களும், பிரம்புகளும் குவிக்கப் பட்டிருந்தன. பொன்னன் அவைகளை ஏறெடுத்தும் பார்க்காமல் முக வாட்டத்துடன் உட்கார்ந்திருந்தான். பொன்னனைச் சுற்றி மிருகங்களும் பறவைகளும் சூழ்ந்து கொண்டு வருத்தத்துடன் நின்றன. இப்படியாக ஒரு வாரத்துக்குமேல் ஓடி மறைந்து விட்டது.

* * *

பொன்னன் இருந்த காட்டிலேயே காளி என்றும், கடலை என்றும் இரண்டு வேடச் சிறுவர்கள் இருந்தார்கள். அவர்கள் இருவரும் சகோதரர்கள். விஷமத்தில் சூரர்கள். யாருக்காவது ஏதாவது தொந்தரவு கொடுத்துக் கொண்டே இருப்பார்கள். எனவே, அவர்கள் சாதுவான பொன்னனைச் சும்மா விடுவார்களா? பொன்னன் புல்லாங்குழல் ஊதுவதும், காட்டிலுள்ள மிருகங்களும் பறவைகளும் பொன்னனிடம் அன்பாக இருப்பதும் அவர்களுக்குப் பிடிக்கவில்லை. 'இந்தப் பொன்னனின் கொட்டத்தை அடக்கி மிருகங்களையும் பறவைகளையும் நம் பக்கம் இழுத்துக் கொள்ள வேண்டும்' என்று தீர்மானித்தார்கள். அதற்குப் பொன்னனின் புல்லாங்குழலை அவனிடமிருந்து எடுத்து வருவது என்று முடிவு செய்தார்கள்.



அதன்படியே அன்று இரவு பொன்னன் தூங்கும் பொழுது காளியும் கடலையும் அங்கு சென்று அவனுக்குத் தெரியாமல் புல்லாங்குழலை எடுத்து வந்து விட்டார்கள். மறுநாள் காலையில் அவர்கள் தோட்டப் பக்கம் வந்தார்கள். கடலை புல்லாங்குழலை வாசிக்க ஆரம்பித்தான். அதிலிருந்து சப்தமே வரவில்லை.

பிறகு காளியும் அதை வாங்கி வாசிக்க முற்பட்டான். அவன் முயற்சியும் வீணாயிற்று.

அந்தச் சமயத்தில் இரண்டு கிளிகள் அந்தப் பக்கம் வந்தன. "இந்தப் புல்லாங் குழல் நமது பொன்னனின் புல்லாங் குழல் போல் இருக்கிறதே! இதை நாம் இப்பொழுதே எடுத்துக் கொண்டு பொன்னனிடம் சேர்ப்பித்து விடுவோம்" என்றது ஒரு கிளி. உடனே இரண்டு கிளிகளும் காளியின் முகத்தின் அருகில் வந்து படபட வென்று தங்கள் சிறகுகளை அடித்துப் புல்லாங் குழலைத் தூக்கிப் போக முயற்சித்தன. காளி பொல்லாதவன் அல்லவா? அக் கிளிகளை விரட்டி விட்டான்.

"இவர்கள் வைத்துக் கொண்டிருப்பது பொன்னனுடைய புல்லாங்குழல் அல்லவா?" என்று தென்னை மரத்திலிருந்த இரண்டு மூன்று குரங்குகள் தேங்காய்களைப் பறித்து, 'தடால்' 'தடால்' என்று காளிக்கு அருகிலும் கடலைக்கு அருகிலும் போட்டன. அவ்விருவரும் பயந்து அங்கிருந்து ஓட்டம் பிடித்தார்கள்.

'நாம் தோட்டத்தில் புல்லாங் குழலை வைத்துக் கொண்டு இருப்பதால்தானே பொன்னனுடைய சிநேகிதர்களான குரங்குகளும், கிளிகளும் நம்மைத் தொந்தரவு செய்கின்றன? நம் வீட்டுக்குள்ளேயே வைத்துக் கொண்டால் இவை என்ன செய்ய முடியும்?' என்று கடலையும் காளியும் தங்கள் வீட்டுக்குள் சென்றார்கள்.

அவர்கள் வீட்டில் ஒரு பெரிய மரப் பெட்டி இருந்தது. பொன்னனின் புல்லாங்குழலை அந்த மரப் பெட்டியில் வைத்துப் பூட்டலாம் என்று நினைத்து அவ்விருவரும்







பெட்டியைத் திறந்தார்கள். அப்பொழுது அந்தப் பெட்டியிலிருந்து ஒரு கொழுத்த எலி துள்ளிக் குதித்து வெளியே ஓடியது.

"ஓஹோ! பொன்னனின் புல்லாங்குழலை அங்கேயா வைக்கிறீர்கள்? பெட்டியை என் பற்களால் குடைந்து புல்லாங்குழலை எடுத்து அவனிடம் கொடுக்கப் போகிறேன்" என்று அந்த எலி சொல்லுவதுபோல் அவர்களுக்குத் தோன்றியது. ஆகவே, மேலே என்ன செய்வது என்று தோன்றாமல் அந்த இரண்டு சிறுவர்களும் விழித்தனர்.



அப்பொழுது 'டமார்' என்ற பலத்த ஓசையுடன் வெங்காய வெடி ஒன்று அவர்களின் மத்தியில் விழுந்தது. ஒரு நிமிஷத்துக்கெல்லாம் மற்றொரு வெங்காய வெடியும் பலத்த சப்தத்துடன் அவர்களுக்கு எதிரில் வெடித்தது. கறுப்புப் பூனை பட்டாசு வெடிக் கட்டை அடுப்பில் போட்டதால் ஏற்பட்ட பட்டாசு சத்தமும் கேட்டது. காளியும் கடலையும் மேலே பார்த்தார்கள். அவர்களுக்கு நேராக உத்திரத்தில் வெங்காய வெடிகளை வாயில் கௌவிக் கொண்டு எலிகள் உட்கார்ந்திருந்தன. அடாடா! நம்முடைய வெங்காய வெடிகளை அல்லவா இந்த எலிகள் எடுத்து வந்து நம் தலையிலேயே போடப் பார்க்கின்றன என்று அங்கிருந்து எடுத்தார்கள் ஓட்டம்! வீதிக்கு வந்தார்கள்.



"டேய் காளி! போதும், நாம் பொன்னனுடைய புல்லாங்குழலை எடுத்து வந்து கஷ்டப்பட்டது! அதைத் திருப்பிக் கொடுக்கும் வரை இனியும் நம் மீது எலியோ, பூனையோ, மற்ற பிராணிகளோ வஞ்சம் தீர்க்கத் தவறாது என்று தோன்றுகிறது. புல்லாங்குழலை நாம் ஊதிப் பார்த்து விட்டோம். அதிலிருந்து ஒரு சப்தமும் வரவில்லை. ஊதாத புல்லாங்குழல் நமக்கு எதற்கு? அதைக் கொண்டு போய்ப் பொன்னனிடமே கொடுத்து விடலாம்!" என்றான் கடலை.

அடுத்த நிமிஷம் இருவரும் பொன்னன் இருக்குமிடத்துக்கு ஓடினார்கள். "பொன்னா, எங்களை மன்னித்து விடு. இதோ இருக்கிறது, உன் புல்லாங்குழல்! உன் வம்புக்கே நாங்கள் இனி வரமாட்டோம்" என்று சொல்லிப் புல்லாங்குழலைப் பொன்னனிடம் கொடுத்தார்கள். உடனே பொன்னனின் முகம் மலர்ந்தது; அவன் மானைப்போல துள்ளிக் குதித்துத் தன் புல்லாங்குழலை வாங்கிக் கொண்டான்.

அப்பொழுது புல்லாங்குழலிலிருந்து சில கருவண்டுகள் வெளியே 'ரீங்' என்ற சப்தத்துடன் பறந்து காளியையும் கடலையையும் ஒரு முறை சுற்றி வந்து அவர்களை ஏற இறங்கப் பார்த்தன.

"ஏ, சிறுவர்களே! ஏன் எங்கள் பொன்னனின் புல்லாங்குழலை எடுத்தீர்கள்? அதனால்தான் நாங்கள் இந்தப் புல்லாங்குழலின் துவாரங்களை அடைத்துக் கொண்டிருந்தோம். இனிமேல் எங்களுக்கு இங்கு வேலை இல்லை" என்று சொல்லிப் பறந்து சென்றன. மறைந்து போன புல்லாங்குழல் மறுபடியும் கிடைத்ததைக் கண்டதும் பொன்னன் பரவசம் அடைந்தான். மிருகங்களும் பறவைகளும் உற்சாகத்துடன் அவனைச் சூழ்ந்து கொண்டு நின்றன. அவற்றைச் சந்தோஷப் படுத்துவதற்காகப் பொன்னன் புல்லாங்குழலை வாசிக்க ஆரம்பித்தான். கடலையும் காளியும் கூட மெய்மறந்து அந்தக் குழலின் கானத்தைக் கேட்டுக் கொண்டு நின்றார்கள்.




# ஸ்டார் ஆப் இந்தியா

# பென்ஸில்கள்




அகில இந்தியா
ஆவலுடன் உபயோகிக்கும்
லட்சிய பென்சில்
ஸ்டார் ஆப் இந்தியா★

இந்தியாவின்
பெருமை ★

தி மதராஸ் பென்சில் பாக்டரி

3, ஸ்டிரிங்கர் தெரு, மதராஸ் 1

ஸ்தாபகர்



தோ. ஆறுமுக முதலியார்

# சுதேசி டைப் பவுண்டரி

(ஸ்தாபிதம்: 1900)

டெலிபோன்: 8291 தந்தி: "புவனு"

51, குருவப்ப செட்டித் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, மதராஸ்

○●○

தீபாவளி இப் புனித நாளில் நண்பர்களுக்கும் அபிமானிகளுக்கும் எங்களது மனமார்ந்த

**நல் வாழ்த்துக்கள்!**

○●○

இது எந்த தயாரிப்புகட்கும் தலைசிறந்ததும், நீடித்து உழைக்கக் கூடியதும், அழகும், கவர்ச்சியும் பொருந்தியனவாகும். விலையுயர்ந்த நவீன யந்திர சாதனங்களால், மேனாட்டு முறைப்படி தயாரிக்கப்பெற்ற எங்கள் "கணபதி" புதிய தமிழ் எழுத்துக்களும், "ஆறுமுகம்" புதிய தெலுங்கு எழுத்துக்களும் புகழ் சிறந்த பல்லோராலும் பாராட்டப் பெற்றுள்ளன. மேலும் அச்சாபீஸ் நிர்வாகிகள் அனைவருடைய நன்மதிப்பையும் ஆதரவையும் பெற்றவையாகும்.

தமிழ், இந்தி, மலையாளம், தேவநாகரி, தெலுங்கு, கன்னடம், உருது, கிரந்தம், மகாராஷ்டிரம், ஸம்ஸ்கிருதம், ஆங்கிலம், ஆகிய பதினொரு பாஷைகளிலும் எழுத்துக்களும் தயாரிக்கப்படும் பவுண்டரி இது ஒன்றேதான்!

இந்த தீபாவளி மலரில் உபயோகிக்கப்பட்டிருக்கும் எழுத்துக்கள் "கணபதி" புதிய தமிழ் எழுத்துக்களே. இந்த எழுத்துக்களின் உறுதிக்கும், அழகான அமைப்பிற்கும் இந்த தீபாவளி மலரே தக்க சான்று.

○●○

வெளிநாட்டு யந்திரங்களும் நம் நாட்டில் செய்த 'கட்டிங் மிஷின்' 'பெர்ப்பரேடிங்', லெட், ரூல் கட்டர்கள் இவைகள் சப்ளை செய்யப்பெறும். பூரா விவரங்களும் வேண்டுவோருக்கு அனுப்பி வைக்கப்பெறும்.

○●○

பூரா விவரங்களுக்கு எழுதவும்

**தோ. ஆ. சுப்பிரமணிய முதலியார்**

பூரண உரிமையாளர்



# மலர்ந்த உள்ளம்

**கிரிவாசன்**

"நினைக்கக்கூட மனம் கூசுகிறது. வெட்கம்! நேற்றிரவு ஒரு புழுவினும் இழிவாக என்னை நடத்தியது மட்டுமல்ல, குற்ற மனப்பான்மையை என்னிடம் உண்டாக்க வேண்டுமென்று இன்று காலை காப்பிகூடக் குடிக்காமல் ஆபீசுக்குப் போய் விட்டீர்கள்! மிரட்டல்களுக்கு அஞ்ச நான் ஒரு கர்நாடகப் பெண் அல்ல.

நல்லது; மனைவியை அடிமை யென்று கருதும் உங்களிடம் வாழ விரும்பாத நான் செல்கிறேன். ஆம், எப்போதும் என்னை அன்புடன் வரவேற்கத் தயாராக இருக்கும் என் பிறந்தகத்துக்குத்தான். — ராஜம்."

எழுதின கருக்குப்போல ஒரு முறை படித்து விட்டுக் கடிதத்தை ஒரு உறையில் போட்டுக் கணவனது மேஜைமேல் வைத்தாள் ராஜம். கைகள் பாட்டுக்கு இவ் வேலையில் ஈடுபட்டிருந்தனவே தவிர, அவள் மனம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தது.

பிறந்தகம் செல்வதற்கென்று ராஜம் நெடுந் தூரம் பிரயாணம் போக வேண்டுமென்பதில்லை. அவள் தன் கணவனோடு வசித்து வந்த 'கல்யாணு'க்கும், அவளுடைய பெற்றோர்கள் இருந்த 'மாதுங்கா'வுக்கும் மின்சார வண்டியில் செல்ல முக்கால் மணிகூடத் தேவையில்லை.

ராஜத்தின் தந்தை மகாதேவையருக்கு அவள் ஒரே பெண்ணாக இல்லாவிட்டாலும், அவள்தான் 'கடைக் குட்டி' என்பதாலோ என்னவோ அவள்மீது அவருக்கு அளாதியான வாஞ்சை மிகுந்திருந்தது. கல்யாணமான பிறகும் அவள் கணவனோடு தம் வீட்டில் இருக்க வேண்டுமென்பதையே அவர் விரும்பினார்.

இந்த நோக்கத்தோடு வரன் வேட்டையாடிக் கொண்டிருந்த போதுதான் அவர் சந்துருவைப் பார்க்க நேர்ந்தது. சொத்து ஏதும் இல்லாமல், சொந்த வருவாயே உடைய அந்தப் பையன் தம் அந்தஸ்துக்கு ஏற்ற வரன் இல்லை யென்று அவருக்குப் பட்டாலும், ஸ்வர்ண விக்கிரகம் போன்ற அவன் தோற்றமும், தாய் - தந்தை என்ற 'பிடுங்கல்'கள் ஏதுமின்றி அவன் பம்பாயிலேயே வேலை பார்த்து வந்ததும், அவனையே ராஜத்துக்கு ஏற்ற கணவனாகத் தேர்ந்தெடுக்கச் செய்தது.

கல்யாணமான பிறகே மகாதேவையருக்குத் தாம் செய்த தவறு புலப்பட்டது. ஆம், மாமனார் வீட்டு மாப்பிள்ளையாக வாழச் சந்துரு சம்மதிக்கவில்லை. மனைவியுடன் தனிக் குடித்தனம் போவதிலேயே அவன் குறியாக நின்றான்.

பம்பாயின் தீவிர வீட்டுக் கஷ்டங்கூடச் சந்துருவின் மன உறுதியைக் குலைக்க முடியவில்லை. ஒரே பிடியாக நின்று இறுதியில் கல்யாணில் இடம் பிடித்துத் தனிக் குடித்தனமும் வைத்து விட்டான்.

'சகல வசதிகளுடன் கூடிய மாதுங்கா எங்கே! வாழ்க்கைக்கு மிகவும் அவசியமான குழாய், மின்சாரம் முதலிய வசதிகள் கூட அதிகம் பரவாத கல்யாண் எங்கே!' - இந்த உணர்ச்சி சந்துருவின் சிறிய நோக்கத்தையும், அவள்மீது அவனுக்கிருக்கும் எல்லையற்ற அன்பையும் உணர முடியாதபடி ராஜத்தின் உள்ளத்துக்குத் திரையிட்டு விட்டது! அவள் சந்துருவுக்குச் செய்யும் சிசுருஷைகளில் கடமை உணர்ச்சிதான் இருந்ததே தவிர, காதல் உணர்ச்சி சிறிதளவும் இல்லை.

அன்று சந்துரு ஆபீசிலிருந்து வீட்டுக்கு வரும்போது இரவு எட்டு மணி ஆகி விட்டது. வந்ததும் சாப்பிட்டு விட்டுத் தன் அறைக்குச் சென்று, அன்றைய தினப் பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்தான். சமையலறைக் காரியங்களை யெல்லாம் முடித்துக் கொண்டு, அவனருகே வந்து உட்கார்ந்த ராஜம், கையோடு கொண்டு வந்திருந்த காகிதப் பையிலிருந்து புடவை யொன்றை எடுத்து அவன் முன்பு போட்டு, "தீபாவளிக்காக இந்தப் புடவையை எடுத்து வந்திருக்கிறேன். இன்னும் பணம் கொடுக்கவில்லை. உங்களுக்குப் பிடித்திருந்தால்......" என்று இழுத்தாள்.

புடவையைக் கையிலெடுத்துப் பார்த்த சந்துரு யோசனையில் ஆழ்ந்து விட்டான். புடவையின் நிறம் மனைவிக்குப் பொருத்தமாக இருக்குமா, இருக்காதா என்ற ஆலோசனையில் அல்ல. கண்ணைக் கவரும் ரோஜா நிறத்தில், அகன்ற ஜரிகை 'பார்டரு'டன் விளங்கிய அந்தப் பட்டுப் புடவை, ராஜத்தின் வெளுத்த மேனிக்கு மிகவும் ஏற்றதாக இருக்குமென்பது ரஸிகனான சந்துருவுக்குத் தெரியாதா! புடவையின் விலை ரூபாய் நூற்றைம்பது என்று பறை சாற்றிய வண்ணம் ஒரு ஓரத்தில் தொங்கிக் கொண்டிருந்த சீட்டுத்தான் அவனைச் சிந்தனை உலகத்துக்கு விரட்டியது!

"என்ன, பேச்சையே காணோம்!" என்ற மனைவியின் குரல் அவனை மீண்டும் இவ்வுலகுக்கு இழுத்தது.

ஏதோ பிரசங்கத்துக்குத் தயார் செய்து கொள்பவன் போலத் தொண்டையைக் கனைத்துக் கொண்டு, நிமிர்ந்து உட்கார்ந்த சந்துரு, "இதோ பார், ராஜம்! பெட்டி நிறையப் பட்டுப் புடவைகளாகவே அடுக்கி வைத்துக் கொண்டிருக்கிறாயே, அது போதாதா!" என்று கேட்டான்.

"ஆமாம், அதெல்லாம் என் அப்பா வாங்கிக் கொடுத்ததுதானே! தீபாவளிக்கென்று நீங்கள் எனக்கு ஏதும் வாங்கப் போவதில்லையா!" என்றாள்.

"என்ன இப்படிப் பேசுகிறாய், ராஜம்! யார் வாங்கிக் கொடுத்தால் என்ன! நீ தானே எல்லாவற்றையும் கட்டிக்கொள்ளப் போகிறாய்! தீபாவளிக்கென்று நான் வாங்கித் தர வேண்டியதுதான்; இல்லை யென்று சொல்லவில்லை. ஆனால் அது நமக்குக் கட்டாத விலையில் பட்டுப் புடவையாகத்தான் இருக்க வேண்டுமென்று என்ன சாஸ்திரம்! மானமாகக் 'காலந் தள்ளுவதே மிகவும் கஷ்டமாக இருக்கும் போது......"

சந்துரு முடிக்க வில்லை. அதற்குள் குறுக்கிட்ட ராஜம், "ஓஹோ! அப்படியானால் அலை ஓய்ந்து சமுத்திர ஸ்நானம் செய்வது போலத்தான், நீங்கள் எனக்குப் புடவை வாங்கித் தருவது என்பது! இதோ பாருங்கள். இந்த நொண்டிச் சாக்கெல்லாம் எதற்கு! உங்களுக்கு இஷ்டமில்லை; அவ்வளவுதானே!" என்று படபடத்தாள்.

"அட அசடே, இஷ்டமில்லாமலா சொல்லுகிறேன்! நம் குடும்பத்தின் பொருளாதார நிலை உனக்குத் தெரியாதா! வாங்கும் சம்பளம் வீட்டுச் செலவுக்கே போதாமல் திண்டாடுகிறேனே! அப்படியிருக்கும் பொழுது 'ஓஹோ' வென்று நம்மால் ஏதாவது காரியம் செய்ய முடியுமா!" என்று சலித்துக் கொண்டான்.

ராஜம் விடவில்லை. "எல்லாம் தெரிந்துதான் கேட்கிறது. அடேயப்பா! கேவலம் ஒரு புடவை வாங்க வேண்டுமென்று ஆசையுடன் கேட்டதற்கு இவ்வளவு பேச்சா! என் அப்பாவாக இருந்தால்......"

"ஆமாம், ஜவுளிக் கடையை அப்படியே விலைக்கு வாங்கி உன் கண் முன்னே நிறுத்தி விடுவார், இல்லையா! அப்படியானால் உன் அப்பா வீட்டுக்கே போய்ச் சந்தோஷமாகத் தீபாவளி கொண்டாடி விட்டு வா!" என்று இரைந்தான் சந்துரு.

"ஆகட்டும், போகிறேன்; அப்போது நீங்களும் என்னோடு வாருங்கள். உங்களுக்கும் ஜரிகை வேஷ்டி, 'ஸில்க் ஷர்ட்' எல்லாம் கிடைத்து விடும்" என்று கணவனை மடக்கினாள் ராஜம், ஏளனமாக.

சந்துரு அயர்ந்து விட்டான். தன் மனைவியே இப்படித் தன்னைத் தூக்கி யெறிந்து பேசுவாள் என்று அவன் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. மானியான அவன் உள்ளத்தை ராஜத்தின் வார்த்தைகள் சுட்டன. தன் 'கையாலாகாத்தனத்'தையும், பிறந்தகத்தின் செல்வம் கொழிக்கும் நிலையையும் ஒப்பிட்டுத் தன்னை அவள் அவமதித்தது அவனை அடிபட்ட சர்ப்பம்போலாக்கி விட்டது!

"சீ, வாயை மூடு; அதிகப் பிரசங்கி!" என்று பல்லைக் கடித்த வண்ணம், ராஜத்தின் பட்டுப்போன்ற கன்னத்தில் 'சுள்'ளென்று அடித்து விட்டான்.

ரோஷத்துடன் சட்டென்று எழுந்திருந்த ராஜம், சந்துருவைச் சுட்டு விடுவது போல் பார்த்து விட்டுக் கண்ணும் கண்ணீருமாக அங்கிருந்து அகன்றாள்.

அவள் உள்ளம் குமுறியது. துக்கமும், கோபமும் சேர்ந்து அன்றிரவு அவளை நெடுநேரம் தூங்க விடவில்லை.

காலை எழுந்ததும், இயந்திரம்போல் தன் காரியங்களில் ஈடுபட்டிருந்தாள் ராஜம். அப்போது சந்துரு ஆபீசுக்குப் புறப்படுவதை அறிவிக்கும் 'டக், டக்' என்ற பூட்ஸ் ஓசை கேட்கவே, திடுக்கிட்ட அவள் சமையலறையிலிருந்து வெளியே வந்தாள். ஆனால், அவனோ மனைவியின் முகத்தைத் திரும்பிக் கூடப் பார்க்காமல் போய் விட்டான். அவ் வேகத்தில் பிறந்ததுதான் ஆரம்பத்தில் கூறிய கடிதம்!

★

ஸ்டேஷனுக்குப் போவதற்காகத் தயார் செய்து கொண்டிருந்த ராஜத்தின் செவிகளில் யாரோ கதவைத் தட்டும் சத்தம் விழுந்தது. 'புறப்படும் சமயம் பார்த்து யார் வந்திருக்கிறார்கள்!' என்று சலித்துக்கொண்டே சென்று கதவைத் திறந்தாள். தன் சிநேகிதி லக்ஷ்மி அங்கு

நின்று கொண்டிருப்பதைக் கண்டதும், அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது!

ஆச்சரியத்தால் ஒரு கணம் மெய்மறந்து விட்ட ராஜம், சட்டென்று சமாளித்துக் கொண்டு, "எப்போது வந்தாய், லக்ஷ்மிபா?" என்று ஆவலுடன் வினவியவாறே அவளை வரவேற்றாள்.

"எல்லாம் சொல்கிறேன், வா!" என்று உள்ளே நுழைந்தாள் லக்ஷ்மிபா.

லக்ஷ்மிபா என்னும் அம் மராட்டியப் பெண்ணைக் கல்யாணத்துக்கு முடி வந்த பிறகுதான் ராஜத்துக்குத் தெரியும்.

லக்ஷ்மிபாவின் வீட்டில் அவளும், அவள் கணவனும் மட்டுமே இருந்தனர். அவள் புருஷன் பெரிய கம்பெனி ஒன்றில் உயர்ந்த உத்தியோகத்திலிருந்தான். இணை பிரியாத பறவைத் தம்பதிகளைப்போல அவ்விருவரும் வாழ்ந்து வந்தனர்.

பாவம், அத் தம்பதிகளின் குதூகல வாழ்க்கையில் எந்தப் பாவியின் கண் விழுந்ததோ! சில காலமாக அவள் கணவன் நடத்தையில் பெரிதும் மாறுதல் காணப்பட்டது! கெட்ட சகவாசத்தின் விளைவாகச் சூதாட்டம், குதிரைப் பந்தயம் என்று ஆரம்பித்துக் கடைசியில் இரவு நேரங்களில் வீட்டில் கூடத் தங்குவதில்லை.

வாங்கும் சம்பளத்தில் ஒரு பைசாகூடக் குடும்பச் செலவுக்குக் கொடுப்பதில்லை. லக்ஷ்மிபாவின் நகைகள் ஒவ்வொன்றாக மறையத் தொடங்கின. நாளடைவில், தனக்குத் தெரிந்த தையல் தொழிலைக் கொண்டு மானமாகக் காலந்தள்ள முயன்ற அவளுடைய சம்பாத்தியத்திலும் அவன் கைவைக்க ஆரம்பித்து விட்டான். இவ்வளவோடு நின்றாலும் பரவாயில்லையே! ஒரு காரணமுமில்லாமல் கண்ண கடூரமான எவ்வளவு வசைச் சொற்கள்! எத்தனை குரூரமான சித்ரவதை! நான் தவறினாலும், லக்ஷ்மிபா அந்தப் பாதகனின் கொடுமையிலிருந்து தவறுவதே யில்லை.

ஒரு நாள் இரவு பணம் ஏதாவது தரும்படி லக்ஷ்மிபாவைவற்புறுத்தினான். செம்மையடித்த சிறு காசும் கையிலில்லாத அவள் இல்லையென்று சொல்லாமல் என்ன செய்வாள்! மனைவியின் மறுப்பைக் கேட்டுப் பிசாசாக மாறிவிட்ட அம் மூடன், அவளைக் கண் கால் தெரியாமல் அடித்துப் போட்டு விட்டுப் போய் விட்டான். அவள் மிருகத்தனமாகத் தள்ளிய வேகத்தில், தலை சுவரில் மோதி, ரத்தம் ஆறாகப் பெருக, அவள் உணர்விழந்து விட்டாள். விஷயமறிந்த லக்ஷ்மிபாவின் தகப்பனார் கல்யாணுக்கு ஓடோடியும் வந்தார். தரும்பாக மெலிந்திருந்த தன் பெண் தலையில் பெரிய கட்டுப் போடப்பட்டு, பரிதாபமாகக் கிடப்பதைக் கண்டு அவர் பெற்ற மனம் பற்றி எரிந்தது! மறு ரயிலிலேயே பெண்ணை அழைத்துக் கொண்டு தம் ஊராகிய பூனாவுக்குத் திரும்பி விட்டார்.

இவ்வாறு அழைத்துச் செல்லப்பட்ட லக்ஷ்மிபா இனித் தன் கணவன் வீட்டுக்கு ஒரு காலும் திரும்ப மாட்டாள் என்று உறுதியாக முடிவு கட்டியிருந்தாள் ராஜம். அப்படி யிருக்கும்போது, திடீரென்று அவள் முன்பு லக்ஷ்மிபா தோன்றினால், அவள் திடுக்கிடாமல் என்ன செய்வாள்!

★

ராஜத்தின் ஆர்வம் மிகுந்த கேள்விக்குப் பதில் சொன்னாள் லக்ஷ்மிபா :



"அன்றிரவு நான் அடிபட்டு விழுந்தது தான் எனக்குத் தெரியும். என் தந்தை இங்கு வந்தது, அவருடன் ரயிலில் சென்றது, இவையெல்லாம் பூரண நினைவைப் பெறாத எனக்கு, ஏதோ கனவில் நடப்பது போல்தானிருந்தது.

"பூனாவுக்குச் சென்றதும், பெற்றோர்களின் அன்புப் பராமரிப்பிலும், கைராசி மிகுந்த எங்கள் குடும்ப டாக்டரின் கண்காணிப்பிலும் நான் விரைவில் குணம் பெற்று விட்டேன். நாட்கள்தான் சென்று கொண்டிருந்தனவே தவிர, என்னைப் பம்பாய்க்கு அனுப்புவது பற்றி வீட்டில் யாருமே பேச்செடுக்கவில்லை. ஒரு நாள் நானாகவே இதைப் பற்றி ஆரம்பித்த போது, அப்பப்பா! என் தந்தைக்கு வந்த கோபத்தைப் பார்க்க வேண்டுமே! 'அந்தப் பாதகன் என் காலில் விழுந்து கெஞ்சினால்கூட இனி உன்னை அவனிடம் அனுப்ப போவதில்லை; இன்னொரு முறை இதைப்பற்றிய பேச்சை என்னிடம் எடுக்காதே!' என்று கர்ஜித்தார். ஆனால் என் மனம் கேட்கவில்லை. 'என்னதான் என்னை வைதாலும், அடித்தாலும் அவர்தானே என் கணவர்! நான் இங்கேயே இருந்து விட்டால், பின் அவர் நல்ல வழிக்குத் திரும்புவதுதான் எப்படி!' என்று எவ்வளவோ கூறி, என்னைக் கணவரிடம் கொண்டு விடும்படி மன்றாடினேன்; பயனில்லை. என் தந்தை ஒரேயடியாக மறுத்து விட்டார்! கடைசியில் என் மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு யாருக்கும் தெரியாமல் பம்பாய்க்கு ரயிலேறி விட்டேன்!

"எப்பாடு பட்டாவது கணவனைத் திருத்திவிட வேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண்டுதான், தந்தையின் வீரோதத்தைக்கூடப் பாராட்டாது, இங்கு வந்திருக்கிறேன். இம் முயற்சியில் மஹாலக்ஷ்மிதான் கிருபை செய்ய வேண்டும்!"

உணர்ச்சி ததும்பிய குரலில் இவ்வாறு கூறிய லக்ஷ்மிபா, மேலும் சற்று நேரம் தோழியுடன் உரையாடிக் கொண்டிருந்து விட்டு விடை பெற்றுச் சென்றாள்.

★

ராஜத்தின் கண்கள் திறந்தன. பிறந்த வீட்டுப் பெருமையில் மூழ்கி, அழகும் குணமும் அமைந்த கணவனின் அன்பை அலட்சியம் செய்து வரும் தனக்கும், நிலையே உருவாக வந்து கொடுமை புரியும் புருஷனுக்குத் தன்னை அர்ப்பணம் செய்து கொண்டு அதில் சுகம் காணும் லக்ஷ்மிபாவுக்கும் உள்ள வித்தியாசத்தைக் கண்டு அவள் உள்ளம் வெட்கியது. தன்னை நிரபராதியாகக் கருதி யிருந்த ராஜத்துக்கு, கள்ளம் கபடமற்ற சந்துரு அடித்தளத்தை அவனுடைய உள்ளம் வலிக்கத் தான் பேசியது எவ்வளவு பெரிய தவறு என்பது அப்போதுதான் புலனாயிற்று.

அவளையறியாமலே அவள் கைகள், சந்துருவின் மேஜைமேலிருந்த கடிதத்தைக் கிழித்துக் கொண்டிருந்தன! அதுமட்டுமல்ல; அதை எழுதக் காரணமா யிருந்த அந்தப் பட்டுப் புடவையையும் அவள் திருப்பிக் கொடுத்து விட்டாள்!

அன்று மாலை, வாடிச் சோர்ந்த முகத்துடன் வீடு திரும்பிய சந்துரு, உடையை மாற்றிக் கொண்டு, தன் அறையிலேயே தங்கி விட்டான். என்னவென்றறியாத் தயக்கத்துடன் அவ்வறைக்குள் வந்தாள் ராஜம். கையிலிருந்த காப்பிப் பாத்திரத்தை அவள் கீழே வைத்த ஓசை கேட்டு, கண்கள் அலை அவன் பார்த்த அப்பார்வை, 'இதென்ன ஆச்சரியமாக இருக்கிறது!' என்பதுபோலிருந்தது. அப்பார்வையால் தடுமாற்றமடைந்த ராஜம் என்ன பேசுவதென்று தெரியாமல் விழித்தாள். மறு கணமே, ஏதோ ஆவேசம் வந்தவள் போல், சட்டென்று அவன் கரங்களைப் பிடித்துக் கொண்டு, "இதோ பாருங்கள்! என் மனச்சாட்சியை மறைத்துக் கொண்டிருந்த அஹம்பாவத் திரை இன்றுதான் விலகியது. உங்கள் அன்பை அலட்சியம் செய்த இப்பாவியை மன்னிப்பீர்களா!" என்று மேலே ஏதும் பேச முடியாமல், அவன் மடியில் முகத்தைப் புதைத்தவாறு விம்மினாள்.

ராஜத்தின் எதிர்பாராத இச்செய்கை சந்துருவுக்குச் சற்று வியப்பாகவே இருந்ததென்றாலும், அவன் தன் இயற்கையான சாமர்த்தியத்தோடு, "அட அசடே! எதற்காக இப்படி அழுகிறாய்! உன் மேல் கோபமிருந்தால் தானே நான் உன்னை மன்னிப்பதற்கு! பிறந்த வீட்டில் சீரும் சிறப்புமாக வளர்ந்த உனக்கு, அம்மாதிரி சுக வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகள் அளிக்க முடியாத என் மேல் வெறுப்புத் தோன்றுவது சகஜந்தானே! ஆனால் குடும்ப நிலைக்குத் தக்கவாறு, நாளடைவில் உன் மனம் மாறி விடும் என்றுதான் நான் எதிர்பார்த்தேன். அவ்வாறு நான் நினைத்தது வீணாகவில்லை" என்று புன்னகையுடன் கூறி மடியில் தலை கவிழ்ந்திருந்த மனைவியைத் தன் பக்கம் அணைத்துக் கொண்டான்.

★

அன்று தீபாவளி. காலை 'கங்கா ஸ்நானம்' ஆனதும், ரோஜா வர்ணப் பட்டுப் புடவை இடையில் துலங்க, மகிழ்ச்சி பொங்கும் மனத்துடன், கணவனை நமஸ்கரித்து எழுந்தாள் ராஜம். ஆம், காரியாலயத்தில் ஒவ்வொரு தீபாவளி சமயத்திலும் கொடுக்கப்படுவதை முன்னிட்டு எதிர்பாராத விதமாகக் கிடைத்த 'போனஸை'க் கொண்டு அந்தப் புடவையையே எடுத்திருந்தான் சந்துரு. "கையிலிருந்தால் வஞ்சனையில்லை" என்று சொல்லுவது போல ராஜமும் எவ்வளவு மறுத்தும் அவன் கேட்கவில்லை!

## பத்திரிகையில் வருமா?



பையன் :—எல்லாரும் ஜாக்கிரதை! ஆட்டம் பாம் வெடிக்கப் போறது!

தாயார் :—ருஷ்யாவிலே அணுகுண்டு வெடிச்சிதுன்னு பிரமாதமாப் பத்திரிகையிலே போட்டிருக்காளே, நம் ஆத்திலே வெடிச்சால் அதையும் போடுவாளோன்னோ!

# நம் தந்தையர் செய்த விந்தைகள்

**சு**ப்பிரமணிய பாரதியார் செந்தமிழ் நாட்டைத் 'தாய்த் திருநாடு' என்று பாடிப் போற்றினார். அத்துடன் அவர் திருப்தி யடையவில்லை. 'எங்கள் தந்தையர் நாடென்ற பேச்சினிலே, ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே' என்று பெருமிதத்துடன் கூறினார்.

இந்தப் பழம் பெரும் நாட்டில் நம் தந்தையர் சில விந்தைகளைச் செய்துதானிருக்கிறார்கள். அவற்றை அறியும் போது நம் மூச்சினில் சக்தி பிறப்பது மட்டுமல்ல; மூச்சே நின்று விடும் போன்ற ஆச்சரியத்தில் மூழ்கி விடுகிறோம்.

நம் தந்தையர் செய்த சில விந்தைச் செயல்களை வந்தியத்தேவன் மூலமாக நான் அறிந்து கொள்ளலாயிற்று.

வந்தியத்தேவனுக்கும் எனக்கும் நெடு நாளும் ஒரு போட்டி. அவன் போன இடங்களுக்கெல்லாம் முதலில் நான் போய் விட விரும்பினேன். வீராணத்து ஏரிக்குப் போனேன். கடல் போல் நீண்டு பரந்து கிடக்கும் அந்தப் பிரம்மாண்டமான ஏரியை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் நம் தந்தையர் கட்டி முடித்தார்கள்; அதிலிருந்து எழுபத்தினாலு கணவாய்களின் வழியாகத் தண்ணீர் பாயும்படியாகச் செய்தார்கள். இவற்றை யெல்லாம் எவ்வாறுதான் செய்தார்களோ என்று எண்ணி எண்ணி வியந்தேன். அந்த மாதிரி பெரிய ஏரிகளை இந்த நாளில் தூர்ந்து போகாமல் பார்த்துக் கொள்ளவே நம்மால் முடியவில்லையே!

தஞ்சாவூரிலிருந்து வந்தியத் தேவன் பழையாறைக்கும் கோடிக்கரைக்கும் போனான் என்று அறிந்ததும் அவனுக்கு முன்னால் அவ்விடங்களை நான் பார்த்துவிட விரும்பினேன். நல்ல வேளையாக அவனுக்கு நேர்ந்தவை போன்ற சங்கடங்கள் எனக்கு ஏற்படவில்லை. அவனுக்குக் கிடைத்திருக்க முடியாத வேறு சில உதவிகளும் எனக்குக் கிடைத்தன.

தஞ்சை சரஸ்வதி மகால் காரியதரிசியும் பிரபல வக்கீலுமான ஸ்ரீ என். கோபாலன் அவர்கள்மேற் கூறிய இடங்களுக்கு என்னுடன் வந்து உதவ இசைந்ததனால் என் பிரயாணம் சுலபமாயிற்று.

**த**ஞ்சை நகரிலிருந்து பழையாறைக்கு ஏறக்குறைய வந்தியத் தேவன் சென்ற வழியைப் பிடித்துக் கொண்டுதான் நாங்களும் போனோம். அவன் கண்ட காட்சிகளை நாங்களும் பார்த்துக் கொண்டு போனோம். சில அம்சங்களில் அன்று போலவேதான் இன்றும் அந்தப் பிரதேசங்கள் இருக்கின்றன. கீர்வனத்தில் இலையில்லாத காடு. அடிக்கடி ஆறுகளும் வாய்க்கால்களும் குறுக்கிட்டன. நாங்கள் கொஞ்சமும் இலட்சியம் செய்யவில்லை. சிறிதும் அஞ்சாமல் தைரியமாகப் பாலங்களின் மீது போனோம். "ஓகோ! பாலத்தின் மீது போவதற்குத் தைரியம் வேறேயா!" என்று நேயர்கள் கேட்கலாம். தஞ்சாவூர் ஜில்லா பாலங்களின் மீது போயிருந்தால் உங்களுக்குத் தெரியும். அந்தக் குறுகலான பாலங்களில் எதிரே வரும் வண்டிகளின் மீது மோதி ஆற்றில் விழுந்து விடாமல் அக்கரை போய்ச் சேர்வது எளிய காரியமன்று. அஞ்சாத நெஞ்சம் அதற்கு அவசியம் வேண்டும்.

தஞ்சாவூர் ஜில்லா ஆறுகளுக்கு ஒரு அபூர்வமான சுபாவம் உண்டு. இருந்த இடத்தில் இருப்பதற்கு அவை விரும்புவதில்லை. அடிக்கடி அவற்றின் போக்கு மாறிக் கொண்டிருக்கும். இடம் மாறி ஒன்றோடொன்று கலந்து விடும். அரிசிலாறு விக்கிரமனாறு ஆகும். விக்கிரமனாறு முடிகொண்டானாறு ஆகும். முடிகொண்டான் குடமுருட்டியோடு கலந்து உருண்டோடி விடும். ஆகையால் சரித்திரத்தில் நதிகளைப் பற்றிப் படித்துவிட்டு இப்போது நேரில் சென்று பார்க்கும் போது அந்த நதிகள் ஓரளவு இடம் விட்டு மாறி ஓடிக் கொண்டிருப்பதைக் காண்போம்.

**அ**ம்மாதிரியே தஞ்சாவூர் ஜில்லா ஊர்களும் மிகப் பொல்லாதவை. வந்தியத்தேவனைப்போல் அவை முகமூடி போட்டுக் கொண்டு நம்மைத் திணற அடிக்கின்றன. சரித்திரத்தில் உள்ள பெயர்கள் உருமாறிப் போய் அடையாளம் கண்டு பிடிப்பது கஷ்டமாயிருக்கிறது. ஏன்? கும்பகோணம் என்னும் பழைய ஊருக்குப் பழைய காலத்தில் 'குடமூக்கு' என்று பெயர். 'குடந்தை' யென்றும் வழங்கி வந்தது. எப்படியோ அது பிற்காலத்தில் 'கும்பகோணம்' என்ற பிரசித்தமானபெயரை அடைந்துவிட்டது.

அதுபோலவே நந்திபுர விண்ணகரம் இப்போது 'நாதன்கோயில்' ஆகியிருக்கிறது. திருமேற்றளி இப்போது 'திருமெத்தாடி' ஆகியிருக்கிறது. சுந்தரசோழ விண்ணகரம் 'சுந்தரப் பெருமாள் கோயில்' ஆகியிருப்பதில் அவ்வளவாக மாறுதல் இல்லை. அவ்விதமே அருள்மொழி தேவேச்சுரம் 'அருமொழித்தேவன்' ஆகியிருப்பது பற்றியும் நாம் புகார் சொல்வதற்கில்லை. ஆனால் கோபிநாதப் பெருமாள் கோயில் 'கோணப் பெருமாள் கோவில்' ஆகியிருப்பதைப் பற்றி என்னவென்று சொல்வது! நன்மூக வேண்டும் அந்தப் பெருமாளுக்கு! இராமாவதாரத்தில் கூனியின் முதுகில் குண்டு எறிந்த பெருமாள் அல்லவா! 'கோணப் பெருமாள்' என்ற பெயர் அவருக்குக் கிடைத்தது ஒரு விதத்தில் நியாயமே!

பழைய 'மழவர் பாடி' தான் இப்போது 'முழையூர்' ஆகி யிருக்கிறது என்பது சிலர் கொள்கை. "இல்லை, இல்லை! புத்தர்களின் முழைகள் (குகைகள்) இருந்த இடமாதலால் 'முழையூர்' என்று பெயர் வந்தது. அதுவே அந்த ஊரின் பழைய பெயர்" என்று சொல்வோரும் உண்டு. எல்லாவற்றிலும் விசித்திரமாக வேஷம் தரித்திருக்கும் ஊர் தாராசுரம். இந்தப் பெயர் 'ராஜ ராஜேச்சுவர'த்தின் மருவு என்று சொன்னால், நம்ப முடிகிறதா! ஆயினும், பழைய தமிழ்ப் பாடல்களும் கல் வெட்டுக்களும்




ரதம் புறப்படப்போகிறது!

தாமிரப் பட்டயங்களும் சத்தியம் செய்து கூறும் உண்மை அது. அதாவது, 'ராஜ ராஜேச்சரம்' என்ற பெயர் மருவித் 'தாராசுரம்' ஆகியிருப்ப தென்பது.

என்ன இருந்தாலும் அரிச்சந்திரன், அரிச்சந்திரன்தான்! 'உண்மைக்கு அரிச்சந்திரன்' என்ற பேச்சு அவன் பெயர் கொண்ட ஊர் விஷயத்திலும் பொய்த்து விடவில்லை. பழைய அரிச்சந்திரபுரம் இன்றளவும் 'அரிச்சந்திரபுரம்' என்ற பெயருடனேயே விளங்குகிறது.

**உ**ருமாறிய ஊர்களின் பழைய பெயர்களைத் தெரிந்து கொள்வதற்கு ஸ்ரீ எஸ். கோபாலன் எனக்குப் பல வழிகளிலும் உதவி செய்தார். ஆகையால் அவருக்குத் 'துப்பறியும் கோபாலன்' என்ற பட்டப் பெயர் சூட்டினேன்.

இப்படி இடம் மாறும் ஆறுகளுக்கும் பெயர் மாறும் ஊர்களுக்கும் மத்தியில் **பழையாறை** ஒளிந்து கொண்டிருக்கிறது. பாவம்! அது அப்படி வெட்கப்பட்டு ஒளிந்துகொண்டு இருப்பதில் அவ்வளவாக ஆச்சரியமில்லை தானே! விஜயாலயன் காலம் முதல் சுந்தர சோழர் காலம் வரையில் சோழ சாம்ராஜ்யத்துக்குத் தலைநகரமாயிருந்த ஊர், மழவரையர் மகள் செம்பியன் மாதேவியும் வைதும்பராயர் மகள் வானவன்மாதேவியும் சுந்தர சோழர் மகள் குந்தவை தேவியும் வாழ்ந்த ஊர், ராஜ ராஜனும் ராஜேந்திர சோழனும் பிறந்து வளர்ந்து வீராதி வீரர்களான ஊர், — இன்றைக்குச் சில ஓட்டைக் குடிசைகளாகவும் இடிந்து தகர்ந்த ஒரு சிறிய கோவிலாகவும் காட்சி அளிக்கின்றது! அதற்கு என் சங்கோசமாயிராது!

ஆயினும் சரித்திர ஆராய்ச்சியில் ஆர்வம் உள்ளவர்களுக்குப் பழையாறை இன்றைய நிலைமையிலும் ஓர் அற்புதக் கனவு லோகமாகவே இருக்கும். தென்னிந்தியாவிலேயே முதன் முதலில் கருங்கல்லைக் கொண்டு கட்டப்பட்ட கற்றளிக் கோவிலை அங்கே காணலாம். கண்டராதித்தரும் செம்பியன்மாதேவியும் சுந்தர சோழரும் குந்தவைப் பிராட்டியும் ராஜ ராஜனும் ராஜேந்திர சோழனும் இந்தக் கோவிலில் நின்று வெபெருமானை வழிபட்டார்கள் என்று நினைக்கும்போது யாருக்குத் தான் புளகாங்கிதம் ஏற்படாமல் இருக்கும்!

அந்த சரித்திரப் பெரும் பொக்கிஷமான கற்றளி ஆலயம் செடி கொடிகளின் வேர்களினால் பிளவுபட்டு நாளுக்குநாள் சிதிலமாகி வருவதைப் பார்த்து யாருக்குத்தான் கண்ணீர் வராமல் இருக்கும்!

இந்தக் கோவில் ஒன்றைத் தவிரப் பழையாறையில் பழைய சரித்திரத்தை நினைவூட்டும் எதையும் காண முடியவில்லை.

சேக்கிழார் பெரிய புராணம் பாடிய காலத்திலே கூட,

"தேர்மேவிய கொழுமணி வீதிகள் சிறந்து
பார்மேவிய பெருமைசேர் பழையாறை"

யாகப் பெயர் பெற்றிருந்த நகரத்தில், இன்று தேர்களும் இல்லை, தேரோடும் நெடிய வீதிகளும் இல்லை, அந்த வீதிகளில் சிந்திய கொழுமணிகளும் இல்லை. ஆனால் கொத்துக் கொத்தாகப் பூத்துக் குலுங்கும் பொன்னிற மலர்களுடனே கொன்றை மரங்கள் இன்றும் பூத்துக் குலுங்கிக் கொண்டிருக்கின்றன. வாசகர்கள் தயவு செய்து இக்கொன்றை மரக் காட்சியைக் கண் முன்னாலேயே வைத்திருக்க வேணும். பின்னால் இதற்கு அவசியம் தெரிய வரும்.

**ப**ழையாறை ஒருகாலத்தில் சோழ சக்கரவர்த்திகளின் தலைநகராக விளங்கியதென்பதற்குத் தாராசுரம் கோவில் ஒன்று தான் இப்போதும் அத்தாட்சியாக நிற்கிறது. தஞ்சைப் பெரிய கோவிலுக்கும், கங்கை கொண்ட சோழபுரத்துக் கோவிலுக்கும் அடுத்தபடியாகத் தாராசுரம் கோவில்தான் தமிழ் நாட்டில் பழம் பெரும் கோவில் என்று சொல்லலாம். இது முதலாவது இராஜ ராஜ சோழனுக்கு நூற்றைம்பது வருஷத்துக்குப் பின்னும் வந்த இரண்டாவது இராஜ ராஜ சோழனால் கட்டப்பட்டது. குதிரைகள் பூட்டித் தேர்ச் சக்கரங்களுடன் அமைந்த இராஜ கம்பீர மண்டபம் ஒன்று இக்கோவிலில் இருக்கிறது. அதைப்பார்த்தால், இதோ இந்தக் கணத்தில் தேர் புறப்பட ஆயத்தமாயிருப்பது போலத் தோன்றுகிறது. குதிரைகள் முன் கால்களைத் தூக்கிக்கொண்டு பாய்ச்சலில் வெகுத் தயாராயிருக்கின்றன. பழையாறை வீதிகளில் அக்காலத்தில் எத்தனையோ தேர்கள் ஓடியிருக்க வேண்டுமென்பதற்கு இந்த அற்புதச் சிற்பம் அத்தாட்சியாகும். இல்லாவிட்டால் அவ்வளவு தத்ரூபமாக இந்தத் தேர் மண்டபத்தைச் சிருஷ்டித்திருக்க முடியாதல்லவா!

அம்பிகை சந்நிதியின்முன் மண்டபம், தடாகத்தில் மிதக்கும் தெப்பத்தைப் போல் காணப்படுகிறது. இன்னும் இந்தக் கோவிலில் உள்ள சிற்ப அதிசயங்களை வர்ணிக்கத் தொடங்கினால் மேலே நமது பிரயாணம் தடைப்பட்டுவிடும். இவ்வளவு அற்புதமான சிற்பச் செல்வம் அமைந்த ஆலயத்தை நம் தந்தையர் நிர்மாணித்தார்கள். அதைச் செப்பனிட்டுத் துப்புரவு செய்து வைத்துக் கொள்ளக்கூட இந்த நாளில் நமக்குத் தெம்பில்லையே என்ற வருத்தத்தைத் தெரிவித்து விட்டு மேலே கோடிக்கரைக்குப் புறப்படுவோம்.



தாராசுரம் கோவில்

## 2

**தி**ருவாரூரிலிருந்து கோடிக் கரைக்குப் போக மன்னார்குடி, திருத்துறைப்பூண்டி, வேதாரண்யம் வழியாகப் போகவேண்டும். முற்காலத்துப் பிரயாணிகள் வேதாரண்யத்தில் குதிரை மாற்றிக் கொண்டுபோவார்கள். நாங்கள் மோட்டார்காரிலிருந்து ஜீப் வண்டிக்கு மாறினோம். திருவாரூர் ஸ்ரீ தியாகராஜ முதலியார் அவர்கள் அன்புகூர்ந்து 'ஜீப்' வண்டி அனுப்பி உதவி செய்தார்கள். வேதாரண்யத்தில் நண்பர் ஸ்ரீ ஏ. வேதரத்தினம் பிள்ளை அவர்களின் குமாரர் ஸ்ரீ அப்பாக்குட்டி அவர்கள் எங்களுடன் பிரயாணத்தில் சேர்த்து கொண்டார்.

வேதாரண்யத்தில் இருந்து கோடிக் கரைக்குப் போகும் சாலை ஒரு மாதிரியாகத்தான் இருந்தது. அன்று காலையில் கொஞ்சம் மழை பெய்திருந்தபடியால் சேறும் இருந்தது. இடையிடையே பெரிய சேற்றுப் பள்ளங்கள் இருந்தன. அவற்றில் 'ஜீப்' வண்டி போனபோது கொஞ்சம் எனக்குக் கவலையாயிருந்தது. ஆனால் ஸ்ரீ அப்பாக்குட்டி தைரியம் சொன்னார். "இந்தச் சேறு என்ன பிரமாதம்! கோடிக் கரையில் சில சேற்றுப் பள்ளங்கள் இருக்கின்றன! அவற்றைப் பார்க்க வேண்டும்!" என்று சொல்லிக்கொண்டு வந்தார். ஜீப் ஓட்டிய புரைவரும் அப்பாக் குட்டியுடன் ஒத்துப் பாடிக் கொண்டு வந்தார்.

அந்தச் சாலையில் போகும் போது முதலில் கொஞ்ச தூரம் உப்பளங்கள் இருக்கின்றன. பிறகு இடதுபுறத்தில் குட்டையான மரங்கள் அடர்ந்த காடு தென்படுகிறது. வலப்புறத்தில் வெகுத் தூரத்துக்குச் சதுப்பு நிலம் காணப்படுகிறது. வருஷத்தில் சில மாதங்களில் அந்தச் சதுப்பு நிலமெல்லாம் கடல் நீர் புகுந்து வெள்ளக் காடாகி விடுமாம். அப்போது கோடிக்கரை ஒரு தீவைப் போல் காட்சி தருமாம்.

சாலையின் இடப்புறத்தில் உள்ள காட்டின் ஓரத்தில் ஒரு மேடு இருக்கிறது. அங்கே ஜீப் வண்டியை நிறுத்திவிட்டு மேட்டின் ஏறினோம். மேட்டின் உச்சியில் இரண்டு பாதச் சுவடுகள் இருக்கின்றன. அதன்மேல் ஒரு சிறிய மண்டபமும் இருக்கிறது. அந்தப் பாதச் சுவடுகள் ஸ்ரீ இராமபிரானுடையவை என்று சொன்னார்கள். இராமருக்குச் சீதையைத் தேடி இலங்கைக்குப் போக வேண்டிய அவசியம் ஏற்பட்ட தல்லவா! அப்போது அவர் தமது சேனை வீரர்களையும் அழைத்துக் கொண்டு இவ்விடத்துக்கு வந்திருந்தாராம். இங்கிருந்து இலங்கை வெகு சமீபத்தில்தான் இருக்கிறது. ஆகையால் பாலம் இங்கேயே கட்டலாமா என்று

யோசித்தார்களாம். அந்த இடம் கடைசியில் பொறுக்கி எடுக்கப்படவில்லை.

இந்த நாளிலே என்றும், ஏழெட்டுக் கோடி ரூபாயை விரயம் செய்து விட்ட பிறகு தான், "இந்த இடத்தில் பாலம் கட்டக் கூடாது" என்ற முடிவுக்கு வருவார்கள். இராமர் காலத்தில் சீக்கிரத்திலேயே அந்த முடிவுக்கு வந்து விட்டார்கள். எனவே ஸ்ரீராமர் அங்கே தமது பாதச் சுவட்டை மட்டும் விட்டு விட்டுப் போய் விட்டார். **கோடிக்கரைக் குழகர்** கொடுத்து வைத்தது அவ்வளவுதான். ஸ்ரீராமர் கோடிக்கரையில் மட்டும் பாலம் கட்டியிருந்தால் இப்போது ஸ்ரீ ராமேசுவரத்துக்கு உள்ள பெருமை முழுதும் கோடிக்கரைக் குழகருக்குக் கட்டாயம் வந்திருக்கும்.



கோடிக்கரைச் சேற்றில்!......

கோடிக் கரைக் குழகரின் திருக்கோயில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் பாடிய நாளில் இருந்தது போலவே பெரும்பாலும் இன்றைக்கும் இருக்கிறது. நடுக் காட்டில் தன்னந் தனியாகக் குழகர் வாசம் செய்து கொண்டிருக்கிறார். அவரிடம் வோட்டுக் கேட்பதற்குக் கூட யாரும் போக மாட்டார்கள், பாவம்! பின்னே மோட்சம் கேட்பதற்காக யார் போகப் போகிறார்கள்!

பழைய கோயிலைப் புதுப்பித்துக் கருங்கல் திருப்பணி செய்திருக்கிறார்கள். இது நல்ல காரியம். ஆனால் 'அஸ்பெஸ்டாஸ்' கூரை போட்டுப் பிராகாரத்தில் கட்டியுள்ள மண்டபம் கண்ணை உறுத்துகிறது! கோயிலின் புராதனத்தையும் புனிதத் தன்மையையும் அது அடியோடு கெடுத்து விடுகிறது. 'அஸ்பெஸ்டாஸ்' கூரையில் நெருப்புக்கூடப் பிடிக்காது என்கிறார்கள்! என்ன அபாயம்! திரிபுரர்களுடைய காலத்தில் 'அஸ்பெஸ்டாஸ்' கண்டுபிடிக்கப் பட்டிருந்தால் சிவபெருமானுடைய நெற்றிக் கண்கூட அவர்களை ஒன்றும் செய்திருக்க முடியாது. ஒரு வேளை தமிழ் நாட்டு நக்கீரர் 'அஸ்பெஸ்டாஸ்' உடை தரித்திருந்தாரோ என்னவோ!

கோடிக்கரைக் காட்டில் நான் வாழ் நாளில் என்றும் காணாத காட்சி ஒன்றைக் கண்டேன். அதாவது மான் கூட்டங்கள் இயற்கை நிலையில் கூட்டமாகத் திரிவதைக் கண்டேன். ஜீப் வண்டியின் சத்தத்தைக் கேட்டு ஒரு கூட்டம் மான்கள் ஓடத் தொடங்கின. காட்டின் இடையில் உள்ள ஒரு மைதானத்தில் அவை அகப்பட்டுக் கொண்டன. அவற்றின் முழு வேகத்தையும் பார்த்து விடுவதற்காக 'ஜீப்' டிரைவர் வண்டியை அதி வேகமாக ஓட்டினார். அடடா! மான்கள் விரைந்து ஓடுகையில் அவை தாண்டிக் குதிக்கும் அழகுக்கு உவமை வேறு ஏதும் இல்லை. ஓட்டப் பந்தயத்தில் மான்கள் தான் ஜயித்தன. ஜீப் வண்டியை முந்திக் கொண்டு அவை காட்டில் தாண்டிக் குதித்துப் புகுந்து விட்டன.

ஜீப் வண்டி டிரைவர் அதே வேகத்துடனே கடற்கரையை நோக்கிச் செலுத்தினார். அப்பாக்குட்டி எச்சரித்தார். "இங்கே சில இடங்களில் சேற்றுப் பள்ளங்கள் இருக்கும். அவற்றில் வண்டி விழுந்து விட்டால் அதை வெளியேற்றுவது மிகவும் கஷ்டம்!" என்று சொன்னார்.

"அது எனக்குத் தெரியாதா, ஐயா! போன வருஷம் ஒரு கண்மூடி டிரைவர் இம்மாதிரி ஒரு ஜீப் ஓட்டிக் கொண்டு வந்தான். சேற்றில் இறக்கி விட்டான். வண்டி கரையேறுவதற்கு ஒரு வாரம் ஆயிற்று. அப்படியெல்லாம் நான் செய்ய மாட்டேன். எனக்குத் தரையைப் பார்க்கும் போதே கெட்டித் தரையா, சேறா என்பது தெரிந்துவிடும். அதற்கெல்லாம் சில அடையாளங்கள் இருக்கின்றன..."

இப்படி டிரைவர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே 'ஜீப்'பின் முன் சக்கரங்கள் இரண்டும் சர சர வென்று சேற்றில் இறங்கின. "போச்சு போச்சு!" என்று ஏக காலத்தில் சத்த மிட்டோம். ஜீப்பிலிருந்து பின்பக்கமாகக் குதித்தோம். ஜீப் டிரைவருக்கு அசாத்திய கோபம் வந்து விட்டது. "ஏன் ஸார் இறங்குகிறீர்கள்! எனக்கு அவ்வளவு தெரியாதா!" என்று கத்தினார். என்ஜின் அவரைவிட பயங்கரமான சத்தம் போட்டது. சக்கரங்கள் மேலும் மேலும் சரசர வென்று சுழன்றன. சுழலச் சுழலக் கீழே பதிந்தன.

டிரைவர் வண்டியைப் பின்னால் விட்டுப் பார்த்தார். ஒரு வினாடி பின்னால் வருவது போல் வந்தது. உடனே மறுபடியும் முன்னால் பாய்ந்தது. வண்டியின் பின் சக்கரங்களும் சேற்றில் பதியத் தொடங்கின. டிரைவர் வண்டியைப் பக்கவாட்டில் சுழற்றிப் பார்த்தார். ஜீப்பின் உள்ளிருந்து பலகை ஒன்றைச் சக்கரங்களின் அடியில் போட்டு விட்டு ஓட்டினார். பலகை இருந்த இடமே தெரியவில்லை. கோபத்துடன் கீழே குதித்தார். ஆசாமி முழங்கால் வரையில் புதைந்து மேலும் புதைவதைப் பார்த்தோம். வண்டியைப் பிடித்துக் கொண்டு எழுந்தார். இன்னும் அந்த வண்டியை அவர் என்னவெல்லாமோ செய்து பார்த்தார். ஒன்றும் பயன்படவில்லை.

நாங்கள் கடற்கரை ஓரம் போய் வெய்யிலுக்குத் தலையில் துணியைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தோம். அப்பாக்குட்டி அங்கவஸ்திரத்தை எடுத்து முண்டாசாகக் கட்டிக் கொண்டு கிளம்பினார்.

அரை மணி நேரத்துக்கெல்லாம் இருபது ஆட்களையும் ஒரு பெரிய தேர் வடத்தையும் கொண்டு வந்தார். வடத்தைக் கட்டி அவ்வளவு பேரும் சேர்ந்து இழுத்தார்கள். மெதுவாக முக்கி முனகிக் கொண்டு வண்டி வெளியில் வந்தது. பள்ளத்தில் பாதி சேறும் வெளியில் வந்துவிட்டது. வரப்போகும் பொதுத் தேர்தலில் அபேட்சகர்கள் ஒருவர்மேல் ஒருவர் பூசுவதற்கு வேண்டிய அவ்வளவு சேறு இருக்கும்!

ஜீப் மறுபடியும் கிளம்பிற்று. டிரைவர் அந்த வண்டியைப் பழிவாங்கத் தீர்மானித்திருந்தார் போலும்! மேட்டிலும் பள்ளத்திலும் அதைக் கட்டி இழுத்துக் கொண்டு போனார். "எதை நம்பினாலும் நம்பலாம்; கோடிக்கரைச் சேற்றை மட்டும் நம்பக் கூடாது. என்னையே ஏமாற்றி விட்டது பாருங்களேன்!" என்று அவர் சொல்லிக் கொண்டு வந்தார். கடைசியாக எப்படியோ கலங்கரை விளக்கத்துக்குப் போய்ச் சேர்ந்தார்.

கலங்கரை விளக்கத்தின் காவலர் பலே கைகாரர். எங்களைப் பார்த்ததும் இன்னாரா யிருக்கலாம் என்று ஊகித்துத் தெரிந்து கொண்டார். அவருடைய துப்பறியும் சக்தி பிரமாதம்.

"உங்கள் 'பொன்னியின் செல்வன்' கதையில் சரடு விடுகிறீர்களே! அது முழுதும் சரடு அல்ல; உண்மையும் கொஞ்சம் இருக்கிறது. அதோ இடிந்து கிடக்கும் பழைய லைட் ஹவுஸைப் பாருங்கள்!" என்று காட்டினார்.

அவர் காட்டிய இடிந்த கட்டடம் சுந்தர சோழர் காலத்துக் கலங்கரை விளக்கமாயிருக்க முடியாது. ஆனாலும் கோடிக்கரையில் நெடுங்காலமாக ஒரு 'லைட் ஹவுஸ்' இருந்திருக்க வேண்டும் என்று மட்டும் தெரிய வந்தது.

பிறகு புதிய லைட் ஹவுஸில் ஏறிச் சுற்று முற்றும் பார்த்தோம். அது பார்க்க வேண்டிய காட்சி. வடக்கே யிருந்து தெற்கு நோக்கி வரும் கடற்கரை அவ்விடத்தில் நேர்கோணமாக மேற்கே திரும்பிச் செல்கிறது. இதனால் கடலுக்கே ஓர் எல்லையைக் கண்டு விட்டோம் என்ற உணர்ச்சி உண்டாகிறது. காலையில் கீழைக் கடலில் சூரியன் உதிப்பதையும் மாலையில் மேலைக் கடலில் சூரியன் அஸ்தமிப்பதையும் கோடிக் கரையிலிருந்து பார்க்கலாம். இம்மாதிரி அமைவது மிக அபூர்வம் என்று சொல்ல வேண்டியதில்லை யல்லவா!

"உலகிலுள்ள அழகிய கடற்கரைகளில் இரண்டாவது சென்னைக் கடற்கரை" என்று சொல்லுவதுண்டு. இருக்கலாம்; ஆனால் அழகில் முதன்மையான கடற்கரை எங்கேயோ ஐரோப்பாவில் இருக்கிறது என்று சொல்கிறார்களே, அதை நான் ஆட்சேபிக்க வேண்டி யிருக்கிறது. கோடிக்கரையைப் பார்த்தவர்கள் இதைப் போல் இயற்கை இன்பம் ததும்பிய அழகான கடற்கரை வேறு எங்கும் இருக்க முடியாது என்றுதான் சொல்வார்கள்.

அப்படி நடப்பட்ட போதிமரக் கிளை வேர் பரவி வளர்ந்து இன்றளவும் உயிரோடிருந்து வருகிறது. உலகத்திலேயே வயதில் மூத்த மரம் இதுதான் என்று சொல்கிறார்கள்.

இலங்கைச் சரித்திரம் எழுதிய இங்கிலீஷ்காரர்களும், அநுராதபுரம் முதலிய நகரங்களுக்கு வழிகாட்டி நூல் (Guide Book) எழுதியிருப்பவர்களும் அபாண்டமாகத் தமிழர்கள்மீது குற்றம் சாட்டியிருக்கிறார்கள். அநுராதபுரத்தை வெற்றி கொண்ட தமிழர்கள் அங்கிருந்த புத்த விஹாரங்கள் முதலியவற்றை இடித்துப் பாழாக்கினார்கள் என்று கொஞ்சங்கூட கூசாமல் எழுதியிருக்கிறார்கள்.

அந்தக் காலத்துத் தமிழர்களுக்குப் புத்த மதத்தின் மேல் வெறுப்பிருந்து, அந்த மதத்தைத் தாக்க விரும்பியிருந்தால், வெகு சுலபமாக ஒரு காரியம் செய்திருக்கலாம். பெரிய பெரிய கருங்கல் கட்டிடங்களை இடிப்பதைக் காட்டிலும் ஒரு மரத்தை வெட்டித் தள்ளுவது எவ்வளவு எளிதான காரியம். அநுராத புரம் நீடித்த தமிழர் ஆட்சியில் இருந்திருக்கிறது. அப்போது இந்த போதி விருட்சத்தை வெட்டித் தள்ளியிருக்கலாமல்லவா! அப்படிச் செய்யாததினால்தானே இன்றளவும் அந்த மரம் இருந்து வருகிறது! ஆம்! அந்த மரம் மட்டும் வாய் திறந்து பேசக் கூடுமானால் இலங்கைச் சரித்திரம் சம்பந்தமாக இங்கிலீஷ்காரர்கள் எழுதி வைத்த எத்தனை எத்தனையோ பொய்களை வெளிப்படுத்தி வெட்ட வெளிச்சமாக்கி விடும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

4

இனி, பொலன்னருவை நகரத்துக்குப் போகலாம். வாருங்கள்! அநுராத புரத்தைக் காட்டிலும் அதிக உரிமையுடனும் பெருமையுடனும் நாம் அந்த நகரத்துக்குப் போகலாம். ஏனெனில் இலங்கையில் தமிழர்கள் ஆட்சி நிலை பெற்றிருந்த காலத்திலேதான் பொலன்னருவை இலங்கையின் தலை நகரமாயிற்று. அதற்கு முந்தி அது புலஸ்திய நகரம் என்ற பெயருடன் விளங்கியது. இராஜ ராஜ சோழனுடைய காலத்தில் 'ஜனநாதபுரம்' என்ற பெயர் பெற்றது. இராஜ ராஜனுக்கு இன்னொரு பட்டப்பெயர் ஜனநாதன். இது 'ஜனபதி' என்பதை நினைவூட்டுகிறதல்லவா! அரசுரிமை பற்றி விவாதம் ஏற்பட்டு, பொது ஜனங்களால் கோரப்பட்டுச் சிம்மாதனம் ஏறியவனுடையபடியால் 'ஜனநாதன்' என்ற பட்டம் அவனுக்குக் கிடைத்தது. அந்தப் பட்டத்தையே அவன் அதிகமாக விரும்பியபடியால், இலங்கையை வெற்றி கொண்டவுடன் பொலன்னருவையைத் தலை நகரமாக்கி அதற்கு ஜனநாதபுரம் என்ற பெயரையும் அளித்தான்.

அநுராதபுரத்திலிருந்து சுமார் எழுபது மைல் தூரத்தில் ஜனநாதபுரம் இருக்கிறது. போகும் சாலை வெகு அழகானது. இருபுறமும் மரமடர்ந்த காடுகள். அவற்றில் எத்தனை எத்தனையோ பட்சி ஜாலங்கள். எந்த ராஜா எந்த பட்டணம் போனாலும் சிறிதும் கவலையின்றி ஆனந்தமாக அவை பாடிக்கொண்டிருக்கின்றன.

அந்தக் காடுகளில் பலப் பல துஷ்ட மிருகங்களும் இருக்கின்றனவாம். அவற்றை மனிதன் என்னும் துஷ்டமிருகத்தினிடமிருந்து காப்பாற்றுவதற்காக ஓரிடத்தில் போர்டு எழுதிப் போட்டிருக்கிறது. அதாவது இந்த இடத்திலிருந்து இந்த இடம் வரையில் காட்டு மிருகங்களுக்கும் பட்சிகளுக்கும் அடைக்கல ஸ்தலம் என்றும், அந்தப் பகுதியில் வேட்டையாடக்கூடாது என்றும் இலங்கை சர்க்கார் தடை செய் [illegible] திருக்கிறார்கள். இவ்வாறு காட்டு மிருகங்களுக்குக்கூட அடைக்கலம் அளித்துக் காப்பாற்றும் இலங்கை சர்க்கார் ஏழை இந்தியத் தொழிலாளிகளை விரட்டி அடிக்கப் பார்ப்பதை நினைத்தால் வியப்பாயிருக்கிறதல்லவா! இருக்கட்டும், இருக்கட்டும்; காட்டுமிருகங்களுக்கு ஒரு காலம் வந்தால் நாட்டு மனிதர்களுக்கு ஒரு காலம் வராமலா போகிறது! காலம் மாறும்.



பொலன்னருவை நகரத்தை நெருங்கும்போது மின்னேரி என்னும் பிரம்மாண்டமான ஏரி தென்படுகிறது. இது மகா சேன சக்கரவர்த்தியின் காலத்தில் எடுக்கப் பட்டது. இலங்கையிலுள்ள பழங்காலத்துப் பெரிய ஏரிகளைப் பார்க்கும்போது அக்காலத் தமிழ்நாட்டு என்ஜினியர்களும் இலங்கை என்ஜினியர்களும் சேர்ந்தும் ஒத்துழைத்து இத்தகைய ஏரிகளை அமைத்திருக்க வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறது.

அநுராதபுரத்தைக் காட்டிலும் பொலன்னருவை சில அம்சங்களில் அதிக 'செத்த நகர'மாகத் தோன்றுகிறது. ஏனெனில் ஜனசஞ்சாரம் அநுராதபுரத்தைக் காட்டிலும் இங்கே குறைவு. வேறு சில அம்சங்களில் அநுராதபுரத்தைக் காட்டிலும் அதிக ஜீவ சக்தியுள்ள சிரஞ்சீவி நகரமாகத் தோன்றுகிறது. ஏனெனில், இடிந்து பாழடைந்த கட்டிடங்கள் அடியோடு இடிந்து விழுந்து விடாமல் முக்கால் கட்டிடங்களாகவும் பாதிக் கட்டிடங்களாகவும் நின்று கொண்டிருக்கின்றன.

இந்தச் செத்த சிரஞ்சீவி நகரத்தின் பாழடைந்த விஹாரங்கள்—அரண்மனைகளைப் பார்த்துக்கொண்டே போனபோது ஓரிடத்தில் நான் நிறுத்திவிட்டு நின்றேன். ஏனெனில் எங்களுக்கெதிரே ஒரு கொன்றை மரம் கொழுத்து வளர்ந்து சரம் சரமாகப் பொன்னிறப் பூக்களைத் தொங்க விட்டுக் கொண்டு நின்றது. இலங்கையில் எத்தனையோ விதமான பெரிய பெரிய மரங்கள் எங்கெங்கும் இருக்கின்றன. ஆனால் வேறு எந்த இடத்திலும் கொன்றை மரத்தை நான் பார்க்கவில்லை. இங்கே மட்டும் எப்படி அது வந்து முளைத்தது! கொன்றை மரத்தையே கேட்டு விடுவது என்று தீர்மானித்தேன்.

"கொன்றை மரமே! கொன்றைமரமே! உன்னைக் கடைசியாகப் பழையாறையில் அல்லவா பார்த்தேன்! எனக்கு முன்னால் இங்கே எப்படி வந்தாய்! 'ஸ்பெஷல்' ஆகாச விமானத்தில் வந்தாயா!" என்று கேட்டேன்.

"இல்லை; இல்லை! விமானத்திலும் வரவில்லை, ரயிலிலும் வரவில்லை. ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு மரக்கலத்திலே வந்தேன். பழையாறைச் சுந்தர சோழரின் சைன்யங்களுடனே சேர்ந்து இங்கே வந்தேன்!" என்றது கொன்றை மரம்.

"எதற்காக வந்தாய்! யுத்தம் செய்வதற்கா! உன்னைக்கூட சைன்யத்தில் சேர்த்து விட்டார்களா! அக்காலின் சோழ நாட்டில் வீரர்களுக்கு அவ்வளவு பஞ்சம் வந்து விட்டதா!" என்று கேட்டேன்.

"இல்லவே இல்லை; நான் சைன்யத்தில் வீரனாகச் சேர்ந்து யுத்தம் செய்வதற்காக வரவில்லை. அந்த நாளில் இந்த நகரை முதன் முதலில் ஜயித்த சோழ சேனாதிபதி பழையாறையில் உள்ளது போன்ற சிவன் கோவிலைக் கட்டினார். அந்தக் கோவிலைத் தமிழ் நாட்டிலிருந்து வந்த சிற்பிகள் கட்டினார்கள். கோவில் கட்டினால் பூஜைக்குப் பூ வேண்டாமா! ஆகையால் சிவ பெருமானுக்கு உகந்த புஷ்பத்தை அளிக்கும் என்னையும் அங்கிருந்து கொண்டு வந்தார்கள். பத்துப் பன்னிரண்டு சிவன் கோவில்களை இங்கே கட்டினார்கள். அந்தக் கோவில்களில் பல இடிந்து தூரண

மாய்ப் போய்விட்டன. ஆனால் இறைவனைப் பூசித்த புண்ணியத்தினால் நான் மட்டும் சிரஞ்சீவியாக இருக்கிறேன்!...''

இவ்வாறு கொன்றை மரம் சொல்லியது. குரலோ கேட்ட குரலாக இருந்தது. எனக்கு ஒரே அதிசயமாய்ப் போய்விட்டது. "கொன்றை மரம் இவ்வளவு அழகாகவும் நிதானமாகவும் பேசுகிறதே, இது என்ன விந்தை!" என்று ஸ்ரீ என். வடேச பிள்ளையைக் கேட்கலாம் என்று திரும்பிப் பார்த்தால், இதுவரை பேசியது உண்மையில் ஸ்ரீ என். வடேச பிள்ளையின் குரல்தான் என்று தெரிந்தது!

பொலன்னருவையில் ஜீரணமாகிக் கிடக்கும் புராதனக் கட்டிடங்களில் மிகவும் புராதனமானவை சிவன் கோயில்கள் தாம். 'சிவதேவாலே' என்று சிங்களத்தில் சொல்கிறார்கள். சுமார் பத்துச் சிவன் கோயில்கள் இங்கே இருந்ததற்குச் சின்னங்கள் இருக்கின்றன. இவற்றுள் இரண்டு, மூன்று கோயில்கள் இன்னும் உருவம் கெடாமல் முழுமையாக இருக்கின்றன. பழையாறையில் செம்பியன் மாதேவி காலத்தில் கட்டப் பட்டது போன்ற சிறிய கோயில்கள்தான். ஆனால் சிற்ப நுட்பம் வாய்ந்தவை.

பொலன்னருவை சுமார் நூற்றைம்பது வருஷ காலம் 'ஜனநாதபுரம்' என்ற பெயருடன் சோழ மன்னர்களின் தலைநகரமாயிருந்தது. பிறகு விஜயபாகு, பராக்கிரம பாகு என்னும் பிரசித்த சிங்கள மன்னர்கள் தோன்றி இலங்கையில் தங்கள் ஆட்சியை நிலைநாட்டினார்கள். அப்போது நகரின் பெயரும் விஜயராஜபுரம் என்று ஆயிற்று. பெரிய பெரிய தாகபா ஸ்தூபங்களும் விஹாரங்களும் எழுந்தன. இந்தக் கட்டிடங்களில் ஒரு விசேஷத்தைக் காணலாம். அவை பெரும்பாலும் தமிழ் நாட்டு ஆலய பாணியில் அமைக்கப்பட்டிருக்கின்றன. மூலஸ்தானத்தில் சிவலிங்கமோ, பெருமாள் விக்கிரஹமோ இருக்கவேண்டிய இடத்தில் பெரிய புத்தர் சிலை இருக்கிறது. மற்றப்படி சுற்றுப் பிராகாரங்கள், மதில்கள், கோபுரங்கள், மாடங்கள், துவார பாலகர்கள் எல்லாம் தமிழ்நாட்டுக் கோயிலை ஒத்தே இருக்கின்றன.

இவ்விதம் நம் ஊர்க் கோயில்களை நன்கு ஞாபகப்படுத்தும் புத்தர் கோயில் ஒன்று பொலன்னருவையில் வட எல்லையில் இருக்கிறது. இதற்குத் 'திரிவங்க புத்தர் ஆலயம்' என்று பெயர் வழங்குகிறது. இந்தக் கோயிலின் மூலஸ்தானத்தில் உள்ள புத்தர் சிலை மூன்று இடங்களில் வளைந்து நிற்பதினால் இந்தப் பெயர் வந்தது. இந்தக் கோயிலின் வாசல் கோபுரத்தின் உள் பக்கத்துச் சுவர்களில் சில அற்புதமான வர்ணச் சித்திரங்கள் இருக்கின்றன. அவை புத்தர் ஜாதகக் கதைகளைச் சித்திரிக்கின்றன. ஆயினும் தஞ்சாவூர்ப் பெரிய கோயில் பிராகாரச் சுவரில் உள்ள சித்திரங்களின் பாணியை நினைவூட்டுகின்றன.

நமது சித்திரக்காரர் மணியம் சுமார் ஒரு வாரம் அங்கேயே தங்கிச் சில சித்திரங்களைப் பெயர்த்து எழுதிக் கொண்டு வந்தார். அவற்றை இந்தத் தீபாவளி மலரில் வேறொரு இடத்தில் காணலாம்.

பெண்மணி ஒருத்தி தன் காதலனுடைய பிரிவாற்றாமையை நினைந்து வருந்தப் பட்டுக் கொண்டே அவன் மானுக்கு உணவு தரும் காட்சி மிக அபூர்வமானது.

இன்னும் ஒரு புனிதமான சித்திரமும் இருக்கிறது. புத்த பகவானுடைய தாயார் புத்தரைக் கருத் தரித்திருக்கிறாள். பிரசவம் ஆகும் நேரம் நெருங்கிவிட்டது. இவ்வேளையில் அன்னை கட்டிலில் படுத்திருக்கும் காட்சியை வெகு நாகரிகமாகக் காட்டியிருக்கிறது. முதுகு, கழுத்து, பின்தலை இவற்றையே நாம் பார்க்கிறோம். சுற்றிலும் தேவகணங்கள் வந்து சூழ்ந்துகொண்டிருக்கிறார்கள். ஒருவித விரஸ உணர்ச்சியும் ஏற்படாமல் உள்ளம் தூய்மை அடையும் முறையில் இந்த அபூர்வமான வர்ணச் சித்திரத்தை வரைந்திருக்கிறார்கள்.

பொலன்னருவையில் நாங்கள் பார்த்தவை, கேட்டவை எல்லாவற்றையும் எழுதுவதென்றால் ஒரு பெரிய புத்தகம் ஆகிவிடும். ஆகையால், அங்கே நான் கண்ட இன்னும் ஓரே ஒரு அதிசயத்தை மட்டுமே இக்கட்டுரையில் குறிப்பிட விரும்புகிறேன். அது நம் மூதாதையர் செய்த விந்தைகளைப் பற்றி உண்மையிலேயே நாம் பெருமை கொண்டு தோள்கள் பூரித்து மகிழ்வதற்குரியது.

வட்டதாகை — நாட்டதாகை — லதா மண்டபம் என்னும் சிற்பச் சின்னங்கள் சேர்ந்தாற்போல் உள்ள இடத்தில் ஒரு தமிழ்க் கல்வெட்டு இருக்கிறது. சுமார் பன்னிரண்டு அடி உயரமும் மூன்று அடி அகலமும் உள்ள அந்தப் பெரிய கல் ஒரு மேடை மீது செங்குத்தாக நிறுத்தி வைக்கப் பட்டிருக்கிறது. ஏதோ எழுதி இருக்கிறதே என்று அருகில் சென்று பார்த்தேன். தமிழ் எழுத்துக்கள் என்று அறிந்ததும் ஆச்சரியம் உண்டாயிற்று. அதில் எழுதியிருக்கும் விஷயம் இன்னதென்று அறிந்ததும் ரோமாஞ்சனம் ஏற்பட்டது.

பல ஆங்கிலேயர் இலங்கையைப் பற்றிப் புத்தகங்கள் எழுதியிருக்கிறார்கள். இலங்கை சர்க்கார் பல வழிகாட்டி நூல்கள் வெளியிட்டிருக்கிறார்கள். அவை ஒன்றிலாவது இந்த அருமையான தமிழ்க் கல்வெட்டைப் பற்றிச் சொல்லப்படவில்லை.

விஷயம் இதுதான்:—தமிழகத்தில் வேளைக்காரப் படையினர் என்று அந்தக் காலத்தில் இருந்தார்கள். எந்தக் காரியத்தை ஏற்றுக் கொண்டாலும் சொன்னது சொன்னபடி முடிக்கக் கூடியவர்கள். முடிக்கா விட்டால் பிராணத் தியாகம் செய்வதாகச் சபதம் செய்கிறவர்கள்.

இராஜ ராஜனுடைய வம்சம் தஞ்சையில் மாறுதலடைந்த காலம். இலங்கையில் சோழரின் ஆதிக்கம் மாறி விஜயபாஹு சிங்கள இராஜ்யத்தை ஸ்தாபித்துக்கொண்டிருந்த சமயம்.

இந்த நாட்களில் பொலன்னருவை-ஜனநாதபுரம் பக்கத்தில் ஒரே குழப்பமாயிருந்தது. நியாயமான அரசு கிடையாது; பாதுகாப்பும் கிடையாது.

சோழ மன்னருடன் வந்த ஒரு வேளைக்காரப்படை அச்சமயம் பொலன்னருவையில் இருந்தது. அந்த வேளைக்காரப் படையின் உதவியை ஒரு புத்தகுரு நாடினார். அவருடைய பெயர் முகலன் மகாதேரோ. அவர் வேளைக்காரப் படையின் தலைவர்களை அழைத்தார். புத்த பகவானுடைய தந்தத்தை வைத்துப் பாதுகாத்த கோயில் ஒன்று அச்சமயம் பொலன்னருவையில் இருந்தது. அதற்குத் தக்க பாதுகாப்பு இல்லாமல் இருந்தது. அந்தப் புனிதமான புத்தர் கோயிலைப் பாதுகாக்கும் பொறுப்பை வேளைக்காரப் படையினர் ஏற்க வேண்டும் என்று புத்த குரு கேட்டுக் கொண்டார். உடனே வேளைக்காரப் படைத் தலைவர்கள் தங்களுடைய மகா மந்திர சபையைக் கூட்டினார்கள். (மகா மந்திர சபை என்பது இந்தக் காலத்தில் Chiefs of Staff என்று வழங்கும் இராணுவ தந்திர சபையை ஒத்தது.)

கூட்டி அச்சபையில் யோசனை செய்து புத்தகுரு கேட்டுக் கொண்டபடி மேற்படி கோயிலை ரட்சிப்பதென்று சபதம் எடுத்துக் கொண்டார்கள். அந்தக் கோயிலை மட்டுமன்றி அதற்குள் வந்து சரணம் புகுகிறவர்களையும் பாதுகாக்க உறுதி கொண்டார்கள். இரவு பகல் அக்கோயிலை முறை போட்டுக் காப்பதற்காகச் சேவகர்களை ஏற்படுத்தினார்கள். ஒவ்வொரு சேவகருக்கும் ஒவ்வொரு வேலி நிலம் மானியம் கொடுத்தார்கள். சந்திர சூரியர்கள் உள்ள வரையில் இவ்வாறு அந்தப் புத்தப் பெரும் பள்ளியைக் காப்பதாகச் சத்தியம் செய்து,

**"செம்பிலும் கல்லிலும் வெட்டுவித்துக் கொடுத்தோம்!"**

என்று அக்கல்வெட்டில் மிகத் தெளிவாகத் தமிழில் எழுதியிருப்பதை எவரும் இப்போதும் அங்கே காணலாம்.

சபதத்தை நிறைவேற்றாவிட்டால் இன்னின்ன பாதகத்தைச் செய்தவர்கள் அடையும் கதியை அடைவோம் என்றும் எழுதியிருக்கிறது. வேளைக்காரப் படையின் பகுதிகள் இன்னின்னவை என்று அக் கல்வெட்டில் காணப்படுகிறது.

**"வலங்கை - இடங்கை - சிறுதனம் - பிள்ளைகள் தனம் - வடுகர் - மலையாளர் - பரிவாரக் கொட்டம் உள்ளிட்ட வேளைக்காரர் இப்படிச் சம்மதித்தோம்"**

என்று எழுதியிருக்கிறது.

வலங்கை—இடங்கை என்பவை சைன்யத்தின் இரு முக்கிய பிரிவுகள். மற்றவையெல்லாம் சேனைக்கு வேண்டிய அவசியமான பணிவிடைகளைச் செய்யும் பரிவாரங்களாயிருக்கக் கூடும்.

செப்பிலே எழுதிக் கொடுத்தது பூமியில் எங்கேயாவது புதையுண்டு போயிருக்கும். ஆனால் பெரிய பிரம்மாண்டமான கல்லில் வெட்டிக் கொடுத்தது இன்னமும் பொலன்னருவையில் கம்பீரமாக நின்று பழந் தமிழர்களின் பண்பாட்டுச் சிறப்பைக் கண்ணும் அறிவும் உள்ளவர்களுக்கெல்லாம் எடுத்துச் சொல்லி வருகிறது.

அராஜகமும் குழப்பமும் மிகுந்திருந்த காலத்தில், ஒரு புத்த குரு தமிழ் நாட்டு வீரர்களை அழைத்துப் புத்தர் கோயிலைப் பாதுகாக்கும் பொறுப்பை அவர்களிடம் ஒப்புவித்தார் என்றும், பிறமதக் கோயில்களை இடிக்கக் கூடியவர்களாகப் பழந் தமிழர்கள் இருந்திருக்க முடியுமா!

புத்தர் கோயிலை ரட்சிப்பதாக ஏற்றுக் கொண்டவர்கள் அந்தக் கடமையை எந்த மாதிரி நடத்தியிருக்கிறார்கள்! தாங்களே காவல் போட்டு காவல் காப்பவர்களுக்கு மானியமும் வழங்கியிருக்கிறார்கள்!

இதைப் பார்த்த பிறகு வேறொன்றையும் பார்க்க எனக்கு மனம் வரவில்லை. "போதும்! பொலன்னருவைக்கு நாம் வந்தது எதிர்பாராத அளவு பயன் தந்துவிட்டது. திரும்பிப் போகலாம்!" என்று ஸ்ரீ வடேசன் அவர்களிடம் கூறினேன்.

செல்வநாடாகிய இலங்கையில் நம் தந்தையர் செய்த விந்தைகளை எண்ணி எண்ணிப் பார்த்து வியந்து கொண்டே தாய் நாட்டுக்குத் திரும்பி வந்து சேர்ந்தேன்.



இப் புனிதத் ருநாளில் எமது
ஆதரவாளர் நக்கும் அபிமானி
களுக்கும் ஒரு சந்தோஷகரம ர தீபாவளியையும்
மங்களகரமான புத்தாண்டை யும் விரும்புகிறோம்.

பாரத் வனஸ்பதி பிராட ட்ஸ் லிமிடெட்

பசோரா (கிழக்கு தேஷ்)

மானேஜிங் ஏஜன் ள் :

மெஸர்ஸ். ஸெக்சாரியா ன்ஸ் லிமிடெட்

ஸெக்சாரியா சேம்பர்ஸ், 139, மெடோஸ் தெரு, போர்ட், பம்பாய்-1

CHOOSE FOR ALL YOUR FUNCTIONS

**A. R. A.**

**LOUD SPEAKERS**

The more important the occasion,
more the stress for this Reliable

**A. R. A. SOUND SYSTEM**

**INSTALATION WITH EQUIPMENT CHOSEN FOR THE OCCASION**

★

**A. R. A.**

ASSOCIATED RADIO AGENCIES

**26, CHINNAKADAI STREET, TEPPAKULAM POST, TIRUCHIRAPALLI**




# காண முடியுமானால்

திடீரென்று சப்த அலைகள் கண்ணுக்குத் தெரியுமானால்......சிந்தியுங்கள்! உங்களைச் சுற்றியுள்ள வாயுமண்டலம் கோடிக்கணக்கான உருவங்களோடு மாறுதல் அடைந்து கொண்டேயிருக்கும்; மெல்லிய வளைவான கோடுகள் பளிச்சிட்டு நீளக்குமேல் செல்லும்—மற்றவை மெதுவாக அசைந்தசைந்து செல்லும். பலமொழிகள், கோரமான சப்தங்கள், இனிமையான இசை ஆகியவை உங்களைச் சூழ்ந்து கொள்ளும்.

ஆனால் பரந்த, தேக்கமற்ற சப்தமண்டலம் கண்ணுக்குத் தெரிவதில்லை. நீங்கள் ஸ்விட்சைப் போட்டோ அல்லது குமிழியைத்திருகியோ காற்றிலே மிதந்து வரும் இசையை அல்லது தூரதேசங்களில் பேசும் சொற்களை அறையில் பரப்பும்வரை வாயுமண்டலத்தில் பின்னிக் கிடக்கும் சப்த ஜாலங்கள் சரிவர புரிந்து கொள்ளக் கூடாத முறையில் இருக்கின்றன. சிறந்த ரேடியோ மூலம் ஊடுருவிச் சென்று வேண்டியவைகளை அடையும் ஒரு மின்சக்தி உலகமிது.

பிலிப்ஸ் ரேடியோ பிளேயர்களுக்கு உங்கள் அருகிலுள்ள பிலிப்ஸ் வியாபாரிகளைக் காண 'தீபாவளி' சமயம் மிகச் சிறந்த காலம். ட்ரை அல்லது 6 வோல்ட் பேட்டரி, AC அல்லது AC/DC ரூ. 365 முதல் ரூ. 1500 க்குள் கிடைக்கிறது. அங்கீகாரம் பெற்ற வியாபாரிகள் மூலம் அங்கீகாரம் பெற்ற விலைக்கு விற்கப்படும் பிலிப்ஸ் ரேடியோக்கள் தான் தயாரிப்பாளர்களின் உத்திரவாதத்திற்கு பாத்திரமானவை என்பது நினைவிருக்கட்டும்.

PHILIPS

## பிலிப்ஸ்

எலக்ட்ரிகல் கம்பனி
(இந்தியா) லிட்.
பிலிப்ஸ் ஹௌஸ்,
கல்கத்தா-20

PH-60


அப்பா! இந்த விசிறி
யைப் போட்டாப்பறந்தான்
இந்த ரூம் சரியாச்சப்பா—
நானும் இனிமே இங்கியேதான்
வாசிப்பேன்—என்ன?
EWI
போனிக்ஸ்
A.C. & D.C விசிறிகள்
R.M.S. & CO., LTD., 16, BROADWAY, MADRAS-1
FAS


"Pioneer"
தீபாவளி வாழ்த்துகள்
உயர்தரமான ஒத்தை நூல்
நெ. 40 முதல் 100 வரை
தயாரிக்கிறோம்.
...CARDED & COMBED...
தந்தி: "பயோனீர்"
போன்: 160.
கோயமுத்தூர் பயோனீர் மில்ஸ்
லிமிடெட்.
பீளமேடு (போஸ்ட்)...... கோயமுத்தூர்.

எமது அபிமானம் கொண்ட வியாபாரிகளுக்கும்
வாடிக்கைக்காரர்களுக்கும் மற்றும் அனைவருக்கும்
எமது மனமார்ந்த

தீபாவளி வாழ்த்துக்கள்!

●

B. வெங்கடேஸ்வர ராவ்
அண்டு கம்பெனி
(ஸ்தாபிதம்: 1926)

வெண்ணை, நெய் வியாபாரிகள், ஏஜண்டுகள்
136, புரசவாக்கம் ஹைரோடு
புரசவாக்கம் :: மதராஸ் - 7
போன்: 4002] [தந்தி: BUTTER

●

மதராஸ் பிராஞ்சுகள்:
1/7F, தெற்கு மாட வீதி, மயிலாப்பூர்
57, பெரிய தெரு, திருவல்லிக்கேணி

●

வெளியூர் பிராஞ்சுகள்:
மாயவரம், ஊத்துக்குழி,
தெனாலி, குடிவாடா, மசூலிப்பட்டணம்

எங்களது நெய் ஒரு ஸ்பெஷல் ரகம்!

GRAMS: "KHALEEL" BANGALORE
PHONE: Office: 2308 Depot Link 2308 Residence: 2879

MOHAMED RAHIM KHALEELI
GENERAL MERCHANT
99, B, Osman Khan Road, BANGALORE CITY

Stockist in Mysore State, Bellary, Ananthapur and Kurnool Districts, for DYES and CHEMICALS of
CIBA DYES LIMITED
Distributor in Mysore State for
CALTEX (INDIA) LIMITED
PETROLEUM PRODUCTS
and Geigy Pharmaceutical specialities of
AMALGAMATED CHEMICALS AND DYESTUFFS CO., LTD.

PROPRIETOR:
THE CITY SERVICE STATION
Sri Jayachamarajendra Road, Bangalore City

CHIEF AGENT:
THE BRITISH INDIA GENERAL INSURANCE CO., LTD.
Accident-Fire and Marine Insurance

SPECIAL AGENT:
THE JUPITER GENERAL INSURANCE CO., LTD.
For Life Insurance

இனிதிலும் இனிது
இன்பத்திலும் இன்பம்

நீண்ட நேரம் கரையாமல்
ஒதுக்கி வைத்து தேனினும்
அதிமதுரமான தித்திப்புச்
சுவை அனுபவிக்க உதவும்
எம்.ஏ.பி. மிட்டாய்கள்
தரும் இன்பமே தனி.

*

சாக்லட்கள் • டாபிகள்
மதுரவில்லைகள் • லாசஞ்சர்கள்



MAP
மிட்டாய்கள்



எம்.ஏ.பி. இண்டஸ்ட்ரீஸ்
தண்டையார்பேட்டை, மதராஸ்-21.
போன்: 2583 .............. தந்தி: MAPINDUS.

விற்பனை டிப்போக்கள்:
பெங்களூர் :: விஜயவாடா




எனக்கு இந்த 'முதுகெலும்பு மட்டும் ஒன்று இல்லாமலிருந்தால் ரேடியோபதி மோகம் ஏற்பட்டிராது; இன்று அந்த ரேடியோபதிக்கு நான் அடிமையாக இருக்க முடியாது. எல்லாம் அந்தக் கடைசி முதுகு எலும்பில்தான் ஆரம்பித்தது; அது திருகு வலியிலிருந்து பெருந் தலைவலியாக—ஏன் விதியாக—முற்றி யிருக்கிறது! எப்படி அந்தத் திருகுவலி ஆரம்பித்தது என்பதை அறிய உங்களில் எவ்வளவு பேர்களுக்கு ஆவல் இருக்கும் என்பது எனக்குத் தெரியும். நம் நோவைப் பிறருக்கு எடுத்து விரிவாகச் சொல்வதில் இருக்கும் ஆர்வம், பிறர் நோவை நாம் அறிந்து கொள்வதில் யாருக்குத் தானிருக்கும்?

இப்போது என் நோவைப் பற்றி நான் சொல்லிக் கொள்ள வரவில்லை; உங்களுக்கு அதில் அக்கறை இல்லை என்பது எனக்குத் தெரியும். இருந்தாலும் ரேடியோபதியைப் பற்றி நீங்கள் ஒவ்வொருவரும் அறிந்து கொள்ள வேண்டியது அத்தியாவசியம். இது விஷயத்தில் எனக்குக் கிடைத்த அனுபவத்தை நான் சொல்லியே தீர வேண்டும்; எனக்குக் கிடைத்த நல பலன்களை நீங்களும் பகிர்ந்து கொண்டு ஆனந்தமடைய வேண்டும் என்ற ஒரே பரந்த நோக்கம்தான் என்னை அவ்வாறு சொல்லத் தூண்டுகிறது.

சரி; என் அனுபவத்தை எடுத்துச் சொல்ல வேண்டுமானால் மீண்டும் என் முதுகுக்குத்தான் வரவேண்டும்; மீண்டும் அந்தக் கடைசி முதுகெலும்பைத்தான் குறிப்பிட வேண்டும். அதிலிருந்துதான் எல்லாத் தொந்தரவும் ஆரம்பிக்கிறது. என் முதுகுக் கடைசி எலும்பு இருக்கும் இடத்தில், பிறந்தது முதல் எனக்கு ஏதோ உபத்திரவம் இருந்திருக்க வேண்டும். ஒரு வேளை அந்த இடத்தில் அதிகப்படி எலும்போ அல்லது, எலும்பே இல்லையோ தெரியாது. அதன் விளைவு கால் நூற்றாண்டு கழித்துத்தான் தெரிந்தது.

ஒரு தீபாவளிப் பண்டிகையன்று—அன்று எனக்குத் தலை தீபாவளி—மாமனார் வீட்டுக்குப் புது மாப்பிள்ளையாக முடுக்காக வந்திருந்தேன். நான் வந்ததில் என் மனைவிக்குக் குதூகலமோ இல்லையோ, தெரியாது; இருந்தாலும் வெளியில் காட்ட முடியுமா? அவள் தம்பிக்கு இருந்த குதூகலம் சொல்லி முடியாது. நான் வாங்கி வந்திருந்த மத்தாப்பு, பட்டாசுகளைச் சராமரியாகச் சுட்டுக் கொளுத்தித் தள்ளிக் கொண்டிருந்தான்.

அவனுக்கு உதவியாக நானும் பக்கத்தில் இருந்து வேண்டிய பணிகளைச் செய்து கொடுத்தேன். ஒரு சக்ரவாணம் பாக்கி இருந்தது. என் மைத்துனனுக்கு அதை வைத்துக் கொண்டு விஷ்ணு அவதாரம் எடுக்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டது. உடனே அவன் அவதாரம் எடுத்து என்னை ஆதிசேஷனாகச் சிருஷ்டித்து என் முதுகின்மேல் ஆரோகணம் செய்து சக்ரவாண பாணியாகக் காட்சியளித்தான். சக்ரவாணம் தீப் பற்றியதும் விர்ரென்று சுழன்றது. அதன் பொறிகள் என் கழுத்திலும், காதிலும், முகத்திலும், முதுகிலும் பொழிந்தன. என்ன தான் மகா விஷ்ணுவானாலும்—மைத்துனனானாலும், நெருப்புப் பொறி சுடாமல் இருக்குமா? திருப்பாற்கடல் அலைகளால் மோதுண்டது போல் என் சமநிலை தவறித் தத்தளித்தேன். மகா விஷ்ணு தன் உன்னத பீடத்திலிருந்து தரை மட்டத்துக்கு வந்தார். அந்த வேகத்தில் கவனிருந்த தம் படத்தைத் தட்டிவிட்டார். படத்திலிருந்த

மகாவிஷ்ணு, தம் சக்ராயுதத்துடன், கண்ணாடிச் சட்டம் உள்பட, நேராக என் கடைசி முதுகெலும்பை இலக்கு வைத்துக் குதித்தார்! அன்று முதல் என் தலை தீபாவளியையும், மகாவிஷ்ணுவையும், என் மைத்துனனையும், என் கடைசி முதுகெலும்பையும் நான் எப்படி மறக்க முடியும்?

* * *

இச் சம்பவம் நடந்ததிலிருந்து என் முதுகுப் பிரச்னை அடிக்கடி என்னை வருத்தியது. திடீரென்று வலிக்கும்; திடீரென்று பிடிப்பு ஏற்படும்; அதிக நேரம் உட்கார்ந்து வேலை செய்ய முடியாது. இப்படியாக அவதிப்பட்டுக் கொண்டிருந்தேன். இந்த நோயைத் தீர்க்க எவ்வளவோ வைத்தியங்களும் சிகிச்சைகளும் பார்த்து விட்டேன்.

'எக்ஸ்ரே' எடுத்துப் பார்த்தார் ஒரு நிபுணர். எலும்பு சரியாக இருக்கிறது. ஆனால் அடி பட்டதால் அதிகமாக முதுகுக்குச் சிரமம் கொடுக்கக் கூடாது என்றார். அது முதல் நான் எதற்கும் முதுகு காட்டுவதில்லை. எலெக்ட்ரிக் சிகிச்சை செய்து சூடு போட்டார் மற்றொரு நிபுணர். முதுகில் வலியுடன் தழும்பும் ஒன்று சேர்ந்தது. 'நவரக் கிழி' செய்யச் சொன்னார் ஒரு மலையாள நண்பர். அதுவும் செய்து பார்த்தேன்; கேட்கவில்லை. மற்றொரு மலையாள பகவதி பிழிச்சல், இழிச்சல், ஒழிச்சல், பிடித்தல், குத்தல், கிள்ளல், அழுத்தல் எல்லாம் என் முதுகில் செய்து பார்த்தார். இத்தனைக்கும் அந்த முதுகு இருந்த இடத்திலேயே இருந்ததே ஒழிய அசையவில்லை; அப்படியே தான் அந்த வலியும். என் உடலுக்குள் சென்றிருக்கும் சித்த வைத்திய லேகியங்கள், எண்ணெய்கள் எல்லாவற்றையும் சேர்த்தால் ஒரு டஜன் டீஸல் பஸ்கள் விடலாம்; சென்னையில் நிரந்தர பஸ் நெருக்கடியும் தீரலாம்.

"இந்தப் போலி வைத்தியத்தை எல்லாம் பார்த்து ஏமாந்தீர்களே; ஹோமியோபதி 'ட்ரை' பண்ணுங்கோ ஸார்! அப்புறம் வலி இனி கிட்ட வராது" என்றார் ஒரு ஹோமியோ பித்தர். ஹோமியோபதி மிக எளிதான வைத்தியம்; ஒரு கடுகளவு வெள்ளை மாத்திரைதான் சாப்பிட வேண்டும். மூர்த்தி சிறிதானாலும் அதன் கீர்த்தி பெரிது; அதைவிட அதைக் கொடுக்கும் வைத்தியர் கீர்த்தியோ மிகப் பெரியது; ஒவ்வொரு முறையும் அவரைப் பேட்டி காணப் போகும்போது 108 ஜபம் செய்து கொண்டு தான் போக வேண்டும்; அதற்குக் குறைந்த தட்சிணையை அவர் வாங்க மாட்டாராம். எப்படியிருக்கிறது?

மற்றொரு நிபுணர் என்னைத் தண்ணீரில் அமுக்கி மூழ்கடிக்கப் பார்த்தார். நான் தண்ணீரிலிருந்து தப்பினேனே யொழிய, நோயிலிருந்து மீளவில்லை. மற்றொரு மேதாவி என்னை நீராவியில் வேக வைத்துப் பார்த்தார். அதற்கும் மசியவில்லை—நானாகட்டும் என் முதுகாகட்டும். ஆயுர்வேதம், சித்த வைத்தியம், அல்லோபதி, கைரோபதி, ஹோமியோபதி முதலிய சகலவித சாஸ்திரங்களும் என் முதுகு வலிக்கு முதுகு காட்டிப் பறந்தன.

இப்படி ஐந்தாறு ஆண்டுகளுக்குள் அடியேன் தலை மொட்டையாகி வந்ததே யொழிய முதுகு வலி போகவில்லை.

இந்த அனுபவங்களால் நான் பட்ட அவஸ்தைகள் ஒருபுறமிருக்க, எனக்கு ஏற்பட்ட செலவுகள் கொஞ்ச நஞ்சமல்ல. இதனால் உண்டான மனநோயில் என் தேகத்திலுள்ள நோயைக் கூட ஒருவாறு மறக்க ஆரம்பித்தேன். இந்தச் சந்தர்ப்பத்தில்தான் சமய சஞ்சீவி போல வந்து குதித்தார் அண்ணாசாமி.

ஒருநாள் எல்லாக் கவலைகளையும் மறந்து நிம்மதியாக இருக்கலாம் என்று நான் மனதுக்குள் திட்ட மிட்டுக் கொண்டிருக்கும்போது சகுனி போல் வந்து சேர்ந்தார் அண்ணாசாமி.

"என்ன? உங்கள் முதுகு எப்படி இருக்கிறது?" என்று குசலம் விசாரித்துக் கொண்டு வந்தார்.

"என் முதுகு இடுப்பின்மேல் தான் இன்னும் இருக்கிறது" என்று மேலாக இழுத்துவிட்டு, "உங்கள் முதுகுதான் 'அடடா' என்று இருக்கிறதாக்கும்" என்று சொல்ல வாயெடுத்தேன். ஆனால் சொல்லவில்லை.

"முதுகைக் கேட்கவில்லை, ஸார்! அந்த வலி எப்படி இருக்கிறது?" என்று கேட்டார்.

"வலியும் சரியாகத்தான் இருக்கிறது. நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக......" என்று கசந்து கொண்டு சொன்னேன்.

"அடடா! இன்னும் அப்படியா இருக்கிறது? அதை இப்படிச் சும்மா விட்டுவைக்கக் கூடாது, ஸ்வாமி! திடீரென்று எதிலாவது கொண்டு விட்டு விடும்—முடக்கு இடக்கு வியாதி மாதிரி. அதற்குத் தகுந்த வைத்தியம் செய்து கொண்டு கவனிக்காமல் போனால் ஆபத்து. உடனே கவனியுங்கள், ஸார்!" என்றார் அண்ணாசாமி.



"அட, சரிதான் ஐயா! உம் வேலையைப் பாரும்!" என்று சொல்வதற்குப் பதிலாக, "என்ன செய்வது? எல்லா வைத்தியமும் பார்த்தாகி விட்டது. நாட்டு வைத்தியம், அல்லோபதி, ஹோமியோபதி ஒன்றிலும் குண மில்லையே!" என்றேன் வெறுப்புடன்.

"வைத்தியக்காரத்தனம்! நம்மவர்கள் இப்படித்தான் ஏமாந்து போகிறார்கள்" என்று பரிதாபப் பட்டார் அண்ணாசாமி. பிறகு சற்றுத் தூக்கத்தில் ஆழ்ந்தவர் போல் மௌனம் சாதித்தார். திடீரென்று ஒரு ஞான மின்னல் தோன்றியவர் போல், அவர் முகம் பிரகாசித்தது. "நேடிபோபதியைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறீர்களா?" என்று என்னிடம் ஒரு கேள்வியைப் போட்டார்.

"தெரியாதே! பசுபதியை நன்றாகத் தெரியும்; என்னோடு படித்தவன். உமாபதி ஆப்த நண்பன்; கமலாபதி ஒரு 'தகல்பாஜி' பேர்வழி; அவனையும் தெரியும். காசிபதியைப் பார்த்து

நாளாயிற்று. அவன் சீமைக்குப் போய்த் திரும்பி வந்த பிறகு சந்திக்கவில்லை" என்று எனக்குத் தெரிந்த 'பதி'களைப்பற்றியெல்லாம் அடுக்கிக் கொண்டே போனேன். அப்படியாவது அண்ணாசாமிக்கு வீட்டு நினைவு வரலாமென்ற ஒரு சிறு நம்பிக்கை. ஆனால் அண்ணாசாமிக்கு என் உடல் நலத்திலிருந்த அபார அக்கறையில் அவர் வீடு, பின்னே குட்டி எல்லாவற்றையும் மறந்தவராகவே தோன்றினார். ரேடியோபதியைப் பற்றி அவர் விளக்காமல் விடவில்லை.



"அவர் யார், ரேடியோபதி? வானொலி தலைமை அதிகாரியா?" என்று கேட்டேன். ரேடியோபதி அப்படிப்பட்ட அதிகாரி அல்ல என்று தெரிந்தது. அண்ணாசாமி ரேடியோபதி மாகாத்மியத்தை விளக்கி ஒரு காலட்சேபமே செய்ய ஆரம்பித்து விட்டார்.

° ° °

"மிராசுதார் முத்துசாமியைத் தெரியுமா உமக்கு? அவர் இப்படித்தான் தீராத வயிற்று வலியுடன் வெகு காலம் அவஸ்தைப் பட்டார். பார்க்காத வைத்தியமில்லை; சாப்பிடாத மருந்தில்லை. ஸ்விட்ஜர்லந்து, ஜெர்மனி, அமெரிக்கா முதலிய எல்லாத் தேசங்களுக்கும் போனார். அங்குள்ள நிபுணர்களுக்கும் காண்பித்தார். ஒவ்வொரு தேசத்திலும் இரண்டு ஆபரேஷன் செய்து கொண்டார். தாய் நாட்டுக்குத் திரும்பி வரும்போது, மூன்று டாக்டர்கள் ஆறு நர்சுகளுடன் திரும்பி வந்தார். அதில் மிஞ்சி நின்றது இரண்டு நர்சுகளும் அவர் வயிற்று வலியும்தான். கடைசியில் ஒரு நர்ஸை மணந்து கொண்டார். இன்னொரு நர்ஸை ஊருக்குத் திருப்பி அனுப்பினார். வயிற்றுவலி மட்டும் அப்படியே இருந்தது. கடைசியில் அவர் வயிற்று வலியைப் போக்கியது ரேடியோபதிதான்!" என்று முடித்தார்.

"ஓகோ, அப்படியா? இப்போது அவர்...?"

"அவர் சமீபத்தில் தான் மாரடைப்பினால் காலமானார்."

"வெகு நாளாக அவரை விட்டுப் பிரியாதிருந்த வயிற்றுவலி போனதும் அவருக்கு இந்த உலகத்தில் இருக்கப் பிடிக்கவில்லை போலும்" என்றேன்.

"குதர்க்கமாகப் பேசுகிறீரே! உமக்குத் தண்ணீர் தொட்டி தாமோதரத்தைத் தெரியுமா? அவருக்கு வெகு நாளாக மார்பில் நோவு இருந்தது. 'ஹார்ட் வீக்' என்று டாக்டர்கள் சொன்னார்கள். ஆனால் அதைக் குணப்படுத்த அவர்களால் முடியவில்லை. கடைசியில் ரேடியோபதியினால்தான் அவர் ஹிருதயம் காப்பாற்றப்பட்டது."

"அவர் காப்பாற்றப் பட்டாரா, சொல்லுங்கள்!" என்று கேட்டேன்.

"ஒரு அதிசயம் பாருங்கள்! அவருக்கு உயிர் போய்விட்ட பிறகு கூட அவர் ஹிருதயம் ஒரு மணி நேரம் 'பக் பக்' என்று அடித்துக் கொண்டிருந்தது" என்றார் அண்ணாசாமி.

"அப்படியா! டாக்டரின் 'பில்'லைப் பார்த்திருப்பார், கண் மூடுவதற்கு முன்" என்றேன்.

"நீங்கள் ரேடியோபதியைப் பற்றி இப்படிக் கேவலமாக நினைக்கக் கூடாது. எங்கள் வீட்டுக்குப் பக்கத்து வீட்டுப் பையன்—பத்து வயதுதான்—ஒரு மோட்டாரில் அடிபட்டுக் கைகால் சுவாதீனம் இழந்திருந்தான். இப்போது ஓடியாடி விளையாடுகிறான். காரணம் ரேடியோபதிதான்!

ஜம்புநாதனை உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். அவருக்கு வயது என்ன தெரியுமோ? எண்பத்தொன்பது. இன்னும் டென்னிஸ் தினம் ஆடுகிறார். காரணம்—இந்த ரேடியோபதிதான்!"

இப்படிப் பல நபர்களுடைய ஜீவிய சரித்திரங்களைத் தெரிந்து கொண்டேன். மனிதர்கள் மட்டுமல்ல, மலட்டுப் பசுக்கள் கன்று போட்டன; நொண்டிக் குதிரைகள் ரேஸில் ஜெயித்தன. கோவேறு கழுதைகள் மணிக்குக் காதவழி பறந்தன. குரைக்காத நாய்கள் கடித்தன; கடிக்காத நாய்கள் குரைத்தன. ஜீவ ஜந்துக்கள் மட்டுமில்லை; ஜட வஸ்துக்கள் கூட புத்துயிர் பெற்றன. காய்க்காத தென்னை மரம் குலை குலையாகச் சொரிந்து தள்ளிற்று; பூக்காத ரோஜா, மலர்களை வாரிக் கொட்டிற்று. துளிர்க்காத கருவேப்பிலை மரம் தழைத்து ஓங்கியது. புளிக்காத மாங்காய் இனித்தது. கசக்காத வேம்பு தேன் பொழிந்தது......... காரணம் — ரேடியோபதி தான்! இதையெல்லாம் கேட்டதும் எனக்கே வியப்பாகத்தான் இருந்தது. அண்ணாசாமி பொய் சொல்றவரல்ல. இப்பேர்ப்பட்ட நம்ப முடியாத மாய ஜாலங்கள் செய்யும் ரேடியோபதி, யார், எங்கிருக்கிறார், அவரை எப்படி, எப்பொழுது பார்க்கலாம் என்று கேட்டேன்.

"ரேடியோபதி ஒரு மனிதப் பிறவியல்ல. அது ஒரு நவீன முறை" என்று அவர் சொன்னதும் எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

"இது ஒரு தனி வைத்திய முறையா" என்று தொடர்ந்து கேட்டேன்.

"இது வைத்தியமே இல்லை. இது ஒரு ஜீவிய தத்துவம். 'ரேச்சரி'ல் இருக்கும் ரேடியோ அலைகள் மூலம் உயிர்களை உய்விக்கலாம். இதுதான் இந்த 'ஸிம்பிள்' தத்துவம். சாவகாசமாக என் வீட்டுக்கு வந்தால் உமக்கு இந்தத் தத்துவத்தை விளக்கிக் காட்டுகிறேன். உம் முதுகு வலி மட்டுமல்ல; மற்றெல்லா நோய்களையும் இதைக் கொண்டு நீக்கலாம். கட்டாயம் வந்து பாரும்" என்று சொல்லிவிட்டு அண்ணாசாமி புறப்பட்டுப் போய் விட்டார்.

அண்ணாசாமி வெறும் புரடா ஆசாமி அல்ல என்ற நம்பிக்கை எனக்கிருந்தது. அவர் சொன்னதெல்லாம் உண்மையாக இருந்தால்? என் தீராத நோவு தீருமல்லவா? மறுநாளே அவர் வீட்டுக்குப் போனேன். வாசல் கேட்டைத் திறந்து உள்ளே போவதற்குள் நாலைந்து தரம் தடுக்கிற்று. இதேதடா அபசகுனம் என்று நினைத்துக் கீழே பார்த்தேன். குறுக்கும் நெடுக்கும் ஒரே கம்பி மயமாக இருந்தது. வாசல் தோட்டத்து மரம் செடிகள் எல்லாம் இந்தக் கம்பிகளால் அலங்கரிக்கப் பட்டிருந்தன. கம்பிகளைத் தாண்டி விட்டு வாசற்படியை அடைந்தேன்.

அண்ணாசாமி ஒரு டம்ளர் காப்பியை ஒரு கையில் வைத்துக்கொண்டு, மற்றொரு கையில் ஒரு கம்பியை அதற்குள் விட்டு ஆழம் பார்த்துக் கொண்டிருந்தார். என்னைக் கண்டதும், "வாருங்கள், வாருங்கள், வரணும்! நல்ல சமயத்துக்குத்தான் வந்தீர்கள். இருங்கள், இந்தக் காப்பியைக் குடித்துப் பாருங்கள்!" என்று கையிலிருந்த டம்ளரைக் கொடுத்தார். நான் வாங்கிக் குடித்தேன்.

"எப்படி இருக்கிறது......?" என்று கேட்டார்.

"முதுகு வலிதானே! அப்படியேதான்......" என்பதற்குள்—"அதில்லை. காப்பி எப்படி இருக்கிறது என்று கேட்டேன்" என்றார்.

"இந்த மாதிரி காப்பி நான் இது வரை சாப்பிட்டதே இல்லை" என்று சிறிதும் மறைக்காமல் அவரிடம் உண்மையைச் சொன்னேன்.

"அப்படிச் சொல்லும்! அதுதான் விசேஷம்!" என்றார்.

"உங்கள் வீட்டில் முழுக்கொட்டைதானே உபயோகிக்கிறீர்கள்?" என்று கேட்டு வைத்தேன். அவர்கள் உபயோகிப்பது காப்பிக் கொட்டைதானா என்பதே எனக்குச் சந்தேகமாக இருந்தது.

"முழுசானால் என்ன? பாதியானால் என்ன? இந்தக் காப்பியில் ஒரு விசேஷம். இது ரேடியோ காப்பி யாக்கும்!" என்றார்.

ரேடியோ காப்பியா? ஒரு வேளை இதுவும் பாடுமோ? என்று சந்தேகித்தேன்; ஆனால் கேட்கவில்லை.

"அதாவது ரேடியோ அலைகள் கலந்த காப்பி!" என்றார்.

"நான் நினைத்தேன், அப்படித்தானிருக்கும் என்று!" என்றேன்.

"இதன் குணம் உமக்கு உடனே தெரியும். உடம்பில் ஒரு தனி உணர்ச்சி ஏற்படுகிறதா இல்லையா?" என்று கேட்டார்.

"ஆமாம்—ஏதோ ஒரு உற்சாகந் தானிருக்கிறது" என்றேன்.

"சரி, வாரும்! இன்னும் உமக்கு இந்த ரேடியோபதி அதிசய மெல்லாம் காட்டுகிறேன்" என்று தோட்டத்துக்கு அழைத்துச் சென்று போய் "அந்த வாழையைப் பார்த்தீரா!" என்று சுட்டிக் காட்டினார்.

பார்த்தேன். அதில் ஒரு வாழைத் தார் போட்டிருந்தது. அதிசயத்திலும், அதிசயம், சில காய்கள் வாழைக் காய் மாதிரியே இல்லை; எலெக்ட்ரிக் பல்புகள் மாதிரி இருந்தன.

"இந்த வாழை மரத்தில் எலெக்ட்ரிக் பல்புகள் கூடக் காய்க்கின்றனவே!" என்று அதிசயித்தேன்.

"அதெல்லாம் 'பல்ப்' இல்லை, 'வால்வுகள்; ரேடியோ வால்வுகள்' என்று சொன்னதும் எனக்கு ஒன்றுமே புரியவில்லை. ரேடியோ வால்வுகள் வாழை மரத்தில் எப்படிக் காய்க்கும் என்று அதிசயித்தேன். பிறகு தான் அவர் விளக்கினார். இந்த வால்வுகள் காய்களுடன் கம்பிகளால் பிணைக்கப் பட்டிருந்தன. இதனால் ஆகாயத்தில் உள்ள ரேடியோ அலைகளை அந்த வால்வுகள் இழுத்து வாழைக்காய்க்கு ஊட்டுகின்றன. இதனால் வாழைக் காய் செழிப்பாக ஒன்றுக்கு இரண்டாக வளரும் என்று அறிந்தேன். அந்த வாழைப் பழத்தை நாம் சாப்பிட்டால் நமக்கு ஒரு தனி பலம் ஏற்படும். இதுபோலவே, அவர் தோட்டத்துக் கத்தரி, வெண்டை, புடலங்காய், எலுமிச்சை, நார்த்தை முதலிய சகல காய் கனி, கொடிவகைகளும் ரேடியோ வால்வுகளாலும் கம்பிகளாலும் அலங்கரிக்கப்பட்டு போஷிக்கப் பட்டதைக் கண்டேன். தோட்டத்துக் கிணற்றுக்குள் ஒரு பெரிய கம்பி விடப்பட்டிருந்தது. கிணற்று நீரும் ரேடியோ அலைகளைக் குடித்து ஊற்றுப் பெருக்கெடுப்பதாக அண்ணாசாமியிடமிருந்து தெரிந்து கொண்டேன்.

அவருடைய ரேடியோ பிருந்தாவனத்திலிருந்து மீண்டும் வீட்டுக்குள் சென்றதும் "இந்த 'ரேடியோ ட்ரீட்மெண்ட்' செடி கொடிகளுக்கு மட்டும் என்று நினைக்காதீர். செடி மரங்களைக் கொண்டு பரிசோதனை செய்கிறேன். மனிதர்களுக்கு இது இன்றியமையாத ஒரு ஜீவ ரஸம். இனக்கேதாறும் ரேடியோ காப்பி, ரேடியோ சாம்பார், ரேடியோ ரஸம், ரேடியோ மோர் சாப்பிட்டு வாருங்கள். நூறு வயதுக்கு மேல் வாழலாம்" என்று அடுக்கிக் கொண்டே போனார்.

* * *

அன்று முதல் நான் ரேடியோ பதிக்கு அடிமையாகி விட்டேன். என் வீட்டுத்தோட்டத்தைவந்துபாருங்கள். மரங்கள் செடி கொடிகள் எல்லாம் ரேடியோ வால்வுகளாகக் காய்த்துக் குலுங்குகின்றன. எங்கள் வீட்டில் வந்து ரேடியோ காப்பி, ரேடியோ நீர்மோர், ரேடியோ பானகம் சாப்பிட்டுப் பாருங்கள். உங்களுக்கு ஒரு தனி உணர்ச்சி உண்டாகும் (இந்த உணர்ச்சி உண்டாகும்போது நான் உங்கள் எதிரில் இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லையே!) அதுமட்டுமல்ல; உங்களுக்குப் புது ரேடியோ பெட்டிகள் வேண்டுமானாலும் தாராளமாக வாருங்கள். அவற்றில் வால்வுகளைத் தவிர மற்ற எல்லா பாகங்களும் அநேகமாக இருக்கும். மலிந்த விலைக்கு உங்களுக்காகத் தருகிறேன்.

"......உங்களைத்தானே! இப்படிக் குழந்தை கையையும் காலையும் போகக்கிக்கொண்டு அவஸ்தைப் படுகிறது; சும்மா பேசிக்கொண்டு இருக்கிறீர்களே! உடனே டாக்டரை அழைத்து வாருங்கள்!" என்றாள்......

...ஓ அதுவா? அது என் தர்மபத்னி தான். அதற்கென்ன சந்தேகம்......? ஒரு நிமிஷம்......இதோ வந்துவிட்டேன். என் பையன் போய் ஏதோ ரேடியோ பதி செய்து பார்த்திருக்கிறான் — ஏதோ பற்றிக் கொண்டு கட்டிவிட்டது......இதோ டாக்டரை அவசரமாக அழைத்து வரப் போக வேண்டும். மன்னியுங்கள்!

## கேட்டுச் சொல்கிறேன்!



"எஜமான்! என் சம்பளத்தை உயர்த்தச் சொல்லி, என் சம்சாரம் கேட்கச் சொல்லிச்சுங்க."

"இரு, என் சம்சாரத்தைக் கேட்டு விட்டுச் சொல்கிறேன்."

# தேசிங்கு ராஜன்

சரித்திரம் 1714-ம் ஆண்டில் தேசிங்கு ராஜன் செஞ்சிக் கோட்டையில் பத்து மாதந்தான் அரசாண்டதாகக் கூறுகிறது. இந்தக் குறுகிய காலத்தில் அவன் காட்டிய வீரப் புகழ் பத்து நூற்றாண்டுகளுக்குப் பிறகும் நிலைத்திருக்கும்போல் இருக்கிறது! அப்படிப்பட்ட வீரனைப் பற்றி நாடோடிப் பாடலாக வழங்கி வரும் கதையை நமது சித்திரக்காரர் 169-172 பக்கங்களில் வர்ணச் சித்திரங்களாகத் தீட்டி யிருக்கிறார்.

அதோ பாருங்கள், ராஜா தேசிங்கு தன் தாயிடம் ஏதோ கேட்கிறான். என்ன கேட்கிறான்!

**அம்மா கேளும் அம்மா கேளும் என்னைப் பெற்றதாயே!**
**உன்னிட மனசில் என்ன விசனம் ஒளியாது சொல் என்றான்**
**ஊரிருக்கும் பிள்ளைகளுக்கு உதவி பெத்த வண்டு**
**தாயும் தகப்பனும் இருக்கிறாரம்மா தாயே பெற்றவளே!**
**தாயாரிருக்க என் தகப்பன் எங்கே என்று கேட்டான்.**

தேசிங்கு ராஜன் தாயின் கர்ப்பத்திலிருந்தபோது டில்லி பாதுஷாவிடமிருந்து அவன் தந்தைக்குக் கடிதம் வந்தது. அதைக் கண்டதும் தந்தை தேரணி மகாராஜாவும் சிற்றப்பன் தரணி சிங்கும் டில்லியை நோக்கிப் புறப்பட்டுப் போனார்கள். அங்கே பாதுஷாவிடம் தேவலோகத்து அடங்காப்பிடாரிக் குதிரை யிருந்தது. அதை அடக்க மாட்டாத அரசர்களை யெல்லாம் டில்லி பாதுஷா சிறையிலடைத்துப் போட்டான். "அப்படிச் சிறைப்படுத்தப் பட்டார்கள் தேரணி சிங்கும் தரணி சிங்கும்!" என்று கூறினாள் தாயார்.

"அப்படியா சமாசாரம்!" என்று அவர்களைச் சிறை மீட்டு வர பாலன் தேசிங்கு தன்னுடைய ஆருயிர்த் தோழனை மோவுத்துக்காரனை அழைத்துக்கொண்டு புறப்பட்டான்.

இவர்களைக் கண்டு டில்லி பாதுஷா, "நீங்கள் யார்!" என்று கேட்டதற்கு, தேசிங்கு பதில் சொல்லுகிறான்.

**தேரணி ராசன் குமாரன்தான்தான் தேசிங்கு பாலன்**
**சிற்றப்ப துரை தரணி சிங்குமே சிறையிலிருக்கிறாராம்**
**குதிரை யேற வழியில்லாமல் கோஷனிலிருக்கிறாராம்**
**குதிரை ஏறி சவாரி செய்து கொண்டு போக வந்தேன்**
**சத்தி சத்தி குதிரை கொண்டுவா டில்லிய துரையே நீ**

குதிரை கொண்டு வரப்பட்டது. தேசிங்கு அதன் மீது ஏறிக் குதிரையை அடக்கிச் சிறையி லிருந்த தன் தந்தையையும் சிற்றப்பனையும் அழைத்துக் கொண்டு ஊருக்குத் திரும்புகிறான்.

செஞ்சிக்கு வந்த சிறிது நாளில் தேசிங்குக்குத் திருமணம் நடைபெற்றது. கல்யாணமான சொற்ப நாட்களிலேயே தேரணி மகாராஜன் இறந்துவிட்டான்; தேசிங்கு பட்டத்துக்கு வந்தான்.

தேசிங்கு சிம்மாசனம் ஏறிய கொஞ்ச நாட்களில் ஆர்க்காட்டு நவாப் செஞ்சிராஜன் தனக்குக் கப்பம் கட்டவேண்டிய பாக்கி ரொம்பவும் இருக்கிறது என்று சொல்லி, உடனே கட்டச் சொல்லும்படி தோன் தமல்லன் (தோடர்மால்) என்பவனைத் தூது அனுப்பினான். தோன் தமல்லனிடம் தேசிங்கு மிக்க கோபத்துடன்,

**"கத்தி முனையிலே பணமுந்தாரேன் நவாப்புக்காரனும்"**

என்று பதில் சொல்லி அனுப்பினான்.

இதைக்கேட்ட ஆர்க்காட்டு நவாப் சைதுல்லாவின் மீசை துடிதுடித்தது. செஞ்சியின்மீது படையெடுத்து விட்டான்.

நவாப் படைகளில் கப்பித்துரை யென்றொரு தளகர்த்தன். அவன் செஞ்சிக்கு அடுத்துள்ள தேவனூரைக் கொள்ளையிட்டான்; சூறையிட்டான். மக்கள் அலறிப் புடைத்துக்கொண்டு தேசிங்கு ராஜனிடம் முறை சொல்லச் சென்றார்கள்.

இனியும் தாமதிக்கக்கூடாது என்று தன் பால்ய நண்பன் மோவுத்துக்காரனுக்கு உடனே உதவிக்கு வருமாறு செய்தி சொல்லியனுப்பினான். அந்தவேளை அவன் கல்யாணப் பந்தலிலிருந்தான்; திருமணக் கோலத்திலிருந்தான். தேசிங்கின் ஓலை வந்தது.

**ஓலையைப்பிரித்தும் பார்த்தானையா மோவுத்துக்காரனும்**
**கலகலவென்று சிரித்தானையா மோவுத்துக்காரனும்**
**மண்டிபோட்டு எழுந்துட்கார்ந்தான் மோவுத்துக்காரனும்**
**தாலியைக்கொண்டு தட்டிலேவைத்தான் மோவுத்துக்காரனும்**
**பட்டாவருவிக் கையிலேபிடித்தான் மோவுத்துக்காரனும்**
**சலாமையா சலாமையா சபையிலுள்ளவரே!**
**சந்தோஷமாக செலவுதாரும் சபையிலுள்ளவரே!**

என்று கூறிப் புறப்பட்டு விட்டான். சிநேகம், என்றால் இது வன்றோ சிநேகம்! தன் நண்பனைக் கண்டான் தேசிங்கு.

**என்னகாரியம் பண்ணினுயடா மோவுத்துக்காரனே!**
**கல்யாணகடுப்பு கட்டியிருக்கிறதும் மோவுத்துக்காரா நீ**
**கஸ்தூரி சந்தனம் பூசியிருக்கிறதும் மோவுத்துக்காரா நீ**
**தாலிகட்டி வந்தாயோ இல்லையோ மோவுத்துக்காரா நீ**

என்று கேட்டான் தேசிங்கு. இதற்கு மோவுத்துக்காரன் 'கத்தி பிடிக்கும் கைக்குப் பெண்டாட்டி என்னத்திற்கு!' என்றான்.

பிறகு தேசிங்கு மன்னன் தன் ஆருயிர் ராணியிடம் விடை பெற்றுக்கொள்ள உள்ளே நுழைந்தான்.

அந்தப்புரத்தில் ராணிக்கும் தேசிங்குக்கும் இடையே திரை தொங்கிற்று. திரையின் இப்புறத்திலிருந்தே, சண்டைக்குப் போக விடை கொடுக்கும்படி கேட்டான் தேசிங்கு.

**சண்டைக்குப் பயந்து வந்திராதே என்பிராணநாதா**
**கோட்டைக்கதவைச் சாத்திப்போடுவேன் என்பிராணநாதா**

என்றாள். இதற்குச் சம்மதித்து, வெற்றிலைப் பாக்கு வாங்கிக் கொள்ள திரையிலிருந்த துவாரத்தின் வழியே தேசிங்கு தன் கையை நீட்டினான்.

**கையைப்பிடித்து கண்ணில் ஒத்தினாள் ராணியம்மாளும்**
**கதறியழுது புலம்பினாளே ராணியம்மாளும்**

யுத்தகளத்திற்குச் சிற்றப்பராசனும், தேசிங்கும், மோவுத்துக்காரனும் மற்றவர்களும் வந்துவிட்டார்கள். மோவுத்துக்காரன் தன் நீலவேணிக் குதிரைமீது ஆரோகணித்துக் கரகரவென்று சக்கராகாரமாகச் சுழன்று சண்டையிட்டு வீரமரணம் எய்துகிறான். அவனுடன் அவன் குதிரையும் இறந்து படுகிறது.

**என்னைவிட்டு எப்படிப்போனாய் மோவுத்துக்காரனே!**
**எனக்குநல்ல இடம்தேடினையும் மோவுத்துக்காரனே!**

என்று ராசதேசிங்கு பிரலாபிக்கிறான்.

போர்க்களத்தில் எத்தனை காட்சிகளை புனைய முடியும்! அவனும் பாராசாரிக் குதிரை ஏறிச் சண்டைக்குப் போகிறான்.

நவாப்பு படையோ, பீரங்கிகள், யானைப்படை, காலாட் படை முதலிய படைகள் கொண்ட பெரிய சேனை. தேசிங்கின் படை முந்நூறு குதிரை வீரர்கள் கொண்ட மிகச் சிறு படை. இப்படையைக் கொண்டு தேசிங்குராஜன் செய்த போரில், எதிரிப் படைகள் நடுநடுங்கின. நவாப்பின் ஆருயிர்த் தம்பியான தாவூத் துக்கான் இறந்து விட்டான். நண்பன் இறந்து விட்டான் என்றதுடன் நவாப் சைதுல்லா ஓடி ஒளிந்து கொண்டான் ஒரு பாறையின் மறைவில். நவாப்பே ஓடி ஒளிந்து கொண்டால் மற்றப் படை வீரர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ! யாவரும் ஓடி ஒளிந்தனர். தேசிங்கு ராஜன் படையிலும் அவன் ஒருவன்தான் மிஞ்சினான். அவன் படையைச் சேர்ந்தவர்கள் யாருமே மிஞ்சவில்லை. இப்போது தேசிங்கின் மனநிலை:

**என் உயிர் வாங்க எனக் கெதிரியை யாரையும் காணேனே**
**என்னுயிரோடே செஞ்சிக் கோட்டைக்கு நான்தான் போவேனோ**
**சத்தி சத்தி சக்கரமானுப்பும் ரங்கநாதரே**
**இனிமேலிருக்க நியாயமில்லை ரங்கநாத சுவாமி!**
**கத்தியைச் சுழற்றி ஆகாச மெறிந்தான் ராஜா தேசிங்கு**
**மார்பை விரித்து மண்மேல் படுத்தான் ராஜா தேசிங்கு.**

இப்படித் தன் உயிரைத்தானே மாய்த்துக் கொண்ட வீரனை மறைவிடத்திலிருந்து கண்ட நவாப் சைதுல்லா ஓடோடி வந்தான்! 'என்ன காரியம் செய்தாயடா' என்று பிரலாபித்தான். ஆம் அவன் இருதயம் நெகிழ்ந்து விட்டது!

ராஜாதேசிங்கின் உடலைத் தக்க மரியாதைகளுடன் செஞ்சிக் கோட்டைக்கு அனுப்பி வைத்தான் நவாப். வீர மறக்குலப் பெண்ணான அந்த வீரபத்தினியும் தேசிங்குராஜனுடன் உடன் கட்டை ஏறுகிறாள். சொர்க்கத்திலிருந்து புஷ்பக விமானமும் வருகிறது. இத்தகைய வீரனையும் வீரபத்தினியையும் அழைத்துக்கொண்டு போவதைக் காட்டுவதும் அந்தப் புஷ்பக விமானத்துக்கு வேறு என்னதான் வேலை இருக்கிறது!


கதம்பம்
"சிக்கனமாக இரு. நூறு
ரூபாய் கொடுத்து வாங்
கிய நாவலை ஒரேமூச்சில்
படித்து முடித்து விடாதே.
ஒரு வாரத்துக் காகிலும்
விரும்படியாகப் படி."
உனக்காக, என் சொத்து
பதவி, நில புலன், எல்லா
வற்றையும் விடத்தயார்."
"போங்கோன்னு' எல்லாம்
போச்சுன்னு அப்புறம்
எனக்குப்பாக்கி என்ன
இருக்கிறது?"
"குருடன் என்று சொல்லிப்
பணம் வாங்கிப்போய்,
பத்திரிகை வாங்கிப்
படிக்கிறயே? பொய்தானே!
"நான் படிக்கவில்லை படங்
களைத்தானே பார்க்கிறேன்!
"சமையல் அறை கொஞ்சம்
கொஞ்சமாக விழுவதைப்
புகார் சொல்லிக் கொண்
டிருந்தீர். இப்பொழுது நிறுத்தி
விட்டதைப்பற்றி ரொம்ப
சந்தோஷம்."
"முழுவதும் விழுந்து விட்டது
அதனால்தான்."
நீங்கள் ஒரு தொடர் கதை
எழுதிப் பத்திரிகைக்கு
அனுப்பினீர்களே, பிரசுரித்
து விட்டார்களா?"
"ஓ! ஆசிரியர் அதைக்
கொஞ்சம் அடித்து, ஒரு
விகடத்துணுக்காகப் பிர
சுரித்து விட்டார்!"
SAMA

எங்கும் பிரசித்தி பெற்ற
குடும்பத்திற்கேற்ற கார்

## ஸ்டாண்டர்ட்
## வான்கார்ட்

கீழ்க்குறித்த குணம்சங்களைக் கவனியுங்கள் :

★ சுருள் ஸ்பிரிங்குகளும் பெத்தையும் கூடிய சௌகரியம்

★ ஆறுபேர் தாராளமாக உட்காரலாம்

★ 17·8 H. P. எஞ்சின்

★ 8" க்ளியரன்ஸ் - நாட்டுப்புற ரஸ்தாக்களுக்கு இணையற்றது

★ மிகச் சிக்கனமான பெட்ரோல் செலவு

★ மோட்டார் சவாரியில் மிக நவீன வசதிகள் அனைத்தும் உடையது.



## யூனியன் கம்பெனி (மோட்டார்ஸ்) லிமிடெட்

மதராஸ் :: பெங்களூர் :: உதகமண்டலம்



பிரபல நாவலாசிரியரும், தங்க மெடல்கள் பரிசு பெற்றவருமான

## வடுவூர் K. துரைசாமி அய்யங்கார் B. A.

அவர்களால் இயற்றிய தேனினும் இனிய தமிழ் நாவல்கள்

| | | |
|---|---|---|
| திகம்பர சாமியார் அல்லது கும்பகோணம் வக்கீல் | 2 பாகங்கள் | விலை ரூ. 4-8-0 |
| மேனகா | 2 பாகங்கள் | ,, 4-8-0 |
| மதன கல்யாணி | 3 பாகங்கள் | ,, 7-0-0 |
| சௌந்தர கோகிலம் | 3 பாகங்கள் | ,, 8-0-0 |
| மாயாவிநோதப் பரதேசி | 2 பாகங்கள் | ,, 7-0-0 |
| பூர்ண சந்திரோதயம் | 4 பாகங்கள் | ,, 10-0-0 |
| பாலாமணி அல்லது பக்காத் திருடன் | | ,, 3-8-0 |
| வசந்த மல்லிகா | ... | ,, 2-8-0 |
| வித்தியா சாகரம் | ... | ,, 2-4-0 |

(தபால் செலவு பிரத்தியேகம்)

கிடைக்குமிடம்: **B. இரத்தின நாயகர் சன்ஸ்**

57, வெங்கடாமய்யர் தெரு, மின்ட் போஸ்டு, ஜீ. டி., சென்னை


அக்ரமம் கண்டு மனம் புழுங்கினன்!
ஏழையைக் கண்டு நீதி சிரித்தது!
அதன் கண்களைத் திறந்தாள்
ஒரு குறும்புக்காரி!
ஜமீன்தார்
நடிகர்கள்:
S.A.நடராஜன் .... மாதுரிதேவி
D.பாலசுப்ரமணியம் . M.V.ராஜம்மா
கதை.வசனம்:
ப.கண்ணன்
ஸ்டுடியோ:
சென்டரல்
டைரக்ஷன்:
P.V.கிருஷ்ணன்
இசையமைப்பு:
G.ராமநாதன்
ஜுபிடர் & சங்கீதா பிக்சர்ஸாரின் கூட்டுத்தயாரிப்பு

எல்லாவித இன்ஷ்யூரன்ஸ்களுக்கும்

**நியூ ஏஷ்யாடிக் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்**

(தலைமை ஆபீஸ்: நியூ டெல்லி)

சேர்மன்: எல். என். பிர்லா

★

**ஆயுள் - மோட்டார் - கப்பல் - நெருப்பு**

முதலிய இன்ஷ்யூரன்ஸ்கள் செய்யப்படும்

★

**பாலிஸிதாரர்களுக்கு குறைந்த பிரீமிய விகிதங்கள்**

★

**இந்தியா முழுவதும் எங்கும் கிளை ஆபீஸ்கள் உண்டு**

தென்னிந்திய பிராஞ்சு ஆபீஸ்:

**289, லிங்க செட்டித் தெரு, ஜார்ஜ் டவுன், மதராஸ் - 1**

மானேஜர்: ஏ. சுப்பையா

For good quality

PAINTS
VARNISHES
ENAMELS
DISTEMBERS
OILS

Look for the name
**GOODLASS WALL**
It's your Hallmark of Quality

Agents:

**T. A. Taylor & Co. (Madras) Ltd.**
100, Armenian Street, Madras

USE

**KERALA SANDALWOOD SOAP**

AND

**WASHWELL BAR SOAP**

FOR BEST RESULTS

Distributors:

**T. A. Taylor & Co. (Madras) Ltd.**
100, Armenian Street, Madras




ஒரு சமயம் நான் பாபநாசத்துக்குச் சென்றிருந்தேன். எதற்காகப் போனேன் என்று கேட்டால் நீங்கள் ஒருவேளை சிரிப்பீர்கள்; சிலர் அநுதாபப் படுவீர்கள். பி. ஏ. பரீட்சைக்கு மூன்று தடவை போய் மூன்று தடவையும் தவறிவிட்டேன். இதனால் வாழ்க்கை கசந்து போயிருந்தது. ஒரு மாதிரி பிராணத் தியாகம் செய்து விடலாம் என்ற முடிவுக்கே வந்து விட்டேன். திடீர் திடீர் என்று நமக்குத் தெரிந்தவர்கள் யார் யாரோ இறந்து போய் விட்டதாகக் கேள்விப்படுகிறோம். ஆனால் நாம் அவர்களைப் பின்பற்றலாம் என்றால், அதற்கு வழிவகை தெரியவில்லை. யோசித்து யோசித்து ஒரு முடிவுக்கு வந்தேன். பாபநாசத்தில் கல்யாணி தீர்த்தம் என்பதாக ஓர் இடம் இருக்கிறதென்றும், அதிலேதான் ஆசிரியர் வ. வே. சு. ஐயர் விழுந்து உயிரை இழந்தார் என்றும் கேள்விப்பட்டிருந்தேன். அந்தப் பெரியாரைப் பின்பற்றலாம் என்று எண்ணிக் கொண்டுதான் பாபநாசம் போனேன்.

இரண்டு காரணங்களினால் நான் உத்தேசித்த காரியத்தை நிறைவேற்ற முடியவில்லை. முதலாவது, அந்தக் கல்யாணி தீர்த்தம் இருக்கிறதே, அது பார்க்க மிகப் பயங்கரமா யிருந்தது. தென்னைமர உயரத்திலிருந்து மூன்று தண்ணீர்த் தாரைகள் 'சோ' என்ற சத்தத்துடன் கீழேயுள்ள அகண்டமான பள்ளத்தில் விழுந்து கொண்டிருந்தன. அந்தப் பள்ளத்தில் தண்ணீர் நிறைந்து ததும்பி அலைமோதிக் கொண்டிருந்தது. பெரிய மரக்கிளை ஒன்று அத்தடாகத்தில் விழுந்து அங்குமிங்கும் சுழன்று அலைக்கப் படுவதைப் பார்த்தேன். இதிலே விழுந்தால் நம்முடைய தேகமும் இப்படித்தானே அலைக்கப்படும் என்று நினைத்தபோது என் தைரியம் குலைந்து விட்டது. அன்னை பெற்றெடுத்த நாளிலிருந்து எத்தனை கஷ்டப்பட்டு வளர்த்த உடம்பு இது? இதற்கு எத்தனை எண்ணெய், எத்தனை சோப்பு, எத்தனை ஆடை அலங்காரம், எத்தனை வகை வகையான அன்னபானம்,—அடடா! இதைப் புகைப் படம் பிடிப்பதற்காக மட்டும் எத்தனை செலவு! இவ்வாறெல்லாம் பேணி வளர்த்த உடம்பு அந்தப் பயங்கரமான தடாகத்தில் சுற்றிச் சுற்றிச் சுழன்று கொண்டிருப்பதுஎன்னும் எண்ணத்தை என்னால் கொஞ்சங் கூடச் சகிக்கவே முடியவில்லை.

அங்கிருந்து இறங்கி வந்து, கீழே பாபநாசம் கோவிலுக்குப் பக்கத்தில் பளிங்கு போன்ற தெளிந்த நீரோடும் நதியின் கரையில் உட்கார்ந்து யோசித்த போது, எதற்காக உயிரை விட வேண்டும்

# EASUN ENGINEERING COMPANY LTD.

LEADING INDIAN CONTRACTORS FOR SUPPLY AND ERECTION OF GENERATING PLANTS, E. H. T. TRANSMISSION LINES, SUBSTATIONS AND EQUIPMENTS AND INDUSTRIAL ELECTRIFICATION

*Head Office:* 5-7, SECOND LINE BEACH, MADRAS-1

*Branches:*

| LONDON | NEW DELHI | BOMBAY | SECUNDERABAD | MATHURAI |
|---|---|---|---|---|
| King William Street House London Bridge London E. C. 4 | Central Court Hotel Connaught Circus | Bell Building, Second Floor Sir Phirozeshah Mehta Road Bombay - 1 | 8183, Keyes Recreation Buildings, Kingsway | West Tower Street |

*Agents in Indian Union for:*

**HARLAND & WOLFF LIMITED**
BELFAST, N. IRELAND

Industrial Diesel and Dual-fuel Engines and Diesel Driven Alternators of all capacities and H. P.

**MAGRINI, S. A.**
BERGAMO, ITALY

L. T., H. T., and E. H. T. Industrial distribution and sub-station Switchgear up to and inclusive of 220 KV.

**LINE EQUIPMENT LIMITED**
LONDON, ENGLAND

H.V. Switch fuses; fusemounts; liquid Fuses and everything connected with outdoor line switching.

**EMP ELECTRIC LIMITED**
LONDON

L. T. H. T., and E. H. T. Surge (Lightning) Arresters.

**METROPOLITAN ELECTRIC CABLE & CONSTRUCTION COMPANY LIMITED**
CHADWELL HEATH, ENGLAND

L. T., H. T., and E. H. T. Paper and rubber Cables.

**G. M. ENGINEERING (OTTERY ST. MARY) LTD.**
OTTERY ST. MARY, DEVON, ENGLAND

L. T. Control and Distribution Switch boards, Overhead Busbar Trunking System for Workshops and Factories etc.

**STATIC CONDENSER CO. LIMITED**
WOKINGHAM, ENGLAND

Industrial Power Factor Correction Condensers.

*Agents in South India for:*

**HACKBRIDGE & HEWITTIC ELECTRIC COMPANY LIMITED**
WALTON-ON-THAMES, ENGLAND

Power and Distribution Transforms, Hewittic Rectifiers for conversion from A. C. to D. C.

**COOKE & FERGUSON LIMITED**
MANCHESTER, ENGLAND

Industrial and L. T. Oil Circuit Breakers, and Switchgear for indoor and outdoor use; H. T. and E. H. T. Switchgear upto 66 KV.

**ANSALDO - FOSSATI,** GENOA - SESTRI ITALY

Crawler Tractors.

**SIEMENS BROS. & CO., LTD.**
LONDON, ENGLAND

House Service Meters.

**DEMING COMPANY**
SALEM, OHIO, U. S. A.

Pumps - Industrial, Agricultural etc.

**TUNER MANUFACTURING CO. LTD.**
WOLVERHAMPTON, ENGLAND

Diesel Engines upto 50 H. P.

**SHELDON MACHINE CO. INC.,**
CHICACO, U. S. A.

Lathes, Drilling Machines etc.

Distributors for South India:

**ALLIS-CHALMERS MANUFACTURING CO.**
U. S. A.




பெரும்பாலோரும் ஒப்புக்கொள்ளும் ஒரே விஷயம்!

*

மூளைக்குக் குளிர்ச்சியையும் செழுமையான கேச வளர்ச்சியையும் அளிப்பதில் மிகவும் நிகரற்றது கேஶ் ரஞ்சனே என்பதைத் தெளிவு படுத்துகிறோம். உண்மையிலேயே கடந்த 70 வருஷ அனுபவத்தால் சரித்திரத்திலேயே இந்தக் கூந்தல் தைலம் ஓர் இடம் பெற்று விட்டது. உபயோகித்து அடையும் குணங்களைக் கொண்டு நீங்களே அதனுடைய சிறப்பை நிர்ணயிக்கலாம்.

*

கவிராஜ் என். என். ஸேன் & கோ., லிட்.

18/1 & 19, லோயர் சித்பூர் ரோடு, கல்கத்தா–1



புகழ்பெற்ற "தமேஷ்" படத்திற்கு அடுத்த ராஜ்கமல் கலாமந்திரின் ஓர் உயரிய சலனப்படத்தின் சிருஷ்டி!

"அமர் பூபாலி"

சந்தியா

(ஆர்வமிருந்த புது நட்சத்திரம்)

பண்டிட் ராஸ், நாகர்கர் லலிதா பவர் நடிப்பது.

*

டைரக்டர் & தயாரிப்பாளர்:

V. சாந்தாராம்

*

எதிர்பாருங்கள்:

டைரக்டர் சாந்தாராமின் அடுத்த உள்ளக் கவர்ச்சி கொள்ளும் உன்னத சமூகப் படம்

பர்சாயீன்

சாந்தாராம், ஜெயஸ்ரீ நடிப்பது

டிஸ்டிரிபியூட்டர்கள்: அலங்கார் சித்ரா லிமிடெட்

தந்தி: "அலங்கார்" :: பெங்களூர்-2

## Shanker's Service Foremost in Quality

DISTRIBUTORS OF:

PETTER AND PETTER-FIELDING ENGINES, KIRLOSKAR PUMPS ETC.

For CHINGLEPUT DISTRICT

o

STOCKISTS OF:

Rubber Belting ★ Pipe Fittings ★ Cast Iron Pulleys Electric Motors ★ Starters and Switches ★ Spare Parts for Petter and Petter-Fielding Engines

o

## SHANKAR TRADING COMPANY

38, LINGHI CHETTY STREET :: MADRAS-1

(Telephone: 4654)

இயந்திரங்களை ரிப்பேர் செய்வதற்குகந்த ஆயுத செட்டுகள் விற்பனை செய்வோர் இந்தியாவிலேயே எங்கள் கம்பெனி ஒன்றுதான்

அவரவர் பண வசதிக்கும் தேவைக்கும் தகுந்தாற்போல் கிடைக்கும்

TM. 23 — மாஸ்டர் யூட்டிலிட்டி கிட்



இந்த ஆயுத செட்டுகள் மேற்கண்டவற்றிற்கு மிக்க இன்றியமையாதவை :

மோட்டார் காரேஜ்கள், ஆயில் இன்ஜின்கள், டிராக்டர்கள் எல்லா இயந்திர சம்பந்தமான ரிப்பேர்கள்

எல்லா ஆயுதங்களும் வெளிநாட்டு சரக்குகளிலிருந்து பொறுக்கி செட்டாக செய்யப்பட்டவை.

இந்தியாவிலுள்ள எல்லா மோட்டார் கம்பெனிகளிலும், டிராக்டர் கம்பெனிகளிலும் கிடைக்கும்

இந்த ஆயுதங்களின் புகைப் படங்களுடன் கூடிய இலவசப் புஸ்தகத்துக்கு இன்றே எழுதிக் கேளுங்கள்.

## அஸோஸியேடட் டிரேட்ஸ்

ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு :: சென்னை - 2

கிளை ஆபீஸ்: மெயின் ரோடு, திருவனந்தபுரம் ● ஷோ ரூம்: 1/11, மவுண்ட் ரோடு, சென்னை

இங்கேயும் கிடைக்கும்

அஸோஸியேடட் டிரேட்ஸ் (டெக்கான்) கிங்ஸ்வே, செகந்திராபாத்

# ஆனமலை பஸ் டிரான்ஸ்போர்ட்

லிமிடெட்

போன்: 27 (ஸ்தாபிதம்: 1931) P. B. No. 13

பொள்ளாச்சி

கீழ்க்கண்ட மார்க்கங்களில் பிரயாண வசதிக்காக பஸ் போக்கு வரத்தை சிறப்பான முறையில் நடத்தி வருகின்றது.

o●o

பொள்ளாச்சி ... கோயமுத்தூர்
பொள்ளாச்சி ... பழநி
பொள்ளாச்சி ... தாராபுரம்
பொள்ளாச்சி ... திருப்பூர்
பொள்ளாச்சி ... வால்பாறை
பொள்ளாச்சி ... மவுண்டு ஸ்டுவர்ட்
பொள்ளாச்சி ... வேட்டக்காரன்புதூர்
பொள்ளாச்சி ... கோட்டூர்
பொள்ளாச்சி ... நிகமம்
கோயமுத்தூர் ... முடிஸ்
(முதல் வகுப்பு பஸ்)
உடுமலைப்பேட்டை ... கோயமுத்தூர்
சாலக்குடி ... ஆனமலை
உடுமலைப்பேட்டை ... ஆனமலை

o●o

பஸ்களில் பிரயாணம் செய்யும் பிரயாணிகளின் சௌகரியத்தையும் நலனையும் நன்கு கவனிப்பதே எமது கடமையாகக் கொண்டுள்ளோம்.

பி. நாச்சிமுத்து கௌண்டர்
ஜெனரல் மானேஜர்

" நான் மக்களுக்கு சக்தியை கொண்டு செல்கிறேன்."



நிக்கோ கேபிள்களும், ஒயர்களும், நமது தேசீயப் பண்டங்கள். நமது தேசத்தின் சீரோங்க தேவைகளுக்கு இவைகள் மிகவும் ஏற்றது என நிரூபிக்கப்பட்டுள்ளது. அவைகள் திறமையாகவும், மிக நம்பகமாகவும் மின்சார சக்தியை எடுத்துச் சென்று பற்பல பாகங்களுக்கு விநியோகம் செய்து கொடுப்பதால், ஒவ்வொரு இடத்திலும் இவைகளுக்கு மேன்மேலும் அதிகமாக தேவை அதிகரிக்கிறது. நிக்கோ கம்பெனியார் வி. இ. ஆர். கேபிள்களின் எல்லாவித ரகங்களை தயாரிப்பதுடன், மற்றைய கேபிள்கள், கார்டுகள், பிளெக் சிபிள்கள், காபர் கண்டக்டர்கள், முதலிய சாமான்களையும் தயாரிக்கிறார்கள். கவர்ன்மெண்ட் அங்கீகாரம் பெற்ற கண்ட்ராக்டர்களின் ஜாபிதாவில் நிக்கோ முக்கிய ஸ்தானம் வகிக்கிறது. சகல வி. இ. ஆர். கேபிள்களும் சர்க்காரால் பரிசோதிக்கப்பட்டு, முத்திரை இட்டு, அத்தாட்சி பத்திரம் பெற்ற பிறகே மக்களின் உபயோகத்திற்கு விநியோகம் செய்யப்படுகிறது.

# நிக்கோ

கேபிள்கள் & ஒயர்கள்
தேசத்தின் ஜீவநாடி போன்றது.




தி நேஷனல் இன்ஸுலேடெட் கேபிள் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்
ஸ்டீபன்ஹவுஸ், டேல்ஹௌஸி ஸ்கொயர், கல்கத்தா
போன்: சிடி 5102 (4 லைன்) தந்தி: "NICOHM"
கிளை: டெல்லி

# நியூ இந்தியா

## அஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

(தலைமை ஆபீஸ்: பம்பாய் - ஸ்தாபிதம்: 1919)

○●○

கீழ்திசையில் 32 ஆண்டுகளாக தொடர்ந்து முன்னேற்ற மடைந்துள்ள, எல்லாவித மான இன்ஷ்யூரன்ஸ் அலுவல்களும் செய்து வரும் மிகப் பெரிய கம்பெனி.

○●○

விஷயமறிந்த பொதுமக்கள் "நியூ இந்தியா" மீது கொண்டுள்ள நம்பிக்கை 1950-ம் ஆண்டில் அது சாதித்துள்ள அடியிற்கண்ட விவரங்களிலிருந்து நன்கு நிரூபணமாகிறது.

| | | |
|---|---|---|
| நெருப்பு பிரீமியம் .... | ரூ. | 1,69,73,583 |
| கப்பல் பிரீமியம் .... | ரூ. | 62,41,551 |
| இதர வகைகள் பிரீமியம் | ரூ. | 37,62,522 |
| ஆயுள் பிரீமியம் .... | ரூ. | 3,24,86,958 |
| அமுலிலிருக்கும் ஆயுள் பிஸினஸ் ... | ரூ. | 63,01,00,000 — க்கு அதிகம் |
| ஆஸ்திகள் .... | ரூ. | 20,12,00,000 — க்கு அதிகம் |
| க்ளெய்ம்கள் (Claims) மொத்தம் செலுத்தியது | ரூ. | 17,01,00,000 — க்கு அதிகம் |

இந்திய இன்ஷ்யூரன்ஸில் முன்னணியில் இருக்கும் "நியூ இந்தியா" இன்ஷ்யூரன்ஸ் துறைகள் எல்லாவற்றிலும் இணையற்ற பாதுகாப்பையும் சேவையையும் அளிக்கிறது.

ஆயுள் - தீ - கப்பல் - விபத்து

தலைவர்: A. D. ஷராப் அவர்கள்
உப தலைவர்: J. R. D. டாடா அவர்கள்

ஜெனரல் மானேஜர்:
B. K. ஷா, F. I. A. (LOND.)

○●○

தென்னிந்தியாவில் கிளை ஆபீஸ்கள்:
நெல்லூர். விஜயவாடா. பெங்களூர். திருச்சி. திருவனந்தபுரம்

சென்னை கிளை ஆபீஸ்:
4/5, முதல் லைன் பீச்

K. கணபதி
பிராஞ்சு மானேஜர்.

# AIRFLOW TRANSPORT (India) LTD.

28, ST. MARK'S ROAD (Phone: 185) BANGALORE - 1

SOLE AGENTS IN MYSORE STATE FOR

## RENAULT

THE FRENCH CAR — BIG PERFORMANCE — CHEAPEST OF ITS CLASS

## HUDSON

THE BIGGER CAR — THE CAR WITH MORE ROOM
YET PRICES JUST AS MUCH AS ANY AMERICAN CAR

Also the heavy duty INTERNATIONAL Truck

THE TRUCK THAT IS SO USEFUL IN THE MODERN TIMES

Also the sensational Italian wonder car "THE FIAT"

When in Bangalore have your car

SERVICED BY

# AIRFLOW SERVICE STATION

26, ST. MARK'S ROAD (Phone: 185) BANGALORE-1

Services all kinds of Automobiles and Diesel Engines

# NEW IMPERIAL

RESIDENCY ROAD (Phone: 260 A) BANGALORE-1

THE HOME OF BETTER ENTERTAINMENT - THE PICTURE HOUSE OF DISTINCTION

Screenig from 28th December 1951

Exclusively METRO - GOLDWYN - MAYER Products

OPENING WITH

## "King Solomon's Mines"

THE MOVIE THAT BROKE EVERY RECORD SINCE "SAMSON AND DELILAH"

# NEW OPERA

BRIGADE ROAD (Phone: 199) BANGALORE-1

THE BIGGEST PICTURE HOUSE IN THE CIVIL STATION
CATERING FOR THE MORE DISCRIMINATING CINEMA - FANS
SCREENING ALL BIGGER TAMIL AND TELUGU PICTURES

TO KEEP UP WITH TIMES AND TO BE IN TOUCH WITH ALL MYSORE STATE NEWS

READ

BEST ADVERTISING MEDIUM

# "THE DAILY POST"

(ESTABLISHED IN 1873)

SELL YOUR WARES THROUGH THESE COLUMNS




# ஸ்டுடிபேக்கர் சாம்பியன்

**1951**

1951-ம் வருஷத்து மாடல் ஸ்டுடிபேக்கர் அதிக சக்தியையும், சுகமான சவாரிக்குத் தேவையான சௌகரியங்களனைத்தும் ஒருங்கே கொண்டதாக விளங்குகிறது. கவர்ச்சிகரமான முன் பாகத்திலிருந்து பின் பாகம் வரை பளபளவென ஒரே அமைப்புடன் கம்பீரமான தோற்றத்துடன் பிரகாசித்து சகல வசதிகளுடன் கூடிய இக் கார், ஆடோமோபைல் ஸாகர்க முன்னேற்றத்தில் செய்துள்ள அபிவிருத்தியை எடுத்துக் காட்டுகிறது.

1951 மாடல் ஸ்டுடிபேக்கர் உலகத்தில் பிரபலமாக வழங்கும் கார்களில் மிக கவர்ச்சிகரமான தோற்றமுடையது. சுகமான சவாரியையும், அமைதியான கார் பிரயாணத்தையும் விரும்பும் ஒவ்வொருவருக்கும் இது இணையில்லா அனுபவத்தைத் தரும்.

**ஒருமுறை சவாரி செய்தால் சொந்தமாகவே வைத்துக்கொள்ள விரும்புவீர்கள்**

ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ் லிமிடெட்

அதிகாரம் பெற்ற விற்பனையாளர்கள் :

**மெஸர்ஸ். லக்ஷ்மண் பிரசாத் & சன்ஸ், 36-C, மவுண்ட் ரோடு, மதராஸ் - 2**

---



எமது வாடிக்கைக்காரர்களுக்கும்
அபிமானிகளுக்கும் ஆதரவாளர்களுக்கும்
எங்களது மனமார்ந்த

## தீபாவளி வாழ்த்துக்கள்!

*

## ருக்மணி ஸில்க் எம்போரியம்

பெரிய தெரு (டெலிபோன் : 38) கும்பகோணம்

RSE

## ராதா ஸில்க் எம்போரியம்

சன்னதி தெரு, மயிலாப்பூர் மதராஸ்

(டெலிபோன் : 84188)




விரைவில் தயாராகிறது
K.R.ராமசாமி
&
அஞ்சலிதேவி
நடிக்கும்
சொர்க்கவாசல்
டைரக்ஷன்
காசிலிங்கம்
......பாடல்கள்......
......சங்கீதம்......
உடுமலை.நாராயணகவி. C.R.சுப்பராமன்
விபரங்களுக்கு
மனேஜர் பரிமளா புரொடக்ஷன்ஸ்
3. கார்டன் தெரு, பாலாஜிநகர், சென்னை.14
கதை,வசனம்.
அறிஞர் அண்ணா
BALU BROS


அக்டோபர்
29ல்
முதல்
நேஷனல் புரொடக்ஷன்ஸ்
சிங்காரி
.MUHIL.
ஸ்டூடியோ
நியூடோன்
வசனம்
வி.என்.சம்பந்தம்
டைரக்ஷன்
T.R.ரகுநாத்
கமரவேல் பிக்சர்ஸ் ரிலீஸ்


நான் உபயோகிப்பவை யாவும் ஸாம்ஸன் கம்பெனியாரின்
"ஸ்டேப்ளா"
பாத்திரங்களே!
● குறைந்த விலையில் நீடித்த உழைப்பை அளிக்கக் கூடியவை. ● உத்திரவாதமுள்ளதும் என்றும் வெள்ளியின் பளபளப்பும், இரும்பின் உறுதியும் கொண்டவை. ● ஆடவரும் பெண்டிரும் விரும்பி வாங்கும் பாத்திரங்கள்.
குத்தடுக்குகள், டம்ளர்கள், காப்பி பில்டர்கள், ஸாஸ்பேன்கள், கரண்டிகள், கப் — ஸாஸர்கள், போஜனத் தட்டுகள், அன்ன வட்டிகள், சொம்புகள், டிபன் செட்டுகள், கெட்டில்கள், மூடி போட்ட ஜாடிகள், கூஜா முதலியன.
ஸாம்ஸன் & கம்பெனி லிமிடெட்.
151, பிராட்வே
போன்: 4521
தந்தி BARAPASH
தபால்பெட்டி 1219
மதராஸ்: 1.

பக்தியில் மெய் மறக்கிறார்?



"தேவி, பரதேவதே, லலிதாம்பிகே, வரலக்ஷ்மி, பானுமதே, ஜயந்திமாலே, ராஜேஸ்வரி........'

## "வீண் செலவு!"




மனைவி :—பாவம்! ஏற்கெனவே எங்களாலே உங்களுக்கு 1000 ரூபாய்க்கு மேலே செலவு, சாமான்களைத் தூக்கி வர ஆளுக்கு வேறு கூலி கொடுப்பானேன்! நாமே தூக்கிக்கொண்டு போய்விடலாமே!




ஒட்டும் இரண்டுளத்தின்
தட்டில் அறிந்தேன்.

—பாரதியார்.

பழைய உறவு



நேற்று முன்னாள் வந்த உறவன்றடி — இது
நெடும்பண்டைக் காலமுதல் நேர்ந்து வந்ததாம்.

—பாரதியார்.

# நம் பாரத நாடு!

ஒரு நாட்டுக்குச் சுதந்திரம் எவ்வளவு அத்தியாவசியமோ அதுபோலவே சுபிட்சமும் முக்கியம். நாடு செழிப்பாக இருந்தால்தான் அதன் மக்களும் செல்வத்துடன் சந்தோஷமாக இருப்பார்கள். நாட்டின் செழிப்பு அதன் பொருளாதார நிலைமையை அனுசரித்துள்ளது. பொருளாதார நிலைமை அபிவிருத்தியடையப் போக்கு வரத்து சாதனங்கள்தான் ஜீவநாடி. அதிலும் ரயில் வண்டிப் போக்குவரத்து மிகவும் இன்றியமையாதது. அத்தகைய ஜீவாதாரமாக விளங்கும் சாதனம் தேச சுபிட்சத்தைக் கருதியே மக்களுக்கு சேவை செய்து வருகிறது. அது மேன்மேலும் திறமையாகவும், திருப்திகரமாகவும் சேவை செய்ய மக்களின் ஒத்துழைப்பு மிகவும் அவசியம். பொது மக்களின் ஒத்துழைப்பு இல்லாவிடில் ரயில் போக்கு வரத்து சாதனம் திறமையாகச் சேவை செய்ய இயலாது. பொதுமக்கள் தேச நலனைக் கருதி, ரயில்வே அதிகாரிகளுடன் ஒத்துழைத்து, திறமையாகச் சேவை செய்வதற்கு இடையூறாக இருக்கும் விஷயங்களை உடனடியாகக் கவனித்துத் தகுந்த நடவடிக்கைகள் எடுத்து சீர்படுத்த வேண்டும்.

டிக்கட்டில்லாமல் பிரயாணம் செய்பவர்கள்தான் தேசத்தின் நலனுக்குக் குந்தகம் விளைவிக்கிறார்கள். ரயில் போக்குவரவுக்கே சொல்லொணாக் கேடு விளைவிக்கிறார்கள். நியாயமாக ரயில்வேக்குச் சேரவேண்டிய பணத்தைக் கொடுக்காமல், நஷ்டத்தை விளைவிப்பதோடு டிக்கட்டு வாங்கிப் பிரயாணம் செய்பவர்கள் அனுபவிக்க வேண்டிய சௌகரியங்களுக்கும் இடையூறாக நிற்கிறார்கள். வண்டியில் அநாவசியமாக நெருக்கடியையும் கஷ்டத்தையும் ஏற்படுத்துகிறார்கள். அத்தகைய மனிதர்கள் தேச நலனுக்கு விரோதிகள். டிக்கட் இல்லாமல் பிரயாணம் செய்பவர்களைக் கண்டு பிடித்து அவர்களை நிர்வாக அதிகாரிகளிடம் ஒப்புவிக்க முற்பட்டால் பொதுமக்கள் தேசத்திற்கு மிகவும் இன்றியமையாத சேவை செய்தவர்களாகிறார்கள்.

நாம் பிரயாணம் செய்யும்போது முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயங்கள் :

நிர்வாகிகள் வண்டியைச் சுத்தமாக வைத்திருந்த போதிலும், நாம் பிரயாணத்தின் போது வண்டியில் எச்சில் துப்புதலும், புகை பிடித்த பின், துண்டு பீடி, சுருட்டு, சிகரெட்டுகளை வண்டியில் போடுவதும், உணவு சாப்பிட்ட பின்பு இலை, காகிதங்களை வண்டியின் உட்புறத்தில் போடுவதும் மிக அநாகரிகமானது. அதனால் அசுத்தம் உண்டாகிறது. அத்தகைய காரியங்களை யாரும் செய்யாவண்ணம் எல்லோரும் கவனித்துக்கொள்ள வேண்டும். சுத்தம் சுகத்தைத் தரும்.

வண்டியில் பிரயாணம் செய்யும்போது **மிகவும் அவசியமான சாமான்களையே** கூட எடுத்துச் செல்ல வேண்டும். அநாவசியமான சாமான்களை கார்டு வண்டியில் லக்கேஜில் 'புக்' செய்தல் வேண்டும். இப்படி செய்தால் வண்டியில் பிரயாணம் செய்பவர்களுக்கு அதிக சௌகரியம் ஏற்படும்.

மிகவும் அதிகமான சாமான்களை கூட்ஸ் வாகனில் பாக் செய்து அனுப்ப வேண்டும். சாமான்களைச் சரியாகப் பாக் செய்து, பாக்கேஜுகள்மீது விலாசங்களைத் தெளிவாக எழுதி அனுப்பினால், சாமான்கள் விரைவாகக் குறிப்பிட்டுள்ள இடத்திற்குப் போய்ச் சேருவதற்கும், சரியான விலாசதாரருக்குத் தாமதம் இல்லாமல் டெலிவரி செய்வதற்கும் சௌகரியமாயிருக்கும். கூட்ஸ் வாகனில் அனுப்பப்படும் சாமான்களை வெகு சீக்கிரமாக டெலிவரி எடுக்க வேண்டும்., அப்படிச் செய்தால் சாமான்கள் திருட்டுப் போகாமலும் வீணாகாமலும் தடுக்கலாம். மேலும் வாகன்கள் அதிகமாக சேவை செய்ய பயன்படும். வாகன் குறை நெருக்கடியையும் வெகுவாகச் சமாளிக்கலாம்.

ரயில்வே நமது சொத்து; அதில் நஷ்டம் ஏற்பட்டால் அது நமக்கு ஏற்பட்ட நஷ்டம்; அது லாபகரமாக நடந்தால் நம் நாட்டுக்கே லாபம்.

வண்டியில் உள்ள மின்சார விளக்குகளின் பல்புகள் களவு போகாமல் கவனிக்க வேண்டும். பிரயாணத்தின்போது தண்ணீரைச் சேதமாக்காது பார்க்க வேண்டும். வண்டியில் உள்ள மெத்தைகளைக் கிழிப்பதும், ஜன்னல் கண்ணாடிகளை உடைப்பதும், நமக்கு நாமே நஷ்டத்தை விளைவித்துக் கொள்வதாகும். இவைகளை அடியோடு தடுக்க வேண்டும். விசேஷமான சலுகை பெறும் பொருட்டு, ரயில்வே சிப்பந்திகளுக்கு லஞ்சம் கொடுத்து, தூண்டக் கூடாது.

இவ்வாறாகப் பொது மக்கள் பொறுப்பை உணர்ந்து ரயில்வே நிர்வாகத்துடன் முழு மனதுடன் ஒத்துழைத்தால், ரயில்வேக்கள் வெகு திறமையாகவும், திருப்திகரமாகவும் தேசத்திற்குச் சேவை செய்யும். நல்ல போக்குவரத்து சாதனத்தின் மூலம் தேசப் பொருளாதாரம் சீர்படும். பொருளாதார அபிவிருத்தியின் மூலம் தேசத்தின் சுபிட்சம் உன்னத நிலையை அடையும். தேசத்தின் சுபிட்சமே தேச மக்களின் செழிப்பு.

**(தக்ஷிண ரயில்வே)**

# சித்திரப் பூஞ்சோலை

செல்வத் திருமகளைத்—திடங்கொண்டு
சிந்தனை செய்திடுவோம்
செல்வமெல்லாம் தருவாள்—நமதொளி
திக்களைத்தும் பரவும்.

இந்த மலரின் அட்டைப்பட மூவர்ணச் சித்திரத்தை மற்றும் ஒரு முறை கண்குளிரப் பார்க்கும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.

செல்வத் திருமகளை அஞ்சலித்து வணங்கும் அந்த அழகிய நங்கையைப் பாருங்கள்! பாரதியார் கூறியபடி திடங்கொண்டு சிந்தனை செய்யும் அந்தக் காரிகையின் விரல்களில், நயனங்களில், உடலில், இடையில், முழங்கால்களில், கால் நகங்களில் பக்தி பாவம் நிரம்பித் ததும்புகிறது. இப்படி வணங்கும் ஒரு பக்தைமணிக்குச் செல்வத் திருமகள் ஏன் அருள் பாலிக்க மாட்டாள்! அவள் விரும்பிய விதமே அவளுடைய உள்ளத்தரசன் இந்தத் தீபாவளித் திருநாளில் மலர் மாலையுடன் வந்து அவளை மகிழ்விக்கிறான். நமது சித்திரக்காரர் சந்திராவின் கைத்திறமை முழுதும் இந்தச் சித்திரத்தில் பிரதிபலிக்கிறது!

இந்த வருஷத்துச் சித்திரப் பூஞ்சோலையில், இரு தோழிகள் தங்களுக்குள் ஏதோ **அந்தரங்கம்** பேசிக் கொள்வதாகச் சித்திரக் கலைஞர் கனு தேஸாய் ஒரு அழகான சித்திரம் தீட்டியிருக்கிறார். சிவப்புடவை உடுத்தியிருக்கும் மங்கை, அந்தரங்கமாகத் தன் கணவருடன் பேசிக் கொண்டிருந்ததை, தன்னை 'கண்ணே, முத்தே' என்று கொஞ்சியதைச் சொல்லத் தொடங்குகிறாள். அவளுக்கு வெட்கம் வந்து விட்டது. தலையைக் கவிழ்த்துக் கொண்டாள். ஆனால் அவளுடைய தோழி விடுவதாக இல்லை. "சும்மா சொல், பரவாயில்லை" என்று நச்சுகிறாள். அந்த நிலையைத்தான் சித்திரம் குறிக்கிறது.

ஸ்ரீ கனு தேஸாயின் **கவிஞரும் கவிதையும்** என்ற சித்திரம் கருத்துச் செறிந்தது! கவிதைக் கன்னி ரொம்பவும் அடக்கமும் பணிவும் நிறைந்தவள். அவள் சிறிய அகல் விளக்கு ஏந்தி மிக மங்கலான ஒளியைத்தான் கவிஞருக்குக் காட்டுகிறாள்! ஆம்; ஒரு சின்னஞ் சிறிய உண்மையைத்தான் புலப்படுத்துகிறாள். அந்தச் சிறிய உண்மை அலை அலையாக எல்லையற்ற எண்ண அலைகளாகப் பரிணமிக்கிறது கவிஞரின் உள்ளத்தில். இக்கருத்தை, கூரிலிருந்து வரும் புகை வான வெளியெல்லாம் புகையாக வியாபித்திருப்பது போல் காட்டி விளக்குகிறார் சித்திரக் கலைஞர்.

நமது சித்திரக்காரர் சரவணன் தீட்டியுள்ள **பழைய உறவு** என்ற சித்திரத்தைப் பாருங்கள். காதலர் இருவர். பால் போன்ற நிலவைப் பொழியும் இரவு வேளையில் மலர்ப் பொழிலில் அமர்ந்து உல்லாசமாகப் பேசிக் கொண்டிருக்கிறார்கள்! அவர்களுடைய காதல் பேச்சு, அவர்களுக்குத் தாங்கள் சுவர்க்க போகத்தில் ஆழ்ந்திருப்பதாகத் தோன்றுகிறது. அது மட்டுமா! அவள் காதலனிடம், "நாம் இன்று நேற்று தொடர்பு பூண்டவர்களல்ல! நம் தொடர்பு ஜன்ம ஜன்மாந்திரங்களாகத் தொடர்ந்து வருவது" என்று கூறுகிறாள்.

ஆம்; பின்னும் ஒரு ஆடவன் வருவது தெரிந்தும் அம்மங்கை அப்படி அந்தச் சோலையில் தன்னந்தனியாக நிற்பாளா! என்ன இருந்தாலும் ஒரு பெண்ணுக்கு இவ்வளவு நெஞ்சழுத்தம் கூடாது என்று தோன்றுகிறதல்லவா, நமது சித்திரக்காரர் சந்திராவின் **இரவி உக்கம்** என்ற படத்தைப் பார்க்கும்போது!

ஆனால், அவள் அப்படித் தன் பெண்மை இழக்க நின்று விடவில்லை. அவன் அவளுடைய ஆருயிர்க் காதலன். காதலன் வருகையை அவள் அறிவதற்கு முன் அவள் உள்ளம் எப்படியோ அறிந்து கொண்டு விட்டது. அவன் பூங்கொடியிலிருந்து மலர் பறித்து அவள் கூந்தலில் சூட அருகில் வந்தான். அவளுக்கு ரொம்பப் பெருமிதமாக இருந்தது. அவன் சூடும் காட்சியைத் தன் கடைக்கண்களால் பார்த்து மகிழத் தொடங்கினாள். ஆனால் அவனோ அவளுக்கு மலர் சூடுவதை மறந்து நின்றுவிட்டான். ஆம், 'பருகிய நோக்கெனும் பாச'த்தால் பிணிக்கப்பட்டு அப்படியே இருவரும் மெய்மறந்து நின்று விட்டார்கள்!

o o o

சோழ நாட்டின் அந்தக் காலத்துத் தலைநகராகிய பூம்புகார் என வழங்கும் காவேரிப்பூம் பட்டினத்தில் வணிகர் குலத்தில் பிறந்தவள் கண்ணகி. செல்வச் சீமானான கோவலனுக்கு வாழ்க்கைப்பட்டாள். அவர்களுடைய இல்வாழ்க்கை சில ஆண்டுகள் சிறப்பாகவே நடைபெற்றது.

அதே காவேரிப்பூம் பட்டினத்தில் இருக்கும் ஆடலிலும் பாடலிலும் வல்லவளான மாதவியைப் பாராட்டி சோழ மன்னன் அவளுக்கு ஒரு பொன் மாலை பரிசளித்தான். அந்தப் பொன் மாலையை வாங்கியதன் மூலம் கோவலன் அவள் கணவனானான்.

கண்ணகியின் காதல் வாழ்வு முடிவுற்றது. கோவலன் மாதவி வீட்டிலேயே மகிழ்ந்து வாழலானான். அவளுக்காகத் தன் அளவற்ற செல்வங்களை வாரி இறைத்தான்.

காவேரிப்பூம் பட்டினத்திலேயே மிகச் சிறந்த விழா கடற்கரையில் கொண்டாடப்பெறும் இந்திர விழா. அவ்விழாவில் மாதவி யாழ் மீட்டும்போது கோவலன் அவள் வேறு யார் மீதோ காதல்கொண்டிருப்பதாகத் தவறாகக் கருதி அவளைவிட்டுப் பிரிந்து விட்டான். மாதவியின் காதல் வாழ்க்கை சிதைந்து விட்டது.

கோவலன் நேரே தன் குல விளக்காகிய கண்ணகியைத் தேடி வந்தான். கண்ணகி முகம் மலரக் கோவலனை வரவேற்றாள். கண்ணகியின் விலை மதிப்பற்ற கால் சிலம்பை விற்று வாணிபம் தொடங்கக் கண்ணகியுடன் மதுரைக்குப் புறப்பட்டான்.

வழியில் சமணத் துறவியாகிய கவுந்தி அடிகளைச் சந்தித்து அந்த அம்மையாரின் துணையுடன் மதுரையை அடைந்தனர். அங்கு கோவலனின் பழைய நண்பனான மாடலன் மாதவிக்கு மணிமேகலை என்னும் மகவு பிறந்திருப்பதைச் சொன்னான். மாதரி என்னும் இடைச்சி வீட்டில் கோவலனையும் கண்ணகியையும் விட்டு விட்டு அவர்கள் பிரிந்தனர்.

கோவலன் கண்ணகியின் கால் சிலம்பை விற்க மதுரைக்குச் சென்றான். அங்கு ஒரு திருட்டுப் பொற்கொல்லனின் சூழ்ச்சியால் கோவலனைக் கள்வன் என்று கருதிப் பாண்டிய மன்னன் அவனைக் கொன்றுவிட உத்தரவிட்டான்.

கோவலன் கொலையுண்ட அதே நேரத்தில் கண்ணகி தங்கியிருந்த ஆயர்சேரியில் இடைக்குலப்பெண்கள் கண்ணகியைச் சூழ்ந்து நின்று குரவைக் கூத்து ஆடிக்கொண்டிருந்தனர். அந்தச் சமயத்தில் மதுரையிலிருந்து வந்த இடைச்சி ஒருத்தி கோவலன் கொல்லப்பட்டதைக் கண்ணகிக்குத் தெரிவித்தாள். அதைக் கேட்ட கண்ணகி சீற்றமுற்றாள். அரசனிடம் சென்று கோவலன் குற்றமற்றவன் என்பதை நிரூபிக்கப் போவதாகப் புறப்பட்டாள்.

கண்ணகி கோவலன் கொலையுண்ட இடத்துக்கு நேரே சென்றாள். தன் கணவன் மீது விழுந்து அழுது புரண்டாள். பிறகு அரசனிடம் சென்றாள். தன் கணவன் கள்வன் இல்லை என்று சொன்னாள். அரசியின் சிலம்பின் பரல் முத்து. என் சிலம்பின் பரல் மாணிக்கம் என்றாள். தன் சிலம்பைக் கொண்டு வரச் சொல்லி உடைத்தாள். மாணிக்க மணிகள் மின்னிச் சிதறின. நீதி தவறாத பாண்டிய குலம் தன்னால் நீதி தவறியதை நினைந்து அரியாசனத்திலிருந்து வீழ்ந்து உயிர் துறந்தான் பாண்டியன். அருகிலிருந்த பாண்டிய மாதேவியும் உடன் வீழ்ந்து உயிர் விட்டாள்.

கண்ணகியின் சீற்றம் இன்னும் அடங்கவில்லை. அக்கினிக் கடவுளை அழைத்து மதுரையை எரிக்கச் சொன்னாள். நல்லவர்களையும், முதியவர்களையும், குழந்தைகளையும் விட்டு மற்றவர்களைப் பொசுக்கச் சொன்னாள். மதுரை எரிந்தது.

மதுரை நகரின் தென் திசை வழியாக பதினான்கு நாள் காட்டிலும் மேட்டிலுமாக நடந்து சென்றாள். இறுதியில் திருச்செங்குன்று என்னும் மலை அடைந்தாள். மலைமீது ஏறினாள். வான வீதியில் விமானத்துடன் வந்த கோவலன் கண்ணகியை அழைத்துச் சென்றான். ஆம். சோழநாட்டிலே பிறந்து, பாண்டிய நாட்டிலே கணவனை இழந்து, சேர நாட்டில் கணவனோடு சுவர்க்கம் சென்றாள் கற்புக்கரசி கண்ணகி.

இந்த அற்புதக் கதையை 89-92 பக்கங்களில் அழகொழுகும் வர்ணச் சித்திரங்களாக சைத்ரீக் மணியம் தீட்டியிருக்கிறார்.

இன்னும் ராகவன், ஸ்ரீமதி ஆபியவர்களின் கண்கவர் ஓவியங்களும், சாமா, சாஸ்திரி, ரகு, ரதன் இவர்களின் நானாவிதச் சித்திரங்களும் சித்திரப் பூஞ்சோலைக்குள்ளே பூத்துக் குலுங்கி வண்டினம்போல நம்மை மதி மயக்கி மகிழ்வூட்டுகின்றன.

# நீரிழிவு

## ஏழு நாட்களில் குணமாகும்!

எவ்வளவு நாட்பட்டதாயினும், மிகக் கடுமையாக இருப்பினும் நவீன ரஸாயன முறைத்தயாரிப்பான **வீனஸ் சார்ம்** வியாதியை முற்றிலும் குணமாக்கி விடும். அடங்காத பசி, மரண தாகம், அடிக்கடி சிறுநீர் பிரிதல், சொரி சிறங்கு ஆகிய இவைகளே இவ் வியாதியின் முக்கிய அறிகுறிகள், இதைக் கவனிப்பின்றி விட்டு விட்டால் கட்டி, பிளவை, கண் கோளாறு முதலிய உபத்திரவங்களில் முடியும். **வீனஸ் சார்ம்** ஆயிரக் கணக்கானவர்களை மரிப்பினின்றும் பிழைக்க உதவியுள்ளது. உபயோகித்த மறு தினமே நீரிலுள்ள சர்க்கரைச் சத்தைக் குறைத்து இதமளிக்கும். இரண்டு மூன்று தினங்களில் பாதி குணமடைந்ததாக நீங்களே உணர்வீர்கள். ஆகார நிபந்தனை கிடையாது. இலவசமான விபரங்கள் அடங்கிய காட்லாகிற்கு எழுதவும்.

**50 மாத்திரைகள் கொண்ட பாட்டில் ரூ. 6-12-0**

(தபாற் செலவு இலவசம்)

**வீனஸ் ரிஸர்ச் லாபரடரி (K. M. S.)**

தபால் பெட்டி நெ. 587 : கல்கத்தா






தீபாவளிக்குத் திருப்தி யளிப்பது!

★ கண்ணைக் கவரும் கலர்கள் ★ அழகான பார்டர்கள் ★ நவீன டிஸைன்கள் ★ உத்தரவாதமுள்ள சரக்கு ★ குறைந்த விலை ★ சிறந்த ராகம்

ஆகிய சகல அம்சங்களுடன் கூடிய

## புடவைகள்
## வேஷ்டிகள்

○●○

இன்றே விஜயம் செய்து தங்களுக்குத் தேவையானதை பொறுக்கி எடுத்துச் செல்லக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

○●○

**நல்லி சின்னசாமி செட்டி**

(ஸோல் ப்ரொப்ரைட்டர்: என். சி. நாராயணஸ்வாமி)

பட்டு ஜவுளி வியாபாரம்

5, நாகேஸ்வர ராவ் ரோடு,

தியாகராயநகர் : மதராஸ்-17

போன்: 88115 தந்தி: 'NALLICO'

இந்த மார்க்கில்
குழந்தைத் தோற்றம் இருப்பதையே
நீங்கள் விரும்புகிறீர்கள்




## பேபி ஜவுளிகள்

அவற்றின் தரத்தில் நம்பிக்கையுள்ளோருக்கு
ஒரு உத்தரவாதமாக இருக்கின்றது.

## பேபி ஜவுளிகள்

அவற்றின் உறுதி, சிறப்பான ரகம்,
நம்பிக்கையான உழைப்பு, கெட்டிச் சாயம்
இவைகளுக்குப் பெயர் பெற்றவை.

அழகும் மோஸ்தரும் ஒருங்கே பொருந்தியவை

எமது பிரபல ஜவுளிகளையே கேட்டு வாங்குங்கள்

## பேபி

கலர் அட்டிக்குகள். கோடிட்டது அல்லது செக். சாதா
வேஷ்டி - கலர். அநேக அழகிய நிறங்களில்.

## பேபி

கோட்டிங் துணிகள். சாதா மற்றும் செக் மோஸ்தர்.

எல்லா வியாபாரிகளிடமும் கிடைக்கும்

# தேவிதாஸ் & கம்பெனி

சிக்பேட் :: பெங்களூர் ஸிடி




ஏஜண்டுகள் :
கூராஜ் ஏஜன்ஸீஸ்
37, ஜானி ஜான்கான் ரோடு, ராயப்பேட்டை, மதராஸ்-14
B. பாலபட்டாபி செட்டியார்
246, வைசியாள் தெரு, கோயமுத்தூர்

# மாய மந்திரம்

**பெய்யு மாமுகில் போல்வண்ணா! உன்றன்**
**பேச்சும் செய்கையும் எங்களை**
**மைய லேற்றி மயக்க உன் முகம்**
**மாய மந்திரம் தான் கொலோ?**

— ஆண்டாள்.

'கண்ணனுடைய பேச்சு' என்றால் அகராதியில் நம்பத்தகாதது என்றுதான் அர்த்த மிருக்கவேண்டும்!

ஆம்; 'வெண்கல வாணிகரின் வீதி மூலையில்' வந்து காத்திருக்கச் சொல்லுவான். அவன்மீது மையல் கொண்ட கோபிகையும் அங்கே போய் நிற்பாள். கண்ணன் வரவேமாட்டான் அவ்விடத்திற்கு.

'நீர்த்தக் கரையில் தெற்கு மூலையில்' என்று இன்னொரு கோபிகைக்கு இடமும் காலமும் நிர்ணயித்து மிகத்தெளிவாகச் சொல்லியனுப்புவான். பிறகு அந்தப் பக்கமே தலையை வைத்துப் படுக்கமாட்டான்!

இது கண்ணனுடைய பேச்சின் லக்ஷணம்.

அவன் செய்கையின் லக்ஷணம் எப்படி என்று நம்மால் சொல்லிச் சாத்தியமில்லை. நமது கவி பாரதியார் சொல்வதைக் கேளுங்கள்:

**"தின்னப் பழங்கொண்டு தருவான்—பாதி**
**தின்கின்ற போதிலே தட்டிப்பறிப்பான்**
**என்னப்பன் என்னையன் என்றால்—அதனை**
**எச்சிற்படுத்திக் கடித்துக் கொடுப்பான்."**

கண்ணனன்றி வேறு யாராகிலும் இத்தனை தொல்லைகளுக்கும் காரணமா யிருந்தால், அவன் கதி என்னவாகி யிருக்கும்? அந்தத் தெருவிலே, அந்தக் கணத்திலேயே ஊரையெல்லாம் கூட்டி, அவனை மொத்து மொத்து என்று மொத்தி யனுப்பியிருக்க மாட்டார்களா?

ஆனால் கண்ணன் அதிர்ஷ்டம் வேறுவிதமாக இருக்கிறது. இவ்வளவு தொல்லைப் படுத்தும் கண்ணன்மீது கோபியர்களுக்கு அளவிலாத பிரேமை! இது என்ன விசித்திரம்!

இந்த விசித்திரப் போக்குக்குக் காரணம் அந்தக் கோபிகைக்கு ஒரு மாதிரி புரிகிறது. அதைக் கண்ணனிடமே கேட்கிறாள்:

**"பெய்யு மாமுகில் போல்வண்ணா! உன்றன்**
**பேச்சும் செய்கையும் எங்களை**
**மைய லேற்றி மயக்க உன் முகம்**
**மாய மந்திரம் தான் கொலோ?"**

கண்ணனிடம் இவ்வாறு கோபிகை கேட்கும் பாவத்தை ஸ்ரீ கனுதேஸாய் வெகு அற்புதமாக அந்தக் கோபிகை உட்கார்ந்திருக்கும் நெளிவிலும், கண்ணனின் முகவாய்க் கட்டையைப் பிடித்துக் கொண்டிருக்கும் நிலையிலும் கொண்டு வந்துவிட்டார். கண்ணனுடைய நெற்றிக்கு அலங்கார மிட்டுக் கொண்டே கேட்கிறாள்!

இந்தக் கேள்வி கேட்டபோது, கண்ணனின் முகத்தோற்றம் எப்படி யிருந்தது என்பது ஆண்டாள் சொல்லவில்லை. நாச்சியார் நமது கற்பனைக்கு விட்ட விஷயத்தைச் சித்திரக் கலைஞர் கனுதேஸாய் வர்ணச் சித்திரமாகத் தீட்டியிருக்கிறார்! அதைப் பற்றி நாம் விளக்க விரும்பவில்லை. நேயர்களின் கற்பனைக்கே விட்டு விடுகிறோம்!

கல்கி
தீபாவளி மலர்-1951

# அருள் கனிந்த சிங்கம்!

பகவானை நினைத்தால் பரிதாபமாக இருக்கிறது. பக்தர்களால் பகவான் படும்பாடு, நாராயணா! சொல்லி முடியாது!

சின்னஞ் சிறு பையன் பிரகலாதன். அவன் பகவானை என்ன பாடு படுத்தி வைத்து விட்டான்! மனித உடலும் சிங்கத்தின் தலையும் கொண்ட நரஸிம்மாவதாரம் அல்லவா எடுக்கச் செய்து விட்டான்!

இரணியன் தான் பெற்றிருந்த செல்வத் திமிர் காரணமாக, பிரகலாதன் சுட்டிக் காட்டிய தூணை வெகு அலட்சியமாகப் பிளந்தான். அதிலிருந்து வெளிப்பட்ட நரசிம்மம் ஒரே கோப வெறியிலிருந்தது. இரணியனை சம்ஹாரித்த பின்பும் நரசிம்மமூர்த்தியின் கோபம் தணியவில்லை. லக்ஷ்மி தேவியும் பகவானை அணுக அஞ்சினாள். தேவர்கள் கதி கலங்கினர். அகில உலகமும் நடுங்கியது. அந்த நிலையில் சற்றும் பயப்படாமல் அருகிலிருந்தவன் பிரகலாதன் ஒருவன்தான்!

பாலன் பிரகலாதனைக் கண்ணுற்றதும் பரந்தாமனின் கோபம் பறந்து விட்டது. "உனக்கு என்ன வரம் வேண்டுமோ, கேள்!" என்றார்.

பிரகலாதன் என்ன சொல்வான்! "பகவானை நேரில் காணப் பெறும் பேற்றை விட வேறு பாக்கியம் என்ன இருக்க முடியும்!" என்று ஆரம்பித்தான்.

'முன்பு பெறப்பெற்ற
பேறோ முடிவில்லை
பின்பு பெறும் பேறும்
உண்டோ, பெறுகுவனேல்
என்பு பெறாத
இழி பிறவி எய்திடினும்
அன்பு பெறுகை
அரும்பே(று) எனக்(கு)!' என்றான்.

"எலும்பில்லாத பூச்சியாகவோ, புழுவாகவோ பிறக்க நேர்ந்தாலும் உன் பாத கமலங்களில் என்றும் வற்றாத அன்பிருக்க அருள வேண்டும்" என்றான்.

இதைக் கேட்ட மாத்திரத்தில் நரசிம்மமூர்த்தியின் கண்களில் அருள் சுரந்து விட்டது என்கிறார் கவிச் சக்கரவர்த்தி கம்பர்.

அன்னானை நோக்கி
அருள் சுரந்த கண்ணினான்
'என்னான் நீ வல்லன்'
என மகிழ்ந்த பேரீசன்
'முன்னான பூதங்கள்
யாவையும் முற்றிடினும்
என்னாளும் உளவாய்; நீ
என்போல் உளை' என்றான்.

"பஞ்ச பூதங்கள் (இருக்கும் வரை அல்ல; அவை) அழிந்த பின்பும் நீ அழியாமல் இருப்பாய்" என்றார் பகவான். ஆனால் அந்த ஆசியும் போதாது என்றே தோன்றியது! அதற்கு மேல் பெரிய ஆசியாக, "என்போல் இரு!" என்று கூறுகிறார். பகவான் இருக்கும் வரை பக்தனும் இருக்க அருளுகிறார்!

இப்படி ஆசியின் எல்லையையும் பகவானின் கருணையின் எல்லையையும், பிரகலாதனின் பக்தியின் வரம்பையும் மேற்கண்ட செய்யுளில் அற்புதமாக எடுத்துக் காட்டுகிறார் கம்பநாடர்.

இந்த பாவத்தை வர்ணச் சித்திரமாக வரைவது மிகவும் சிரம சாத்தியமான காரியம். ஆம்; சிங்கத்தின் அருட் பார்வை எப்படி இருக்கும் என்பது மனித வர்க்கத்தைச் சேர்ந்த நமக்கு எப்படித் தெரிய முடியும்! இப்படி ஒரு தர்ம சங்கடமான விஷயத்தை இதுகாறும் நம் சிற்பிகளும் சித்திரக்காரர்களும் அதிருப்தி யளிக்கும் வகையிலேயே கையாண்டு வந்திருக்கிறார்கள்!

அந்தக் குறையை இப்போது சௌ. ஸ்ரீமதி போக்கி விட்டார். அவர் எழுதியுள்ள நரசிம்ம மூர்த்தியின் தோற்றத்தில் கருணை பாவம் அபரிமிதமாக இருக்கிறது. அவருடைய கண்கள் அருள் சுரந்த கண்களாகவே விளங்குகின்றன! பிரகலாதன் நிற்கும் நிலையில்தான் பக்தி பாவம் எப்படித் ததும்புகிறது!

கம்பர் பாடலைப்போல் ஸ்ரீமதியின் சித்திரமும் கலையின் எல்லை வரம்பு கோலிக் காட்டி விடுகிறது.

# மலரின் மேவு திருவே !

பாற்கட லிடைப் பிறந்தாள் — அது
பயந்தநல் லமுதத்தின் பான்மை கொண்டாள்
ஏற்குமோர் தாமரைப் பூ — அதில்
இணைமலர்த் திருவடி இசைந்திருப்பாள் —பாரதியார்.

அழகைக் கண்ட விடங்களில் எல்லாம் நம் முன்னோர்கள் ஆண்டவனைக் கண்டார்கள்.

வனப்பு மிக்க நதியைக் கண்டால் அதன் கரையோரங்களில் காலம் கடந்து நின்ற கடவுளுக்குக் கோயில் கட்டி வழிபட்டார்கள்.

குமுறும் கடலின் சௌந்தர்யத்தில் இறைவனைக் கண்டு, கடற்கரையில் வானளாவும் தேவாலயங்கள் எடுப்பித்துப் பரவிப் பாடினார்கள்.

அழகிய சிறு குன்றுகளைக் கண்டு, குன்றுதோறும் ஆடும் ஷண்முகனை ஆடவிட்டுப் பேரானந்தம் கண்டார்கள்.

ஆம்; அவர்களால் அழகையும் ஆண்டவனையும் பிரித்து எண்ண முடியவில்லை. இதுதான் பாரதத்தின் புராதனப் பண்பாடு.

அப்படிப்பட்ட முன்னோர்கள் மலர்களுக்கு அரசியாய் விளங்கும் தாமரை மலரில் செல்வத் திருமகளை ஏற்றி வைத்து வழிபட்டதில் அதிசயம் என்ன இருக்கிறது? தாமரை மலரின் அழகும் அதன் நறுமணமும் அழகுத் தெய்வமாகிய லக்ஷ்மி தேவிக்கே உகந்தது என்று கருதியவர்களின் ரஸிகத் தன்மை எவ்வளவு உயர்ந்திருந்தது என்று சொல்லவும் வேண்டுமோ ?

கவியரசர் பாரதியாரின் கவி உள்ளம் லக்ஷ்மியை நினைக்கும்போதெல்லாம் அவள் வீற்றிருக்கும் தாமரை மலரையும் கருதுகிறது.

"மலரின் மேவு திருவே !—உன்மேல்
மையல் பொங்கி நின்றேன்"

"கமலமேவு திருவே !—உன்மேல்
காதலாகி நின்றேன்"

என்று தாமரைப் பூவுக்குச் சிறப்பளித்துப் பாடுகிறார். "தாமரை மலரில் நீ வீற்றிருப்பதினாலேயே என் இருதயத் தாமரையிலும் உனக்கு இடம் தருகிறேன்" என்று சொல்வதுபோலத் தொனிக்கிறதல்லவா?

"ஏற்குமோர் தாமரைப் பூ — அதில்
இணைமலர்த் திருவடி இசைந்திருப்பாள்"

என்று கவியரசர் பாரதியார் பாடியிருப்பதிலும் தாமரைப் பூவுக்கே ஏற்றம் அளித்திருக்கிறார் எனத் தோன்றுகிறதல்லவா?

சித்திரக் கலை மேதாவியான ஸ்ரீமதியின் கற்பனைக் காட்சியிலும் லக்ஷ்மி தேவிக்குக் கமல மலரே சிறப்பு அளித்திருக்க வேணும் என்று இச் சித்திரத்தைப் பார்க்கும்போது நமக்குத் தோன்றுகிறது. அடுக்கடுக்காகச் செவ்விதழ்கள் அடர்ந்து விரிந்துள்ள தாமரையின் அழகு நம் மனசைப் பூரணமாக ஆட்கொண்டு விடுகிறது. இவ்வளவு அழகிய மலரில் லக்ஷ்மி தேவி குடியேறாமல் வேறு எங்கே போக முடியும் என்று எண்ணத் தோன்றுகிறது.

வீற்றிருக்க வண்ணத் தாமரை கிடைத்துவிட்டது என்ற பெருமகிழ்ச்சி பாவம் லக்ஷ்மியின் முகத்தில் தவழ்கிறது.

இத்தகைய நல்ல சந்தர்ப்பத்தில், "தேவி! இந்தத் தீபாவளி புனிதத் திருநாளில் உன் அருள் வேண்டுகின்றோம்! நாட்டில் உணவுப் பஞ்சத்தை ஒழித்து, நேர்மைப் பஞ்சத்தை ஒழித்து, சுபிக்ஷம் நிலவச் செய்வாயாக!" என்று பிரார்த்தனை செய்து கொள்வோம்.

திருவைப் பணிந்து நித்தம்
செம்மைத் தொழில் புரிந்து
வருக வருவ தென்றே — இனியே
மகிழ்வுற் றிருப்போமடி !

# இது என்ன உள்ளம்!

"தனிமை கண்டதுண்டு — அதிலே
சாரமிருக்குதம்மா!" — பாரதியார்.

இவ்வாறு நினைத்துத்தான் தாமரைத் தடாகத்துக்கு அவள் வந்தாள்.

அந்த மலர்ந்துள்ள அழகிய தாமரை மலரைப் பார்த்துக் கொண்டிருந்தால் மனதுக்கு எவ்வளவு சந்தோஷமாக இருக்கும்; நேரம் போவதே தெரியாதே!

அதோ அந்தத் தாமரை இலைகள் மீது தத்தித் தத்தி விளையாடும் தவளையை எத்தனை நேரம் வேண்டுமானாலும் பார்த்துக் கொண்டிருக்கலாமே!

அந்தி வானம் புரியும் ஜால வித்தைகளையெல்லாம், வானத்திலும், தாமரைக் குளத்து நீர்ப் பரப்பிலும் மாறி மாறிப் பார்த்து நாள் எல்லாம் மகிழலாமே!

இதில் எல்லாம் மனம் செல்லவில்லை என்றாலும் ஜலம் மொண்டு செல்லக் குளக்கரைக்கு வரும் பெண்களுடன் ஊர் வம்பு பேசியே காலத்தை ஓட்டிவிடலாமே!

வாஸ்தவம்; ஆனால் இன்று அவள் மனம் இதில் எல்லாம் ஈடுபடவில்லையே! ஏன்?

அதற்கு அவளே சொல்லும் பதில் இதுதான்:

"ஓய்வும் ஒழிதலும் இல்லாமல் — அவன்
உறவை நினைந்திருக்கும் உள்ளம்!"

மாயக் கண்ணன் அவள் உள்ளத்தில் எழுந்தருளிய பின் இந்த மாயப் பிரபஞ்சக் காட்சிகளில் அவள் மனம் ஈடு படாதது இயல்புதானே?

# கலை வளர்த்த தம்பதிகள்

தமிழ் நாட்டுச் சரித்திரத்தில் மகேந்திர பல்லவருடைய ஸ்தானம் மிகவும் உயரியது. அவரைப்போல் பெரும் புகழும் பெற்ற மன்னன் வேறொருவர் இல்லை என்று சொன்னால் மிகையாகாது.

மகேந்திர பல்லவ சக்கரவர்த்தி ராஜரீக காரியங்களில் எவ்வளவு சிறப்புடன் விளங்கினாரோ அவ்வளவு சிறப்புடன் அருங்கலை விநோதராகவும் விளங்கினார்.

அவருக்குச் சிற்பக்கலையில் இருந்த ஆர்வம் உலகப் பிரசித்தமானது. அவர் தான் மாமல்லபுரத்தின் அற்புத சிற்பங்களைச் செய்வித்து அதை மகேந்திர ஜாலபுரமாக மாற்றினார்.

அவருக்குச் சித்திரக்கலையில் மிக்க ஆர்வம் உண்டு. அதன் காரணமாக அவருக்குச் **சித்திரக்காரப் புலி** என்ற புகழ் ஏற்படலாயிற்று.

சங்கீதக் கலையில் அவருக்கு அபார மோகம். அதன் விளைவாக அவருக்கு 'சங்கீரண ஜாதிப் பிரகரணர்' என்ற பட்டம் கிடைத்தது.

நாடகக் கலையில் அவருக்கு எவ்வளவோ ஈடுபாடு. அவரே மத்த விலாசப் பிரஹஸனம் என்ற வடமொழி நாடக நூல் இயற்றினார்.

அவர் காலத்தில் சைவம், வைஷ்ணவம், சமணம் ஆகிய மூன்று சமயங்களும் தழைத்தோங்கின. அப்பர் பெருமானின் அற்புத பக்திப் பாடல்கள் அவர் காலத்தில் பாடப் பெற்றவை.

இத்தனை விஷயங்களில் ஆர்வம் மிகுந்து விளங்கிய மகேந்திர சக்கரவர்த்திக்குத் தமது பட்ட மகிஷியுடன் வார்த்தையாடச் சில நிமிஷங்களாவது கிடைத்திருக்குமோ என்ற சந்தேகம் எழக்கூடும் அல்லவா!

"அந்தச் சந்தேகத்திற்கே இடமில்லை; மகேந்திர பல்லவர் தமது வாழ்க்கைத் துணைவியாருடன் எத்தனையோ நாட்கள் இன்பமாக உரையாடிப் பொழுதைப் போக்கியதுண்டு" என்று சௌ. ஸ்ரீமதி இந்த வர்ணச் சித்திரத்தின் மூலம் கூறுகிறார்.

மகேந்திர பல்லவர் தமது இல்லாளுடன் அன்பு கனிந்த வாழ்க்கை நடத்தியமையாலேயே இத்தனை அருங் கலைகளில் அவருக்கு ஈடுபாடும், ஆர்வமும், பயிற்சியும் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று ஊகிக்கலாம்.

> "இல்லதென் இல்லவள் மாண்பானால், உள்ளதென்
> இல்லவள் மாணாக் கடை."

என்று வள்ளுவர் பெருமான் கூறியுள்ளார் அல்லவா!

தமிழ்நாடு ஓர் அருங்கலைக் களஞ்சியமாவதற்கு ஆதி நாளில் வழிகாட்டிய இராஜ தம்பதிகளின் படத்தை இந்தத் தீபாவளி மலரின் முகப்புப் படமாக வெளியிடுவதில் நாம் பெருமை கொள்கிறோம்.

கல்கி
தீபாவளி மலர்-1951




Edited, Printed & Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Poonamalle High Road, Kilpauk, Madras


Regd. No. M 4392
Regd as a newspaper in Ceylon
RAJA
"RAJA" (REGD) SNOW
for Beauty & Complexion
MANUFACTURERS
MANYAM & CO.
BANGALORE
RAJA SNOW
RAJA HAIR OIL
RAJA AMLA HAIR OIL
RAJA
MANYAM & CO
RAJA
(REGD. T.M)
Kasthuri Soap
MANYAM & CO.
BANGALORE.
ராஜா
ஹேர் ஆயில்
ஹேர் பிக்ஸர், கஸ்தூரிஸோப்
அம்லா ஹேர்ஆயில், முகப்பவுடர்
டூத் பேஸ்ட், அகர்பத்தி
MANYAM & CO.,